# ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு

தொகுதி ஒன்பது

பதிப்பாசிரியர்
இர. ஆலாலசுந்தரம், எம்.ஏ., பிஎச்.டி.,



புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
(புதுவை அரசு நிறுவனம்)

# ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு – தொகுதி IX

வெளியீட்டு எண் : 17

முதற்பதிப்பு : சூன் 2005

ISBN : 81-85452-18-0 (Set) Vol.9,10,11,12
81-85452-16-4 (Vol. 9)



வெளியீட்டாளர் : புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்
112, காமாட்சி அம்மன் கோயில் வீதி,
புதுச்சேரி – 605 001.
இந்தியா.

அச்சிட்டோர் : அரசினர் மத்திய அச்சகம்
புதுச்சேரி – 605 009.

விலை :





**ந. ரங்கசாமி**
மாண்புமிகு முதல்வர்

## வாழ்த்துரை

புதுவை மாநிலம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேற்பட்ட பழமை வாய்ந்த வரலாற்றுச் சிறப்புகளை உடையது. சங்கப் புலவர்கள் சிலர் இப்பகுதிகளில் வாழ்ந்துள்ளனர். அக்காலத்திலேயே புதுவை வெளிநாட்டாருடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தமையை அரிக்கமேட்டு அகழ்வாய்வுகள் விவரிக்கின்றன. அரிக்கமேடு புகழ்பெற்ற வணிகத் துறைமுகமாக விளங்கியுள்ளது. கெடிலக்கரை நாகரிகம் என்று வரலாற்று அறிஞர்கள் குறிப்பிடும் அளவிற்குப் புதுவை வட்டாரப் பகுதிகள் நாகரிகத்தில் மேம்பட்டு விளங்கியுள்ளன.

இத்தகு வரலாற்றுச் சிறப்புகளின் வரிசையில் ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பும் இடம்பெற்றுப் புதுவையின் பெருமையை வெளிப்படுத்தியுள்ளது. கி.பி.18–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆனந்தரங்கப்பிள்ளை அன்றைய புதுச்சேரி பிரெஞ்சு அரசின் மொழிபெயர்ப்பாளராக (துவிபாஷியாக) விளங்கியவர். இவர் எழுதிய நாட்குறிப்புகள், அரசியல், சமயம், பண்பாடு எனப் பலநிலைகளிலும் 18–ஆம் நூற்றாண்டின் தென்னிந்தியச் சமுதாயத்தைப் பிரதிபலித்துள்ளன. உலக நாட்குறிப்பு வரிசையில் வைத்துப் போற்றத் தக்கதாகவும் ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு விளங்குவதை வரலாற்று அறிஞர்கள் சுட்டி உள்ளனர்.

இந்நாட்குறிப்புகள் அடங்கிய எட்டுத் தொகுதிகள் முன்பே வெளியிடப்பட்டுள்ளன. எஞ்சிய நான்கு தொகுதிகள் இதுவரை தமிழில் வெளியிடப்படாமலேயே இருந்தவை. இந்நான்கு தொகுதிகளையும் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் பெரும் முயற்சிக்குப் பின் பேரா. ஆலாலசுந்தரம் வழியே பதிப்பித்து வெளியிட்டுள்ளது. மொழி, பண்பாடு, இலக்கியம் எனப் பலநிலைகளில் தரமிக்க ஆய்வுகளை நிகழ்த்திவரும் இந்நிறுவனத்திற்கு இவ்வெளியீடு மேலும் புகழ் சேர்க்கும். இப்பணியில் ஈடுபட்ட நிறுவனத்தாரையும் ஏனையோரையும் பாராட்டுகின்றேன்.

**(ந. ரங்கசாமி)**

# முன்னுரை

உலக நாட்குறிப்பாளர்களில் தலை சிறந்தவரென்று மேலை இலக்கிய மேதைகளால் கருதப்படுபவர் சாமுவேல் பீப்ஸ் (Samuel Pepys) ஆவார். புதுவையில் வாழ்ந்த ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு பீப்ஸின் நாட்குறிப்பிற்கு இணையான தகுதியுடையது. இதனை ஆனந்தரங்கருடைய நாட்குறிப்பின் ஆங்கிலமொழிபெயர்ப்பில் முதல் மூன்று பாகங்களைத் தொகுத்தளித்த, சிறந்த வரலாற்றாசிரியரான ஸர் பிரெடரிக் பிரைஸ் (Sri Frederic Price) என்பாரே ஏற்றுக் கொண்டு ஆனந்தரங்கரை "இந்தியப் பீப்ஸ்" என்று அழைப்பார்.

> ஆனந்தரங்கரின் நாட்குறிப்பு, பேராற்றலும் சமநோக்கும் நிதான புத்தியும் கொண்ட கீழ்த்திசையாளர் ஒருவரின் ஆழ்ந்த சிந்தனைகளையும் தன்னைப் பற்றியும் தனது தலைவர்களைப் பற்றியும் அவரது அச்சமற்ற, நேர்மையான விமரிசனங்களையும் கொண்ட தனிச்சிறப்பு வாய்ந்த கருத்துக் கருவூலமாகும். முக்கியமான நிகழ்ச்சிகளும் அல்லாதவையும் இணைந்து காணக்கிடக்கும் ஒரு புதுமையான கலவையாகும்.

என்றெல்லாம் பாராட்டிப் பேசுவார் பிரைஸ். ஆனந்தரங்கர், பீப்ஸ் ஆகிய இருவரும் கடுமையான உழைப்பு, நேர்மை, திறமை ஆகியவற்றிற்குப் பெருமதிப்பளித்துச் செயல் நிறைந்த பெருவாழ்வு வாழ்ந்தனர். இருவரும் கல்வியறிவு நிரம்பப் பெற்றிருந்ததோடு பல துறைகளில் ஈடுபாடு கொண்டு தமது காலத்து வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகளிலெல்லாம் பங்கு கொண்டனர். இருவருமே கலையுணர்வு கொண்ட படைப்பாளர்கள் என்பதில் ஐயமில்லை. அவர்களது உயிரோட்டமுள்ள உரைநடையால், வரலாற்றுப் பாத்திரங்களை அவர்கள் படைத்துள்ள பாங்கால், சிறிய பெரிய நிகழ்ச்சிகளையெல்லாம் உள்ளவாறு கூறுந்தன்மையால், படிப்போர்க்குச் சலிப்பு ஏற்படாமல் குறிப்புகளைத் தீட்டியுள்ள அழகால் இரண்டு நாட்குறிப்புகளும் இலக்கியப் படைப்புகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டன. இவையிரண்டும் பிற்காலத்தில் எத்தகைய வரவேற்பைப் பெற்றன என்பதை எண்ணிப் பார்த்தால் தமிழர் நெஞ்சம் துடிக்கும் என்பதில் ஐயமில்லை. ஆங்கில அறிஞருடைய நாட்குறிப்பின் கால்பகுதி **1825**–இல் அச்சிட்டு வெளியிடப்பட்ட பின்பு ஏராளமான முழுப்பதிப்புகளும் தெரிந்தெடுக்கப்பட்ட பகுதிகளும் சுருக்கங்களும் தோற்றம் பெற்றன. பீப்ஸின் வாழ்க்கை வரலாறும் அவர் எழுதிய கடிதங்களும் அவரது ஏனைய நூல்களும், அவர் படித்த நூல்களின் பட்டியல்களும் என்று பலவாறான வெளியீடுகள் உலக நூலகங்களை

நிறைத்தன. அவரது நாட்குறிப்புப் பற்றிய திறனாய்வுக் கட்டுரைகளும் நூல்களும் கணக்கிலடங்கா. ஆனால் தமிழராகிய ஆனந்தரங்கர் எழுதிய நாட்குறிப்பின் முதல்தொகுதி கிட்டத்தட்ட 150 ஆண்டுகளுக்குப்பின் ஆங்கில மொழிபெயர்ப்பில் 1904–ஆம் ஆண்டு வெளிவர, 1948–இல் தமிழ்ப்பதிப்பின் முதல்தொகுதி அச்சேறியது. இதுவரை முதல் எட்டுத் தொகுதிகளே தமிழில் வெளிவந்துள்ளன. ஏனைய நான்கு தொகுதிகளும் இப்பொழுதுதான் புதுவை அரசின் கலை, பண்பாட்டுத் துறை, புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் ஆகியவற்றின் முயற்சியால் முதன்முதலில் பதிப்பாக்கம் பெறுகின்றன.

ஆனந்தரங்கரின் நாட்குறிப்பை ஒரு வரலாற்றுப் பெட்டகமாகவும், சமூகவியல் ஆவணமாகவும், அரசியல் நூலாகவும், பதினெட்டாம் நூற்றாண்டுத் தமிழின் எழுத்து வழக்கு, பேச்சு வழக்கு இரண்டையும் உள்ளடக்கிய மொழிநூல் மூலமாகவும் கண்டு எண்ணற்ற கட்டுரைகளையும் நூல்களையும் எழுதவேண்டியது ஆய்வாளர்களின் கடமையாகும். 'பீப்ஸ் ஒருவரே உலகறிந்த நாட்குறிப்பாளர் என்று கருதுவார்க்கு' எம்முளும் ஒரு பொருநன் உளன்'என்று எடுத்துச் சொல்லி ஏற்றுக்கொள்ள வைப்பது அவர்களது தலையாய பணியாகும்.

மறைந்த பேராசிரியர் இர. ஆலாலசுந்தரம் அவர்கள் தமது இறுதி நாட்களில் உடல் தந்த தொல்லையைப் பொருட்படுத்தாது அளவற்ற ஆர்வத்தோடும் முனைப்போடும் இரவு பகலாகக் கருமமே கண்ணாயிருந்து செய்த பதிப்புப் பணியை நிறுவனம் நன்றியோடு நினைவு கூர்கின்றது.

இப்பதிப்பு வெளிவருவதற்கு ஊக்கமளித்து வேண்டிய நிதியுதவியும் செய்த மாண்புமிகு முதலமைச்சர் திரு. ந. ரங்கசாமி, மாண்புமிகு முன்னாள் கல்வி அமைச்சர் திரு.க. லட்சுமி நாராயணன், முன்னாள் கல்விச் செயலர் திருமதி. சத்தியவதி, இ.ஆ.ப, இந்நாள் கல்விச் செயலர், திரு.பி.வி. செல்வராஜ் இ.ஆ.ப. ஆகியோர்க்கும் உறுதுணையாயிருந்து ரூ.50,000 நன்கொடையும் அளித்த ஆனந்தரங்கரின் வழித்தோன்றலாகிய திரு. ஆனந்தரங்க ரவிச்சந்திரன் அவர்களுக்கும் நாட்குறிப்புப் பதிப்புப் பணித் திட்டத்தின் முதற்கட்டத்திலிருந்து இறுதி நிலைவரை முன்னின்று பணியாற்றிய ஆசிரியர்களுக்கும் அலுவலர்களுக்கும் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம் என்றென்றும் கடன்பட்டுள்ளது.

புதுச்சேரி
17.05.2005

ப. மருதநாயகம்
இயக்குநர்

# பதிப்பாசிரியர் முகவுரை

விஜய ஆனந்த ரங்கப் பிள்ளையின் நாட்குறிப்பு (1736–61) ஒரு அசாதாரணமான படைப்பு, கர்னாடகமும் வங்காளமும் ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்ட காலத்திய அரசியல் நிகழ்வுகளை ஒரு தமிழ்க் குடிமகன் விவரிக்கும் அரியதொரு நூல். அது பதினெட்டாம் நூற்றாண்டின் தமிழ்ச் சமுதாயத்தினை அறிந்து கொள்ளப் பெரிதும் துணை நிற்கிறது. இவ்வாறு அது அரசியல் வரலாறு மட்டுமின்றி, சமுதாய வரலாற்று நூலாகவும் ஓங்கி உயர்ந்து நிற்கின்றது.

இந்த நாட்குறிப்பின் வரலாற்றுச் சிறப்பினை உணர்ந்து கல்லியோ மொண்ப்ரேன் (Gallois Montbrun) என்ற பிரெஞ்சு அறிஞர் அதன் பல பகுதிகளை 1848இல் பிரதி செய்து வைத்தார். தனது வரலாற்று நூல்களிலும் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டார். அவை தற்போது கிடைக்கவில்லை. அரியேல் (Ariel) என்ற மற்றொரு பிரெஞ்சு அறிஞரும் 1852இல் அந்நாட்குறிப்பினைப் பிரதி செய்து வைத்தார். அது இன்று பாரிசில் உள்ள தேசிய நூலகத்தில் உள்ளது.

சென்னையின் பிரிட்டிஷ் அரசு கடந்த நூற்றாண்டின் முதற் சில ஆண்டுகளிலே இதனை எளிய, தெளிவான ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, 12 தொகுதிகளாக அச்சுப் பிழைகளே இல்லாமல் அச்சிட்டது. அதற்குப் பின்னர்தான் புதுவை அரசு தமிழில் அதனை வெளியிட முயற்சி மேற்கொண்டு 1948 முதல் 1963 வரையில் அதன் ஏழு தொகுதிகளை அச்சிட்டது. எட்டாவது தொகுதியையும் அது அடுத்து அச்சிட்டது எனினும் எவ்வாண்டில் அது செய்யப்பட்டது என்று அதில் குறிபிடப்படவே இல்லை. ரா. தேசிகம் பிள்ளை அவர்கள் அரும்பாடுபட்டு அச்சுப் பிழைகளைத் திருத்தினார் என்று ஞானு தியாகு அவர்கள் முதல் தொகுதிக்கான தமது நூன்முகத்தில் குறித்துள்ளார். எனவே தேசிகம் பிள்ளையே அவ்வெட்டுத் தொகுதிகளின் பதிப்பாசிரியர் என நாம் கொள்ளலாம். எனினும் பதிப்பாசிரியர் பெயர் ஒரு தொகுதியிலும் குறிப்பிடப்படவில்லை என்பது வியப்பூட்டுகிறது!

தேசிகம் பிள்ளை பயன்படுத்தின பிரதி வேறானதாக இருந்திருத்தல் வேண்டும். நான் பயன்படுத்தியது அதற்குப் பிந்தி எழுதப்பட்ட பிரதி. தமிழிலும் பிரெஞ்சிலும் வல்லவரான தேசிகம் பிள்ளை மிகவும் முயற்சி எடுத்து, தமது பதிப்பில் ஓர் உத்தியைக் கையாண்டுள்ளார். பிள்ளையின் மிகவும் நீண்ட தொடர் வாக்கியங்களை வாசகர் படிப்பது சிரமம் என்பதை உணர்ந்து, அவற்றைச் சிறு சிறு வாக்கியங்களாகப் பிரித்துப் பதிப்பித்துள்ளார். இதனால் வாசகர்கள் அவரது தொகுதிகளைப் படிப்பது எளிதாக்கப்பட்டுவிட்டது. இந்த அவரது துணிச்சலை நாம்

பாராட்டவேண்டும். ஆயினும் எட்டாம் தொகுதி வரை அதே முறையினை அவர் பின்பற்றாமல் விட்டுவிட்டார். பிரதியில் உள்ளவாறே கடைசி தொகுதிகள் பதிப்பிடப்பட்டிருந்ததை வாசித்துப் பார்ப்போர் தெளிவாக உணர முடிகிறது. 7, 8ஆவது தொகுதிகளைப் பதிப்பித்தவர் ரோமேன் ரோலண்ட் நூலகத்தில் நூலகராகப் பணி புரிந்த ஆனி சுந்தரம் என்பவரே எனப் பேராசிரியர் பாண்டுரங்கன் அவர்கள் தெரிவிக்கிறார்.

எனக்குத் தேசிகம் பிள்ளையின் துணிச்சல் வரவில்லை. ரங்கப் பிள்ளை அவர்களின் வசன நடையைச் சிதைத்தல் தவறாகும் என்று என் உள் மனம் கூறியது. அதே நேரம், வாசகர்கள் புரிந்து கொள்ள இயலாத வாக்கிய அமைப்புகளை அப்படியே பதிப்பித்தல் சரியாகாது என்பதையும் நான் உணர்ந்தேன். எனவே பல நீள் வாக்கியங்களைப் பிரித்துச் சிறு வாக்கியங்களாக அமைப்பதை என்னால் தவிர்க்க இயலவில்லை.

ஆனந்தரங்கப் பிள்ளையின் தமிழினைச் சிலர் குறை கூறுகிறார்கள். அது சரியன்று. அவர் தான் எழுத நினைத்ததைத் தெளிவாக எழுதக்கூடியவர். பல பக்கங்கள் நீளும் நிகழ்வுகளையும் அயர்வின்றி விளக்கக்கூடிய அவரது ஆற்றலைப் பல விடங்களில் அறிந்து நாம் மகிழ்கிறோம். ஆனால் அவரது தமிழ் உரைநடை பாமரர் நடை, பண்டிதர் நடையல்ல. அது அன்றைய பழகு தமிழ், பேச்சுத் தமிழ். 18ஆம் நூற்றாண்டின் தமிழ் உரை நடைக்கு அவரது நாட்குறிப்பை விட்டால் வேறு சான்றுகள் ஏதுமில்லை. தமிழ் நாட்டில் ஓலையில் எழுதப்பட்ட காலத்தில் பிரெஞ்சுப் புதுச்சேரியிலிருந்ததால் தமது நாட்குறிப்பு, கடிதங்கள், கணக்குகள் முதலியவற்றை எழுத அவர் காகிதத்தைப் பயன்படுத்தினார். இன்று உலாவரும் நூல்களில் பிள்ளையின் நாட்குறிப்பே காகிதத்தில் முதன் முதலில் எழுதப்பட்ட நூலாக இருந்திருக்க வேண்டும்.

ஏற்கெனவே வெளியான எட்டுத் தொகுதிகளை மட்டும் 1998இல் புதுவை அரசின் கலை பண்பாட்டுத் துறை இரண்டாம் பதிப்பாக வெளியிட்டது. தற்போது எஞ்சிய நான்கு தொகுதிகளையும் வெளிக் கொணரும் முயற்சி புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தினால் மேற்கொள்ளப்படுகிறது. அதன் விளைவே இந்த ஒன்பதாம் தொகுதி.

ரங்கப்பிள்ளை மிக்க முன்னெச்சரிக்கையோடு தனது நாட்குறிப்பின் பிரதி ஒன்றையும் தயாரித்து வைத்திருந்தார். அவர் உயிர் விட்ட அன்றே அவரது உடல் தகனத்தை முடித்து விட்டு, அன்றிரவே அவரது உறவினர், நண்பர் சிலர் லாலியின் அறிவுரையின்படி – ஆங்கிலப் படைகள் புதுவை நகரைச் சூழ்ந்திருந்த நேரமாதலால் – ஒரு தோணி பிடித்துத் தரங்கம்பாடிக்குப் புறப்பட்டனர். ஆனால் கடல் கொந்தளிப்பு அதிகமாக

இருந்ததால் அவர்கள் அனைவரும், மூட்டை முடிச்சுகளும் முழுவதுமாக நனைந்து போய், புதுவைக்குத் திரும்பினர். பிள்ளையின் நாட்குறிப்புப் புத்தகங்களைக் கொண்ட கட்டும் நனைந்து போயிற்று. அடுத்த மூன்றாம் நாள் புதுச்சேரி ஆங்கிலேயர் வசமாயிற்று. ஊரிலிருந்த அனைவரும் அகன்று போய்விடவேண்டுமென்று ஆணையிடப்பட்டது. அப்போது நாட்குறிப்புப் புத்தகங்களோடு பிள்ளையின் உறவினர்கள் தரங்கம்பாடி சென்று, பொறையாற்றில் குடியமர்ந்தனர். முற்றிலும் தரைமட்டமாக இடித்துப் போடப்பட்டுவிட்ட புதுச்சேரி 1765இல் பிரெஞ்சுக்காரர் வசம் திருப்பி ஒப்படைக்கப்பட்டபோது அவர்கள் சொந்த மண்ணுக்கு மீண்டனர். நாட்குறிப்பும் புதுச்சேரி மண்ணுக்குத் திரும்பியது. பிள்ளையின் நாட்குறிப்பு செத்துச் செத்துப் பிழைத்து, பின் மறு அவதாரம் பெற்ற கதை இது தான்.

145 ஆண்டுகளுக்குப் பின்னர்ப் பெரும் அளவுக்கு அவரது மூல ஏடுகளையும் அவற்றின் ஒரு பிரதியினையும் கொண்டே ஆங்கில மொழிபெயர்ப்பு செய்து முடிக்கப்பட்டது. அப்பொழுதே அவை மிகவும் சிதிலமடைந்த நிலையிலிருந்தன. புதுச்சேரியில் அவரது வீட்டிலிருந்த மூலப் பிரதியைப் பிரெஞ்சு அறிஞர்கள் படி எடுத்திருந்தனர் என்பதை முன்பே குறிப்பிட்டோம். 1916ஆம் ஆண்டில் புதுச்சேரியில் வீசிய புயற்காற்றிலும் இரு நாள் கொட்டிய பெரு மழையிலும் மூல நோட்டுப் புத்தகங்கள் மேலும் பழுதுபட்டன. இருப்பினும் அவற்றினைப் படியெடுத்துப் புதுச்சேரியிலிருக்கும் மைய அரசின் ஆவணக் காப்பகக் கிளையில் பாதுகாத்து வருகின்றனர். இப்பொழுது வெளிவரும் நான்கு தொகுதிகளும் அவற்றின் படியே அச்சில் பதிப்பிக்கப்படுகின்றன.

புதுவை ஆவணக் காப்பகப் பிரதியோடு கூட ஆங்கிலத் தொகுதிகளையும் நான் பெரும் துணையாகக் கொண்டேன். இதனை ஆங்காங்கேயுள்ள அடிக் குறிப்புகள் உணர்த்தும்.

நாட்குறிப்புப் புத்தகங்கள் சிதிலமடைந்து போன நிலையில் அவற்றைப் பிரதி செய்து வைப்பது அவசியமாயிற்று. குறைந்தது இரு முறையாவது இது நடந்திருக்கலாம். புதுவை மைய அரசின் ஆவணக் காப்பகத்தில் தற்போது உள்ள பிரதி, குறிப்பாக ஒன்பதாம் தொகுதி, 1949ஆம் ஆண்டின் கடைசி மாதங்களில் பிரதி யெடுக்கப்பட்டது என்ற தகவலை அத்தொகுதியின் பக்கம் 569இல் உள்ள தேதி முத்திரை மூலம் நாம் அறிகிறோம். அப்படிப் பிரதி எடுத்தவர்கள் பெரும் அக்கறையுடனும் கவனத்துடனும் தமது கடமையை ஆற்றினர் என்று கூறமுடியாது. பிரதிகளில் காணப்படும் எண்ணற்ற தவறுகள், ஒரே பெயர், ஊர் முதலியன பல்வேறு வகையாக எழுதப்பட்டிருப்பது போன்றன இதனை உணர்த்துகின்றன. உரையாடல்கள் விவரிக்கப்படும் பக்கங்களில் இன்று

நாம் பயன்படுத்தும் மேற்கோள் குறிகள் பிள்ளையின் காலத்தில் வழக்கிலில்லை எனத் தெரிகிறது. அதே போன்று, நிறுத்தக் குறிகளும் (punctuation marks) கையெழுத்துப் பிரதியில் காணப்படவில்லை. வாசகர்களின் நலன் கருதி இப்பதிப்பில் அக்குறிகளை நான் இட்டுள்ளேன்.

பிரதி எடுத்தோர் பல வகையிலும் வார்த்தைகள், வாக்கியங்கள், பெயர்கள் ஆகியனவற்றைப் பல விடங்களில் சிதைத்துள்ளனர் என்பது அப்படிகளை வாசிப்போருக்குத் தெரியவரும். பொதுவாக மூலத்தில் உள்ளபடியே பதிப்பிப்பது தான் நேர்மை. ஆனால் இப்படிகளில் உள்ளவை முற்றிலும் மூலத்தின் படியே உள்ளன என்று எடுத்துக் கொள்ள முடியவில்லை. பல விடங்களில் ஒரே மிக நீண்ட வாக்கியம் ஐந்தாறு செய்திகளைப் பிணைத்து எழுதப்பட்டுள்ளது. அவற்றைப் படிக்கும் வாசகர்கள் தடுமாறுவார்கள். அவர்களுக்குப் புரியாதவாறு நூல் பதிப்பிப்பதில் அர்த்தமில்லை. எனவே நான் மூலப் பிரதிக்கு உண்மையாக இருக்க வேண்டிய நிலையினைப் பெரும்பாலும் பின்பற்றியுள்ளேன் என்றாலும் வாசகர் நலன் கருதி, பல முறைகளைக் கையாள நேர்ந்திருக்கிறது. அவற்றை உரிய இடங்களில் அடிக்குறிப்பாக விளக்கியுள்ளேன்.

பிள்ளையின் நாட்குறிப்பில் உள்ள தகவல்கள் முழுதும் பிரெஞ்சு மற்றும் ஆங்கில ஆளுநர்கள், நவாபுகள், நிர்வாகம், பொருளாதாரம், பிற உள்ளூர் அரசர்கள், பாளையக்காரர்கள் எனப் பல தலைப்புகளின் கீழ்த் திரட்டப்பட்டு, படிப்போர் நாட்குறிப்பின் சாரத்தினைச் சுலபமாக அறிந்துகொள்ளும் வகையில் நான் ஆங்கிலத்திலும் தமிழிலுமாக இரு நூல்களை வரைந்துள்ளேன். நாட்குறிப்பின் முழுமையான தகவல் தொகுப்பினை அறிந்துகொள்ளும் ஆர்வமுடையோர் அவற்றினைப் பார்ப்பார்களாக. அவை ஆங்கிலத்தில் The Colonial World of Ananda Ranga Pillai, Some Sketches from Ananda Ranga Pillai தமிழில், 'ஆனந்தரங்கப் பிள்ளை காலத் தமிழகம்', 'ஆனந்தரங்கர் கால அரசியலும் சமுதாயமும்' என்பன.

## இத்தொகுதி பற்றி

அடுத்து, இந்த ஒன்பதாம் தொகுதியைக் குறித்துச் சில வார்த்தைகள். இதற்கு முந்திய எட்டாம் தொகுதியின் கடைசி நாள் குறிப்பு 1753 டிசம்பர் (செப்டம்பர் என்று தமிழில் பிழையாக அச்சிட்டுள்ளனர்) 8ஆம் தேதியைச் சேர்ந்தது. ஆனால் இத்தொகுதியோ 1754 செப்டம்பர் 8ஆம் தேதியிலிருந்து துவங்குகிறது.

பிள்ளையவர்கள் தடித்த, நீண்ட நோட்டுப் புத்தகங்களில் தனது அன்றாடக் குறிப்புகளை எழுதி வைத்தார். அப்படி அவர் எழுதிய பல நோட்டுப் புத்தகங்களில் இந்த இடைக் காலத்திய ஒன்பது மாதக் குறிப்புகள் கிடைக்காமல் போய்விட்டன. அதன் விளைவாக முக்கிய நிகழ்வுகள் நடைபெற்ற ஒரு கட்டத்தின் விவரங்களை நாம் இழக்க நேர்ந்துவிட்டது.

காரைக்காலைச் சந்தா சாகிப் பிடித்துப் பிரெஞ்சுக்காரர் வசம் ஒப்படைத்தது முதல் தஞ்சை மராட்டிய அரசு பிரெஞ்சுக்காரருக்குப் பகையாயிற்று. தஞ்சை அரசுக்கு உதவியாகப் புனாவிலிருந்து மராட்டியப் படைகள் வந்து தமிழகத்தை நாசப்படுத்தின. ஆங்கிலேயர்களும் தஞ்சை அரசுக்காகப் பரிந்து வந்து அதன் நட்பைப் பெற்றனர்; பின் தமது கைப்பாவையாகத் தஞ்சை அரசரை அவர்கள் ஆக்கிக்கொண்டனர்.

அரசி மீனாட்சியிடமிருந்து சந்தா சாயபு கவர்ந்து கொண்ட திருச்சிக் கோட்டையைத் தான் பிடித்துக் கொள்ள வேண்டுமென்று மைசூர் அரசும் ஆசைப்பட்டுத் துருப்புகளை அனுப்பிற்று. அவர்களையும் ஆங்கிலேயர் நண்பராக்கிக் கொண்டனர். ஆனால் சந்தா சாயபுவைக் கொன்று, திருச்சிக் கோட்டையை முகமதலியும் ஆங்கிலேயரும் கைப்பற்றிக் கொண்ட பின் மைசூராருக்கு அதனைத் தர மறுத்ததால், மைசூர் தளபதி நந்திராஜா பிரெஞ்சுக்காரர்களின் துணையை நாடினார். பிரெஞ்சுக்காரரும் மைசூர்ப் படைகளும் எவ்வளவு முயன்றும் திருச்சியைப் பிடிக்க முடியாமல் தோற்றுப் போயினர். அக்கோட்டையினைக் கைப்பற்றும் நோக்கத்தோடு அனுப்பப்பட்ட மராட்டியத் தளபதியான முராரி ராவும், மைசூர்த் தளபதியான நந்திராஜாவும் நிறையப் பொருள் விரயத்துக்குப் பின் ஒன்றும் சாதிக்க முடியாமல் தம் நாட்டுக்குத் திரும்பும் நிலை ஏற்பட்டது. இவ்வாறு துய்ப்ளேவின் திட்டங்கள் எல்லாம் தவிடுபொடியாகி, அவரும் தான் இந்தியாவை விட்டுப் போனால் போதும் என்று கருதும் நிலைக்கு வந்தார்.

இந்த இடைக்காலத்தில் சதுரங்கப்பட்டணத்துக் கோட்டையில் ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் கூடிக் கர்னாடகத்தைத் – தமிழகத்தைத் – தமக்குள் பங்குபோட்டுக் கொள்வது பற்றிப் பேசினர். ஒவ்வொரு தரப்பாரும் தாமே முழுவதையும் அல்லது பெரும்பகுதியைப் பெற்றுவிடவேண்டும் என்ற கருத்து கொண்டிருந்ததால் பேச்சுவார்த்தை முறிந்தது. இதனிடையில் பிரிட்டிஷ் அரசானது, 'துய்ப்ளே தான் சென்னப்பட்டணத்தைப் பிடித்து முதலில் சண்டை துவக்கினார். அதனால் பிரெஞ்சு வாணிபக் கப்பல்களைத் தாங்கள் வேட்டையாட நேர்ந்தது,

பிரெஞ்சு வாணிபம் அடியோடு நின்றுபோனதற்கு அவரே காரணம், அவரை ஆளுநர் பதவியிலிருந்து அகற்றிவிட்டால் மீண்டும் உறவு சரிப்பட்டு வாணிபம் அமைதியாகச் செய்யலாம்,' என்று பிரெஞ்சு அமைச்சர்களோடு தந்திரமாகப் பேசி அவர்களை அதற்கு இணங்கச் செய்தது. பிரெஞ்சு மன்னரும் இணங்கினார்.

இதன் முடிவாக, 1754 ஆகஸ்ட் 2ஆம் நாள் ஒரு பிரெஞ்சுக் கப்பல் புதுச்சேரித் துறைமுகத்தை அடைந்து நங்கூரம் போட்டு நின்றது. அதிலிருந்து 2,000 வெள்ளை சொல்தாதுகளும், அவர்களின் தளபதியான கொதேயும் (Godheu) கரையிறங்கினர். துய்ப்ளேயைப் பதவியிலிருந்து நீக்கி, அவர் கிளர்ச்சி செய்தால் அவரை விலங்கிட்டுக் கைதியாக்கி கொதேவை அவருக்குப் பதில் நியமித்த அரசாணை ஒன்றும் கொதே மூலம் வந்தது. அடுத்த நாள் புதுச்சேரிக் கவுன்சில் கூடியது. அதில் அரசாணை படிக்கப்பட்டது. உடனே "மன்னர் வாழ்க" என்று மும்முறை துய்ப்ளே வாழ்த்த, பிறரும் அவ்வாறே கோஷித்தனர். (அரசாணை ஒன்று படிக்கப்பட்டதும் இப்படிச் செய்தல் மரபு.) போதிய கடற்படை இல்லாத, போதிய பொருளுதவி செய்ய முடியாத தமது அரசை நம்பி எதுவுமே செய்தல் சாத்தியமில்லை என்பதையும், அரசாணையைத் தாம் மீறுவதால் ஏற்படக்கூடிய விளைவுகளையும் தூய்ப்ளே உணர்ந்திருக்க வேண்டும். இவ்வாறு எட்டாம் தொகுதி முடிவுற்ற எட்டாம் மாதம் புதுச்சேரியில் தூய்ப்ளேவின் நிர்வாகம் முடிவுக்கு வந்தது. இவற்றையெல்லாம் விவரிக்கும் ஒரு தொகுதி (நோட்டுப் புத்தகம்) தான் கிடைக்காமல் போய்விட்டது.

உடனடியாக ஆங்கிலேயருடன் பேச்சுவார்த்தை நடத்தி, நாடு பிடிக்கும் நடவடிக்கைகளை அடியோடு நிறுத்திவிட்டுச் சமாதானம் செய்து, மீண்டும் வாணிபம் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பும் படி கொதேவுக்கு அறிவுறுத்தப் பட்டிருந்தது. அதன்படியே அவர் செய்யலானார். தனது கணக்கு வழக்குகளை முடித்துவிட்டுக் கப்பலேறுவதற்காகச் சில வாரங்கள் துய்ப்ளே புதுச்சேரியிலிருக்க அனுமதிக்கப்பட்டார். புதிய ஆளுநரின் அல்லது தளபதியின் நிர்வாகம் ஆறு மாதங்களே நடந்தது. ஆங்கிலேயரோடு பதினெட்டு மாதப் போர் நிறுத்த ஒப்பந்தம் கையெழுத்தானதும் அவர் கப்பலேறினார். சில வாரங்கள் சென்ற பின், லெறி புதுச்சேரி வந்து ஆளுநர் பொறுப்பை மேற்கொண்டார். உடனேயே ஆங்கிலேயர்கள் முகமதலியின் பெயரைச் சொல்லி, கர்னாடகத்தின் பகுதிகளை ஆக்கிரமிக்கத் தொடங்கினர்.

கொதே கம்பெனிக்கு வரவேண்டிய குத்தகைப் பணக் கணக்குகளையும் அவசர அவசரமாகவும் அரைகுறையாகவும் பார்த்தார். கம்பெனியின் மொத்த குத்தகைதாரராக (Renter-General) இருந்து வந்த ஆனந்தரங்கப் பிள்ளையைத் தம் மனைவியின் சொல் கேட்டு நீக்கிவிட்டு அவரது ஆளான பாப்பையப் பிள்ளையிடம் அப்பெரும் பொறுப்பினை தூய்ப்ளே ஒப்படைந்திருந்ததை எட்டாம் தொகுதியிலேயே படிக்கலாம். நாடு பெருங்குழப்பத்தில் இருந்தது. ஆங்கிலேயரின் கை ஓங்கி, பிரெஞ்சு ஆதிக்கம் பின்னடையத் துவங்கியிருந்தது. ஆனந்தரங்கரின் செல்வாக்கும் இறங்குமுகமாக இருந்தது. இப்பின்னணியில் தான் ஒன்பதாம் தொகுதி துவங்குகிறது.

இர. ஆலாலசுந்தரம்

# செப்டம்பர் 1754[1]

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 8; பவ வருசம், ஆவணி மாசம், தேதி 27; ஆதிவாரம்*** [2]

இத்தனாள் காலத்தாலே கோவிலுக்குப் போய் வந்த பிற்பாடு முசே திலார்ஷு போய் பேசி யிருக்கச்சே யென்னை துரை அழைப்பிச்சார். நான் போனவுடனே "துக்கா சாயபு சீரொப்பா யேன் கொண்டுவந்து கொடுக்க யில்லை?" யென்று கேட்டார். "நாலு நாளாய் வந்து கண்டு பேச வேணுமென்றால் நீர் கதவைச் சாத்திக்கொண்டு காகிதங்கள் யெழுதுகிற அலுவல்களிலே யிருந்தபடியினாலே கொண்டு வர யில்லை," யென்று சொன்னதுக்கு, "யின்றைக்குப் பகலைக்கு மேலாக நாலரை மணிக்கு கொண்டுவரச் சொல்லு," யென்று சொன்னார். "நல்லது, அஞ்சு பீரங்கி போடச் சொல்லி பீரங்கி மேஸ்திரியை அழைப்பித்து உத்தாரங் குடுக்கவேணு" மென்று சொன்னார். அந்தப்படி சேவுகனைப் போய் அழைச்சு வரச் சொல்லி அவனுக்கு உத்தாரம் வாங்கிக் கொடுத்து அனுப்பிவிச்சேன். அப்பால் முகியே திலார்ஷு யிருந்து கொண்டு சென்னபட்டணம் கூடலூரிலே மனுஷர்களை வைத்து அங்கே கப்பல்கள் வரத்துப் போக்கு நடக்கிற சமாச்சாரங்களும் அழைப்பிக்கவேணு மென்று சொன்னார்.

அழைப்பிப்போ மென்று சொன்னதுக்கு, "இதுக்கு மாதம் நூறு ரூபா சென்றாலும் செல்லுது; அந்தப்படிக்குச் சிலவழிச்சு சமாச்சாரம் அழைப்பியு," மென்று சொல்ல, "சென்னப்பட்டணத்திலே யெனக்கொரு அரண்மனைக்காறன் சினேக முண்டு, அவனுக்கு நானும் யெழுதி அனுப்பி சமாச்சாரத்தையு மழைப்பிக்குறே," னென்று சொன்னான். "அப்படி செய்கிறது தா" னென்று சொன்னவுடனே "கடலூரிலே மூணு கப்பல் வந்துதாம், அதிலே சொலுதாதுகள் யிறங்கினார்களாம், மெய்தானா?" வென்று (கேட்டார். நான் மெய்தான் என்று)[3] சொன்னேன். "அதிலே சிறிது பேர் ரோகஸ்தர்களா

---

[1] இது போன்ற தலைப்புகள் ஆங்கிலப் பதிப்பில் உள்ளவாறு போடப்பட்டுள்ளன, அத்தியாயப் பிரிவுகள் மூலப் பிரதியில் இல்லாததால்.

[2] வருஷம், மாசம், தேதி ஆகியவற்றைச் சுருக்கெழுத்தில் , ௵ ௴ ௳ எனப் பிள்ளை எழுதியுள்ளார். அவ்வெழுத்துகள் கணினி எழுத்துப் பலகையில் இல்லை என்பதால் அவை இங்கு நீட்டி அச்சிடப்படுகின்றன.

[3] இப்படி வரும் இடைச் செருக்கல்கள் மற்றும் தலைப்புகள் பதிப்பாசிரியருடையவை; சில ஆங்கில இடைச் செருகல்கள் மட்டும் நாட்குறிப்பினைப் படியெடுத்தோருடையவை.

(நோயாளிகள்) யிறக்கினார்கள், சிறிது பேர்கள் யிறங்கினவர்களை தீவுக்கோட்டை வழியாய் திரிச்சிராப்பள்ளிக் கனுப்பினதாகவும் சொல்லி, யின்னம் கப்பல் வருதென்றும், தேவனாம்பட்டணத்துக்கு துரைத்தனம் வேறே வருதென்றும், அதுக்கு யிந்தக் கலகம் சமாதானமாய்ப் பேசித் தீருகிறதுக்கு மேஸ்தர் சாந்தருசை (Mr. Saunders) கொமுசாயிராய் (கமிஷனர்) நேமித்து, சென்னப்பட்டணத்துக் கொவற்ணதோராக (கவர்னர்) விசாகப் பட்டணத்திலே யிருக்கிற மேஸ்தர் பிக்கட்டை (Mr. Pigot) நேமித்து யெழுதி வந்ததாகவும், சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் பிக்கட் யென்கிறவன் வந்தவுடனே யிந்த சமாதானப் பேச்சு பேசுவார்க ளென்றாப்போலேயும் சொன்னார்க" ளென்று சொன்னதுக்கு, முசியே தெலார்ஷு, "நானு மப்படித்தான் கேட்டேன். மேஸ்தர் பிக்கட்டு யென்று இப்போ விசாகப்பட்டணத்திலே கப்பித்தானா யிருக்கிறவன் இனி மேல் சென்னப் பட்டணத்துக்கு கொவற்ணர் துரைத்தனமாய் வருகிறானே, பத்து வருஷத்துக்கு முன்னே சென்னப்பட்டணத்திலே ஒரு கணக்கனா யிருந்தப் பய்யனவன் யென்று," சொன்னான். அதை விட்டுப்போட்டு துரை சொன்னது, "மேஸ்தர் யிஷ்ட்டார்க்கு (Mr. Starke) சென்னப்பட்டணத்துக்கு சின்ன துரைத்தனமாய்ப் போவா" னென்று சொன்னார். அந்தப் பிரஸ்தாபமே அரை நாழிகை மட்டுக்கும் பேசியிருந்து அப்பால் நான் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன்.

முசியே திலார்ஷு பின்னையும் கால் நாழிகை நேரம் பேசியிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு போனான். அப்பால் முசியே தெபறேன் (Monsieur Desfresnes), முசியே குலூவேத்தை (Monsieur Clouet)[1] அழைத்துக்கொண்டு போனான். அப்பால் நான் என் காசா கச்சேரியே வந்தேன்.[2]

பதினோரு மணி வேளைக்கு அழைச்சனுப்பிவிச்சு கலவி சுபதருசேன் (Safdar Husain of Kalavai) காகிதம் குடுத்தார். அந்தக் காகிதத்திலே யிவர் புதுசாய் துரைத் தனத்துக்கு வந்ததுக்கு மோபார்க்குபாதி (நல்வாழ்த்துக்) கூறி யெழுதி சீரோப்பாவும் அனுப்பிவிச்சோம் யென்று யெழுதி யிருந்தது. அந்தக் காகிதம்

---

[1] இவர் புதிய ஆளுநரின் தம்பி.

[2] காசா என்பதற்கு "சொந்தம்" என்றும், காசாக்காரன் என்பதற்கு "சொந்தக்காரன்" என்றும் தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) பொருள் சொல்கிறது. தொகுதி II. பக். 485. பிள்ளை முதலில் தம் பாக்குக் கிடங்கையும், பின் காசாக் கச்சேரி என்கிற பூந்தோட்டக் கச்சேரியையும், முடிவாகத் தன் வீட்டையும் அலுவலகமாகக் கொண்டிருந்தார்.

கொண்டு வந்தவனை கேட்டதுக்கு சீரொப்பாவைக்[1] கொண்டு வந்து முன்னே வைத்தான். அதை யெடுத்துக்கொண்டு துரையவர்கள் சொன்னது, "தக்கா சாயபு வினுடைய சீரொப்பாவையும் பகலைக்கு மேலாகக் கொண்டு வந்து குடு," யென்று சொல்லி, கலவி கில்லேதாரன் சபுதர் உசேன் கான் சாயபுவுக்கு வெகு மரியாதையாய் பதிலுத்தார மெழுதச் சொல்லிச் சொன்னார். "நல்லதென்று" சொன்னேன். வருகிற காகிதங்களை பிரான்சுப்படுத்திக் கொண்டு வந்து குடென்று சொன்னார். நல்லதென்று செ்ால்லிப்போட்டு அனுப்பிவிச்சுக்கொண்டு வந்தேன்.

இத்தனாள் பகலைக்கு மேலாக நாலு மணிக்கு தொரை அவர்களுக்கு வந்தவாசி தக்கா சாயபு பெகுமானமும் (வெகுமானமும்) தொரையூரார் பெகுமானமும் வந்ததை துரையவர்கள் பல்லக்கிலே யேற்றி அழைப்பிச்சு, நம்முடையக் கச்சேரியிலே யிருந்து .......... மேளதாளத்துடனே சம்பிரமமாய் துரையவர்கள் வீட்டுக்குப் போய் அவருக்கு பெகுமதி குடுத்தவுடனே தக்கா சாயபு வெகுமானத்துக்கு அஞ்சு பீறங்கி போட்டார்கள். துரையவர்களுக்கு தக்கா சாயபு வெகுமானம் வந்த விபரமென்ன வென்றால், குதிரை–1, மகம்முதி–1, பாகை–1, மட்டக்கா–1, சரிபேச்சு–1, சாமேவார்–1, அவர் தம்பிக்கு சீரொப்பா–1; அப்பால் தொரையூரார் பெகுமானம் துரைக்கு மாத்தாப்பிசாகை–1, நகை–5, அவர் தம்பிக்கு சரி பாதி செஹர்தார் நகை–5. யிந்த நகை கொண்டு போய் குடுத்தவுடனே வாங்கிக் கொண்டு மகா சந்தோஷப்பட்டு தொரையூரார்.......[2] பிரான்சிலே யெழுதிக் கொடுத்ததும் பார்த்துக் கொண்டு சந்தோஷமாய், வந்த வக்கீலுகளுக்குப் பன்னீர் பாக்கு வெத்திலை குடுத்து அனுப்பிவிச்சு, அப்பால் சாயங்காலம் அரியாங்குப்பத்து திருநாளுக்கு துரை சவாரி போய் ராத்திரி சாமத்துக்கு வாரச்சே கெவுனி வாசற்படி சாத்திப் போட்டிருந்தது. அப்பால் மயோருக்குச் (Major) சொல்லி அனுப்பிவிச்சு, அவர் உத்தாரம் தெத்துவாசலுக்கு அழைப்பிச்சுக் கொண்டு உள்ளே வந்து வீட்டுக்குப் போனார். அந்த மட்டுக்கும் நான் கச்சேரியிலே தானே யிருந்து பின் வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் ராத்திரி பதினோரு மணிக்கு நான் சாப்பிட்டு யிருக்கச்சே, பதினொன்றரை மணிக்கு தம்பிக்கு ஊர்த்த சுவாசம் போலே கண்டுது. அப்பால் நான் கிட்டப்போய் செய்விக்க வேண்டிய

[1] ரா, ரொ, னா, க்கு போன்ற எழுத்துகளைச் சேர்த்து ஒரெழுத்து போல் எழுதும் வழக்கம் தமிழரிடை 50 ஆண்டுகளுக்கு முன் வரை இருந்து வந்துள்ளது. பிள்ளையும் படியெடுத்தோரும் அவ்வாறே பலவிடங்களில் எழுதியுள்ளனர்.

[2] விளங்காத அல்லது படிக்க முடியாத இடங்களில் இப்படிச் சில புள்ளிகள் வைக்கப்பட்டுள்ளன.

சடங்குகளெல்லாம் செய்விச்சு, அவனும் சொல்லத்தக்க சேதிகளெல்லாம் சொல்லி ஆன பிற்பாடு பனிரெண்டு மணி சரியாய் அடிச்ச உடனே தம்பி சரீரத்தை விட்டு ஆத்துமா சுவாமியுடைய பாதார விந்தத்தை அடைந்தது.

இவனுடைய சனனம்—விசைய வருஷம் மார்கழி மாசம் 7ஆம் தேதி திங்கட்கிழமை; பூராட நக்ஷத்திரம் ராத்திரி யிருபத் தஞ்சு நாழிகைக்கு துலா லக்கனத்தில் ரெண்டா மிடமான விறுச்சகத்தில் சுக்கிரன், ராகு; மூணா மிடமான தனுசில் ரவி, புதன், சந்திரன்; நாலா மிடமான மகரத்தில் அங்காரகன்; அஞ்சா மிடமான கும்பத்தில் குரு; எட்டா மிடமான விருஷபத்தில் கேது; பத்தாமிடமான கடகத்தில் குளிகன்; பதினோரா மிடமான சிங்கத்தில் சனி. யிப்படி நவக்கிரகங்களு மிருக்கிற வேளையிலே பிறந்த பிரம்பூர் திருவேங்கடப் பிள்ளை அவர்களுக்கு திவ்வித்திய குமாரனாகிய திருவேங்கடப் பிள்ளை அவர்கள் சனனம். யிவருக்கு கலியாணம் ராட்சஸ வருஷம், ஆனி மாசம், 11 ஆம் தேதி. புத்திர சனனம் நள வருஷம், மாசி மாசம், 19ஆம் தேதிக்கிச் செவ்வாய்க் கிழமை ராத்திரி நாழிகை 27க்கு மகர லக்கனம். புத்திரி சனனம், ரவுத்திரி வருஷம் அற்பிசி மாதம் 10ஆம் தேதி சனிவாரம் ராத்திரி 24 நாழிகைக்கு கன்னியா லக்கனத்தில். யிப்படி யெல்லா மிருந்து சகல சவுக்கியத்திலேயும் போகத்துக் குள்ளே தேவேந்திரனைப் போலேயும் தானத்துக்குள்ளே கருணன் போலேயும் புத்தியிலே யூகி மந்திரியைப் போலேயும் தைரியத்திலே யிமாசலத்தைப் போலேயும் காம்பிரயத்திலே சமுத்திரத்தைப் போலேயும் யிப்படியாக – நாற்பது வருஷமும் யெட்டு மாசமும் யிருபது நாளும் சுகமாயிருந்து, பவ வருஷம் ஆவணி மாசம் 27ஆம் தேதி ஆதிவார னாள் ராத்திரி பதினஞ்சு நாழிகைக்கு மேல் பதினாறு நாழிகைக்குள்ளாக வைகுண்ட பிறாப்த்தி ஆனார். அப்போது நமது வீட்டுக் குள்ளே யிருந்த சனங்கள் சகலமான பேருக்கு யிருந்த மனது பிறபஞ்சம் முழுகினாப் போலே யிருந்துதே யல்லாமல், பின்னை ஒரு விதமாயிருக்கவில்லை. மறண[1] லக்கனம், மிதுனம், நக்ஷத்திரம் ரோகுணி; தத்துக்கால பஞ்சாங்கம்: பவ வருஷம் ஆவணி மாசம் 27ஆம் தேதி ஆதிவாரம் அமரபக்ஷம், ஷஷ்ட்டி திதி நாழிகை 6¾க்கு மேல் சப்தமி காற்திகை, நாழிகை 20¾, ஆறுஷணம் 26½, பத்திரவாக்கரணம் 6¾, திவா ராத்திரி—வற்சியம்—பூச்சியம்—பிருதுக்கு தத்க்கா—கிரக நிலை—மூணாமிடமாகிய சிங்கத்தில் குரு, சூரியன், புதன்; நாலாமிடமாகிய கன்னியில் சுக்கிறன், செவ்வாய், ராகு; ஏழாமிடமான தனுசில் சனி, பத்தாமிடமாகிய மீனத்தில் கேது; பனிரெண்டாமிடமான விருஷபத்தில் சந்திரன்; யிப்படி நவக்கிரக நிலை நிற்க மறணத்தை அடைந்தார்.

---

[1] ரகரத்துக்குப் பதில் நிறைய இடங்களில் றகரம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

புத்திரி—புத்திராள் சனன சக்கிரங்கள்

| | | | |
|---|---|---|---|
| | சு | சனி செவ் | |
| கு-பு-கே-சூ. | அப்பாவு சாதகம். | | |
| ல / சந்திரன். | | | ரா |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | | | கு-ரா |
| | குழந்தை சாதகம். | | செ-சனி |
| | | | |
| கே | சந்திரன் | சூ-பு. | சு. |

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 9; பவ வருசம், ஆவணி மாசம், தேதி 28; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே தந்தப் பல்லக்கை முஸ்தீது பண்ணி விச்சு சகலமான வாத்தியங்கள் கோஷிக்க, அரிகை, நெமிலி, பிஞ்சம் முதலான மெயி வரிசை யென்னென்ன உண்டோ அதுகளை யெல்லாம் கூடவரத் தக்கதாகவும், பட்டணத்திலுள்ள பெரிய மனுஷர், கும்பினீர் வர்தகர்கள், மத்துமுள்ள சமஸ்தமான பேர்களும் வர, சபுறுசங்கியும் (guns) கூட, சுமசானம் வரைக்கும் நடைபாவாடை போட, யிப்படியாக சகல சகல சம்பிறமங்களுடனேயும் பிரேதத்தை யெடுப்பிக்கச்சே, உபய கெருடர் வீடு விட்டுப் பிறப்பட்டது முதல் சுமசானம் மட்டுக்கும் வந்து, தகனம் ஆகுற மட்டுக்கும் வட்டமிட்டுக் கொண்டு போயிருக்க, பத்து நாழிகைக்கு சுமசானத்திலே செயிவிக்கவேண்டிய சடங்குகளெல்லாம் செய்விச்சு தகனமான பிற்பாடு பனிரெண்டு நாழிகைக்கு வீட்டுக்கு வந்தோம்.

இத்தனாள் சாயங்காலம் முசே அபேர் (Mr. Aubert)[1] நாளா

[1] பிராக்கெட்டுகளில் ஆங்கிலத்தில் இருப்பவை பல கையெழுத்துப்படியில் உள்ளவை. எஞ்சியவை, தமிழில் இருப்பவை பதிப்பாசிரியரின் விளக்கக் குறிப்புகள்.

வட்டத்திலே தானே தன் தட்டுமுட்டு சாமானுகளெல்லாம் அனுப்பிவிட்டு, யித்தனாள் முசே குயோனேத்து (Mr. Guyonnet) வினுடைய பெண்சாதியை அழைத்துக்கொண்டு தேவனாம்பட்டணம் ஓடிப் போயிவிட்டா னென்று சேதி கேழ்விப்பட்டுது. முசே அலுபேர் (முன்பு, அபேர்) நல்லதம்பி அருணாசல செட்டிக்கு சொந்தத்துக்கு பதினோராயிரம் ரூபாயையும், யிதல்லாமல் நம்பி அருணாசல செட்டி, தானி செட்டி, முத்து செட்டி, யிரிசப்ப செட்டி முத்து செட்டி யிவர்களுக்குப் பொதுவிலே யெண்ணாயிரம் ரூபாயும் குடுக்க வேணுமாம். யிதுகளுக்கு அவன் யெழுதிக் கொடுத்த கடுதாசிகளும் (ரசீதுகள்) யிருக்கு தென்று யென்னுடனே வந்து சொன்னார்கள். அதுக்கு நான் வெளியே போகக்கூடாதே, போய் துரைகளுடனே சொல்லிக் கொள்ளச் சொல்லி யனுப்பி விட்டேன்.

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 10; பவ வருசம், ஆவணி மாசம், தேதி 29; செவ்வாய்கிழமை***

இத்தனாள்[1] கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், பழய துரை (துய்ப்ளே) முசே தெசொசேவை (M. Dusaussaye) அழைப்பிச்சு பாப்பய்யப் பிள்ளை ஒரு மாசமாய் சாப்பாடில்லாமல் காவலிலே கிடந்து றத்தம் றத்தமாய்க் கழிஞ்சு கொண்டு சாகக் கிடக்கிறான், நீ புது துரையுடனே சொல்லி பாப்பய்யப் பிள்ளையை வீட்டுக்கு சாப்பாட்டுக்கு விடத்தக்கதாகச் செய்யச் சொல்லியும், அவன் பிராணத்துடனே யிருந்தல்லவோ கணக்கு வழக்குப் பார்த்துக் கொள்ள வேணுமென்றும் யிப்படியாகச் சொல்லச் சொல்லிச் சொன்னதாயும், அந்த முசே தெசொசே போய் முசே தெலார்ஷூடனே மேலே யெழுதப்பட்ட வயணமாம் படியே சொல்லவும், அவர் போய் முசே கொதேயாகிய (Monsieur Godeheu) புது துரைக்குத் தெரியப்படச் சொன்னதின் பேரிலே அவர் பாப்பய்யப் பிள்ளையை சாப்பாட்டுக்கு விடச் சொல்லி உத்தாரம் குடுத்ததாயும், அதின் பேரிலே பாப்பய்யப் பிள்ளைக்கு நடந்து போக சீவனில்லை யென்று மூடுபல்லக்கின் பேரிலே போட்டுக்கொண்டு யெட்டு பேர் சொலுதாதுகளும் யெட்டு பேர் சிப்பாயிகளும் கூட காவலுடனே அழைத்துக்கொண்டு, அவன் மகன் அலங்கார மென்கிறவன் கோட்டையிலே கசோத்திலே போட்டிருந்தவனையும் சுந்தரம் பிள்ளையையும் அவன் தம்பி சந்திரசேகரம் பிள்ளையையும், பின்னையும் கெங்காதரம் பிள்ளை வகையிராக்கள் நாலஞ்சு பேரை காவலிலே யிருந்தவர்களைக் கூட அழைத்துக் கொண்டு அவனவன்

[1] தேசிகம்பிள்ளை 'இற்றை நாள்' என்றே நூல் முழுதும் இதனை மாற்றி அமைத்துள்ளார்.

வீட்டே போய், அவர்கள் நாலஞ்சு பேரும் சாப்பிடச்சே கூட சொலுதாதுகள் யெதிரே யிருந்ததாயும், அப்பால் சாப்பிட்டவுடனே மறுபடி மூடுபல்லக்குலே போட்டுக் கொண்டு போய் பாப்பய்யப் பிள்ளை வகையிராக்களிருந்த காவல் கூடத்திலே தானே அவன் மகனையும் கூட அவ்விடத்திலே போட்டு வைத்ததாய்ச் சொன்னார்கள்.

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 11; பவ வருசம், ஆவணி மாசம், தேதி 30; புதவாரம்***

இந்தனாளும் நான் வெளியே போகவில்லை. இந்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் தேவனாம்பட்டணத்துக்கு சீனமக் கப்பல் மூணு கப்பல்கள் வந்து[1] அதிலே ஆயிரம் பேர் மட்டுக்கும் சொலுதாதுகளும் பீறங்கிகளும் துப்பாக்கிகளும் மருந்து குண்டுகள் வகையிரா சாமானுகளும் விஸ்தாரமாய் வந்திறங்கினதாகவும்; யிவ்விடத்திலிருந்து ஓடிப் போய் அவ்விடத்திலிருக்கிற முசே அலுபேரை (அபேர் என்றுதான் ஆங்கிலப் பதிப்பில் உளது) கப்பல்களிலே வந்த பெரியதனக்காரன் ஆரென்று விசாரிச்சு பிரான்சுக்காறனென்றாப் போலே, கொண்டு போய்க் காவலிலே வைக்கச் சொன்னதாயும், முசே அலுபேர்(?) பேரிலே நல்லதம்பி அருணாசல செட்டிக்கு சொந்தத்திலே சிறிது பணமும், அப்பால் தானு செட்டி, முத்தய்ய செட்டி, அழகப்ப செட்டி, யிரிசப்ப செட்டி, முத்து நல்லதம்பி அருணாசலம் யிவர்களுக்கும் நம்முடய தம்பிக்கும் பொதுவிலே சிறிது பணமும் வர வேணுமென்றும், யிந்த மத்தலப்பை (புகாரை) துரையவர்களுடனே போய் சொல்லிக்கொள்ள வேணுமென்று வர்த்தகர் யோசனை பண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.[2]

இந்தனாளும் நேத்திய சாடைப்படிக்குத் தான் பாப்பய்யப் பிள்ளை வகையிராக்களை சாப்பாட்டுக்கு விட்டு மறுபடி கொண்டு போய் காவலிலே வைத்தார்கள்.

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 12; பவ வருசம், ஆவணி மாசம், தேதி 31; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே புது துரையவர்களாகிய முசியே

---

[1] இரு ஐரோப்பியக் கம்பெனிகளுமே வேவுகாரர்களை நியமித்து அடுத்த போட்டிக் கம்பெனியின் கப்பல் போக்குவரத்து, ஏற்றுமதி இறக்குமதியாகும் சரக்குகள், படைகள் ஆகியவற்றைப் பரஸ்பரம் உளவு பார்த்தன.

[2] பிள்ளை பயன்படுத்தியுள்ள பல அயல் மொழிச் சொற்களின் அட்டவணை எனது "ஆனந்தரங்கப்பிள்ளை கால அரசியலும் சமுதாயமும்" என்ற நூலில் இணைப்பாகத் தரப்பட்டுள்ளது.

கொதே அவர்களும் சின்ன துரையாகிய முசே பெடுத்தல்மியும் ரெண்டு பேருமாக யிருந்துகொண்டு, நம்முட தம்பி காலம் பண்ணிப்போனதுக்கு உபசாரமாய் விசாரிக்கத்தக்கதாக யென்னையும் அப்பாவையும் அழைச்சு வரச் சொல்லி வினாயகப் பிள்ளையை அனுப்பிவிச்சார்கள். அந்தப்படிக்கி நானும் அப்பாவும் போய் துரை அவர்களைக் கண்டவுடனே, துரை யென்னைப் பார்த்து, தம்பி காலம் பண்ணிப்போனதுக்கு தாபந்தியப்பட்டு, அப்பால் உபசாரமாய், "நீ உன் தம்பி காலம் பண்ணிப் போனா னென்று விசாரத்தை அடைஞ்சு வீட்டிலே தானே யிராதே, தைரியத்தை அவலம்பிச்சுக் (மேற்கொண்டு) கும்பினியார் காரியத்திலே சாகிறுதையா யிருந்து பார்க்க வேணும்" யென்றும், "நீர் கும்பினியாருக்கு மகா விசுவாசியானபடியினாலே அந்தப்படிக்கிக் கும்பினியார் மனது சந்தோஷம் வரும்படியாய் நடந்து கொள்ளச்" சொல்லி, யிது முதலான உபசாரங்களாய்ச் சொல்லி, அப்பால் அப்பாவுக்கு சீரொப்பாவும் குடுத்து, பீறங்கிகளும் போட்டார்கள். யெனக்கு பெகுமதி பண்ணி அப்பால் துரை தானே மேளதாள நட்டுமுட்டு நாட்டக சாலையாரை அழைப்பிச்சு வேடிக்கையாய் சகல சம்பிறமத்துடனே வீட்டுக்குப் போகச் சொல்லி அனுப்பிவிச்சார். பிரபு மனதின் படிக்கு சகல சம்பிறமத்துடனே வீட்டுக்குப் போய் சகலமானவர்களுக்கும் பன்னீர் பாக்கு வெத்திலை குடுத்தனுப்பிவிசோம்.[1]

இத்தனாள் பழய துரை யென்னையும் அப்பாவையும் அழைப்பிச்சு, தம்பி காலம் பண்ணிப் போனதுக்கு மிகுதியும் தாபந்தியப்பட்டு, அப்பால் உபசாரமான வார்த்தையாய்ச் சொன்னதுக்கு, நானிருந்து கொண்டு, "அவன் யின்னம் சிறிது நாளிருந்து உங்களுடைய அன்னம் புசிக்கிறதுக்குப் பறாப்த்தி யில்லாமல் போனா" னென்று சொன்னதுக்கு, அவர் யிருந்துகொண்டு, "ஆனால் ஒன்பது வருஷமாய் வியாதியுடனே மகா கஸ்திப்பட்டான், நீயும் அர்ணபர்ண சக்தியினாலேயும் பிறயாசைப்பட்டுப் பாத்தாய், அந்தப் பிறயாசை யெல்லாம் நான் அறிவேன், ஆனால் தெய்வ சங்கல்ப்பம் அப்படி யிருந்துப் போச்சுது, யினி மேல் தாபந்தியப்பட வேண்டிய தென்னயிருக்கு," தென்று உபசாரமாய்ச் சொல்லி, அப்பால் ஆனைகள் வாங்குறதுக்கு மனுஷர்கள் வந்தார்களா வென்று கேட்டார். "எழுதிப் போயிருக்குது, சாவுக்காறகள் (சவுக்கார்கள்) வருவார்க," ளென்று சொன்னேன். "அந்தப்படிக்கு அவர்கள் வந்து விலைக்கு வாங்கிக் கொண்டு

---

[1] இந்நூலுக்கு மூலமான பிரதியில் காற்புள்ளிக்குப் பதில் – போன்ற கோடு பயன்படுத்தப்பட்டுள்ளது.

போனாலாச்சுது, யில்லாவிட்டால் நான் யிந்த ஆனைகளை ஒருத்தர் வசத்திலே ஒப்பிக்கப் போறதில்லை, பீறங்கியிலே மருந்து குண்டு போட்டு ஆனைகளை சுட்டுப் போடச் சொல்லுவேனெ," ன்று சொன்னார். அதுக்கு சாவுக்காற்கள் வருவார்களென்று சொல்லி, "யெனக்கும் உங்களுக்கு மிருக்கிற சம்மதி கணக்கு ரெண்டு மூணு நாளையிலே கொண்டு வருகிறே," னென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு பிற்பாடு வந்தோம்.

இந்தனாள் பாப்பய்யப் பிள்ளையை நேத்து முந்தாம் நாள் சாப்பாட்டுக்கு விட்டபடி விடாமல் மோக்கூப்பு (காவல்) பண்ணார்கள்.

### *1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 12; பவ வருசம், ஆவணி மாசம், தேதி 31; குருவாரம்*[1]

பதினோரு மணிக்கு புது துரை, நந்திராசா காகிதம் வந்துதென்று அழைத்தனுப்பி, போய்க் காகிதம் மத்தலப்பைப் (விவரம்) படிச்சுக் காண்பிச்சவுடனே, "பெகு விஸ்தாரமாயிருக்குது, பிரான்சுப் படுத்திக்கொண்டு வாரு" மென்று சொல்லி, மமுதல்லி கான் திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலிருந்து முசே மேசென் மாரிபத்திலே (மூலம்) அனுப்பிவிச்சக் காகிதத்தைக் குடுத்து படிச்சுச் சொல்லச் சொன்னபடிக்கு படிச்சுப் பார்க்குமிடத்தில், அந்தக் காகிதத்திலே யெழுதியிருந்த வயணம் யென்ன வென்றால், "நீர் அனுப்பிவிச்ச காகிதம் பார்த்துக்கொண்டு சகலமும் தெரியவந்தது. அந்தக் காகிதத்திலே, படாவிலே (மரியாதை யில்லாமல்) அகப்பட்ட சொலுதாதுகளை விட்டுவிடச் சொல்லி, யெழுதினீர்; அது யுக்தம் தப்பி யெழுதின படியினாலே மெத்த ஆச்சரியமாச்சுது; நீங்கள் அன்பது அறுபது வருஷத்துக்கு முன்னே யிவ்விடத்திலிருந்த நவாபுகளண்டையிலே வந்து கரை துறையிலே ஒரு கொட்டடி கட்டிக் கொண்டு வியாபாரம் பண்ணிக் கொண்டு யிருக்கிறோமென்று சொல்லிக் கொண்டதற்கு, அந்த நவாபுகளும் நல்லதென்று, நீங்கள் வியாபாரம் பண்ணிக் கொண்டிருந்தால் சறுக்காறுக்கு ஆசில் (மதிப்பு) கூடி வரும் யென்று சம்மதிச்சு உத்தாரங் கொடுத்தார்கள். அந்தப்படிக்கு வியாபாரம் பண்ணிக்கொண்டு பெகு நாளிருந்து அப்பால் உமக்கு முன்னே கொவற்னதோரா யிருந்த முசே துப்பிளேயிக்சு, யிந்த ராச்சியம் பாதுஷா ராச்சியமாயிருக்க, அவர் சீமைகளைப் பிடித்து பாழாக்கி, அபந்தரை பண்ணிப் போட்டார்.... சீமையை யெப்படி கலல் (நாசம்) பண்ணுவீர்?" யென்றும், "உங்கள்

[1] 12ஆம் தேதியின் தொடர்ச்சி இது. எனவே மீண்டும் இத்தேதியிடத் தேவையில்லை. பிரதி செய்தோரின் தவறு இது.

வியாபார மட்டில் நீங்களிருக்க வேணுமே அல்லாமல், அத்துதப்பி நடக்கலாமா" யென்றும், யிப்படியாக பெகு அகம்பிறமத்துவமாய் (ஆணவமாய்) யெழுதி யிருந்தபடியினாலே, அந்த மத்தலப்புப் படிச்சுச் சொன்னதுக்கு, அவர் அந்த மத்தலப்பு யிங்கிறேசுக்காரர் ஆலோசனையின் பேரிலே யெழுதின தென்று சொல்லி, இந்தக் காகிதத்தை முசே தெலார்ஷு அண்டைக்குக் கொண்டு போய் பிரான்சு படுத்திக் காண்பிக்கச் சொன்னார். அந்தப்படிக்கி மதனாந்த பண்டிதன் கையிலே குடுத்து முசே திலார்ஷ்சு அண்டைக்குப் போய் பிரான்சு படுத்தி வரச் சொல்லி அவரை அனுப்பிப் போட்டு நான் யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

[1] இத்தனாள் பகலைக்கு மேலாகத் துரையவர்கள் அழைச்சனுப்பிப் போனவிடத்திலே மதனாந்த பண்டிதன் மமுதல்லி கான் காகிதத்தை திரான்சுலிட்டுப் படுத்தி முசே தெலார்ஷு அண்டைக்குக் கொண்டு போய் யெழுதிவிச்சுக் கொண்டு வந்தான். அதை துரைக்குக் குடுத்தவுடனே அவர் படிச்சுப் பார்த்து வெகு கோபத்துடனே "மமுதல்லி கான் மகா ஆங்காரத்துடனே சரீர சுமரணை தப்பி யெழுதினான், அவனுக்கு புத்தி வரும்படியாய் யெழுதியனுப்பிக்கிறே," னென்று சொன்னார். அப்படித்தான் செய்யவேண்டியதென்று சொன்னேன். அப்பால் நந்திராசாவினுடைய கடுதாசி ஒன்று குடுத்து படிச்சுச் சொல்லச் சொன்னார். நந்திராசாவுடைய [2] கடுதாசியிலே யெழுதியிருந்த மத்தலப்பு யென்ன வென்றால், "முசே மேசென் (Mon. Maissin) கொம்மாந்தாம் தன் பவுன்சுடனே ரெட்டைமலை, அல்லூர் அந்த வட்டங்களிலே யிருந்தவன் பிறப்பட்டு பவுன்சையும் பீறங்கி வகையிரா சண்டை சாமானுகளையும் படகுகள் பேரில் அனுப்பிவிச்சு தானும் சீரங்கத்துக்குப் போனான்; நாங்கள் யிருந்து கொண்டு முசே மேசெனுக்கு 'நீர் பவுன்சையும் சாமானையும் சீரங்கத்துக்குக் கூட்டிக்கொண்டு யெங்கள் பவுன்சை யிவ்விடத்திலே விட்டுப்போட்டு யேன் போரீர்?' யென்று கேட்டு அனுப்பிவிச்சோம்; அதுக்கு அவர் அதனமாயிருக்கிற சாமானை மாத்திரம் அனுப்பிவிட்டு மத்த சாமானையும் பவுன்சையும் யிவ்விடத்திலே தானே வைக்குறோமென்று சொல்லி யனுப்பிவிட்டுப் போய் விட்டார். அவர் யேத்திக்கொண்டு காவேரியிலே போகச்சே ஒரு படகு முழுகிப் போச்சுது. நாங்கள் யிந்த திரிச்சிராப்பள்ளிக் கோட்டை வாங்க வேணுமென்று யிது வரைக்கும் ரெண்டு கோடி சிலுவானம் திரவியம் கறுசு (செலவு) பண்ணி

---

[1] பலவிடங்களில் பத்திப் பிரிவுகள் பதிப்பாசிரியரால் செய்யப்பட்டள்ளன.

[2] இவர் மைசூரின் தளபதி. திருச்சியில் தம் படையுடன் இருந்தார்.

கோட்டை வாங்க வேணுமென்றுப் பற்றுப் படிச்சு யிருக்கிறவர்கள், உங்களுக்கு பொய் யெழுதுவோமா," யென்றும், அப்பால் முன் நடந்தது பின் நடந்தது போனது வந்ததுயெல்லாம் விஸ்தாரமாய் நாலு கடுதாசி யெழுதியிருந்தது. அதையெல்லாம் சூட்சமமாய் காரியார்த்த மாத்திரம் சொன்னதுக்கு, துரை பார்த்து யிந்தக் காயிதம் "மத்தலப்பு விஸ்தாரமாயிருக்குது, யிந்தக் கடுதாசியை பிரான்சுப் படுத்திக்கொண்டு வாரு," மென்று சொல்லி, அப்பால் முசே மேசெனுக்கு முராரி ராயன் (முராரி ராவ் – மராட்டியத் தளபதி) அனுப்பின காகிதமும் பிரான்சு படுத்தி நந்திராசா யனுப்பின காகிதமும் பிரான்சு படுத்தி யனுப்பவேணும், அந்தப்படிக்கு அதுக்கு பிரான்சுப்படுத்தி வரச் சொன்னார்.

அப்பால் பெருமுக்கல் மியான் சாயபு காகிதத்திலே, "நாங்கள் அன்பது வருஷமாய் பிரான்சுக்காரருடனே அன்னி யோன்னியமாய் யிருக்கிறோம். அப்படி யிருக்க பிற்பாடு யெங்கள் சாகீரைக் கட்டிப் போட்டதினாலேயும் (பிடிச்சுக் கொண்டதினாலேயும்) மகா கலாபத்தினாலேயும் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தோம். யிப்போ நீங்கள் வந்து யெங்கள் பேரிலே தயவு வைத்து சாகீருக்கு உத்தாரம் கொடுத்தபடியினாலே யெங்கள் சாகீர் யெங்களை அடைந்தது," யென்று யிப்படி உபசாரமாய் யெழுதியிருந்த மத்தலப்பை படிச்சு சொன்னதுக்கு துரை ரொம்பவும் சந்தோஷப்பட்டார். அப்பால் சேலம் சவரிமுத்து கும்பினீருக்குப் பிடவை போட்ட சம்மதி அவனுக்கு ஆயிரத்து யெண்ணூறு விராகன் கொடுக்க வேணும் யென்று ஒடுதிஞாஞ்சை (order) யெழுதிக் கொண்டு போய் குடுத்ததுக்கு பாத்துக்கொண்டு கையெழுத்துப் போட்டுக் குடுத்தார். அந்த ஒடுதினாஞ்சை சவரிமுத்து மருமகன் கையிலே குடுத்து அனுப்பிவிட்டு அப்பால் அனுப்பிவிச்சுக் கொண்டு முசே லபோம் (Mon. Le Beaume) அண்டைக்குப் போய் காகிதங்களை திரான்சுலிட்டுப் பண்ண வேணுமென்று சொன்னதுக்கு, அவர் யிப்போ சாயங்காலமாய்ப் போச்சுதே, நாளைக்கு ஆகுதென்று சொன்னார். அப்பால் நான் பிறப்பட்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் பதினோரு மணிக்கு துரையவர்கள் அழைத்து யனுப்பிவிச்சு நான் போயிருந்த போது முசே பொயலோ[1] யென் னண்டைக்கு வந்து, "உன் தம்பி காலம் பண்ணிப் போனதுக்கு உன் தம்பி மகனுக்கு பெகுமதி பண்ணி பீறங்கியும் போடவேணு மென்றும் யிந்தப்படிக்கு முன் பின் நடந்த மரியாதை யென்றும் நாங்கள்

[1] முன்பு பொலோ என்று எழுதியுள்ளது. பொயலோ என்பதே சரியான உச்சரிப்பு.

துரையுடனே சொன்னதுக்கு, அவர் யிருந்து கொண்டு மெயிதான், அந்தப்படிக்குச் செய்ய வேண்டியது தானென்று சொல்லி, 'ஆனால் றங்கப்பன் கும்பீனீர் காரியமெல்லாம் திட்டமாய் பார்க்கத் தக்க சாமர்த்திய முள்ளவன் யென்றும், மகா சமத்த னென்றும் கெட்டிக்காறனென்றும் பெரிய மனுஷரென்றும் சீமையிலே தானே சவிஸ்தாரமாய் கேழ்வியாயிருந்தது மல்லாமல், யிவ்விடத்திலேயும் அவரவர் வெள்ளைக்காறர் சொன்னதினாலேயும் அவரைப் பார்த்ததினாலேயும் யென் மனசுக்கு மெயிதான், இவன் மாரிபத்திலே யெந்தக் காரியமும் நடப்பிச்சால் நமக்கு பிரதிஷ்டை வரத்தக்கதாகப் பார்ப்பானென்று நம்பிக்கையாய் தோத்தியிருக்குது,' என்று துரை சொன்னார். சகல காரியமும் – தமிழருடனே சேர்ந்ததும் துலுக்கருடனே சேர்ந்ததும் பட்டணத்திலே யிருக்கிற காரியபாகங்களுடனே சேர்ந்ததும் – யென்னை விசாரிக்கச் சொன்னேன். 'அவர் (பிள்ளை) முசே துப்பிளேயிக்குக்குப் பயந்துகொண்டு யெந்தக் காரியமும் விசாரியாமல் சாடையாயிருக்கிறார், அவர் அந்தப்படிக்கு விசாரிச்சுச் சொன்னால் அவருக்கு சேனேசேனே நடப்பிப்பேன். அவர் பார்த்து விசாரிச்சு முன் நடந்தது யிப்படி, யினி மேல் நடக்க வேண்டியதிப்படி, சீர்மா மூலத்துச் சம்மதி யிப்படி யென்று யெனக்கு நன்றாய் தெரியத்தக்கதாக வந்து சொல்லாததினாலேயும், நான் புதுசாய் வந்திருக்கிற படியினாலேயும் யெனக்கு ஒரு யிருண்ட காட்டில் வழி தப்பிப் போய் விழுந்து தரிதாப்பு தெரியாமலிருக்கிறதா யிருக்கிறது,' யென்று, யிதெல்லாம் உம்முடனே சொல்லச் சொன்னார்," யென்றும் சொன்னார்.

அதுக்கு நான் சொன்னது, "மெய்தான், துரை யென்னுடனே பட்டணத்துக் காரிய பாகங்களையும் வெளிக் காரிய பாகங்களையும் பார்க்கச் சொன்னார். பாப்பாய்யப் பிள்ளையை அவர் கைது பண்ணி அவன் கணக்குடனே சேர்ந்ததும் .... தெத்துவாசற படிகளிலே யென் மனுஷரை வைத்து போக்கு வரத்துக் கெல்லாம் விசாரிக்கச் சொல்லியிருந்தபடிக்கி நானும் யெந்தெந்த காரிய பாகங்கள் யெப்படி விசாரிச்சு பந்துபஸ்து பண்ணி, கணக்கு வழக்குகள் யெல்லாம் ருசுவாகத் தக்கதாக யெந்த யெடு பாடு யெடுத்து ருசு முக்காபணியாய் பந்துபஸ்து பண்ணவேணுமோ அப்படியெல்லாம் நான் பந்துபஸ்து பண்ண வேணுமென்று யிருக்கச்சே, முசே தெலார்ஷு மாரிபத்திலே சிறிதும், சின்ன துரை மாரிபத்திலே சிறிதும், முசே தெசொசே மாரிபத்திலே, சிறிதும் கணக்கு ரங்கப்பிள்ளைன் மாரிபத்திலே சிறிதுமாகக் காரிய பாகங்களைவிட்டு ஆர் வந்து

யென்னத்தைச் சொன்னாலும் அதை யெல்லாம் கேட்டுக் கொண்டு, முசே தேலார்ஷு சிறிதுகள் தள்ளிப் போட்டு சிறிதுகளை அவருடனே சொல்லி, பாப்பய்யப் பிள்ளை காரியக்காறர் வீடுகள் யெல்லாம் விடுவிச்சு, அவர்களுக்கு சரிப் போனபடிக்கு பார்த்துக்கொண்டு போனார். நான் துரையுடனே ரெண்டொரு காரியம் சொல்லப் போனதுக்கு, 'செப்த்தெம்பர் மாதம் பிறந்தா லப்போ உன் மாரிபத்திலே நடப்பிக்கிறோம், அந்த மட்டுக்கும் நீர் நான் அழைப்பிச்ச போது வந்து கண்டு பேசுகிறதே யல்லாமல் அதுக்கு நடுவே நீர் யென்னண்டைக்கு வரத் தேவையில்லை,' யென்று சொன்னார், ஆனதால் நல்லது தானென்று சொல்லி நான் சும்மாயிருக்கிறே," னென்று சொன்னதுக்கு, முசே போயலோ (Mon. Boyelleau) யிருந்து கொண்டு, "துரை புதுசாய் வந்தவர். அவருடனே ஆரென்ன சொன்னாலும் அதை மெய்யென்று கேட்டு உத்தாரங் குடுப்பார், அதுக்கு நீர் போய் யிந்தக் காரியம் செய்யலாம், செய்யப் போகாதென்று அவருடனே சொல்லுகிறது தானே? வெள்ளைக்காரருடனே கூடினது மாத்திரம் தாம் விசாரித்துக் கொள்ளுகிறதும் தமிழருடனே சேர்ந்த காரியங்களெல்லாம் நீர் பார்க்கிறதான படியினாலேயும், முன் நாசறு சங்கு சாகுற மட்டுக்கும் கும்பினீர் காரியத்திலே ராவும் பகலும் பிறயாசப்பட்டுக் கும்பினீருக்கு சூரியப் பிரகாசம் போலே கீர்த்தி வரத்தக்கதாக நாசறு சங்கைக் கொன்று காரிய பாகங்களைப் பார்த்தபடிக்குப் பார்க்கத் தேவையில்லையா?" வென்று சொன்னார்.

அதுக்கு நான் சொன்னது, "துரையானால் புதுசாய் வந்தவர்; அவர் மனது யெனக்குத் தெரியாது, யென் மனது அவருக்குத் தெரியாது. அவரானால் தாமழைச்ச போது வந்து கண்டு பேசுறதே அல்லாமல் மைத்தபடி நீர் யென்னண்டைக்கு வரக் கவையில்லை யென்று சொல்லியும், பின்னையும் அவரவர் மாரிபத்திலே சிறிது காரியங்களை விட்டுப் பார்க்கச் சொல்லியும் யிப்படி யெல்லாம் நடத்திக்கொண்டு யிருக்கச்சே, நான் போய் அவருடனே ஒன்று சொல்லப் போனால் உனக்கு யென்ன கவை, உன் வேலை அல்ல, நீ சும்மா யிரு யென்று சொல்லி கோபம் பண்ணினால் அந்த கோபத்துக்கு நான் யோக்கியன் அல்ல வென்கிறது உமக்குத் தெரியும். அப்படி யிருக்கச்சே நீர் யெப்படிச் சொல்லுகிறீர்? யெந்தக் காரியமும் நான் பந்துபஸ்து பண்ணினபடிக்கு நடத்தினால் அல்லோ கட்டிவரும்? அதில்லாமல் பல விதத்திலேயும் காரியம் விட்டுப் பேபந்தாய் காரியம் கெட்டுப்போன பிற்பாடு யென்னைப் பார்க்கச் சொல்லி, அப்பால் யென் பேரிலே பதிலாமி போடுதற்கா?" யென்று யிது முதலான ஞாயங்க ளெல்லாம் விஸ்தரிச்சுச் சொன்னதுக்கு,

அவர், "நல்லது, நான் துரையுடனே சொல்லி யினிமேல் ஒருத்தர் பேச்சுக் கேழ்க்கவும் கவையில்லை, ஒருத்தருடனே காரியங்களுடனே சேந்தது சொல்லவும் கவை யில்லை யென்றும், நீர் சொன்னபடிக்குக் கேட்டு உம்முட மாரிபத்திலே சகல காரியங்களும் நடப்பிக்கச் சொல்லி, அவரும்மை அழைச்சுச் சொல்லத்தக்கதாகச் செய்யுறேன்," யென்றும் சொன்னார். "நீர் அந்தப்படிக்குத் துரைக்குச் சொல்லி அவரென்னை அழைத்து தமிழருடனே சேர்ந்த பட்டணத்தினுடைய காரியம், சீமைகள் சம்மதி, துலுக்கருடனே பண்ணின சம்மதி வகையிரா யென்னமோ அதுகளை யெல்லாம் என்னை விசாரிக்கச் சொல்லி பரவசமாய்ச் சொல்லுகிற மட்டுக்கும் நான் ஒரு காரியமும் பார்க்கிறதில்லை," யென்று சொன்னதுக்கு முசே போயிலோவும் நல்ல தென்று சொன்னார்.

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 13; பவ வருசம், புரட்டாசி மாசம், தேதி 1; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே நான் துரை அவர்கள் அண்டைக்குப் போன விடத்திலே துரையவர்கள் முராரி ராயன் காகிதம் ஒன்று கொடுத்து படிச்சுச் சொல்லச் சொன்னார். அந்தக் காகிதத்திலே யெழுதியிருந்த வயணம் யென்ன வென்றால், "பிரான்சுக்காரர் மகா பவுறஷமும் பத்தும் பிறதாபமும் உள்ளவர்களென்றும், முன்னாலே வெகு காரியங்களிலே செயங் கொண்டிருந்தாலும் யிப்போ யிந்த ராச்சியத்திலே யெப்படிப்பட்ட ராச காரியத்திலேயும் செயங் கொண்டு டில்லி பாதுஷா மட்டுக்குப் பேருண்டாகக் கீற்த்தி சம்பாதிச்சு யிருக்கிறவர் களென்றும், முசே துப்பிளேயிக்சு பெரிய மனுஷர், அவர் சொற்படிக்கி யெல்லாம் கேட்டு சம்மதிச்சு அவர் யெழுதிக் கொடுத்த ஒடம்படிக்கைகளுக்கு யெல்லாம் உள்பட்டு யெந்த வேலையிலே யென்ன பற்மானா .... யிச்சால் அந்தக் காரியம் சாகிறுதையாய் யிருந்து சண்டை முகத்திலே உங்களைச் சேர்ந்த பிற்பாடு விஸ்தாரமான குதிரைகளும் தம்பி (?) முதலான பேர்களை, பெகு சனங்களை, சாகக் குடுத்தும் யிருந்தவிடத்திலே, பெங்களுக்கு மொகறு பண்ணபடிக்கு யெட்டு ஒன்பது மாசத்திய சம்பளமும் குடாம லிப்போ முசே துப்பிளேயிக்சு யெங்கள் பேரிலே யில்லாத அபாண்டங்களெல்லாம் போட்டு, சம்பளம் வகையிரா சம்மதியிலே பதின்மூணு லட்சம் ரூபா மட்டுக்கும் வரவேண்டியிருக்கச்சே யிப்படி யெல்லாம் செய்கிறார். யெங்கள் பணம் நாங்கள் விடத்தக்க தில்லை. யெந்த வித்த்திலேயும் வாங்கிப் போடுவோம். ஆனால் நீர் மகா பெரிய மனுஷர். சீர்மையிலேயிருந்து புதுசாய் வந்திருக்கிறீர். சகல ஞாயங்களையும் நன்றாய் விசாரிக்கிறவரான படியினாலேயும் யெங்கள்

சம்மதிக்கு (விவகாரங்களைத் தீர்த்து வைப்பதற்கு), உம்மைத் தானே நேமிச்சோம் (நம்பினோம்). யெங்களுக்கு முசே துப்பிளேயிக்சு யெழுதிக் குடுத்திருக்கிற ஒடன்படிக்கை தஸ்தவேசுகள் யென்ன வுண்டோ அது நமக்கு நன்றாய் விசுவகிக்க (விளக்க) யெங்கள் வக்கீலுகளை (உங்கள்) அண்டைக்கு அனுப்பிவிச்சோம். அதை யெல்லாம் நீர் தயவுபண்ணி நன்றாய் விளங்கி யெங்களுக்கு இது வரைக்கு வரவேண்டிய பணத்தையும் வாங்கிக் கொடுத்து யெங்கள் காகிதங்களுக்கு உத்திரம் யெழுதி அனுப்பிவிக்கவேணு," மென்று, யிது முதலான சேதியாய் விஸ்தரிச்சு யெழுதியிருந்த மத்தலப்பைப் படிச்சுச் சொன்னதுக்கு, அந்தக் காகிதத்தை முசே லபோம் அண்டைக்குப் போய் பிரான்சிலே திரான்சிலிட்டு பண்ணிக்கொண்டு வரச் சொன்னார். அந்தப்படிக்கு நானும் மதனாந்த பண்டிதனும் முசே லபோம் அண்டைக்கு முராரி ராயன் காகிதம் திரான்சிலிட்டு பண்ணிக்கொண்டு வரப்போன விடத்திலே, பழய துரை யென்னை அழைச்சனுப்பிவிச்சதாய் சொன்னான்.

அப்போ மீர் குலாம் உசேன் கடன் சம்மதி லட்சம் ரூபா சீட்டை, அவர் உடம்பிறந்தாள் மகன் ரசா சாயபு யென்கிறவன் லட்சம் ரூபா சீட்டுப்படிக்கு நொத்தேர் அண்டைக்குப் போய் ஒரு சவாது (படி) யெழுதிவிச்சுக் கொண்டு கூடவந்தான். பழய துரை அண்டைக்குப் போனவிடத்திலே, மீரு குலா முசேன் சம்மதி கடன் சீட்டு கொண்டு வந்தார்களா? வென்று கேட்டார். நான் அவர்களைக் கேட்டதற்கு, நொத்தேர் கையிலே அசல்படிக்கு சவா தெழுதிவிச்சுக்கொண்டு வந்தோ மென்று சொன்னார்கள். அந்தச் சேதி அவர் கேட்டவுடனே, "அப்படியா, யென்னை நம்பி அசலைக் கொண்டு வராமல் சவா தெழுதிக்கொண்டு வந்தீர்களா? அத்தனை நம்பிக்கை யில்லாமல் போச்சுதா, ஆ கூ யென்று கோபமாய் அவர்களைப் பார்த்து போங்கோ ளென்றும், யிருக்க வேண்டாமென்றும், நானுங்கள் பணம் குடுக்கிறதில்லை," யென்றும் சொல்லி அப்பாலே போகச் சொல்லி, அவர்கள் போன பிற்பாடு யென்னைப் பார்த்து "அவர்கள் மூஞ்சியும் மூக்கும் பார்த்தால் குரங்குகள் போலேயும் பிசாசுகள் போலேயும் யிருக்கிறார்கள்" யென்று யெகத்தாளமாய்ச் சொல்லி, அப்பால் யென்னுடனே, "அருணாசலப் பிள்ளை யென்கிறவனுக்குச் சிதம்பரம் பஞ்சமாலும் திருவதி பஞ்சமாலும் (பஞ்சமகல்) விருத்தாசலம் கோபுராபுரம் சீர்மையும் யிதுகளை யெல்லாம் அவனுக்கு மூணு வருஷத்துக்கு யிசாராவாய் (குத்தகை), முதல் வருஷத்துக்கு அஞ்சு லட்சமும் இராண்டாம் வருஷத்துக்கு யேழரை லட்சமும் மூணாம் வருஷத்துக்கும் அப்படியேவும், யிதுக்கு நூத்துக்குப் பத்து (வீதம்) சிப்பந்தி (செலவு) தள்ளிக் குடுக்கவும், யிப்படியாக யிசாராவாகக்

குடுத்தார்களாம். யிப்போ யிந்த கலாபத்திலே உன் கையிலகப்பட்டது உனக்கு, யென் கையில் அகப்பட்டது யெனக்குமாக யிருக்கச்சே ஒருத்தரை நம்புவார்களா? யிதுகள் யெல்லாம் யிப்போயிருக்கிற காலதேசவர்த்தமானத்திலே யிசாராக் குடுக்கலாகாதென்றும், யிவன் பணம் யிருக்கிறவனா யென்றும், யிவனுக்குக் குடுக்கலாகா தென்றும் நீ சொல்லத் தேவை யில்லையா வென்றும், உன்னை அறியாமல் நடக்கிறதா?" யென்று சொன்னார். நானிருந்து (சொன்னது) "யிப்போ அவர்களெல்லாம் அங்கே யிருந்து அதெல்லாம் முசே தெலார்ஷும் கணக்கு றெங்கப் பிள்ளையும் பேசுறார்கள், அவர்கள் மாரிபத்தது" யென்று சொன்னேன். "ஆனால் உன்னைத் தமிழருக்கும் துலுக்கர் வகையிரா வெளிச் சீமைகளுக்குப் பெரியவனாக்கி வைத்திருக்கிறதென்னதுக்கு? உன்னை அழைத்துக் கேளாதே போனாலும் யுக்குத்தம் அயுக்குத்தம் சொல்லத் தேவையில்லையா?" வென்று (கேட்டார்).

"யென்னை அழைத்துக் கேட்டால் அல்லவோ நான் உத்திரம் சொல்ல வேணும்? யென்னைக் கேளாத மட்டுக்கும் வலுவிலே நான் சொல்லப் போனால், உன்னை ஆர் சொல்லச் சொன்னார்கள், உன் வேலை யல்ல, நீ சும்மா யிரு யென்றால் நான் செய்யவேண்டிய தென்ன?" யென்று சொன்னதுக்கு, அவர் கோபிச்சுக் கொண்டு "போ" யென்று சொன்னார். நான் பிறப்பட்டு வந்தேன். சத்து யிவ்விடம் வந்த உடனே மறுபடி அழைத்து, "முராரி ராயன் யெங்கே யிருக்கிறான்?" என்று கேட்டார். வாலிகொண்டாபுரத்திலே யிருக்குறா னென்று சொல்லுகிறார்கள் யென்று சொன்னேன். "உன் கணக்கு யேன் கொண்டுவரயில்லை? யிப்படி சாப்பியும் (தலையிட்டு) பண்ணிக்கொண்டு, யேன் ராசகாரியம் (சீமை விவகாரத்தில்) பண்ணியிருக்கிறாய்? நல்லது, யிப்பவும் கொண்டு வந்தாலாச்சு, யில்லா விட்டால் அப்படி செய்வேன், யிப்படி செய்வேன்" என்று பெகு ஆக்குறகத்துடனே சொன்னார். "கணக் கெல்லாம் யெழுதி யாகுது, கொண்டு வாறே," னென்று சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு, முசே லபோம் அண்டைக்குப் போய் முராரி ராயன் காகிதம் பிரான்சிலே யெழுதிவிச்சுக்கொண்டு யிருக்கச்சே, அருணாசலப் பிள்ளைக்கு பாலிப் பற்மாணா (இறுதியாக உறுதி செய்யும் பர்மானா) நாட்டிக் குடுக்கிறதுக்கு (ஒழுங்காய் எழுதிக் கொடுப்பதற்கு) மதனாந்த பண்டிதனை வந்து அழைத்துப் போனார்கள். பற்மானா நாட்டிச்ச பிற்பாடு பெகுமதியும் பண்ணி அனுப்பிவிச்சார்கள். அப்பால் மதனாந்த பண்டிதன் மறுபடியும் வந்து, குறையும் பிரான்சிலே யெழுதிவிக்குறதுக்குப் பனிரெண்டரை மணிக்கு ஆச்சுது. அந்த மட்டுக்கும் யிருந்து யெழுதிவிச்சு முஸ்தீது பண்ணி அப்பால் வீட்டுக்குப் போனேன்.

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 14; பவ வருசம், புரட்டாசி மாசம், தேதி 2; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே நான் துரையவர்க ளண்டைக்குப் போய் ஆசாரம் பண்ணி முராரி ராயன் காகிதமும் துறையூர் ரெட்டி காகிதமும் கலவையான் காகிதமும் பிரான்சுப்படுத்தினது கொண்டு போய்க் கொடுத்தேன். அவரதைப் பார்த்துக்கொண்டு யென்னை அப்பாலே அழைத்துக் கொண்டுபோய், "சலாபத்து சங்குவுக்கு யெழுதின காகிதத்திலே யென் பத்து வைத்து (என் பட்டம், பதவி) யேன் யெழுத யில்லை?" யென்று கேட்டார். பாரீசு (பார்சி மொழி)க் காகிதங்களை யெழுதினால் உம்முடைய பத்து வைத்து யெழுதுகிற தலூரி (வழக்கம்) யில்லை, அவர்கள் பத்து மாத்திரம் வைத்து யெழுதி அப்பால் மொகரிலே (முத்திரை—seal) மாத்திரம் உம்முட பத்துயிருக்கிறது. அவர்கள் யெழுதினாலும் அப்படித்தான். ஆனா லப்போ உம்முட பத்து வைத்து மோகறு செய்வியாததினாலேயும் உம்முடைய ஆயுதங்களை (coat of arms) மாத்திரம் செதுக்கியிருந்த சின்ன மோகறு அரக்குலே போட்டபடியினாலேயும் காகிதத்தின் மேலே நாங்கள் உம்முட பத்து அவர்களுக்குத் தெரியத்தக்கதாக யெழுதியனுப்பி விச்சோ," மென்று சொன்னதுக்கு, அப்பால் சலாபத்து சங்குவுக்கு "யென் காகிதம் போட்டு அனுப்பின பையிலே உம்முட காகிதம் கூட யேன் போட்டு அனுப்பினீர்?" என்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "உம்முட காகிதத்திலே உம்முட மகிமை, பிறதாபத்தை யெழுதினால் நன்றாயிராதென்று உம்முடைய பத்து பவுறுஷமும் கீற்த்தி பிறதாபங்களும் உம்முட குணாதிசயங்களையும் விஸ்தரிச்சு யெழுதி அவர்கள் உமக்கு நடப்பிக்க வேண்டிய மரியாதைகளையும் யின்னபடிக்கி நடப்பிக்க வேண்டியதென்று யென் காகிதமாய் ஒரு காகித மெழுதிக் கூடப்போட்டு அனுப்பிவிக்கிறது வந்து முன் பின் நடந்த தலூரி (வழக்கம்) ஆனபடியினாலே அந்தப்படி யெழுதி கூடப்போட்டு அனுப்பி விச்சேன்," யென்று சொன்னதுக்கு, "முசே புசி யெழுதின காகிதத்திலே அப்படி யெழுதியில்லையே?" என்று கேட்டார். "முசே புசி அப்படி யெழுதாமல் போனது யென்னத்தினாலே யென்றால் அவ்விடத்திலே யெல்லாம் சலாபத்து சங்கு வண்டையிலே முசே புசியினுடைய பிறபஞ்சமாயிருக்கிற தான படியினாலே யென் காகிதம் அவர்களுக்கு வந்தால் அவர்களும் நடக்க வேண்டிய காரியபாகங்களை உள்ள பசுமையை யெனக்கு யெழுதப்போறார்களென்றும், அந்த மத்தலப்பை யெல்லாம் உங்களுக்கு நான் சொல்லப் போறே னென்றும், அதை யெல்லாம் மனதிலே வைத்துக் கொண்டு நீங்கள் அறியப்போறீர்கள் யென்றும், யிது வரைக்கும் அவன் (புசி) அவ்விடத்திலே அனேக

காரியபாகங்களையெல்லாம் தன் மனதின்படிக்கு நடத்தி யேத்தி தாஷ்ஷி பண்ணி சுயேச்சையா யிருக்கிறவனானபடியினாலே. யினி மேலப்படி நடவாமல் குந்தகம் வரப் போகுதென்று யிருக்கிற குறிப்பைத் தொட்டு நாமிப்படி யெழுதிப்போட்டேன். யென் காகிதத்தை யெழுத வேண்டாமென்று நீங்கள் நிறுத்திப் போட்டால் அவன் சரிப் போனபடிக்கு நடத்திக் கொள்ளலா மென்கிற எண்ணம் (புசிக்கு வரக்கூடும் என) யெழுதினேனே அல்லாமல் மத்தப்படி அல்ல; ஆனால் நாசறு சங்கு செத்த பிற்பாடு மூணு மூணரை வருஷமாய் சலாபத்து சங்கு வகையறாக்களுக்கு யென் காகிதம் கூட யெழுதுகிறது நின்றுபோய், முசே துப்பிளேயிக்சு காகிதமும் மதாம் துப்பிளேயிக்சு காகிதமும் (மட்டும்) யெழுதிப் போறது உண்டு. ஒரு வேளை முசே துப்பிளேயிக்சு காகிதமுமில்லாமல் மதாம் துப்பிளேயிக்சு காகிதம் மாத்திரம் யெழுதிப் போறதுமுண்டு. அதினாலே யெனக்கும் அவர்களுக்கும் போக்குவரத்துக் காகிதங்கள் நடக்குறது நின்று போச்சுது; அதுக்கு முன்னே யெல்லாம் யென் காகிதங்கள் கூடத்தான் போறது (வாடிக்கை). அதுக்கு முன் யிருந்த கனகராய முதலியார் காகிதங்களும் அப்படிப் போறது (வழக்கம்)," யென்று சொன்னதுக்கு, "மெயிதானா அப்படி நடக்கிறது?" யென்று கேட்டார். "மெய்யல்லாமல் பொய்யா? வேணுமென்றால் பழய கோன்சேலியர்களாகிய முசே போலோ (M. Boyelleau), முசே தெலார்ஷு (M. Delarche) வகையராக்களைக் கேளும்; அன்று முதல் யின்றைய வரைக்கும் பாரிசுக் காகிதங்கள் யெழுதுகிற பிராமணியைக் கேளும்," யென்று சொன்னதுக்கு, "யிது தான் யேழெட்டு நாளாய் உம்முட பேரிலே மெத்த குறையாயிருந்த" தென்று துரை சொன்னார்.

அப்பாலவரிருந்து கொண்டு, "யிந்தப் பட்டணத்துக்குத் தமிழருக்கு, துலுக்கர்களுக்கு, வெளிச் சீமைகளுக்கு நீர் யெசமானா யிருக்கச்சே, நான் துரைத் தனத்துக்கு வந்து நாற்பத்தஞ்சு நாளாச்சுது, யிந்த மட்டுக்கும் நீர் யென்னுடனே யிந்த யிந்தக் காரியங்களை யிப்படி யிப்படிச் செய்ய வேணுமென்று மனதை விட்டுச் சொல்லாமல் யேன் யிருக்கிறா?" யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "நீர் யேதாகிலும் யென்னை அழைத்து கேட்டால் அல்லவோ நான் சொல்லுவேன். அப்படியிருந்தும் நீர் வந்த தருணத்திலே ரெண்டொரு காரியங்களை நான் வந்து உம்முடனே சொன்னதுக்கு, நீர் அதை ஆதறாணையாய்க் கேளாதபடியினாலே அந்த மட்டிலே நான் சும்மாயிருந்தே," னென்று சொன்னதுக்கு, துரை சொன்னது: "முன்னாலே உன் நிமித்தியமாய் முசே துப்பிளேயிக்சுவைத் துரை தனம் வாங்கிப்போட்ட தென்று

சொல்லியிருந்த சாடையாய், யிப்பவும் உன் நிமித்தியமாய்ப் பாப்பய்யப் பிள்ளையைக் காவலில் வைத்தோ மென்றும், அவன் சம்மதி யெல்லாம் நீ விசாரியாமலும் யென்னுடனே சொல்லாமலும் யேன் சும்மாயிருக்கிறா?" யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "பாப்பய்யப் பிள்ளையை யென் ஆலோசனையின் பேரிலே நீங்கள் காவலில் வைக்கயில்லை; காவல் வைத்து அப்பால் அன்றைய தினம் ராத்திரி யென்னுடனே காவல் வைத்த சேதி சொல்லி, அந்த சம்மதி யெல்லாம் நீங்கள் யென்னை விசாரிக்கச் சொல்லிச் சொன்னீர்கள்; அப்பால் நான் அதுக்கேத்தப்படிக்கு பொகுடிகள் (விவரங்கள்) விசாரிச்சு கணக்கு வழக்கு பணம் காசு லேனா தேனா சமஸ்தமும் மறுசுமுகாவளியுடனே(?) அகப்படத்தக்க உபாய மெப்படி யுண்டோ அந்த யெடுப்பாடு யெடுத்து அதுக்குத் தக்க பந்துபஸ்தும் பேரிலே (பண்ணி) அவன் தாலூக்கு முத்த சத்தியன் (குமாஸ்தாக்கள்) வீடு வாசல்களெல்லாம் பத்திரப்படுத்தி, முத்திரைகள் போடுவித்த அதப்பும் (பயம்) பேரிலே ரெண்டொருத்தரும் பாப்பய்ய பிள்ளை சம்மதி யிருந்ததைக் (குத்தகைப் பணத்தைக்) கொண்டு வந்து குடுத்தார்கள்.

"இதிலே முசே தெலார்ஷும் கணக்கு றங்கப் பிள்ளையும் உம்முடனே யென்ன வந்து சொன்னார்களோ, அதின் பேரிலே அவர்கள் மனுஷரை அனுப்பி பாப்பய்யப் பிள்ளை தாலூக்கு குமாஸ்தாக்களுடைய வீடு வாசல்களெல்லாம் காவல் விடுப்பிச்சு சரிப்போனபடிக்கு நடத்திப் போட்டார்கள்; அதினாலே காரியங்கள் கெட்டுப்போச்சுது; அப்போ நான் யேதாகிலும் நடத்தினால் ஒரு பதிலாமி (பழி) வந்தால் அது யென் பேரிலே அல்லவோ சுமதலையா மென்று நான் சும்மாயிருந்தேன்; நீர் யென் ஆலோசனையின் பேரிலே பாப்ய்யப் பிள்ளையைக் காவல் வைத்தா லப்போ அதுக்கேத்த யெடுபாடு யெடுத்து சுனாயாசமாய் அவன் சம்மதிகளெல்லாம் வெளியாகத் தக்கதாகப் பார்ப்பேன். அதில்லாமல் போன மட்டுக்கும் அப்பாலாகிலும் யென் மாரிபத்திலே தானே வந்ததுண்டானால் நான் பண்ற பந்துபஸ்துப்படிக்கு வரும்; அதுவுமில்லாமல் கெட்டுப் போச்சுது; யிது வெல்லாம் வந்து காத்தை மூட்டையாய்க் கட்டுகிறாப்போலேயே இல்லாமல் மத்தப்படி அல்ல; நமது (பிடியை) விட்டுவிட்டால் மறுபடி கெட்டுப் போய்விடும்; கோருவை பண்ணுகிறது சாமானியமல்ல," யென்று நான் சொன்னதுக்கு, "நடந்து போன காரிய மெல்லாம் போகட்டும், யினி மேல் வெள்ளைக்காரர்கள் காரியங்கள் யெல்லாம்

[1] பாப்பையப்பிள்ளையின் குத்தகைதாரர்களின் பெயர்கள், கணக்கு வழக்குகள் போன்ற தகவல்களை விசாரித்து, அவரது குமாஸ்தாக்களின் வீடுகளுக்குக் காவல்போட்டு சீல் வைத்தார் என்று ஆங்கிலப் பதிப்பில் இது பெயர்க்கப்பட்டுள்ளது. ஆங்கிலப் பதிப்புக்குப் பயன்படுத்திய பிரதிகள் வேறானவை என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது.

நான் விசாரித்துக் கொள்ளுகிறதும், தமிழர்—துலுக்கர்—சீமை—பூமி—பட்டணம் கவை காரியங்கள் யெல்லாம் நீர் விசாரித்துக் கொள்ளுகிறதுமே அல்லாமல் ரெண்டாம் பேர் நாட்டமே கவையில்லை; அந்தப்படிக்கி நான் திட்டப்படுத்துகிறேன்," என்று துரை சொல்லி, அப்பால் "முசியே துப்பிளேயிக்சுக்கு வெளியிலேயிருந்து அவரவர்கள் பெகுமானங்கள் அனுப்பிவிக்குறது உண்டாம், அந்தமட்டிக்கு யெனக்கும் யேன் வெகுமதி அவரவர்கள் கொண்டு அழைப்பிக்கயில்லை," என்று கேட்டார். "உமக்கு நந்திராசாவுடைய பெகுமதியும் முராரி ராயன் பெகுமதியும், பின்னையும் யிருக்கிற கில்லேதார் பெரிய மனுஷருக்குஞ் சொல்லிப் போயிருக்குது; சிறிது பேருடைய பெகுமதியும், அழைப்பிச்சுக் குடுத்தேனே; மைத்தப் பேர்களுதும் வரும்; முராரி ராயன் மொகத்துமா (வெகுமானம்), அப்பியந்திரத்திலே விழுந்த (சண்டை போடுகிற) படியினாலே யிது வரைக்கும் வெகுமதி வராமல் போச்சுது; யிப்பவும் நான் அவர் வக்கீலுகளுக்குச் சீக்கிறமத்துக்கு அழைப்பிக்கச் சொல்லி சொல்லியிருக்கிறேன். அவர்களும் யெழுதியனுப்பி யிருக்கிறார்கள்; அதுவும் வருமென்று சொல்லி, அப்பால் நந்திராசாவுடைய வெகுமானத்துக்கு—நீர் சீமையிலேயிருந்து புதுசாய் வந்திருக்கிறீர், மகா பெரிய மனுஷர் ஆனபடியினாலே அவர்களும் அனுப்பிவிக்கிறது; மகா கனமாய் ஆனை குதிரை சரீ (சரிகை) சீரொப்பா, றத்தினம் யிழைத்த பூஷணங்கள் யிதுகளெல்லாம் மகா சவறணையாய் அழைப்பிக்கச் சொல்லி அவர் வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யருக்குச் சொன்னேன். அவரும் அந்தப்படிக்கு அனுப்பிக்கச் சொல்லி நந்திராசாவுக்கு யெழுதியனுப்பிவிச்சார்கள்; அவர் அதுக்கேத்த நகைகள் தம்முட அண்டையிலே சத்தியா (துயாராய்) யில்லை யென்றும், சீரங்கப்பட்டணத்து ராசாவுக்கும் பெரிய தளவாயிக்கும் ஒசத்தியான நகைகள் அனுப்பச் சொல்லி யெழுதியிருக்கிறார்; யிவ்விடத்திலிருந்தும் சீரங்கப்பட்டணத்துக்கு யெழுதிப் போயிருக்குது, அங்கேயிருந்தும் வரும்; வந்த உடனே சான்சாமி பண்ணி (பார்சல் செய்து) அனுப்புவார்களென்றும், அதுவும் வரும் யென்றும் சொல்லி, அப்பால் சலாபத்து சங்கு பெருமானத்துடனே சேந்தது அதுக்கேத்த மரியாதை படிக்குக் கனமாய் சீக்கிறமாய் அனுப்பத்தக்கதாக முசே புசி சொல்லியாங்காட்டும் சான்சாமி பண்ணி அனுப்பிவிக்க வேண்டியது; அது வந்து அவனுக்குள்ளே யிருக்குதென்று சொன்னதுக்கு," துரை சொன்னது: "சலாபத்து சங்கு லசுக்கரிலே (படைமுகாம்) முசே புசி அறியாமல் படிக்கு அவ்விடத்திலே நடக்கிற சேதி யறியத்தக்கதாக

உன் மனுஷரை அனுப்ப வேணுமென்றும், மச்சிலிபந்தருக்கும் பாசி ராயனண்டைக்கும் (பாஜி ராவ்)[1] திருச்சிராப்பள்ளியிலிருக்கிற நத்திராசாவுடைய லஸ்கரிலேயும் முராரி ராயன் லஸ்கரிலேயும் யிவ்விடங்களிலே யெல்லாம் உன் மனுஷரை அனுப்பி கபுறு காரியங்களை அறியவேண்டுமென்றும், யிதல்லாமல் பாதுசாவுக்கும், அவரண்டையிலிருக்கிற வசீருக்கும் பாசி ராயனுக்கும் காகிதங்களெழுதி அனுப்பிக்க வேணு" மென்றும் சொன்னார்.[2]

அதுக்கு "பாதுசாவுக்குக் காகிதம் யெழுதுகிற வாடிக்கையில்லை; யிப்போ பாதுசா பட்டத்துக்கு யிருக்கிற ஆலங்கிரி பாதுசா அண்டையிலே வசீராயிருக்கிற காசுதின் கான்[3] குமாரனுக்கு யெழுதுகிற வாடிக்கையே அல்லாமல் பாதுசாவுக்கு யெழுதுகிற வாடிக்கை யில்லை," யென்று (நான்) சொன்னதுக்கு, வசீராயிருக்கிற காசுதின் கான் குமாரனுக்கும் பாசி ராயனுக்கும் காகிதங்க ளெழுதி அனுப்பவேணுமென்று சொல்லி, அப்பால் "யினிமேல் வெள்ளைக்காறருடனே சேர்ந்தது நான் பார்த்துக் கொள்ளுகிறது; மத்தப்படி பட்டணத்துக் காரியமும் வெளிக் காரியமும் துலுக்கர்கள் வகையிராக்களுடைய காரிய பாகங்களெல்லாம் நீர் சம்மதியானபடிக்கு விசாரிச்சு நடத்துகிறதென்றும், நீரும் நானும் ரெண்டு பேர் மாத்திரம் காரிய பாகங்கள் நடத்தகிறதே அல்லாமல் ரெண்டாம் பேர் தலைநாட்ட க்வையில்லை யென்று, இப்படிக்கு நான் திட்டப்படுத்திப்போடுகிறேன்" யென்றும் சொன்னார். "அப்படி நீர் யேக சித்தமாய் யென் மாரிபத்திலே பண்ணி நடத்தினீரானால் முன்னலே நாசறு சங்கு சாகுற மட்டுக்கும் நான் கும்பினீர் காரியத்திலே பிறயாசப் பாட்டு கீற்த்தி சம்பாதிச்சதும் கேழ்விப்பட்டிருக்கிறீர், அப்பால் யென் மாரிபத்திலே யில்லாமல் போய் நடந்த சம்மதியும் கேழ்விப்பட்டிருக்கிறீர்; யினி மேல் நான் உம்முடைய காரியத்திலே பிறயாசப்பட்டு காரிய பாகங்கள் நடத்துகிற சாதுரியம் அறிஞ்சு உம்முட சித்தத்துக்கு சந்தோஷம் வரப்போறதும் அறியப்போறீர்," யென்று நான் சொன்னதுக்கு, அவர் சந்தோஷமாய் "நான் சகலமும் உம்முட வசமாய் பண்ணிப்போடுகிறேன்" யென்று சொன்னார். அந்தமட்டுக்கும் அவர் கையில் அனுப்பிவிச்சுக் கொண்டு முசே லபோம் அண்டைக்குப் போய் நந்திராசாவுடைய காகிதத்தை பிரான்சு படுத்திக் கொண்டு பதினோரு மணிக்கு யென் காசாக் கச்சேரி வந்தேன்.

---

[1] மராட்டிய பேஷ்வா. இங்கு குறிப்பிடப்படுபவர் பாஜிராவின் மகன் பாலாஜி பாஜிராவ்.

[2] பிள்ளையின் வழக்கமான நீண்ட வாக்கியங்களுக்கு இது ஒரு சான்று.

[3] இரண்டாம் ஆலம்கீர் மொகலாய மன்னர். அவரைப் பொம்மையாக உட்காரவைத்து உண்மையில் ஆட்சிசெலுத்தியவன் காசுத்தீன் கான். இவன் நிசாம்–உல்–முல்க்கின் மகன்.

அல்லாமல், துரையவர்கள் மமுதல்லி கான் காகிதத்துக்கு மறு காகிதம் பிரான்சிலே யெழுதி அதை முஃசே திலார்ஷு அண்டைக்குப் போய்ப் பார்சியிலே யெழுதிவிச்சுக்கொண்டு வரச் சொல்லியிருந்தபடிக்கு, மதனாந்த பண்டிதன் முஃசே திலார்ஷு அண்டைக்குப் போனவிடத்திலே அவர் கோட்டையிலே யிருக்கிற தம்முடைய கோந்துவாரைப் போய் அதைப் பார்த்து பார்சிப்படுத்தி அனுப்பிவிச்சார். அந்தக் காகிதத்திலே யெழுதின தென்னவென்றால், "நீர் அனுப்பிவிச்ச காகிதத்திலே உம்முடைய பத்து வைத்து (பட்டம் பதவியைச் சொல்லி) நான் யெழுதவில்லை யென்றும், உங்களுக்கு பத்து ஆர் குடுத்தார்க ளென்றும், அன்பது அறுபது வருஷத்துக்கு முன்னே யிருந்த நவாபுகள் அண்டையிலே உங்கள் பிரான்சுக்காரர்கள் வந்து யிந்த கரை துறையிலே வியாபாரம் பண்ணிக் கொண்டிருக்கிறோம் என்றும் ஒரு கொடி போட்டுக்கொள்ளுகிறோம் யென்றும் கேட்டுக்கொண்டதுக்கு, நீங்கள் வியாபாரம் பண்ணிக்கொண்டால் சறுக்காறுக்கு ஆசில் (மதிப்பு) கூடிவரும் யென்று உத்தாரம் குடுத்தார்களென்றும், அந்தப்படிக்கு நீங்களும் வியாபாரம் பண்ணிக் கொண்டிருந்து யிப்போ பாதுசா உடைய சீமையெல்லாம் கட்டிக்கொண்டு பாழடிச்சுப்போட்டீர்கள் யென்றும், யிப்படியாக நீர் யெழுதி யனுப்பிவிச்சது பாத்துக் கொண்டதினாலே மெத்த ஆச்சரியமாச்சுது; யிது வந்து ஆர் ஆலோசனையின் பேரிலே யெழுதினீரோ? அவர்கள் உமக்கு நல்ல ஆலோசனை சொன்னவர்களல்ல யென்றும், உம்முட பத்து ஆர் அறிவார்கள், யெங்கள் விலாயத்திலேயும் (?) நாங்களும் யிங்கிறேசுக்காரர்களும் பேசிக்கொண்டபோதும் உம்முட பேர் மமுதல்லி கான் யென்று சொல்லுகிறதே அல்லாமல், பின்னே வேறே பத்து வைத்து சொல்லிக் கொண்டதில்லை. எங்களுக்கு ஆனால் யெங்கள் பாதுசா (பிரஞ்சு மன்னர்) அவர்கள் சகல மேன்பாடும் பத்தும், யிந்த யிந்தியாவிலே யிருக்கிற யெங்கள் தாலூக்கு றேவுகளுக் கெல்லாம் யெசமானத்துவமும் (குடுத்து) கொவற்னர் துரைகளையும் செனராலுகளையும் (ஜெனரல்) வாங்கிப்போடவும் வேறே வைக்கவும் அதிகாரமும் குடுத்து, அதுக்குத் தக்கதான கவுலுகளையும் பவுன்சையும் குடுத்து அனுப்பியிருக்கிறார். சீர்மையிலேயும் நாம் மகோன்னத்தமான அதிகாரத்திலே யிருக்கிற பேர். யிதல்லாமல் உங்கள் பாதுசாவான மகம்மது சா பாதுசா[1] யெங்களுக்கு மன்சுபாவும் (மன்சப்) சாகீரும் கிதாப்பும் நவபொத்தும் முதலான மேன்பாடு நடத்தியிருக்கிறது பிறபஞ்சத்துக் கெல்லாம் தெரியும். உம்முட பத்து ஆர் அறிவார்கள்? யிப்போ நீர் நூதனமாய்

---

[1] மொகலாயப் பேரரசர், 1719–48.

உண்டாக்கிக் கொண்டிருக்கிறீரோ யென்னமோ தெரியாது. முன்னாலே யெங்களுக்கு சத்துருக்களாயிருக்கிற யிங்கிறேசுக்காறர்கள் வந்து யெங்கள் பட்டணத்தின் பேரிலே சண்டை போட்டால், அவர்களுடனே நீங்களும் கூடிக்கொண்டு சண்டைக்கு யெங்கள் பேரிலே வந்து யினி யில்லாத பிறயத்தனங்கள் யெல்லாம் பண்ணீர்கள். உங்களுக்கு அசாத்தியமாய்ப் போச்சுது. யெங்கள் பிரான்சுக்காரர்களிலே ஒரு கொட்டடியிலே ஒருத்த னிருந்தாலும் காயம் (காரியம்—அதாவது சமாளித்துக் கொள்ளுவான்) பண்ணிக் கொள்ளுவான். இப்பவும் நீர் யெங்கள் ட்டாணாக்கள் (துருப்புகள்) அங்கிங்கே யிருக்கிறதுகளை வாங்கி வரச் (திரும்பப் பெறச்) சொல்லி யெழுதச் சொன்னீர்கள். உங்களுக்கும் யெங்களுக்கும் சமாதானமானால் வாங்கி வரச் சொல்லுகிறோம். நாங்கள் சண்டைக்கு—சமாதானத்துக்கு ரெண்டுக்கும் வந்துயிருக்கிறோம். நீர் சண்டை போட்டாலும் அல்லது சமாதானம் யென்று ஆனாலும் சர்வாயித்தமா யிருக்கிறோம்," யென்றும், யிது முதலான சேதியாக யெழுதியிருந்தது. அதைப் பார்த்து நாளைய தினம் லக்கோட்டாப் (உறையில் போட்டு முத்திரையிட்டு) பண்ணி அனுப்புவோமென்று சொன்னார்.

இத்தனாள் மத்தியானத்துக்கு மேல் நாலரை மணிக்கு (துரை) அழைச்சு அனுப்பினதின் பேரிலே நானும் மதனாந்த பண்டிதனும் போனவிடத்திலே வாசற்படியிலேயிருக்கிற சோபுதாரர்கள் (காவலர்), "யெல்லாரையும் யிவ்விடத்திலே தானே பாபோசுகள் பைசாறுகளை (காலணிகளை) விட்டுப்போட்டுப் போறதே அல்லாமல் உள்ளே போட்டுக்கொண்டு வரவேண்டா மென்று துரையவர்கள் யெங்களுக்கு தாக்கீது பண்ணியிருக்கிறார்," யென்று சொன்னார்கள். நானும் மதனாந்த பண்டிதனும் பைசாறு போட்டுக்கொண்டு போனோம். துரையும் அவர் தம்பியும் கூடயிருந்து கொண்டு உசேன் மாவுத்தனுடைய காகிதம் ஒன்றைப் படிக்கச் சொல்லச் சொல்லிக் குடுத்தார்; அப்பால் துரை மதனாந்த பண்டிதனைப் பார்த்து வாசற்படியிலே சோபுதாரர்கள் பைசாறு போட்டுக் கொண்டு உள்ளே போக வேண்டாமென்று சொல்லச்சேயும் யெப்படி நீ போட்டுக் கொண்டு வருவா யென்று கோபிச்சுக் கொண்டு, "போ வெளியே, சோடு விட்டுப்போட்டு வா," வென்று சொன்னார். அதுக்கு மதனாந்த பண்டிதன் வாடிக்கையாய் போட்டுக்கொண்டு வருகுறது யென்று சத்தே மழமழ யென்று சொன்னான். அதுக்குப் பின்னையும் பெரு ஆக்கிறதமாய் கோபிச்சுக்கொண்டு, "யிவ்விடத்திலே றெங்கப்பன் ஒருத்தன் பைசார் போட்டுக்கொண்டு வருகுறதேயல்லாமல் பின்னை ஒருத்தரும் போட்டுக்கொண்டு வரக் கவையில்லை" யென்று சொல்லி, "நீ யிப்போதானே வெளியே போய் பைசார் விட்டுப்போட்டு வந்தால்

ஆச்சுது, யில்லாவிட்டால் பார்" என்று ஒரு தரம் அதட்டினார். அப்பால் மதனாந்த பண்டிதன் தானே வெளியே போய் பைசார் விட்டுப்போட்டு வந்து, உசேன் மாவுத்தன் காகிதம் படிச்சுச் சொன்னதென்ன யென்றால், தனக்கு பாப்பய்யப் பிள்ளை யிருபதாயிரம் விராகன் (வராகன்) குடுக்க வேணும் யென்றும், அசனுத்தின் கானுக்கு ஆனை வித்த சம்மதி அய்யாயிரம் விராகனும் பாப்பய்யப் பிள்ளை தான் குடுக்குறே னென்று முப்பதினாயிரம் விராகனுக்குச் சீட்டு யெழுதிக் குடுத்திருக்கிறார். அந்தச் சீட்டை சோராவரி பண்ணி வாங்கிக்கொள்ள வேணுமென்றுயிருந்தார். அதன் பேரிலே தான் பிறப்பட்டு வெளியே போயிருந்தோ மென்று, "யிப்போ நீர் சீமையிலேயிருந்து வந்து சகலமும் ஞாயப்பிரகாரம் விசாரிக்கிறீர் யென்று சேதி கேட்டோம். நீங்கள் பாப்பய்யப் பிள்ளைக்குத் தாக்கீது பண்ணி ஞாயப் பிரகாரம் அவர் சீட்டுப் படிக்க பணத்தை வாங்கிக் குடுக்க வேணுமென்றும், யென்னை வரச் சொல்லி உங்கள் உத்திரம் (வந்தால் நான் வருகிறேன்)," என்றும் யெழுதி யிருந்த மத்தலப்பைச் சொன்னதுக்கு, மதனாந்த பண்டிதன் பேரிலேயிருக்குற கோபத்தினாலேதானே கேட்டு, "நல்லது யிந்தப் பணம் சலாபத்து சங்குவைக் கேழ்க்க வேண்டியது," யென்று சொல்லச் சொன்னார்.

அப்பால் காத்தாலே திரான்சிலிரிட்டு பண்ணின நந்திராசா காகிதம் மேசென் குடுத்துப் பார்த்துக் கொண்டு யெழுதி யிருந்த வயணம்: முசே மேசென் (போன வருஷம்) முதல் கொண்டு நாமறுதியாய் (ஆர்வமில்லாமல்) யிருக்கிற சம்மதியும், முசே மென்வீல் சண்டையிலே பாதரி பண்ணி (முயற்சிகாட்டி) செயங்கொண்ட சம்மதியும் நாமெழுதினால், நாம் யெழுதின தெல்லாம் அபத்த மென்றும், முசே மேசென் சீமையிலே (பிரான்சிலே) நாலாறு சண்டையிலே பாதரி[1] (வெற்றி) பண்றவனென்று ... நீங்கள் சகல மத்தத்தும் (உதவியும்) பண்ணி காரியம் பத்தே (வெற்றி) பண்ணிக் குடுப்பீரென்று நன்றாய்த் தோத்தியிருக்கு தென்றும், யிப்பவும் யிது நிமித்தியம் ரெண்டு கோடி திரவியம் சிலவு பண்ணிக்கொண்டு யிருந்தோம், இப்பவும் நாங்கள் மகா (சமஸ்தானக்காரராய்) யெழுதின தென்றும், யெங்கள் அரமனை பவுன்சை யெல்லாம் அனுப்பிப்போட்டு, காசா (எனது சொந்த) பாதரி அன்னூறு குதிரையுடனே புதுச்சேரிக்கு வந்து உம்மண்டைக்கு ஒட்கார்ந்து (பேசுவோ)மென்றும் யெழுதியிருந்தது. அதைப் பார்த்துக்கொண்டு மகா கோபத்துடனே நந்திராசா வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யனை நாளை அழைத்துவா வென்று சொன்னார். அப்பால் அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

[1] இது சரியான சொல்லா என்பது தெளிவில்லை.

இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு துரை அழைச்சனுப்பி விச்சு, "யிப்போ டில்லியிலே பட்டத்துக்குப் புதுசாய் வந்திருக்கிற ஆலங்கிரி பாதுசா வண்டைக்கு வசீராயிருக்கிற காசுத்தின் கான் குமாரனுக்கு நாளைக்குக் காத்தாலே காகித மெழுதி அனுப்பவேணு," மென்று சொன்னார். அப்பால் அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்து பத்து மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் துரையவர்கள் யிங்கிறேசுக்காறர் தாலூக்கு மனுஷர்கள், சரக்குகள் பிடவை சீலை தட்டு முட்டுச் சாமானுகள் பல்லக்கு குதிரை திரவியம் வகையரா யென்ன யென்ன கொண்டு போனாலும் தடை பண்ணாமல் விட்டுவிடச் சொல்லி நம்முட தாலூக்கு மனுஷர்கள் அங்கங்கே யிருக்கிறவர்கள் பார்த்துக்கொண்டு விட்டு விடத் தக்கதாக பாரிசியிலேயும் மகாராஷ்ட்டிரம், தெலுங்கு தமிழ்களிலேயும் யிருபது தாலூக்குகளுக்கு யெழுதுவிக்க வேணுமென்று சொன்னார். அந்த சாடை பார்த்தால் யிவர்கள் யிங்கிறேசுக்காறர்களுக்கு தஸ்துக்கு (அனுமதிச் சீட்டுகள்) யிருபது அழைப்பிச்சு வியாபார சாபாரத்துக்குப் போக்குவரத்துக்குத் தடைமடையில்லாமல் பண்ணிக்கொள்ள வேணுமென்கிறதாய் யோசனை பண்ணி நடக்குறதாய்க் கண்டுது.[1]

### *1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 15; பவ வருசம், புரட்டாசி மாசம், தேதி 3; ஆதிவாரம்*

புது துரை அவர்கள் கோவிலுக்குப் போய் வீட்டுக்கு வந்து குமுசேல்காரரை யெல்லாரையும் அழைப்பிச்சு குமுசெல் (கவுன்சில்) கூடினார்கள். குமிசெல் கூடி யென்னன்ன பேசினார்களோ தெரியாது. அப்பால் குமிசெல் கலைஞ்சு குமுசெலியோர் யெல்லாரும் போற போது என்னை புது துரை அவர்கள் அழைக்குறார் யென்று சேவுகன் வந்து அழைச்சான்.

நான் போகச்சே துரையும் துரை தம்பியும் காம்பிராவிலே பேசிக் கொண்டிருந்தார்கள். நான் போனவுடனே, "யிங்கிறேசுக்காறர் சென்னப்பட்டணத்துக்கு குவற்னதோர் மேஸ்தர் சாந்தரசு (Mr. Saunders) அண்டைக்கு அனுப்புகிறதுக்கு, வழி மார்க்கங்களிலே தடை யில்லாமல் போக்குவரத்து உண்டாயிருக்கத் தக்கதாக வியாபாரத்துடனே சேர்ந்தது பிடவை சீலை பலசரக்கு பல்லக்கு

[1] இது ஆங்கிலேயருடனான போர் நிறுத்த ஒப்பந்தத்தின் படி செய்யப்பட்டது. துபாசியாக இருந்தாலும் ஆ.ர. பிள்ளைக்கு இது போன்ற பேச்சுவார்த்தைகள், உடன்படிக்கைகள் தெரிவிக்கப்படவில்லை. இந்தியர் விவகாரம் மட்டுமே தெரிவிக்கப்பட்டது.

குதிரை மனுஷர்களுக்கு உதவப்பட்ட யெப்பேர்ப்பட்ட வஸ்துக்களும் போக்குவரத்து உண்டாயிருக்கத் தக்கதாக ராகதாரி(?) தஸ்தக்கு நேத்து ராத்திரி மேலே பாரிசிலேயும், கீழே தெலுங்கிலேயும் எழுதி யிருபது தஸ்தக்கு மாத்திரம் முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு வரச் சொன்னேனே, முஸ்தீப்பாச்சுதா" யென்று கேட்டார். "எல்லாம் முஸ்தீப்பாச்சுது, மேலே உங்கள் மோகர் (முத்திரை) போடவேணு" மென்று சொன்னதுக்கு, பொட்டியைத் திறந்து மோகர் யெடுத்துக் குடுத்தார். உடனே அந்த யிருபது தஸ்தக்குக்கு மோகறு போட்டுக் குடுத்துவிட்டேன். அப்பால் அந்த தஸ்தக்கு வயணம் தாம் பிரான்செழுத்திலே யெழுதிக் கொள்ளுகிறதுக்கு (மேல்) யெந்த யெந்த லிபியிலே யெழுதி யிருக்கிறதென்று கேட்டார்.

"பதினெட்டு தஸ்தக்கு மேலே பாரிசியும், அதன் கீழே தெலுங்கும் யெழுதி ரெண்டு தஸ்தக்குலே மாத்திரம் பாரிசியின் கீழே மகாராஷ்டிரம் யெழுதி யிருக்குது. யிந்த யிருபது தஸ்தத்துக்குக் கீழேயும் நீங்கள் பிரான்செ ழுத்திலே யெழுதி கையெழுத்துப் போட்டுக் குடுத்தால், மேலே யெழுதி யிருக்கிற பாரிசியும் மகாராஷ்டிரமும் தெலுங்கும் யிதுகளை துலுக்கர்கள் தமிழர்கள் சமஸ்தான பேர்களும் பார்த்துக்கொள்ளுவார்கள். மோகர் போட்டிருக்கிறபடியினாலே உம்முட பேரும் தெரியும். பிரான்சிலே யெழுதி உம்முடைய கையெழுத்துப் போட்டால் வெள்ளைக்காரர்களும் பார்த்துக்கொள்ளுவார்கள்," என்று நான் சொன்னதுக்கு, நல்லதென்று அவரவர் (அவர் தனது) காசாக் கணக்கு வெள்ளைக்காறனை அழைத்து யிருபது கடுதாசியிலேயும் பிரான்சில் யெழுதிவிச்சுக் கையெழுத்தும் போட்டுச் சென்னப்பட்டணம் கொவற்ணதோர் மேஸ்தர் சாந்தரசுக்குக் காகிதமும் யெழுதி, அதிலே யிந்த யிருபது தஸ்தக்கும் வைத்து லகோட்டாப் பண்ணி சோபுதாரன் கையில் குடுத்து அந்தஷ் ஷணம் சென்னப்பட்டணத்துக்கு றவாணா பண்ணி அனுப்பிவிச்சுப் போட்டார்.[1]

அப்பால் யென்னுடனே, மயிசூர் வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யன் பழய துரை முசே துப்பிளேயிக்சு அண்டைக்கு யென்னேரமும் போக்குவரத்தாயிருக்கிறது யென்ன வென்று கேட்டார். அவர்கள் கவை காரியங்கள் நிமித்தியமாய் நாலிலே ரெண்டிலே அழைச்சனுப்பிச்சால் போய்க் கண்டு பேசிப்போட்டு வருவார், யிப்போ அதுவும் பத்து நாளாய் அவரவ்விடத்துக்குப் போறதில்லையென்றும், முராரி ராயன் வக்கீல்கள் மாத்திரம் யென்னேரமும் அப்போதைக்கப்போ போக்குவரத்தாய் காரியார்த்தத்தைக் குறிச்சுப் போவார்கள், அப்பால் வூரிலே யிருக்கிற வர்த்தகர் முதலான பேர்கள் குடுக்கல் வாங்கல் பேச்சு வார்த்தை பேசுகிற நிமித்தியம் போக்கு வரத்தா யிருப்பார்கள் யென்று சொன்னதுக்கு, "யிந்த

[1] தஸ்ரத் என்றும் எழுதப்பட்டுள்ளது.

சேதி யெல்லாம் நீ யென்னுடனே யேன் சொல்லயில்லை" யென்று கேட்டார். "நீர் அழைத்து யென்னுடனே சொல்லியிருந்தால் அல்லவோ யெனக்குத் தெரியும்? யிப்போ உங்கள் உத்தாரத்தின் பேரிலே கோன்சேப்பியோர், மத்து முண்டான வெள்ளைக்காரர்கள் போக்குவரத்தா யிருக்கிறபடியினாலே யிதுவும் உத்தார மாக்கும் யென்று நானிருந்தேன்." யென்று நான் சொன்னதுக்கு, "யென்ன உத்தாரமா யிருந்தாலும் ஆரார் போக்குவரத்தா யிருக்கிறார்களோ அதை யெல்லாம் நீர் நன்றாய் விசாரித்து யெனக்குச் சொல்லும்" யென்றும், "யெந்தக் காரியத்துக்கும் நான் முழு மனதுடனே உன்னை நம்பியிருக்கிறேன்" யென்றும் சொன்னார். "அந்தப்படியே நான் வஞ்சனை யில்லாமல் பிறயாசப்பட்டுப் பார்க்குறேன். நாங்கள் நாற்பது வருஷமே பிடிச்சு யிந்தக் கும்பினீரிலே யெங்கள் தகப்பனார் வர்த்தகமும் பண்ணி, கொடுத்தியோராயும் (Courtier—தரகர், துபாசி) யிருக்கிறேன். நாங்கள் கும்பினீரின் காரியத்திலே பிறயாசப்பட்டு நடந்து கொள்ளுகிறதை முன்னாலேயும் நீங்கள் கேழ்விப்பட்டிருக்கிறீர்கள். யினி மேலும் நான் நடந்து கொள்ளுகிற கிறிகையிலே உம்முடைய சித்தத்திற்கு சந்தோஷமாகப் போகுது. நான் மனது அறிஞ்சு ஒரு வஞ்சனை சறுவாத்துமனாக ஒரு காரியமும் நடக்கப்போற தில்லை; அறியாமல் ஒரு வேளை தப்பிதங்கள் வந்தாலும் அதை நீங்கள் மனம் பொறுத்துக்கொள்ள வேணும்" யென்று நான் சொன்னதுக்கு, "நல்லது, அந்தப்படிக்கி பத்திரமாய் வூரிலே நடக்கிற சங்கதிகள், கும்பினீர் வர்த்தகர், சில்லரை வர்த்தகர், மத்துமுண்டானவர்கள் நடத்துகுற சங்கதிகள், யிதுகள் யெல்லாம் நீர் நன்றாய் விசாரிச்சு யெனக்கு வந்து சொல்" லென்று சொன்னார். "நல்லதெ"ன்று சொன்னேன். அப்பால் யென் காசாக் கச்சேரியே வந்து வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்குத் துரையவர்கள் யென்னை அழைத்தனுப்பிவிச்சு நந்திராசாவுடைய காகிதம் ஒன்று குடுத்துப் படிச்சு சொல்லச் சொன்னார். அந்தக் காகிதத்திலே யெழுதி யிருந்த மத்தலப்பு யென்ன யென்றால்: மாபூசு கான் 1500 பாறுக்காறர்களும் (காலாட்கள்) ஆயிரம் குதிரைகளும் முன்னூறு பேர் வெள்ளைக்காறர்களும் கூட்டிக்கொண்டு உடையார்பாளையம் விட்டு, அப்பால் திரிச்சிராப்பள்ளிக்கு வருகிற சமாச்சாரம் நீங்கள் கேட்டிருப்பீர்களென்றும், மமுதல்லி கான் செருக்குவார்பாளையம், உத்தமசேரி யிந்த பிராந்தியத்திலே போயிறங்க வேணுமென்று யிருக்கிறார்க ளென்றும்; உடையார்பாளையத்தார் அரியலூரார் துரையூரார் யிவர்கள் பிறப்பட்டு ஊட்டத்தூர், லாலுகுடி யிந்த வட்டங்களிலே நம்முட தண்டுக்கு ரஸ்து வர்க்கங்கள் (தானியம், முதலிய சாமான்கள்) வராமல் படிக்குப் பந்துபஸ்து பண்ணவேணுமென்று யிருக்கிறார்க ளென்றும்,

அந்தப்படிக்கு அவர்கள் வந்திறங்கி நம்முட தண்டுக்கு இக்கட்டு வருமானபடியினாலே சத்துருக்கள் யெந்த முகத்திலே வந்திறங்குறார்களோ அந்த முகத்திலே பவுன்சை அனுப்பி அடிக்கச் சொல்லி முசே மேசெனுக்கு யெழுதி அனுப்ப வேணுமென்றும், யிது முதலான சேதியாய் யெழுதி யிருந்தது.[1]

அந்த மத்தலப்பைச் சொன்னதுக்கு அந்தக் காகிதத்தை பிரான்சு படுத்திக்கொண்டு வரச் சொல்லிச் சொன்னார். அப்பால் அனுப்பிவிச்சுக் கொண்டு காசாக் கச்சேரியே வந்தவுடனே சாயங்காலமான படியினாலே நாளைக்கு முசே லபோம் (M. Le Beaume) அண்டைக்குப் போய் அவரிடம் யெழுதிவைப் போமென்று யிருக்கச்சே, முசே பெடுத்தல்மீ (M. Barthelemy) யாகிய சின்னதுரை அழைத்தனுப்பிவிச்சு "திரிச்சிராப்பள்ளி தண்டுக்கு முசேமேசென் அண்டைக்குப் பதினாயிரம் விராகன் அனுப்பவேண்டியிருக்குது. முன்னே மூவாயிரம் விராகன் யெப்படி அனுப்பிவிச்சா" யென்று கேட்டார். "கொல்லர் (வாயில் காப்போர்) கையிலே ஆள் ஒன்றுக்கு 500 விராகன் பையிலே போட்டுக் கோறுவையாக யிடுப்புக்குக் கட்டி, மெங்காவல் (மெய்க்காவல்) சேவுகரையும் கூட்டி அனுப்பி வைச்சேனே," யென்று சொன்னேன். "யிப்பவும் அந்தப்படிக்கு அனுப்பு," யென்று சொன்னார். "முன் பின் அனுப்புறது அரும்பாத்தை[2] யாங்காட்டும், யிப்பவும் அவனைத் தானே அழைத்தனுப்பச் சொல்லு," மென்று சொன்னேன். அந்தப்படிக்கி வினாயகப் பிள்ளையை அழைப்பிச்சு, பதினாயிரம் விராகனையும் (வராகன்) திருச்சிராப்பள்ளி தண்டுக்கு முசே மேசென் அண்டைக்கு அனுப்பச் சொல்லி விராகனை அவன் அவாலா (?) பண்ணி நானும் கூட யிருந்து சொல்லிப் போகச் சொன்னேன். அப்பால் அவர் சதுரங்கம் பார்த்துக் கொண்டிருந்தார். யென்னையும் கூட யிருந்து பார்க்கச் சொன்னார். நானும் அரை நாழிகை யிருந்து பார்த்துப் போட்டு அனுப்பிவிச்சுக்கொண்டு ஒன்பதரை மணிக்கு யென் காசாக் கச்சேரியே வந்து, பத்து மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

---

[1] போர் நிறுத்த உடன்படிக்கை இரு கம்பெனியாருக்குமிடையில் கையெழுத்தாகிவிட்டதால், ஆங்கிலேயர் தாமே நேரடியாக எதுவும் செய்யாமல் இப்படித் தமது கையாட்களைத் தூண்டி விட்டுச் சண்டை செய்தனர்.

[2] அரும்பாத்தை என்பது கம்பெனி நிர்வாகத்தில் இந்தியன் ஒருவன் வகித்த பதவி. படைகளுக்கு தானியம், ஆடு, கோழி முதலியனவும் பீரங்கி வண்டிகளையும் சுமை வண்டிகளையும் இழுக்கும் எருதுகள் போன்றவற்றையும் வாங்கி வழங்குவது அரும்பாத்தையின் பணி. வினாயகப் பிள்ளை இதனை அப்போது வகித்தார். அவரது குடும்பத்தினரே இதனை வகித்து வந்துள்ளனர். அவர்களது கிராமமான அரும்பாத்தபுரம் இன்றும் வில்லியனூருக்கு இப்பால் உள்ளது.

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 20; பவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 8; சுக்குறவாரம்***

இத்தனாள் காலத்தாலே புது துரையவர்கள் ஒன்பது மணிக்கு அழைப்பிச்சு நந்திராசாவுக்கும் முராரி ராயனுக்கும் பிரான்சு யெழுத்திலே காகிதம் யெழுதிக் கொடுத்து, யிதை திராதுவியாம் (திரான்சிலேட்) பண்ணி மகாராஷ்ட்டிரத்திலேயும் தெலுங்கிலேயும் யெழுதி வரச் சொல்லிக் குடுத்தார். அப்போ முராரி ராயன் வக்கீல் கிருஷ்ணமாச்சாரி வந்து சலாம் பண்ணினதுக்கு, "உங்கள் அமுல் முராரி ராயனுக்குக் காகிதமெழுதி அனுப்புறோம்," யென்று சொல்லி வாய் விசேஷம் சொன்னது:

"முசே துப்பிளேயிக்கடனே நீங்கள் தீத்துக்கொண்டது அவரிடமே தீத்துக்கொள்ள வேண்டியதே யல்லாமல், யென்னைத் தொட்டு கெத்தம் (?) நடித்த காரியத்துக்கு தீர்க்கப்போகாது. அவரானால் உங்களுக்குக் குடுக்க வேண்டியதில்லை யென்று சொல்லுகிறார். நீங்கள் பதிமூணு லட்சம் ரூபாய் வர வேணுமென்று யெழுதுகிறீர்களான படியினாலே பழயவருடனே தீத்துக்கொண்டு, நந்திராசா பேரிலே இருபது லட்சம் ரூபாய் வர வேணும், அதிலே தனக்கட்டி (?) பண்ணிக்கொண்டு அப்பாலே சத்துக்கு நந்திராசா பேரிலே வர வேண்டியதை நாம் ரெண்டு பேரும் சக்குதி (?) பண்ணி வாங்கி, உமக்கு வர வேண்டியதை நீர் எடுத்துக் கொண்டு மத்ததை யெங்களுக்குக் குடுத்துவிடுமென்று நாம் சொன்னோமென்று யெழுதி அனுப்புமென்றும், அதல்லாமல் யெங்களை விட்டுப் போகவேண்டா," மென்றும் சொன்னார். அதுக்கு கிருஷ்ணமாச்சாரி சொன்னது, "யெங்கள் யெசமான் தியாகதுறகத்துக்கு நாலு நாழிகை வழி மகலுப்பேட்டை யென்று யிருக்குது. அங்கே வந்திறங்கி யிருக்கிறார். ஆனபடியினாலே அவருக்கு நாங்கள் ரெண்டு பேரைக் குறத்திலேகிவிப்பனை வைத்துப்போட்டு ('ஜாமீனாக இங்கே இரண்டு போரை வைத்துவிட்டு') நான் போய்க் கண்டு பேசி யிவ்விடத்து சங்கிதிகளெல்லாம் சொல்லிப்போட்டு, அவருடய உத்திரவும் தெரிஞ்சு கொண்டு அஞ்சாறு நாளையிலே வருகுறே," னென்று கேட்டதுக்கு, "யெழுதி அனுப்புறதே யல்லாமல் நீங்கள் யாரும் போகத் தேவையில்லை," யென்று சொன்னார்.[1] பின்னையும் சிறிது விசேஷங்கள் சொன்னாலும் அவர் அந்த உத்திரவே சொன்னபடியினாலே அவரும் நாங்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு, நானும் மதனாந்த பண்டிதனும் முசே லபோம் அண்டைக்குப் போய் மகாராஷ்டிரமும் தெலுங்கும் ஆக முராரி ராயன் காகிதமும் நந்திராசாவினுட காகிதமும் எழுதினோம்.

---

[1] மைசூர் தளபதி, தமிழ்நாட்டுப் பாளையக்காரர் ஆகியோரது வக்கீல்கள் கூடப் பிணைக் கைதிகளைப் போன்று வெள்ளையரால் நடத்தப்பட்டதற்கு இது சான்று.

யிதிலே பனிரெண்டு மணிக்கு அழைச்சனுப்பிவிச்சு பைகோவு ராசாவுக்கு (Raja of Pegu) ஒரு காகிதம் யெழுதச் சொல்லி பிரான்சிலே யெழுதின கொப்பியைக் (காப்பி) குடுத்தார். அதை வாங்கிக் கொண்டு வெளியே பிறப்பட்டு, பைகோவு ராசா காகிதம் பாரிசிலே யெழுதுகிறதானபடியினாலே மதனாந்த பண்டிதர் கையிலே நான் குடுத்து, முசே தெலார்ஷு அண்டைக்குப் போய் யெழுதி வரச்சொல்லி நான் சாப்பாட்டுக்குப் போகச்சே, மீருஷா அப்துல் நபி பேக்குடைய (Mirza Abdul Nabi Beg) குதிரைகளை அழைப்பிச்சு, "முப்பது குதிரை மாத்திரம் உம்முட நூறு குதிரைக்குள்ளே பொறுக்கி யெடுத்துக் கொண்டு, உமக்கு முப்பது குதிரைக்கு யிப்போ சம்பளம் சரியாய் குடுத்து விடுகிறோம். யிதல்லாமல் முப்பது குதிரைக்குத் தீனி நாங்கள் போட்டுக்கொள்ளுகிறோம். அந்த முப்பது குதிரைகள் யேறின சிப்பாயிகளுக்குச் சம்பளம் குடுத்து பவுஞ்சு பேரிலே வைக்குறோம். யிந்த முப்பது குதிரையிலே செத்துப்போன குதிரைகளுக்குக் கிரயம் குடுத்துவிடுகிறோம். ரெண்டு மாதக் காரியம் (காலம்) முப்பது குதிரை அமானத்தாய் (வைப்புநிதி போன்று) குடுக்கவேணு" மென்று, குதிரைகளையும் அழைப்பிச்சு நான் பார்த்து, யிந்த விசேஷமும் மீருஷா அப்துல் நபி பேக்கை யென்னைக் கொண்டு கேழ்க்கச் சொன்னார். நான் யெத்தனை விதமாய் துரை ரூபு ரூபிலே (எதிரிலே) கேட்டதுக்குப் பிற்பாடும் புதுசாய் பரிசேதம் குடுக்கக் கூடாதென்று ("குதிரை தரமுடியாது" என்று) சொன்னதின் பேரிலே துரை கோபிச்சுக்கொண்டு உள்ளே போனார்.

அப்போ பழஞ் செஞ்சியான் துரைக்கும் துரை தம்பிக்கும் அனுப்பின ரெண்டு சிலேத்தும் (?) கொண்டு போய் குடுத்து அவர் அனுப்பின காகிதத்தையும் பிரிச்சு, பெகுமானம் அனுப்பினோம் என்று எழுதின காகிதத்தைப் படிச்சுக்காண்பிச்சு, அதுக்கு சந்தோஷப்பட்டு பதில் காகிதமும் உபசாரமாய் யெழுதச் சொல்லி சாகீரும் விட்டு விடுகுறோம் என்று யெழுதிக் குடுக்கச் சொன்னார். நல்ல தென்று அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

அப்பால் மீருசா அப்துல் நபி பேக்குவை மறுபடி துரை அழைப்பிச்சு, "நீர் குதிரைகள் குடாவிட்டால் அப்படி உம்முட மனது; மறுபடி வெளியே உம்முட சுவார்களும் (போர் வீரர்கள்) நீரும் போய் பவுன்சுடனே கூடயிரு," யென்று சொல்லி அனுப்பிவிட்டார் யென்று, மீருசா அப்துல் நபி பேக்கு யென்னுடனே வந்து சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு போனான்.

இத்தனாள் பகலைக்கு மேலாகக் கடற்கரைக்குப் போய் முசே லபோம் அண்டையிலே யெட்டரை மணி மட்டுக்கும் யிருந்து, நந்திராசா காகிதம் முராரி ராயன் காகிதம், பைகோவு ராசா காகிதம் ஆக மூணு

காகிதமும் தயாறு பண்ணி. ராத்திரி பத்தரை மணிக்குச் சாப்பிட்டான பிற்பாடு புது துரை கையில் கொண்டுபோய்க் குடுத்து, மோகறும் போட்டுவிச்சு பைகோவு ராசா காகிதத்தைச் சரிகைப் பையில் போட்டுக் கட்டிக்குடுத்து. முராரி ராயன் காகிதத்தை சும்மாய் மோகறு பண்ணிக் குடுத்தோம். பைகோவு ராசா காகிதத்தை முசே புரூனோ கையிலே குடுத்து கப்பல் கடுதாசி யோடே வைத்து முத்திரை போட்டு அலாயிதா(?) வைத்தார்கள். நந்திராசா காகிதத்தையும் முராரி ராயன் காகிதத்தையும் முசேமேசெனுக்கு காகிதம் யெழுதி யிருந்தத்துடனே கூடவைத்து ஒரு லகோட்டாவாய்ச் சேர்த்து முத்திரை போட்டு வைத்துக்கொண்டு யெங்களைப் போகச் சொன்னார். பதினோரு மணிக்கு வீட்டுக்குப் போனாம்.

*1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 21; பவ வருசம், பிரட்டாசி மாசம், தேதி 9; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே துரை பண்டிகை யென்று கோவிலுக்குப் போகச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். யேதாகிலும் விந்தை கபுறுகளுண்டா வென்று கேட்டார். முராரி ராயன் திருவண்ணாமலை சமீபம் மணலூர்பேட்டை யென்று யிருக்குது, அங்கே வந்து பவுன்சுடனே யெறங்கினார் யென்று சேதி வந்தது யென்று சொன்னேன். யிங்கிறேசுக்காறர் சிறிது சொலுதாதுகளைத் திருவந்திபுரத்திலே கொண்டு போய் யெறக்கினார்க ளென்று கபுறு வந்த தென்று சொன்னேன். நல்ல தென்று கேட்டுக்கொண்டு கோயிலுக்குப் போனார். நான் யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

*1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 23; பவ வருசம், பிரட்டாசி மாசம், தேதி 11; சோமவாரம்*

இத்தை நாள் தம்பி திருவேங்கடத்துக்குப் பதினாறாம் நாள் கறுமாந்திரம் ஆனபடியினாலே ஆறு மணிக்கு பெருமாள் நாயக்கன் சாவடிக்குப் போய் கறுமாந்திரம் விதியாம் படியே அப்பாவுவைக் கொண்டு செய்விச்சு, அங்கே சமஸ்தமான பேர்களுடனேயும் தலைகட்டிக் கொண்டு ராத்திரி யேழு மணிக்குப் பிற்பாடு சகல சம்பிறமத்துடனே ஆசாரியாரைப் பல்லக்கின் பேரிலே வைத்துக்கொண்டு அப்பாவு, அண்ணாசாமி, அய்யாசாமி (நம் பிள்ளையின் இரண்டாம் மகன்) வகையராக்கள் பல்லக்கின் பேரிலே முன்னதாகப் போக, கொத்தளக் குதிரைகள் மேளதாளம் நட்டுமுட்டு நாட்டியசாலை யீட்டிகள் தீவட்டிகள் மத்த முஸ்தீப்புகள் வகையிரா சம்பிறமத்துடனே யெட்டு மணிக்கு வீட்டுக்கு வந்து சேந்தோம். சமஸ்தான பேருக்கும் பாக்கு வெத்திலைகள் குடுத்து

அனைவரையும் அனுப்பிவிச்சேன். அவரவர் வீட்டுக்குப் போன பிற்பாடு பந்துக்களுடனே வீட்டிலே சாப்பாடான பிற்பாடு ராத்திரி பதினோரு மணிக்குப் படுத்துக்கொண்டேன்.

மகாநாட்டார் புதுசாய் வந்த துரைக்கு வேதபுரீசுவரன் கோயிலை யிடிச்சுப் போட்டதுக்குக் கட்டிக்கொள்ள உத்தாரம் கொடுக்க வேணு மென்றும், முசே துப்பிளேயிக்சு அனியாயம் பண்ணினாரென்றும், தங்கள் கோயிலை யிடிச்சுப் போட்டதுமல்லாமல் அன்னித அனியாயமாய்ப் பண்ணதாய் ஒரு பிட்டிசாம் (பெட்டிஷன்) யெழுதிக் குடுத்தார்களென்று கடிறு கேழ்க்கப்பட்டது.

[கீழ்வரும் குறிப்பு, 1754 செப்டம்பர் 24 வெள்ளிக்கிழமைக் குரியது. இது rough draft ஆகத் தனித் தாளில் எழுதப்பட்டு, மூல நாட்குறிப்புப் புத்தகத்தில் எழுதப்படவில்லை. ஆங்கிலப் பதிப்பில் (1985, தொகுதி 9, பக். 110) மட்டும் இது சேர்க்கப்பட்டுள்ளது:

"24 ஆம் தேதி வெள்ளி(க்கிழமை) கவர்னருக்கு ரத்தம் எடுக்கப்பட்டது.[1] ஆகவே ஒருவரும் அவரைக் காண வரவில்லை. நான் கோட்டைக்குப் போய் முசே மீரா, (M. Miran), கொர்னே (M. Cornet) முதலியோரைக் கண்ட பின், என் காசாக் கச்சேரியே போனேன்.

"சென்னப்பட்டணத்திலிருந்து முசே லாசுவை (M. Law) அனுப்பிவிட்டு வினாயகப் பிள்ளை திரும்பிக் கொண்டிருந்தார். போகும் வழியில் முசே லாசு இங்கிலீசுக்காரர் கிராமங்களைக் கொள்ளையடித்து, பெண்டுகளையும் அலங்கோலம் பண்ணியதைக் கேள்விப்பட்டு, இங்கிலீஷ்காரர்கள் 200 சொல்தாதுகளையும் 500 பாறுக்களையும் (காலாட்கள்) அனுப்பினார்கள். முசே லாசும் அவரது ராணுவமும் அதற்குள் போய்விட்டதால், அவர்கள் புதுச்சேரிக்குத் திரும்பிக்கொண்டிருந்த வினாயகப் பிள்ளையைத் திருவத்தீசுவரன் கோயிலருகே பிடித்துக் கொண்டனர். இச்சேதியைக் கேள்விப்பட்ட துரை இன்றைக்குப் பத்து மணிக்கு சென்னப்பட்டணத்துக்கு எழுதினார் என்று நான் கேள்விப்பட்டேன். நேற்றுக்கு முந்தின நாள் இதை நான் கேள்விப்பட்டேன்."]

---

[1] Letting blood என்பது இரத்த அழுத்தத்தைக் குறைக்க ஐரோப்பியர் பின்பற்றிய ஒரு வைத்திய முறை.

*1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 25; பவ வருசம், பிரட்டாசி மாசம், தேதி 13; புதவாரம்*

இத்தனாள் பத்து மணிக்குப் புது துரை அழைப்பிச்சு தஞ்சாவூர் ராசாவினுடைய காகிதம் வந்ததை படிச்சுச் சொல்லச் சொன்னார். நான் படிச்சுச் சொன்னேன். அதிலேயிருந்த சமாச்சாரம்: "தாங்கள் அனுப்பின காகிதம் வாசித்துக்கொண்டு சகலமும் தெரியவந்தது," யென்றும், "தாங்கள் யிது வரைக்கும் காரைக்கால் உங்களுக்கு நாங்கள் குடுக்கச்சே உங்களுக்கும் நமக்கும் நடந்த உடன்படிக்கை படிக்கி நடவாமல், யிதாயத்து மொகிதீன் கான் வந்து யெங்கள் கோட்டையின் பேரிலே சண்டை போட்டபோது உங்கள் சொலுதாதுகளும் பீரங்கிகளும் விஸ்தாரமாய் வந்து சகல யிக்கட்டும் யெங்கள் கோட்டைக்கும் சமஸ்தானத்துக்கும் ராச்சியத்துக்கும் நடப்பிச்சது லோகமெல்லா மறியும்," யென்றும், "யிப்பவும் நீர் சறுவாக்கினா் துரைத்தனத்துக்கு வாரீர், ராச்சியம் சுகப்படவும் உமக்கு கீர்த்தி வரவும் சினேகம் உத்திரோத்திரமாய் நடக்கவும் நடப்பிச்சுக்கொண்டு, முன்பின் நடந்தபடிக்கு யெங்கள் நாடு மாகாணங்கள் பலவந்தமாய் கட்டிக்கொண்டு தொப்பா பணமும் (கப்பம்) குடுக்கக் கவையில்லை யென்று யெழுதி வாங்கிக் கொண்ட காகிதத்தையும் குடுத்து விட்டு, நூதனமாய் நடந்த காரியத்தை யெல்லாம் விட்டுவிட்டு முன் பழயபடி நடந்தால் சமாதானமாய் நடக்குற ராச்சியமும் சுகப்படும், உமக்கும் கீர்த்தி வரு," மென்றும் யெழுதியிருந்த மத்தலப்பைச் சொன்னதுக்கு, பிரான்சு வார்த்தையிலே யெழுதி வரச் சொன்னார். நல்லதென்று சொல்லி, பழஞ் செஞ்சியார் அனுப்பின ரெண்டு சீரொப்பாவும் அண்ணன் தம்பிமார் ரெண்டு பேருக்கும் குடுத்து, அவர் வக்கீல் யெசந்த ராயனுக்குப் (யஸ்வந்த ராவ்) பாக்கு வெத்திலை பன்னீரும் குடுப்பிச்சு, மோபார்க்கு பாதி (வாழ்த்து – Congratulations) யெழுதின காகிதத்தையும் படிச்சுக் காண்பிச்சு அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்குப் போனோம்.

இத்தனாள் சாயங்காலம் முசே லபோம் அண்டைக்குப் போய் தஞ்சாவூர் ராசாவினுடைய காகித மெழுதிவிச்சது மல்லாமல், நாளது வருஷம் ஆடி மாசத்திலே (ஜூலை 1753) நந்திராசா பணமில்லை யென்று ஒன்பது நகை, முத்து மாலை, கட்டாரி, கஞ்சா பதக்கங்கள், புகைச் சுறுட்டு வைக்குற குழாய் – யிது செம்புக் கல் வைரக் கல் வைத்து யிழைத்தது – யிருபது லட்சம் ரூபாயிக்கு ஒடமை (மதிப்புள்ளது) அன்பது ஆயிரம் ரூபாய்க்கு வைத்து (அடகு வைத்து) வாங்கிக் கொள்ளலாமென்று குடுத்தாராம்.[1] அதை மறுபடி (திருப்பி) பணிரெண்டாம்[2] நாள் (துய்ப்ளேக்சு)

[1] இதை தொகுதி எட்டில் காணலாம்.

[2] பதினொன்று என்று ஆங்கிலத்தில் உள்ளது.

குடுத்துவிட்டாராம் யென்று யெழுதி யிருந்த லீஸ்து (பட்டியல்—list) ஒன்று கூடயெழுதி வரச் சொல்லிக் குடுத்ததைக் கூட யெழுதிவிச்சுப்போட்டு சுத்திரிகச்சு (திருத்தி நாளைக்) காலத்தாலே யெழுதித் தாறோமென்று சொல்ல, அந்தப்படிக்கி அனுப்பிவிச்சுக்கொண்டு யென் காசாக் கச்சேரியே ராத்திரி யேழரை மணிக்கு வரச்சே, புது துரை முசே கோதே, முசே பெடுத்தல்மீ வீட்டிலே சாப்பிட வந்திருக்கிறாரென்று சொன்னார்கள். அந்த சேதி தெரிந்து கொண்டு வீட்டுக்குப் போனேன்.

[செப்டம்பர் 25ஆம் தேதிய rough draft.

"25ஆம் தேதி சனிக்கிழமை துரைக்கு உடம்பு சுகமில்லாததால் யாரும் அவரைப் பார்க்க அனுமதிக்கப்பட வில்லை.

"மூணு மணிக்கு அவர் அழைத்தார். நான் போனதும் நந்திராசாவிடமிருந்து வந்த ஒரு காகிதத்தைக் கொடுத்தார். 'ஏன் உனக்கு மட்டும் ஒரு காகிதம் வந்தது?' என்று கேட்டார். 'அது தான் வாடிக்கை' என்றேன். கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று கேட்டார். 'முசே மேசெனுக்கு (M. Maissin) ரெண்டு லட்சம் ரூபாய் மூணு மாசச் செலவுக்குக் குடுப்பதாக உடன்படிக்கையாகி, அதன் படி காவேரிக் கரையில் ஒரு லட்சம் குத்தகை தரும் நிலத்தைக் கொடுத்து, துறையூரின் பேரிலே மற்ற ஒரு லட்சம் என ஏற்பாடு செய்திருக்கிறது. ஆனால் பரமானந்தம் அவர்களிடமிருந்து கொஞ்சம் பணம் வாங்கிக் கொண்டு காரியத்தைக் கெடுத்துப் போட்டான். அதனால் உடனே ஒரு லட்சம் ரூபாய் தர வேண்டும், மற்றது பின்பு பார்க்கலாம் என்று கேட்டதாகச் சொல்கிறார்கள்,' என்று எழுதியிருக்கிறது என்றேன். அக்கடிதத்தைப் பிரெஞ்சுப் படுத்தி வரச்சொன்னார்.

"பின்பு என்னைத் தனியே அழைத்துப் போய், 'இன்னும் ஒருரு நாளிலே எல்லாப் பொறுப்பையும் உன் வசம் ஒப்புவித்துப் போடுகிறேன்,' என்றார். நானும் நல்லது என்று சொன்னேன்." (மேற்படி தொகுதி, பக்.110)]

*1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 26; பவ வருசம், பிரட்டாசி மாசம், தேதி 14; குருவாரம்*

முராரி ராயன் சங்கராபுரத்தை வாங்கிக் கொண்டு அங்கே யிறங்கி யிருக்கிறதாகவும், அப்பால் அவர்கள் சீமைக்குப் (தனது நாட்டுக்கு) போற பயண சன்னாகத்திலே (ஏற்பாட்டிலே) யிருக்கிறா ரென்றும் அவ்விடத்தில் தப்பித் தவறி யிருந்தது களெல்லாம் நிப்பாந்தமாய்ப் போச்சுது (கொண்டு போக முடியாததை எல்லாம் அழித்துப் போட்டுவிட்டார்) யென்றும் சொன்னார்கள்.

*1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 28; பவ வருசம், பிரட்டாசி மாசம், தேதி 16; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே பழய துரை முசே துப்பிளேயிக்சு அழைத்து அனுப்பிவிச்சபடியினாலே அவரண்டைக்குப் போனவிடத்திலே மீர் குலா முசேன் உடம்பிறந்தாள் குமாரர் சாச்ரியபுரயிரும்(?) சாயபு வகையிரா (Mirza Ali Sahib and Mir Abdullah Sahib)[1] வந்துயிருந்தார்கள். பழய துரை தாழவந்து அலமுசு (காபி அல்லது சிற்றுண்டி) பண்ணிக் கொண்டுயிருந்தார். அப்போ நான் போயாசாரம் பண்ணின உடனே யென்னைப் பார்த்து யெழுந்திருந்து யிப்பிறம் வந்தார். வந்து மீர் குலாம் உசேன் மருமகன்மாரையும் கூப்பிட்டு, அழைத்து யென் கையில் முசே புறக்குணுது (Mon. Bourquenoud) கையெழுத்துப்போட்ட தீர்ப்புக் காகிதமொன்று—லக்ஷ ரூபாய் வரவும் அதுக்குத் தொன்னூத்து நாலாயிரம் பற்றும், அதுக்கு வட்டியிலே கூடினது செத்தெம்புறு மாதம் 15 தேதி வரைக்கும் முப்பதினாயிரம் சில்வானம் ரூபாயும், ஆக முப்பத்தாறாயிரத்து நானூத்தி தொண்ணூத்தி மூணு (ரூ.36,493) ரூபாயும், பணம் ரெண்டும் காசு யிருபத்தேழும் குடுக்கவேண்டியதாய்த் தீர்ப்புக் கணக்கு யெழுதி யிருந்ததைப் படிச்சுப் பார்த்துச் சொல்லச் சொன்னார். அந்தப்படிக்கிச் சொன்னதின் பேரிலே, "அறுபத்து நாலாயிரம் ரூபாய் நான் உங்களுக்குக் குடுத்துவிடுகிறேன்" யென்றும், "யிது தானும் உங்களுக்கு சும்மா நான் குடுக்கிறேன் யென்கிறதே அல்லாமல் ஞாயத்துடனே யில்லை. மீர் குலாம் உசேன் செத்துப்போன மட்டுக்கும் அவனுக்குப் பிள்ளைகள் பெண் சாதியில்லாத படியினாலே சறுக்கா(ருக்கு) அவன் ஆஸ்தி சேரவேண்டியது. அல்லாமல் உடம்பிறந்தாள் பிள்ளைகளுக்குக் கவையென்ன யிருக்குது யென்றும், சந்தாசாயபு யிருந்து கொண்டு யிவர்க ளுடமை யெல்லாம் யெடுத்துப் போட்டுக்குறதாயிருந்தது. அப்போ

[1] இப்பெயர்கள் மூலத்தில் இல்லை. ஆங்கிலப் பதிப்பாசிரியரின் ஊகமே இவை. ஆங்கிலப் பதிப்பை இப்பிரதி யெழுதினவர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

யெனக்குக் குடுத்ததென்றும்" யிப்படி அனேகம் விதமாய்ச் சொன்னது அல்லாமல், "மீர் ஷென் (மீர் ஆசம்) வந்து தனக்குப் பாதி பங்கு உண்டென்று தழையுறான். அவன் பெண்சாதியும் யிவர்களைப் போலே ஒரு உடம்பிறந்தாள் பெண்ணாமோ அல்லவோ" யென்றும், யிப்படியாக அனேகம் சங்கதிகள் சொல்லி அவர்களுக்குச் சொல்லச் சொன்னார். அவர்களுடனே அப்படியெல்லாம் சொன்னதுக்கு, "அறுபத்து நாலாயிரம் ரூபாய் யெங்கள் கையிலே சந்தா சாயபு வருகுறதுக்கு முன்னே ... வாங்கின" தென்று சொன்னதுக்கு, சீட்டு கொண்டு வந்தால் உங்கள் பணம் குடுத்து விடுகுறோம் யென்று சொன்னார். அதுக்கு அவர்கள், "நீர் பணத்தைக் குடும், கையிலே சீட்டை வாங்கிக் கொள்ளுங்கோள்," யென்று சொன்னார்கள். அதுக்குப் "போங்கோள், போங்கோள்" யென்று சொல்லச்சே, மீர்ஷென் (மீர் ஆசம்) வந்தவனுடனே யிந்தப் பேச்சு யெல்லாம் சொல்லி, முசே புறக்குணுது தீர்ப்புக் காகிதத்தை அவன் கையிலே குடுத்துப் "போங்கோள்" யென்று சொன்னார். நல்லதென்று அவர்களும் நடக்க யிருக்கச்சே, அந்தக் காகிதத்தை வாங்கி மறுபடி யென் கையிலே குடுத்து "அசல் சீட்டு கொண்டு வந்து குடுத்தால் இந்த தீர்ப்புப்படிக்குப் பணம் வாங்கிக்குடும். நான் வாங்கின அறுபத்தி நாலாயிரம் ரூபாயும் அவரவருக்குக் கொடுக்க வேண்டிய கட(னையும்), கும்பினியார் யெனக்கு யிருபத்தொன்பது லக்ஷத்து சிலுவானம் ரூபாய் கொடுக்கவேணும். அது வந்தவுடனே குடுத்து விடுகுறேன்;" யென்று சொன்னதுக்கு, அவர்கள் கையில் குடுத்தாலே அல்லாமல் சம்மதியில்லை யென்று சொன்னார்கள். அதுக்கேத்தபடி "போங்கோ" ளென்று சொல்லி, அப்பால் யிமாம் சாயபு கணக்கு ஒன்று யெடுத்திக் கொடுத்து, "அவன் மனுஷன் வந்தால் அவனுக்கு யிந்த சினேகனானவனுக்குப் படிச்சுச் சொல்" லென்று குடுத்துப்போட்டு,[1] அதிலே (அது சமயம்) முசியே கில்லியார், (M. Guillard) முசே புறுக்கிணுது, முசே துபோசேத்து (M. du Bausset) வகையிரா உசர வந்தார்கள். அவர்களுடனே கூட மேலே யேறிப்போனார். நான் அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

மொதபர் கான் (Mutabar Khan) யென்கிறவன், (இவன்) உசேன் சாயபு குமாரன், வாலிகொண்டாபுரம், ரஞ்சன்குடி கில்லேதாரன், முசே கொதேக்கு ஒரு சிரொப்பாவும் அவர் தம்பிக்கு ஒரு சிரொப்பாவும் முசே தெலார்ஷுக்கு ஒரு சிரொப்பாவும் யெனக்கு ஒரு சிரொப்பாவும் (அனுப்பியது) வந்தது. முசே கொதேக்கும் அவர் தம்பிக்கும் வந்ததை யித்தனாள் பத்து மணிக்கு முசே தெலார்ஷு கொண்டு போய்க்

[1] இப்படி துய்ப்ளே நிறைய பேரிடம் கடன் வாங்கி ஏமாற்றியது தெரிகிறது.

குடுப்பிச்சு அஞ்சு பீரங்கியும் போடுவிச்சான். அவர்களுக்குப் பதில் காகிதமும் யெழுதிவிச்சுக் குடுத்து அனுப்பிவிச்சார்கள்.

### *1754 வருசம், செப்தம்பரு மாசம், தேதி 29; பவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 17; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்கு புது துரை அண்டைக்குப் போய் காத்துக்கொண் டிருந்தோம். அவர் ஒன்பது மணிக்கு கோவிலுக்குப் போய்க்கொண் டிருக்கச்சே கண்டு ஆசாரம் பண்ணினேன். அவர் கோயிலுக்குப் போய் வந்த பிறபாடு அழைப்பிச்சுக் கும்பினீர் வற்தகர்களையும் அழைப்பிச்சு சென்னப்பட்டணத்தி லிருந்து மேஸ்தர் சாந்தரசு கோவற்ணதோர் யிருபது தஸ்தக்கு அனுப்பி விச்சான். வியாபாரத்துடனே சேர்ந்த ஒருத்தரையும் தடை பண்ணக் கவை யில்லை யென்றும், ஆறுகிலும் தடை பண்றவர்கள் பேரிலே நாங்கள் சண்டை பண்ணுவோ மென்றும் யெழுதி தஸ்ரத்துக்கு (தஸ்தக்) வந்திருக்கு தென்று சொல்லி, அதிலே பத்து தஸ்ரத்துகள் வர்ததகர் கையில் குடுத்து, சீக்கிறமத்துக்குச் சரக்குகள் அழைப்பிக்கச் சொல்லிக் குடுத்து போகச் சொன்னார். யிவர்களும் வாங்கிக்கொண்டு ஆறணி, குண்ணத்தூர், சயிதாப்பேட்டை, சேலம், உடையார்பாளையம், சிதம்பரம், சீகாழி வகையிரா துலைகளுக்குக் குடுத்து அனுப்பிவிச்சுச் சரக்குகள் அழைப்பிக்குறோம் யென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொள்ளச்சே, சரக்குகள் யிந்த மாசத்துக்குப் போற கப்பலுகளுக்கு வரயில்லையே யென்று கேட்டார்... (வராகனின் எண்ணிக்கை இங்கு அழிந்துள்ளது) "விராகன் வாங்கி ஒரு மாத மாச்சுது, யிப்போதான் துரைகளுக்கு யெல்லாம் பணம் போய்ச் சேர்ந்தது. யினி மேல் நெய்து அல்லோ சரக்கு பிறப்படவேணு" மென்று சொன்னதுக்கு, "சீக்கிறமத்துக்கு அழைப்பியுங்கோள்" யென்று சொல்லிப் போகச் சொன்னார். வர்த்தகர்களும் அனுப்பிவிச்சுக்கொண்டு வந்தார்கள். யிவர்கள் முன் யிருபது தஸ்ரத்துக்கு அனுப்பினதுக்கு பதில் யிருபது தஸ்ரத்து (Pass) யிவர்களுக்கு இங்கிலீசுக்காரர் அனுப்பிவிச்சார்கள். யிது நடக்குற கெதி அறியவேணும்.

தஸ்ரத்துக்குப் பாரிசிலே மேலேயும், அதின் பக்கத்திலே பாரிசு மோகரும் அதின் கீழே தெலுங்கு, பின் பக்கத்திலே யிங்கிலீசு யெழுதி, அதன் தாழே தாமஸ் சாந்தரசு யென்று கையெழுத்துப் போட்டுயிருக்குது, பாத்துக்கொள்ளலாம். பாரிசு 'மோகரிலே தொமாசு (Thomas) சாந்தரசு கொவற்ணதோர், பந்தர் சென்னப்பட்டண,'மென்று யெழுதியிருக்குது. பாத்தவர்கள் அறிய வேண்டியது. யெழுதி வைத்தேன்.

***1754 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 29; பவ வருசம், பிரட்டாசி மாசம், தேதி 18; சோமவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி, முன் யிங்கிலீசுக்காறர்களுக்கும் யிவர்களுக்கும் வியாபாரத்துடனே சேர்ந்த காரியங்கள் யாதொரு தடையு மில்லாமல்படிக்கி, உபயத்திரவர்களும் சம்மதிச்சுக் கொண்டு, யிவர்கள் யிருபது தஸ்ரத்து அவர்களுக்கு அனுப்ப, அவர்கள் யிவர்களுக்கு யிருபது தஸ்தக்கு அனுப்ப இப்படி நடந்த பிற்பாடு, ....... ஒரு உடன்படிக்கை மூணு மாசத்தைக்குச் சண்டை யில்லாமல் தத்காலம் யெந்த சீமை யெந்த கோட்டை ஆறார் மாரிபத்திலே யிருக்குதோ அவரவர்கள் வசமாயிருக்கிறது, அதுகளை அவரவர்கள் அனுபவிச்சுக் கொள்ளுகிறது, யிந்த மூணு மாசத்திற்குள்ளே சமாதானம் பேசிக் கொள்ளுகிறது, மூணு மாசத்தைக்குள்ளே உபயத்திரவர்களுக்குள்ளே சமாதானம் ஆகாமல் போச்சுதானால் சண்டை ஆரம்பிக்குற தென்று, யிந்தப்படிக்கி யிங்கிறேசுக்காரர்கள், பிரான்சுக்காரர்கள் (ஆகிய இரு) உபயத்திரவர்களும் உடம்படிக்கை பண்ணிக்கொண்டதாய்க் கேழ்விப்பட்ட சேதியை யெழுதிவிச்சதுமே யல்லாமல், யென்னுடனே சொல்லி அவரவர்க(ளுக்கும்), கிராமத்தார்கள் வர்த்தகர்கள் முதலாக (துரை) அறிக்கை பண்ணிவைக்கச் சொன்னார். அந்தப்படி அறிக்கை பண்ணிவிச்சேன். சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்த சேதி, மேஸ்தர் மாசு (Mr. Morse), சண்டைக் கப்பலிலே வந்தவர்களுக்கும் யிவ்வருஷம் சீமையிலிருந்து வந்த சொலுதாதுகள் மயோற், கொமாந்தாம் வகையிராக்களுக்கும் சிலவுகள் போட்டு, அதில் நூத்துக்கு அஞ்சு கொமுசாம் (கமிஷன் எடுத்துக் கொள்வதாக) உடம்படிக்கை பண்ணிக்கொண்டு, தேவனாம்பட்டணத்துக்குக் கப்பல் யேறிப் போனானென்றும், மமுதல்லி கான் மேஸ்தர் சாந்தரசுக்கு நவபோத்தும் பனிரெண்டு குதிரையும் ஒரு ஆனையும் சீரொப்பா முதலான பூஷணங்களுள்பட அனுப்பினானென்றும், அது பிரீவறத்திவான் (Writer's garden) என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது) கையில் யிருக்கு தென்றும் சேதி யெழுதி வந்தது.[1]

[1] ரகர, றகரங்கள் இந்தப் படி முழுவதும் ஏனோ தானோ வென்று எழுதப்பட்டுள்ளன.

## அக்டோபர் 1754

***1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 1; பவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 19; செவ்வாய்வாரம்***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு புது துரை முசே கொதே அண்டைக்குப் போய் தஞ்சாவூர் ராசாவினுடைய காகிதத்தை மோகறு பண்ணிவிச்சு அவர் கையிலே சரிகைப் பை வாங்கி அதிலே வைத்து துரை கையிலே குடுத்தேன். வெங்கிட்டம்மாள்பேட்டையிலே யிருந்து சம்மட்டியான் யென்கிற பாளையக்காரர் கையிலே, யிறைவாசநெல்லூர் கோட்டை மீர் சாயபு யென்கிறவன் சண்டையிலே தோத்து வந்து, அகப்பட்ட ரெண்டு குதிரையை வைத்திருந்த சேதியைக் கேட்டு அனுப்பச் சொல்லி யெழுதின விடத்திலே, அது நேத்து ராத்திரி வந்து சேர்ந்ததை யித்தனாள் காலத்தாலே முசே கொதே வீட்டுத் தெருவிலே நிறுத்தாதபடிக்கு வைத்துப்போட்டு யிருக்குற சேதியும் முசே கோதே யுடனே சொன்னவிடத்தில், முசே கொதேவைக் கேட்டு அந்தக் குதிரை மேஸ்திரி சட்டைக்காரன் வசமாய் ஒப்பிச்சுப்போட்டு வைக்கச் சொல்லிச் சொல்ல, அந்தப்படிக்கு குதிரை மேஸ்திரி சட்டைக்காரன் வசமாய் யொப்பிச்சுப் போட்டு நான் காசாக் கச்சேரியே வரச்சே, முசே கொதே மறுபடி அழைப்பிச்சு, தஞ்சாவூர் ராசாவுக்கு அனுப்பின காகிதமும் மமுதல்லி கானுக்கு யெழுதிய காகிதமும் குடுத்து, தஞ்சாவூருக்கும் திரிச்சிராப்பள்ளிக்கும் அனுப்பிவிக்கச் சொல்லி யென் கையிலே குடுத்தார். அதை வாங்கிக் கொண்டு வந்து திரிச்சிராப்பள்ளிக் கொண்டயம்பேட்டை நாகய்யன் வந்திருந்தவனை அழைப்பிச்சு, அவர் பிறகே நம்முட அறுக்காறுகள் (சேதி எடுத்துச் சொல்வோர்) ரெண்டு பேர்களையும் கூட்டி, தஞ்சாவூர் ராசாவினுடைய காகிதம் அவருக்குக் குடுத்து, திரிச்சிராப்பள்ளிக்கு மமுதல்லி கான் காகிதத்தைக் கொண்டு போய் மமுதல்லி கானுக்கு குடுத்துப் பதிலுத்தாரம் வாங்கி வரச் சொல்லி அனுப்பிவிச்சேன். அவர்கள் சாப்பிடப் போறோம் யென்று அனுப்பிவிச்சுக்கொண்டு போனார்கள்.

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு (அவர்களை) அழைப்பிச்சு தஞ்சாவூர் ராசாவுக்கு ஒரு காகிதமும் மமுதல்லி கானுக்கு ஒரு காகிதமும் குடுத்தேன். தஞ்சாவூர் ராசாவினுடைய காகித மாத்திரம் போகட்டும், மமுதல்லி கான் காகிதத்தைக் கொண்டு வந்து குடுவென்று (துரை) கேட்டார். அப்போ பிராமண அறுக்காறுகள் அவர்களும் பயணம் பிறப்படுகிற வேளையிலே யிருந்தபடியினாலே, அவர்களை அழைப்பிச்சு மமுதல்லி கான் காகிதத்தை மாத்திரம் கொண்டு போய் முசே கொதே

கையில் குடுத்து, அவருத்தாரப் படிக்குத் தஞ்சாவூர் ராசாவினுடைய காகிதங்கள் கொண்டு போகச் சொல்லி அனுப்பிவிச்சுப் போட்டு நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு பிற்பாடு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

*1754 வருசம், ஓயித்தோபர் மாசம், தேதி 7; பவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 25; சோமவாரம்*

இத்தனாள் பத்து மணிக்கு புது துரை அழைப்பிச்சு அனுப்பினார். அப்பால் நந்திராசாவினுடைய காகிதம் வந்ததைக் குடுத்து படிச்சு சொல்லச் சொன்னார். அதிலே, "முசே மேசென் கொம்மாந்தாமானுக்கு புதுச்சேரித் துரை பவுன்சு சமேதராய்ச் வரச் சொல்லி யெழுதியனுப்பி விச்சார், நாங்கள் போறோமென்று சொல்லிப் போட்டுப் போய்ச் சாமானெல்லாம் கொள்ளிடத்துக்கு அக்கரைப் படுத்துகிறார்கள். நீங்கள் யிப்படிச் செய்தால் நாம் முழுகிப் போவோம். யெங்கள் சமஸ்தானத்துக்கு ஆகாமல் போனோம். யிதல்லாமல் வேறே சேதியில்லை. அப்படி யேன் யிந்த மட்டுக்கும் வந்து சம்பவிச்சது? நாம் பிராஞ்சுக்காரர் பெகு திறண பராக்கிறமம் வாய்ந்தவர்கள், சூரர்கள் யென்று நம்பி பெகு திரவியம் கருசு பண்ணி லுக்குசானிலே (செலவு செய்து) வந்தோம். யிப்பவும் நீங்கள் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை வாங்கிக் கொடுத்து, உங்களுக்குக் கொடுக்க வேண்டிய பதினஞ்சு லக்ஷம் ரூபாயும் சிப்பந்தி சம்மதியும் நாங்கள் சேத்துக் குடுக்கிற மட்டுக்கும், உங்களுக்கு அதுக்கேத்த பேரைக் கிரி வைக்கச் சொன்னால் வைக்குறோம். அதுக்கு யில்லாவிட்டால் முன் தானசிங்கு யென்கிறவர் மாரிபத்திலே யெதிராளிகள் நமக்கு அறுபது லக்ஷம் ரூபா குடுக்குறோம் யென்று ராசவட்டம் பேசினார்கள். அந்த ராசவட்டம் ஊர்ச்சிதமாய் நடத்தி, அந்த அறுபது லக்ஷம் ரூபாயும் வாங்கி உங்களுக்குக் கொடுக்க வேண்டிய சம்மதியும் குடுத்துவிட்டு, ..... நல்லவனென்று காண்பிச்சுக் கொள்ளுவேன். ஆனபடியினாலே யின்னம் பதினஞ்சு நாள் மாத்திரம் உங்கள் பவுன்சை யிவ்விடத்திலே யிருக்கத்தக்கதாகவும், உங்கள் பவுன்சு பிறப்பட்டுப் போகுதென்கிற அவசரமில்லாமலிருக்கச் செய்விக்க வேணுமென்றும் யிந்தப்படிக்கி உங்களை மனுவாய் கேட்டுக் கொள்ளுகிறோம்," யென்றும், "முன்னிருந்த கோவற்ணதோர் கும்பினீர் காரியமாய் யிருந்தவர் (போய்), யிப்போ நீர் வந்து கும்பினீருக்கு யெசமானாய் யிருக்கப்பட்டவரான படியினாலே நீர் நம்முடைய அபிலாஷைப்படிக்கு நடப்பீரென்கிறதாய் முழு மனதுடன் நம்பியிருக்குறோம். யிப்போ நீர் அனுப்பிவிச்ச பவுன்சு பாதுசாவுக்குக் கூடயில்லை. அப்படிப்பட்ட பவுன்சுவை அனுப்பியிருக்கிறீர். ஒருதரம் சத்துருக்கள் பேரிலே அங்கீசு (தாக்குதல்) பண்ணினால் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை சுவசமாய்ப் (நம்வசமாய்ப்) போமென்றும்,

யிப்போ நாம் எழுதினபடிக்கு நடப்பியாமல் பவுன்சை அழைப்பிச்சுக் கொண்டால் நாங்கள் உமக்குக் கொடுக்க வேண்டிய பணமும் முழுகிப் போய், நானும் முழுகிப் போவேன்," யென்றும் யிப்படியா யெழுதி யிருந்த மத்தலப்பைப் படிச்சுச் சொன்னதுக்கு, பதிலுத்தாரம் யெழுதச் சொன்னது: "நாங்கள் வந்த நாள் முதல் கொண்டு நாம் அனுப்பிவிச்ச பவுன்சுக்கு உண்டான சம்பளம் குடுத்துவிட்டு, யினி மேலும் மாசா மாசம் உண்டான சம்பளம் குடுத்துக்கொண்டு வந்தால் பவுன்சு உம் மண்டையிலே யிருக்கச் சொல்லுகிறோம். யில்லாவிட்டால் வந்து விடச் சொல்லுவோம். யிப்போ யிங்கிறேசுக்காறர்களுக்கும் யெங்களுக்கும் மூணு மாசம் சண்டை பண்ணக் கவையில்லை. அப்பால் சண்டையாகிலும் சமாதானமாகிலும் (ஆகலாம்). அப்போ நீர் சண்டை பண்ணப் போகலாம். யிதிலே அவர்கள் உமக்கு அறுபது லக்ஷம் ரூபாயிக் குடுக்கிறோமென்று ராசவட்டம் பேசின சம்மதிக்கி சம்மதிச்சுப் பேசி வாங்கிக் கொள்ளச் சொல்லியும், அறுபது லக்ஷம் ரூபாய் வந்தால் யெத்தனை காரியம் செய்யப்போகா" தென்றும், யிது முதலான சேதியாக யெழுதச் சொன்னார். அந்தப்படிக்கி யெழுதி முஸ்தீது பண்ணுகிற காரியத்திலே யிருந்தோம்.

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணரை மணிக்கு மயிசூர் தளவாய் தேவராச உடையாருடைய பெகுமானமும் நந்திராசாவுடைய பெகுமானமும் துரையவர்களுக்கும் அவர் தம்பிக்கும் கொண்டுவந்து யெல்லப்பிள்ளை சாவடி(யில்) வைத்திருந்ததை, துரை அவர்கள் உத்தாரப்படிக்கி அவருடைய சகுத்தார் (செகரட்டரி) பேர் விளங்கன் (பெயர் எனக்குத் தெரியவில்லை) முசே என்கிறவனும், மயிசூரார் வக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யரும் கும்பினீர் பல்லக்கு நிசான் மேளதாள நட்டு முட்டு நடை நாட்டகசாலை யுடனே யெதிரே போய் ரெண்டு பல்லக்கின் பேரிலே வைத்துக்கொண்டு சகல சம்பிறமங்களுடனே நம்முடைய வீட்டுக்குத் தென்புறம் வாசற்படியிலே கொண்டு போய் துரையவர்களுக்குக் குடுத்தவுடனே பதினோரு பீரங்கி போட்டார்கள். முன் பழய துரைக்கு பெகுமானம் வந்தபோது பதினோரு பீரங்கி போட்டதாயென்று கேட்டார். ஆமென்று சொன்னேன். அந்தப்படிக்கு போடச் சொல்லிச் சொன்னார். துரை அவர்களுக்கும் அவர் தம்பிக்கும் பெகுமானம் வந்த நகை விபரமென்னவென்றால்... துரையவர்களுக்கு ரெண்டு சீரொப்பாவும், அவர் தம்பிக்கு ரெண்டு சீரொப்பாவும் ஆக நாலு சீரொப்பாவும், கராச்சரீபாபதிபுட்டாதார், (எல்லாம் தங்கச் சரிகையில் பூப்போட்டது), விலை ஒசந்தது, அப்பால்

| | | | |
|---|---|---|---|
| துறா .............. | 1க்கு(மதிப்பு) | விராகன்.......... | 240 |
| சிறுபேஷு.......... | 1க்கு........ | விராகன்.......... | 75 |
| பதக்கம்.......... | 1க்கு........ | விராகன்.......... | 175 |

| | | | |
|---|---|---|---|
| பதக்கம்.......... | 1க்கு........ | விராகன்.......... | 100 |
| ஆக நகை.......... | 4க்கு........ | விராகன்.......... | 600[1] |
| ஒத்தைக் கொம்பு ஆனை.............. | | | 1 |
| துரைக்குக் குதிரை.......... | | | 2 |
| அவர் தம்பிக்குக் குதிரை.......... | | | 1 |

யிந்தப்படிக்கு அனுப்பிவிச்சார்கள்.

மேலே யெழுதப்பட்ட பெகுமானத்தும் பிறகே நந்திராசா அனுப்பின குதிரைச் சுவார்கள் நூறும் முன்னூறு பேர் ராணுவமும் தம்மாசி பண்டிதன் என்று ஒரு வக்கீலும் வந்தார்கள். அவர்களுக்கெல்லாம் சீதாமத்தது (சமையற் பொருட்கள்) குடுக்கச் சொல்லி துரை உத்தாரம் பண்ணினார்.

*1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 9; பவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 27; புதவாரம்*

இத்தனாள் வீரா நாயக்கன் தம்பி வெங்கிடாசல நாயக்கன் வந்து யெட்டரை மணிக்குச் சொன்னது: குண்டு போட்டு ஒன்பது மணி அடிச்ச பிற்பாடு ஆராகிலும் தீவட்டிகள் பிடிச்சுக் கொண்டு பிறப்படக்கூடாது யென்று புது துரை ஒடுதி குடுத்தார் யென்று சொன்னான். இந்தப்படிக்கி கோபாலசுவாமி(யும்) யெழுதி விச்(சான்).

புது துரையவர்கள் நம்மை ஆறாயிரம் விராகன் கடன் வேணுமென்று கேட்டபடியினாலே வீட்டுக்குச் சொல்லியனுப்பி ஆறாயிரம் விராகனும் அழைப்பிச்சுக் குடுத்தேன். அதுக்குத் துரை நூத்துக்கு யெட்டு விழுக்காடு வட்டிச் சீட்டெழுதிக் குடுத்தார். அந்தச் சீட்டை நான் வாங்கிக்கொண்டு பெட்டியிலே வைத்தேன்.

*1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 10; பவ வருசம், பிறட்டாசி மாசம் தேதி 28; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே நத்திராசா துரைக்கு அனுப்பிவிச்ச காகிதத்தைக் குடுத்துப் படிச்சுச் சொல்லச் சொன்னார். அந்த காகிதத்திலே யெழுதி யிருந்த மத்தலப்பு: முசே மேசென் கொமாந்தாம், உங்களுடைய உத்தாரம் தன்னை பவுன்சுடனே வந்துவிடச் சொல்லி வந்தது யென்று, சகல சாமானையும் கொள்ளிடத்து அக்கரையிலே அனுப்பிவிட்டு சிறிது பவுன்சையும் அனுப்பிவிட்டார். அதின் பேரிலே நாம் முசே மேசெனுடனே, "அப்படி நீங்கள் போறது ஆனால் எங்களுடைய

[1] கூட்டுத் தொகை 590 தான் ஆகிறது.

சமுசாரத்துடனே யிவ்விடத்தி லிருக்கிறது நல்ல தல்லவே; ஒரு வேளை சத்துருக்கள் வந்து விழுந்தால் யெப்படி வருமோ தெரியாதே, ஆன படியினாலே பட்டணத்துக்கு யெழுதி அனுப்பிவிச்சு பொலி (டோலி– dhoolies) பல்லக்குகள், காடிகள் வகையிரா சரன்சாமிகளை அழைப்பிச்சு சமுசாரத்தை அனுப்பி விடுகுற மட்டுக்கும் ஒரு மாதமிருந்து, யிருபது நாள் அல்ல வென்றால் பதினஞ்சு நாளாகிலும் யிருக்கச் சொல்லி மெத்தவும் சொன்னோம். கேழ்க்குற தில்லை, பிறப்பட்டுப் போறோம் யென்று சொன்னதின்பேரிலே, யெங்கள் பெண்டுகள் குஞ்சுகள் வகையிரா சமுசாரத்தை ஒரு வீட்டிலே போட்டு மருந்து போட்டுக் கொளுத்திப் போடுவோம் யென்று நிச்சயம் பண்ணி யிருந்தோம். யிதிலே பவுன்சையும் முசே மேசெனையும் யிருக்கச் சொல்லி உங்கள் உத்தாரம் வந்ததாய்ச் சொன்னான். அப்பால் நமக்கு மகா சந்தோஷம் ஆச்சுது. யேனென்றால், பிரான்சுக்காரரை நாம் றெண்டு மூணு வருஷமாய் நம்பி யிருந்ததுக்குக் கை விட்டுப் போய் விட்டார்கள். அதினாலே சமுசாரத்தை அத்தை (?) பண்ணிப்போட்டோம் யென்கிற அபகீர்த்தி வராமல் படிக்கு பவுன்சை யெப்போதையும் யிருக்கச் சொல்லி உத்தாரம் அனுப்பினீர்களே, அதினாலே உங்களுக்குக் கீர்த்தி வந்து நமக்கும் கீர்த்தி வந்தது யென்றும், இனிமேல் யெங்கள் பிள்ளைகளுக்கு யெல்லாம் உம்முடைய பேர் வைக்குறோம் யென்றும், யிப்பவும் சிலவு சித்தாயங்களுக்கு கொம்மாந்தாம் வசத்திலே சிறிது பணங்காசு குடுத்திருக்குறோம், யின்னம் யெட்டு நாளையிலே லக்ஷம் ரூபாய் குடுக்குறோம் யென்று கொமாந்தாமுக்குக் கைபோட்டுக் குடுத்திருக்கிறோம் யென்று சொல்லியும், யெங்கள் பவுன்சும் மதுரையின் பேரிலே போயிருக்கிறது, அவ்விடத்திலிருந்து ரெண்டு மூணு லக்ஷம் ரூபாய் வரும், பணத்துக் கென்ன அட்டியிருக்கிறது, தடையில்லாமல் குடுத்துக் கொண்டு வருகிறோ மென்று யிப்படியாக யெழுதியிருந்த மத்தலப்பைப் படிச்சுச் சொன்னதுக்கு, நந்திராசாவுக்கு குசாலாச்சுதா யென்று துரை சொல்லி, அதை பிரான்சு படுத்தி வந்தால் அதைப் பாத்துக் கொண்டு பதில் யெழுதுகுறதுக்குச் சொல்லுகுறோ மென்று சொன்னார்.

அப்பால் அனுப்பிவிச்சுக் கொண்டு கோட்டையில் பழய துரையண்டைக்குப் போனவிடத்திலே அவர், "சுங்கு சேஷாசல செட்டிக்கு யென்னமோ சிறிது (நீ) பணங்காசு குடுக்க வேணுமாம், அவனுது கடுக்கன் சோடி (உன்னிடம்) வைத்திருக்கிறானாம், அதை அவனுக்குக் குடுத்துவிட யில்லையாம், அது யெனக்குக் (செட்டிக்குக்) குடுத்தாலே அல்லாமல், யிப்போ யாச்சம னாயக்கள் சம்மதிப் (விவகாரப்) பணத்திலே யென் சம்மதி (எனக்குச் சேரவேண்டிய) ஆயிரத்தி யிறநூத்து முப்பது ரூபா போக, அவர்களுக்கும் அவர்கள் குமாஸ்தாக்களுக்கும் நீர்

சிலவுக்குக் குடுத்த சம்மதிக்கும் ஒரு பங்கும், மத்தது சேஷாசல செட்டி கும்பினீருக்குக் குடுக்கவேண்டிய நிலுவைச் சம்மதியும் ஊர்க் கணக்கன் கையிப்பட யெழுதியிருக்கிற சீட்டிலே கையெழுத்துப் போடமாட்டோ மென்கிறதாகச் சொன்னார்." அதுக்கு நான் சொன்னது, "மெயிதான், சேஷாசல செட்டி கடுக்கன் சோடி யென் கையில் யிருக்கிறது; அவன் ஆயிரம் ரூபாய் யென் கையிலே வாங்கியிருக்கிறான்; அப்பால் சில்லரை சில்லரையாய் வாங்கியிருக்கிறான்; யிதுகளுக்குப் பத்து வரவுக் கணக்கு யிருக்குது. அந்தக் கணக்கு தீத்துக்கொண்டால் நான் குடுக்கவேண்டியிருந்தால் நான் குடுக்கிறேன். அவன் குடுக்க வேண்டியிருந்தால் குடுக்கிறான். அதுவே யல்லாமல், யிந்தச் சீட்டிலே கையெழுத்துப் போடுகிறதில்லை யென்று சொல்லுகிறதுக்கு சம்பந்தமென்ன," யென்று சொன்னதுக்கு, அவர் சேஷாசல செட்டியையும் அப்புவையும் அழைப்பிச்சு மேலே யெழுதப்பட்ட மத்தலப்புப் படிக்கி ஊர்க் கணக்குப் பிள்ளை கைப்பட ரெண்டு சீட்டா யெழுதிவிச்சு, அதிலே பழய துரையும் சேஷாசல செட்டியும் நானும் கையெழுத்துப்போட்டு, ஒரு சீட்டு அவர் பெருக்குதோர் (Procureur, Governor's Attorney) கையிலே குடுக்க வைத்துக்கொண்டு ஒருசீட்டை யென் கையிலே குடுத்தார். அப்பால் நான் அனுப்பிவிச்சுக்கொண்டு காசாக் கச்சேரியே போய் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் பகலைக்கு மேலாக துரை அவர்களுக்கு முராரி ராயன் அனுப்பிவிச்ச காகிதம் மேற்படியார் வக்கீலுகள் கிஷ்ணப்பா– கிருஷ்ணமாச்சாரி கொண்டு போய் துரைக்குக் குடுக்க, துரை யென்னை அழைப்பிச்சுப் படிச்சுச் சொல்லச் சொன்னார். அந்தக் காகிதத்திலே யெழுதி யிருந்த மத்தலப்பு யென்ன யென்றால், "யெங்களுக்கு ஆனால் முசே துப்பிளேயிக்சு பேரிலே பனிரெண்டு லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் வரவேணும். யிப்போ அந்த ஸ்தானத்துக்கு தாங்கள் வந்து அவர் சீமைக்குப் போறபடியினாலே தாங்களே சம்மதி பண்ணிக் குடுக்க வேண்டியதான படியினாலே நாங்கள் வாங்கிக் கொள்கிறோம். ... அதுக்கு சிந்தை யென்ன யிருக்குது? யிப்பவும் யெங்கள் வக்கீலுகள் அவ்விடத்திலே யிருக்கிறார்கள். அவர்கள் வசத்திலே யிருபதி னாயிரம் சக்குமுக்கிக் கல்லுகள் வாங்கிக் குடுத்து அவர்களையும் அனுப்பிவிட"ச் சொல்லியும் யெழுதியிருந்த மத்தலப்பைப் படிச்சுச் சொன்னதுக்கு, அவர் நகைச்சு அதை பிரான்சுப் படுத்தி வரச் சொன்னார். அந்தப்படிக்கு நாங்கள் அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்தோம். துரையும் பழய துரை சீமைக்குப் போறபடியினாலே அவரைப் பிறயாணம் பண்ணுகிற நிமித்தியம் கோட்டையே போனார்.

***1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 11; பவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 29; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலத்தாலே புது துரை அழைச்சனுப்ப நான் போய் ஆசாரம் பண்ணினவிடத்திலே, அவர் நேத்து சாயங்காலம் கோட்டையே பழய துரையை சீமைக்குப் பயணம் அனுப்புகிற காரியத்துக்குப் போனவிடத்திலே சலாபத்து சங்கும் சான வாசுக் கானும் (ஷா நவாஸ் கானும்) புது துரைக்கும் எனக்கும் அனுப்பின காகிதங்களை, ... யென் கையிலே குடுத்து படிச்சுச் சொல்லச் சொன்னார். அந்தக் காகிதத்திலே யெழுதியிருந்த மத்தலப்பு யென்ன யென்றால் : "நீர் சீமையிலே யிருந்து பாதுசா வண்டையிலே வசீரா (யிருந்து), பிறப்பட்டு விஸ்தாரமான கப்பலுகளுடனேயும் பவுன்சுடனேயும் யிவ்விடத்திலே யிருக்கிற சத்துருக்களை யெல்லாம் அதம் பண்ணுகிற நிமித்தியமாய் வந்து யிருக்குறோம் யென்று யெழுதி அனுப்பிவிச்சீரே, மெத்தவும் சந்தோஷமாச்சுது. அதெல்லாம் நமக்கு வந்ததாய் நாம் நிச்சயமாய் யெண்ணியிருக்கிறதும் அல்லாமல், பிரான்சுக்காரர் பத்துள்ளவர்கள் (பற்றுள்ளவர்கள்), சத்தியவாக்கியம் உண்டானவர்க ளானபடியினாலே யிது வரைக்கும் உங்களுக்கும் யெங்களுக்கும் நடந்து வந்த சினேகத்தைப் பற்றிப் பார்க்கிலும் அதிசயிச்சு நடந்து வரத்தக்கதாக நடப்பிச்சுக்கொண்டு வரவேணும்," யென்றும், "முசே புசி (M. Bussy) யிவ்விடத்துக்குக் கொம்மாந்தாமாக யிருக்கிறபடியினாலே, இவர் ... (எதிரிகளின் கோட்டை எவ்வளவு பலத்த கோட்டையா யிருந்தாலும்) சத்துருக்களை அடிச்சு, யெங்கும் செயம் பெற்று வந்தவரானபடியினாலேயும், யிவர் போன வருஷந்தானே சீமைக்குப் போகவேணுமென்று சொல்லிக்கொண்டதுக்கு, நாம் போக வாண்டா மென்று நிறுத்திக் கொண்டோமென்றும், அப்பால் ஸ்ரீக்காக்குளம், ராசமகேந்திரபுரம் அதுகளுக்குப் போய் அவ்விடத்திலே (தமது கொம்மாந்தாம்களை நேமிச்சார்) என்றும், யிது முதலான சேதியாக யெழுதி (யிருந்தது).

அப்பால் யெனக்கு யெழுதின காகிதத்திலே, "நீர் யெழுதி அனுப்பிவிச்ச காகிதத்திலே சகலமும் விசிதமாச்சுது. எங்களுக்கும் பிரான்சுக்காரர்களுக்கும் எப்போதையும் போலே ஸ்னேகம் அபிவிருத்தியாய் நடக்கத்தக்கதாக யெப்படி நடப்பிச்சுக் கொள்ளவேணுமோ அப்படி நடப்பிச்சுக் கொள்ள வேணு" மென்றும், யிது முதலான சேதியாக யெழுதியிருந்த மத்தலப்பாம் படியே, சானவாசுகான் (Shah Nawaz Khan) காகிதங்களிலேயும் அப்படித்தான் எழுதியிருந்தது.

அந்த வயணங்களெல்லாம் துரைக்குச் சொன்னதுக்கு, அவர் அசுவாரசியமாய்க் கேட்டுப்போட்டு சும்மா யிருந்தாரே அல்லாமல், பிரான்சுப்படுத்திக் கொண்டு வரச் சொல்லவில்லை. அவர் சொல்லாம லிருந்தாலும் நாம் யெழுது விப்போம் என்று யோசனை பண்ணி, "யிந்தக் காகிதங்களை பிரான்சுப் பண்ணிக் கொண்டு, வரவா" யென்று கேட்டதுக்கு, "நல்லது, பிரான்சிலே யெழுதிவி யென்று சொல்லாமல், கட்டாயம் யெழுதிக் கொண்டு வரச் சொன்னார். யென் காகிதத்தையும் கூட யெழுதி வரவா யென்று கேட்டதற்கு மவுனமாய்க் கையைக் காட்டி போம் என்றார். யிதிலே யிவருக்கு மனது சுவாரசியமாய்த் தோத்தாத படியினாலே, காயிதம் படிச்சுச் சொன்னவுடனே பிரான்சுப்படுத்தச் சொல்ல யில்லை.

அப்பால் நேத்து வந்த முராரி ராயன் காகிதத்தை பிரான்சு படுத்தின காகிதமும் பாரிசுக் காகிதமும் துரை கையிலே குடுத்துப் போட்டு பதினொன்றரை மணிக்குக் கோட்டையே பழய துரை அண்டைக்கிப் போன விடத்திலே நடந்த சம்மதி யென்ன வென்றால்: அவரை நான் கண்டு ஆசாரம் பண்ணி கோவளத்துச் சம்மதி முசே பிளாமுடைய (Le Blanc) ரெசீதுகளும், முசே பிரணியே (Brenier) வுடைய ரெசீதுகளும் (bonds), கொள்ளை போன சம்மதி (அவர்கள் கொள்ளையடித்துச் சென்ற சரக்குகளுக்கான) துமாரும் (கணக்கும்) கொண்டு போய் காண்பிச்சுதுக்கு அவர் சும்மா மவுனமா யிருந்துப்போட்டு சாப்பிடப் போனார்.

அப்பால் நான் சாப்பிட்டு வருகிறமட்டுக்கும் யிருந்து, மறுபடி போய் சொன்னவிடத்திலே அவர் தம்முட காசா (சொந்த அல்லது தனி) சக்கிறத்தார் (Secretary) முசே பெடுத்தராமை (M. Bertrand) அழைச்சு ரெசீதுகளை யெல்லாம் பாத்து தாக்கல் பண்ணிக் கொள்ளச் சொல்லி உத்தாரம் குடுத்தார். அதின் பேரிலே நானும் முசே பெடுத்தராமும் ராமாசி பண்டிதனும் முசே பெடுத்தராமுடைய கோந்துவாரே (அலுவலக அறை) போய் அந்த ரெசீதுகளும் காண்பிச்சு, துமாரும் காண்பிச்சதுக்கு, அவனதை யெல்லாம் வாங்கிக் கொண்டுபோய், பழய துரைக்குக் காண்பிச்சு வைத்தான். அவர் அந்த ரெசீதுகளை யெல்லாம் பார்த்து ஒத்துக் கொண்டு, "கொள்ளை போன சம்மதியும் நான் ஒத்துக் கொள்ள வேண்டியதுதான்; ஆனால் அதை யெல்லாம் விசாரிக்குறதுக்கு யெனக்கு சாவகாசம் யில்லாமல் நான் சீமைக்குப் பேறபடியினாலே, நானிருந்த ஸ்தானத்திலே யிருந்து யெவர்கள் துரைத்தனம் பண்ணுகிறார்களோ அவர்கள் யிந்த கொள்ளை போன சம்மதியும் விசாரிச்சு ஒத்துக் கொடுக்க வேண்டியதெ"ன்று எழுதிக் கையெழுத்துப் போட்டுக் குடுத்தார். அந்த மட்டுக்கும் ரெண்டரை மணியாச்சுது. அப்பால் நான் வீட்டுக்குப் போனேன். இந்தப்படிக்கு ராமசாமி (ராமாசி?) பண்டிதன் யெழுதி விச்சது.

இந்தப் பட்டணத்திலே நடந்த அதிசெய மென்ன வென்றால், ராத்திரி பதினோரு மணிக்கு மேல் ஆரும் வெளியே பிறப்படலாகா தென்று கட்டுப்பாடு பண்ணி சிப்பாயிகளும் சொலுதாதுகளும் தெருவுகளிலே கேது (ரோந்து) வருகிறபடியினாலே, யிந்த சேதி அறியாமல் வெளியே பிறப்பட்ட பிராமணர் வகையராக்களை அந்த சொலுதாதுகளும் சிப்பாயிகளும் பிடிச்சுக்கொண்டு, அவர்கள் கையிலே யிருந்த பணம் காசு பிடவை சீலையும் பிடிங்கிக் கொண்டு, நாளையத் தினம் முதல் அவர்கள் வெளியே பிறப்பட்டால் சுட்டுப்போடுவோமென்று சொல்லி, ஒரு துப்பாக்கி அதிரு வெடியும் சுட்டு அலைக்கழியும் பண்ணிவிட்டு விட்டதாய்ச் சேதி சொன்னார்கள். மத்தப்படி வேறே சேதி கேழ்க்கப்படயில்லை.

*1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 13; பவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 31; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசே செம்போலாகிய (St. Paul) பழய சின்ன துரை, முசே அலுபேர் (M. Albert) பின்னையும் சிறிது பேர்கள் ஒபிசியாலுமார்களும் யெல்லாரும் முசே துப்பிளேயிக்சு யேறிப் போறதுக்கு தூக்குதே ஒர்லியான்சு (Duc de Orleans) என்கிற கப்பலின் பேரிலே யேறிப் போனார்கள். முசே துப்பிளேயிக்சு தட்டுமுட்டு பெட்டி பேழைகள் உடுபிடவை ரொக்கம் பணம் காசு பதக்கம் துரா வகையிராக்கள், நாசறு சங்கு கசானாவி லேயிருந்து அகப்பட்டது முதலானதுகள்[1], ரொம்பவும் நாளது வரைக்கும் நன்குடையாய் பலவிதமாய் சம்பாதிச்ச ரத்தின நகைகள், ரத்தினங்கள் வகையிரா யெல்லாம் சாடாவா யேத்தி, குரங்குகள் குருவிகள் வகையிரா தினிசுகள், சங்கீத சாமான்கள் நம்முடைய கோயில் விக்கிரகங்கள் வகையரா யேகத்துக்கு, பெண்சாதியுடயதும் அவருதும் யேத்தித் தீர்ந்தது. பேருக் கொரு பெட்டி உடுபிடவை தத்காலம் (அன்றாடம்) போடுறதுக்கு மாத்திரம் வைத்துக்கொண்டு, கணக்கு காகிதப் பெட்டியுந் தவிர மத்ததெல்லாம் யேத்தி தீந்துது. ஆன படியினாலே யெப்போ வேணுமென்றால் அப்போ போகத் தயாராக யிருக்கிறபடியினாலே, அனுமானப்பட்டு ராத்திரிக்கு யெப்போ யேறிப் போறார்களென்று பின்னையும் முசே பொலோவையும் (M. Boyelleau) கேட்டேன். அவரும் அப்படியே சொன்னார். நானும் யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் மத்தியானத்துக்கு மேல் புது துரை பழய துரை அண்டைக்குப் போய் சீமைக்குக் கப்பல் பயணம் பெகு

[1] நிசாம் நாசர் ஜங்கைக் கொன்ற பின் அவரது பெருஞ் செல்வத்தை இவர் அபகரித்துக் கொண்டார்.

சறூரானபடியினாலே நீர் யிந்த ஷ்ஷணம் கப்பலின் பேரிலே யேற வேணுமென்றும், யினி மேல் அரை நாழிகை நிற்கப் போகாதென்று துவரித்தம் பண்ணினபடியினாலே, பழய துரை ராத்திரிக்கு சாப்பிட்டு யேறிப் போறொமென்று சொன்னபடியினாலே ராத்திரி மூணு மணிக்கு (பயணமாகத் தீர்மானிக்கப்பட்டது).

அப்பால் நான் கோட்டையே பழய துரை அண்டைக்குப் போய் அவர் சந்தி நம்முடைய சந்தி சிறிது கணக்கு யிருந்தபடியினாலே அந்த சம்மதி யெழுதின காகிதத்திலே கையெழுத்துப் போடவேணுமென்றும், "நீர் வந்து பதிமூணு வருஷமாய் மிகுதியும் தயவும் வைத்து நடப்பிச்சுக்கொண்டு வந்தீர்கள். யினி மேலும் யென் பேரிலே பஷ்ஷம் மறவாமல் தயவு வைத்து நடப்பிக்க வேணுமென்றும், யென் பேரிலே உபேஷ்ஷை பண்ணலாகாதென்றும்," நான் சொன்னதுக்கு நல்லது ஆகட்டும் என்று சொல்லி ஒலாத்திக் கொண்டிருந்தார்.

***1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 15; பவ வருசம், அற்பசி மாசம், தேதி 2; செவ்வாயிக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே பழய துரை முசே மறுக்கி துப்பிளேயிக்சு (M. Le Marquis Dupleix) நேத்து முதல் சோமவாரம் ராத்திரி மூணு மணிக்கு அவர், அவர் பெண்சாதி, குமாரத்தி, ஷொம்ஷோம் (Chon chon), மதாம் ஒபேர் (Aubert), முசே தொத்தேல் (M. d'Auteuil) குமாரத்தி குமாரர்கள் வகையிரா சமஸ்தமான பேர்கள் அவரவர்கள் தாலூக்குவைச் சேர்ந்தவர்கள், முசே கெறுசாம் (M. Kerjean), அவரது பெண்சாதி, முசே அறுணோ (M. Arnault) வென்கிறவன், முசே துப்பிளேயிக்சைச் சேந்த ரெத்த ஸபருசம் (சம்மந்தமுள்ள உறவினர்கள்), யிவ்வருஷம் வந்தவர் நாலுபேர் ஒப்பாஸ்துருகள், தெம்மே (Demai), இன்னாசி (Innasi) வகையரா சட்டைக்கார வேலைக்காரர்களும் படகிலே யேறிப் போகச்சே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். முசே முலிப்பிரமும் (?) முசே பொலோவும் முசே தெபொசேத்து (M. du Bausset), முசே தெலார்ஷு வகையிராக்கள் கூட சலங்கின் (ஒரு வகைப் படகு) பேரிலே (போய்) துக்குதே ஒர்லியான்சு யென்கிற கப்பலின் பேரிலே யேத்திவிச்சுப்போட்டு, மறுபடி கரையே வந்து புது துரை முசே கொதேயிக்குக் கபுறு சொல்லிப் போட்டு அவரவர் வீட்டுக்குப் போனார்கள்.

நானும் ஆறு மணி வேளைக்குக் கடற்கரைக்கு வந்து கப்பலைப் பார்க்கும் போது ஆறு மணி அடிச்சாப்போலே துரைக்கி யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். துரையிலேயும் யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அப்பால் (மற்ற) கப்பல்காரர்களும்[1] பதிலுக்கு (பீரங்கி) போட்டு கப்பல்

[1] ர, ற ஆகிய எழுத்துக்கள் பொருத்தமில்லாமல் மாற்றி மாற்றிப் பிரயோகம் செய்யப்பட்டுள்ளன. இது படியெடுத்தோரின் வேலை யாயிருக்கக்கூடும்.

பாயெடுத்து ஒடிப் போறதைப் பார்த்து, “‘சரீரம் யிந்த யூரில் யினி விழுகுறதே அல்லாமல் யிவ்விடம் விட்டு பின்னை வேறெங்கேயும் விழுகிறதில்லை' யென்று சமஸ்தமான பேர்களுடனேயும் சொல்லிக் கொண்டிருந்தவரும், உத்தியோகம் தீர்ந்தது மல்லாமல், நேரஸ்தராகக் காவல் ஞாயமாய்ப் (குற்றவாளியாகக் காவலில்) போக வேண்டிவந்து விழுந்துதே! யினி மேல், மனுஷனாய் அயிசுவரியத்தை யென்ன நிலையாய் (நம்பலாம்)? பாதுசா (சார்பில்) தக்கன சுபா ஆறரை ராச்சியத்துக்கும் யெசமானனான நாசறு சங்குவுக்கு டில்லி பாதுசா யெசமானாக யிருந்தும், கெடகெட வென்று நடு நடுங்கிக்கொண்டு யிருந்த நாசறு சங்குவை, அவரண்டையி லிருந்தவர்களுக்குள்ளே உச்சித்திரம் பிறந்து ஈரானிகள், கந்தனூர் யிம்மத்து பாதூர் கான், கடப்பை அப்துல் நபி, சாவனூர் – பங்காவரம் அப்துல் மசீத் கான், அவன் குமாரன் கரீம் கான் வகையராக்களும் (சதி செய்து நாசறு சங்குவைக் கொல்ல முயற்சித்து, பிற்பாடு) முசே துப்பிளேயிக்சு கொன்றார் யென்று பேர் வந்து, டில்லி (சிம்மாசனம்) அதிர்ந்தது; (பின்பு) சலாபத்து சங்குடனே கூட யிவரது பவுன்சு நறுமதை மட்டுக்கும் யிறநூத்துக் காத வழி மட்டுக்கும் போய், சவா பாசி ராயனைக் (Sava Bhaji Rao) கூட செயிச்சு சகல கீர்த்தியும் பெற்ற முசே துப்பிளேயிக்சுக்குக் காவல் வந்து, யிவர் தட்டுமுட்டு கூட ஆப்புப் (ஜப்தி) பண்ணி, கப்பலின் பேரிலே போகுதென்றால், சுவாமியை யெண்ணாமல் பார்த்ததை நடத்துகுறவர்களும் (கண்டபடி நடந்துகொள்பவர்களும் இப்படி தண்டிக்கப்படுவதை) ஒசனை பண்ணினால் ஒருத்தரும் பாபமான காரியங்களை, அனியாயமாய் செனங்களைத் (துன்புறுத்த மாட்டார்கள் என்பது விளங்கும்). காலத்துக்குத் தக்க புத்தி தோத்தி, அந்தப்படிக்கு நடத்துகிறபடியினாலே ஒருத்தரையும் நோகக் கவையில்லை யென்று தோத்துது. யிந்தப்படிக்கு நடக்கிறது லோக சுபாவமான படியினாலே, அனுபவிக்க வேண்டியிருந்தால் நல்ல புத்தி வராது. மகா விபத்து சம்பவிக்கிறதா யிருந்தால் அதுக் கேத்தபடி துற்புத்தியாய் நடக்குறது வேத வாக்கியத்திலே சொல்லி யிருக்கிறதல்லவா? அந்தப்படிக்கி நடக்கிற காரியம் நடந்தது. துரைத்தனம் மாறிப் போறவர்கள் கப்பலின் பேரிலே யேறினாப் போலே சித்திரக் கொடி போடும் வலிய பாய் மரத்திலேயே (பிரதான கம்பத்திலேயே) போடுகிற வாடிக்கைப் படிக்கி யிந்தக் கப்பலுக்குச் சதுரக் கொடி போடாததைத் தொட்டு, யிவர் காவலின் பேரிலே போறதென்றும் குத்தவாளியாய்ப் போறதென்றும் சகலமான சனங்களுக்கும் நன்றாய் தோத்தினாலும் சிறிது பேர்களுக்கு யிந்த ஞாயம் தெரியாதவர்களுக்குத் தெரியமாட்டாது. ஆனால் லோகத்துக்குள்ளே ஸ்ரீப்பும் வச்ச - பிறபவத்தியதாத்து வினஷ்படமென்று (பெண்ணின்

[1] மூலத்தைப் பார்த்துப் படி எடுத்தோர் இப்படிப் புரிந்து கொள்ள முடியாதபடி பல வார்த்தைகளைச் சிதைத்துள்ளனர்.

பேச்சைக் கேட்டு நடப்பவன் கஷ்டம் அனுபவிப்பான் என்று)[1] சப்த சாஸ்திரத்திலே சொல்லியிருக்கிற வாக்கியம் அபத்தமா? முசே துப்பிளேயிக்சுக்கு வந்த விபத்தமெல்லாம் அவர் பெண்சாதியைத் தொட்டே அல்லாமல் வேறே வரயில்லை யென்கிறதும் அவர் மனதுக்குத் தானே, யிரு பேர் காரியமும் கெட்டுப் போன பிற்பாடு தோத்தி வாய்விட்டு வெள்ளைக்காரருடனே சொன்னதாய்ச் சேதி சொன்னார்கள். அவரவர் நடத்தைக்குத் தக்கதாய் நடந்து போச்சுது. யினி யிதை விஸ்தரிச்சு யெழுத வேண்டியதில்லை. துற்மதி வருஷம் தை மாசம் 4ஆம் தேதி ஆதிவாரம் (1742, 14 சனவரி ஞாயிறன்று) சூரிய உதயத்துக்கு பங்காளத்திலிருந்து துரைத்தனத்துக்கு வந்து உளுக்காா்ந்தது முதல் நேத்தைய வரைக்கும் பனிரெண்டு வருஷமும் ஒன்பது மாசமு மாச்சுது. சரியாய் இத்தனை நாளும் நான் சம்பாதிச்சு அவருக்குக் குடுத்ததே அல்லாமல்.......... யித்தனை காரியத்திலேயும் லக்ஷ லக்ஷக்கணக்காய் சம்பாதிச்சுக் குடுத்தாயே யென்று ஒரு விதத்திலேயும் விசாரியாமல் போனது மல்லாமல், துற்மதி வருஷம் முதல் நாளது வரைக்கும் நான் யென் கையிலே வியாபாரத்திலே பங்கென்றும் நன்குடை யென்றும் தினிசுகள் சாட்டிக் குடுத்ததைத் தள்ளிப் போட்டதிலுமாய் லக்ஷ விராகனுக்கு அதனமும் உண்டு. யென் சம்மதி சொந்தமானது யிது நிமித்தியம் கும்பினீருக்குக் கடன் வந்தது. (நான் கும்பினிக்குக் கடனாளியானேன்). யிதுக்குக் கணக்கு அவர் கையிலுமிருக்கும், யென் கையிலு மிருக்கும். அது பார்த்தால் தெரியும். இதல்லாமல் திருவீதி, புவனகிரி, தீர்த்தநகரி, வெங்கிட்டாம்பேட்டை, திண்டிவனம், அச்சரபாக்கம், வகையிரா சந்தா சாயபு கையில் சுக்கில வருஷத்தில் (1749) வாங்கியிருந்த அந்த சீமைகளை, நாசறு சங்கு வந்து சலாப்பட்டு கலாபம் வந்து, நஷ்டப்பட்டு, 8 வருஷம் கழித்து (அவர்) மரணத்தை அடைந்த பிற்பாடு, யிதாயத்து மொகதின் கானும் யிவ்விடம் விட்டுப் போனதும் கெட்டதின் பேரிலே, சண்டையிலே விழுந்து போய், சலாபத்து சங்கு பட்டங்கட்டிக் கொண்டு அயிதராபாத்துக்குப் போன பிற்பாடு, மாசி மாசத்துக் கடைசியிலே பங்குனி மாசத்திலே (ஏப்ரல்) சந்தா சாயபு யென் பேரிலே லிருக்குற துவேஷத்தினாலே சீமை யெனக்குக் குடுத்திருந்ததை வாங்க யெத்தனம் பண்ண போது நான் மூணு வருஷத்துக்குக் குத்தகை வாங்கி(னேன்). அப்பால் தை மாசம் மாசி மாசம் நாசறு சங்கு வந்து சீர்மையைக் கட்டிக் கொண்டு போன படியினாலே யிது முதல் கொண்டு மூணு வருசம் யென் குத்தகை நடக்க வேணுமென்று (நான் மறுத்துப்) பேசினவிடத்திலே, அப்போ துரை முசே துப்பிளேயிக்சு முன்பாக சந்தா சாயபுக்கும் யெனக்கும் ரூபுரூபாய் (நேரடியாய்ப்) பேச்சு நடந்து, அப்பால் முசே தெலார்ஷையும் மதனாந்த பண்டிதரையும் துரையவர்கள் சாட்சிப் போட வைத்த குத்தகைப் பிரகாரம் மூணு வருசம் யிவன் வசத்திலே

இருக்கவேண்டியதென்று பேசினவிடத்திலே, வருஷத்துக்கு லக்ஷம் ரூபாய் விழுக்காடு மூணு வருஷத்துக்கு மூணு லக்ஷம் ரூபாய் குடுக்க, நாளது வருஷத்துக்கு விழுப்புரம் ஈசுவரய்யன் குமாரன் நாராயண சாஸ்திரி லக்ஷம் ரூபாய் குடுக்க, ஆனி மாதம் 30 தேதியிலே சீட்டெழுதிக் குடுக்க சீர்மை அவர் வசத்திலே ஒப்பிக்க (ப்பட்டது. இப்படி) தீத்துக்கொண்டு மூணு லக்ஷம் ரூபாய் நாராயண சாஸ்திரி குடுத்து தீத்துக்கொண்டு சீட்டெழுதிக் குடுக்க, அந்தச் சீட்டை வாங்கிக் கொண்டு சீர்மையை அவர் வசத்திலே ஒப்பிவிச்சுப் போட்டு, அந்தச் சீட்டைக் கொண்டு வந்து துரைக்குக் காண்பித்து நடந்த உடன்படிக்கையையும் சொன்னவிடத்திலே, "நீர் கும்பினீருக்குக் கடன் குடுக்க வேண்டியிருக்குறதே ஆனபடியினாலே சீட்டை யென் கையிலே குடுத்துவிடெ"ன்று அவர் அப்போ பண்ணின கோபம் மிதமில்லை. அந்தப்படிக்கி நான் சீட்டை (அவரது) கையில் குடுத்துவிட்டு, அப்பால் நாராயண சாஸ்திரி செலுத்தினதை நான் யென் மனுஷரைக் கூட அனுப்பி, துரை கணக்கு முத்தப்ப நாயக்கன் கையில் லக்ஷம் ரூபாய் யென் ஆதாய சம்மதியென்று சொல்லிக் கணக்கு யெழுதிவிச்சு, லக்ஷம் ரூபாய் செலுத்தித் தீந்தது. மறு வருஷம் மதாம் துப்பிளேயிக்சு மாரிபத்திலே றங்கோ பண்டிதன் குத்தகை வாங்கிக் கொண்டான். அது சேதியைப் போய் முசே துப்பிளேயிக்சுக்கு யெச்சரிச்ச விடத்திலே, 'உனக்கென்ன? ஆருக்காகிலும் குடுக்கிறார்கள். உம்முட லக்ஷ ரூபாயி வருஷத்துக்கு வருஷம் நான் ஒத்துக்கொடுக்கிறேன்' என்று (சொன்னார்). நாராயண சாஸ்திரியாரையும் கூட அழைத்துக் கொண்டு போய் சீர்மைச் சேதியும் சொல்லிக் கேட்டதுக்கு அவர் கும்பினீருக்கு குடுக்கவேண்டிய கடன் போக மத்ததுதான் தாரோமென்று சொல்லிப், போ போ வென்று சொன்னார். அவர் கையில் துரைத்தனம் யிருந்தபடியினாலே கும்பினீருக்குக் குடுக்க வேண்டிய கடன் பணம் போக மத்தப் பணம் அவரைக் கேட்டு வாங்கிறதுக்குக் கூடாமல் போச்சுது. (நஷ்டம்) யிது மாத்திரமா வென்றால், (நமது) கோந்துராத்து (காண்ட்ராக்ட்) குத்தகைப் பணம் சேந்தது போக அதனம் குடுத்து வரவேண்டியது (ஆனது. இதோட) யிங்றேசுக்காரர் கொள்ளை யுள்பட யெண்ணாயிரம் விராகன் வரவேண்டியதும் கேட்டதுக்குக் கோபம் பண்ணின படியினாலேயும், பத்து வரவுக் கணக்கு சம்மதி அன்பதினாயிரத்துச் சில்லானம் ரூபாய் வரவேண்டியதும் கேட்டு, அதுக்கும் கோபம் பண்ணின படியினாலேயும் மறுபடி கேளாதபடியிருந்து, புது துரைத் தனம் முசே கொதெ வந்த பிற்பாடு அவர் யெனது கணக்குக் கொண்டுவரச் சொன்ன பிற்பாடு கணக்கு யெழுதிக் கொண்டு போய்க் குடுத்தவிடத்திலே, (எனது) சொந்த பத்து வரவு நாற்பத்தாறாயிரத்துச் சில்வானம் ரூபாய்க்கு கும்பினீர் கணக்குலே (இருந்து) ஒத்துக் குடுக்கச் சொல்லி யெழுதிக் குடுத்து,

கோவளத்துச் சம்மதியும் குமபினீரிலே ஒத்துக்கொள்ளச் சொல்லி யெழுதிக் கொடுத்து, யிந்த மூணு லக்ஷம் ரூபாய்க் (கான ரசீதை–bond) மறுபடி யென் கையிலே குடுத்துவிட்டு, போ போ வென்று சொல்லி, அப்பால் அதை மறக்கடிக்க அந்தப் பேச்சும் யிந்தப் பேச்சும் பேசிப் போகச் சொன்னவிடத்திலே, "மூணு லக்ஷம் ரூபாய் சம்மதி நீர் குடாவிட்டால் கும்பினீர் கட(னிலும்) சில்லரையிலே நான் பட்டிருக்கிற கட(னிலும்) முழுகிப் போவேன். சென்னப்பட்டணம் பிடிச்சுது முதல் நாளது வரைக்கும் வெள்ளைக்காரர் நாற்பது அன்பது லக்ஷம் ரூபா மட்டுக்கும் சம்பாதிச்(சதோடு), தக்கன் நவாபு யென்கிற பேர் பெத்து (பட்டமும் பெற்று), நவபோத்தும் (பெற்று, மீன் முதலான சின்னங்கள் பொறித்த) விருதுகள் பிடிப்பிச்சுக் கொண்டு சீமை பூமிகள் ஆளுகுறார்கள். யிதுக்கெல்லாம் மூலம் நானாக யிருந்து, பிறயாசப்பட்டு சகல காரியமும் சேகரம் பண்ணிக் குடுப்பிச்ச எனக்குக் கடன் வந்த பிராப்தமாச்சுதே! யென் அதிருஷ்டத்துக்கு ஒருத்தரையும் வெறுக்கவேண்டியதில்லை. 'யிந்தப் பணம் நீர் குடுத்து விட்டால் கும்பினீர் (கும்பினிக்கு நான் கொடுக்கவேண்டிய) கடனும் தீந்துபோய், நானும் சுகப்பட்டு உம்முடய புண்ணியத்தினால் யெல்லாரும் சுகப்பட்டு சுவாமியை உம்முடைய நன்மைக்கு வேண்டிக் கொண்டு யிருப்போம்' என்று வகுத்திலே (வயிற்றிலே) தலையைக் கொண்டு போய் வைத்து உபசாரம் சொல்லி, 'யெல்லாரும் யிப்போ உம்முட பேரிலே பித்திசாம்கள் (பெட்டிஷன்கள், தமது) காரிய நிமித்தம் பரிதானம் (கையூட்டு) குடுத்ததைக் கூட யெழுதிப் போட்டார்கள். நீரும் அவரவரை அழைப்பிச்சு கடன் சீட்டா யெழுதிக் குடுத்தீர்கள். அப்படி நான் சொந்தத்திலே குடுத்த தொகை உம்முட மனதுக்குத் தெரியும், சுவாமிக்குத் தெரியும், உம்முடய கணக்குத் திரத்துக்குத் (கணக்கு நோட்டுக்குத்) தெரியும், யென் மனதுக்குத் தெரியும், யெனது திரத்துக்குத் தெரியும். அப்படிப்பட்ட தெல்லாம் யெடுக்கிறது ஞாயமல்ல வென்று உம்முட வாக்கினாலே (குடுப்பதாகச்) சொன்னதை மாத்திரம் நானிப்போ கேழ்க்குறேன். நீர் யென் பேரிலே தயவு பண்ணி ரண விமோசனம் பண்ணவேணு' மென்று (நான்) சொல்லிக் கொண்டதுக்கு, "நல்லது பார்ப்போ" மென்றும் போ வென்றும் சொன்னபடியினாலே தயவு பண்ணுவார் யென்றும், நமக்கு அழகல்ல ஒருத்தருடனே சொல்லுகிறது, சத்தேறினாலும் சத்தே குறைஞ்சாலும் காதும் காதும் வைத்தாப் போலே போறதே யுக்குத்த மென்று, நம்பியவர் நடப்பிப்பார் யென்று யெண்ணிக்கொண்டு காத்துக்கொண்டு திரிஞ்சது மல்லாமல், ரெண்டு பித்திசாம் அவர் பேருக்குத் தானே யெழுதியும் குடுத்து, (அவர்) படிச்சுப் பார்த்து யென் கையிலே குடுத்து நல்ல விசேஷமாய் யெழுதிக் குடுக்கிற சாடையாய் ஆலசியம் பண்ணிக்கொண்டு வந்தார். நானும் ஆசீர் பார்த்து முசே கொதேக்குப்

பித்திசாம் குடுப்போமென்று, அவர் பேருக்கு ஒன்று யெழுதிவிச்சு, அவர் (துய்ப்ளேக்ஸ்) கையெழுத்துப் போட்ட காகிதமும் காண்பிக்கச்சே, சாடையாய் யிந்தக் காகிதமும் குடுத்ததுக்கு, யிருக்கட்டும் யெல்லாம் கப்பல் போன பிற்பாடு ஆகுதென்று சொன்னபடியினாலே, அந்தக் காகிதங்களை வாங்கி வந்து பெட்டியிலே வைத்து யிவரைத் துடந்து கொண்டேயிருந்தேன். யிவரும் நேத்து ராத்திரி கூட நாளைக்கு யேழு மணிக்கு யெட்டு மணிக்குப் பயணம் போறதானபடியானாலே, "அப்போ உன் மனது சந்தோஷத்தை அடையப் பண்ணுகுறேன்" யென்றும் சொன்னதினாலே, காத்தாலே வருவோமென்று வீட்டுக்குப் போனவிடத்திலே, யிவர் ராத்திரி மூணு மணிக்குப் படகேறிப் போன சேதி அப்போதானே பீரங்கி போட்டதினாலே அறிஞ்சு கொண்டு, யினி மேல் போய்தான் செய்யவேண்டிய தென்ன, யினி பிறயத்தனம் பண்ண வேண்டிய படிக்கிப் பண்ண வேண்டியதென்றும் யோசனை பண்ணிக்கொண்டு, நாம் நம்முட சத்தியத்துக்கு இந்த மட்டுக்கும் பார்க்கவேண்டிய படிக்கி ஞாயத்துக்கு (வெளியே) சொல்லாமல், அவரும் சத்தியத்தையும் யுக்குத்தத்தையும் விசாரியாமல் முடிய அனியாயம் பண்ணுகுறதாய் நிலைத்துப் போய் விட்டபடியினாலே, யினிமேல் மனுஷ யெத்தனம் பண்ணினால், தெய்வ யெத்தனம் கூடியிருந்தால், திரவியம் வருகுது யென்று நிஷ்கருஷை பண்ணினேன். அப்பால் யென் பாக்கியம் யெப்படியோ, அறியவேண்டியது.[1]

### *1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 17; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 4; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே பத்து மணிக்கு முசே கொதே வீட்டுக்கு, வெங்கிட்டநாரணப்பய்யன் மயிசூர் வக்கீலையும் அழைத்துக் கொண்டு, நேத்து சாயங்காலம் நந்திராசா காகிதம் வந்ததை பிரான்சுப்படுத்தின காகிதமும் அசலும் கொண்டு போய்க் குடுத்தவுடனே, அதைப் பார்த்துக் கொண்டு முசே மேசெனை நந்திராசா தம் மண்டையிலேதானே யிருக்கச்சொல்லி யெழுதயில்லையா வென்று வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யனைக் கேட்டார். "நேத்து (நந்திராசா) உங்களுக்கும் யெழுதி அனுப்பிவிச்சாராம், யெனக்கும் உங்களுக்கும் சொல்லச் சொல்லி யெழுதியனுப்பிவிச்சா" ரென்று சொன்னதுக்கு, யெனக்கு யெழுத வில்லை யென்று சொன்னார். "உம்முட காகித்திலே ஏழுதியிருக்கிறதை மாத்திரம் பிரான்சு எழுத்திலே யெழுதிக் கொண்டு வாரும் யென்று சொன்னார்." அதுக்கு நான், "முந்தாம் நாள் உங்களுக்கு வந்த காகிதத்திலே யெழுதியிருந்தது," யென்று சொன்னதின் பேரிலே, யில்லை யென்று

[1] இந்த மூன்று பக்கமும் ஒரே வாக்கியமாக எழுதப்பட்டுள்ளது.

சொன்னார். முந்தாம் நாள் குடுத்தக் காகிதத்தைப் பாருங்கோளென்று சொன்னதுக்கு பார்த்து, அவர் யெழுதின பாரிசு காகிதம் யிருந்தது. அதின் தலையிலே பிரான்சு பாஷையிலே யின்னாருடைய காகிதம் யென்றும் இந்த வருஷம் யிந்த மாசம் யிந்த தேதி வந்துதென்றும் யெழுதியிருந்ததைக் காண்பிச்சேன். கணக்கன் ஒரு காகிதம் கையெழுத்துப் போடுவிக்க வந்தான். அவனைக் கேட்டதுக்கு அவன் நேத்து யென் கையில் குடுத்தீரே யென்று சொன்னது மல்லாமல், முசே மேசென் கொம்மாந்தாமைத் தம்முடனே யிருக்கச் சொல்லி உத்திரவு யெழுதி அனுப்பிவிக்கச் சொல்லி யெழுதி யிருக்குதென்று சொன்னதின் பேரிலே, மெய்தான் யென்று யென்னைப் பார்த்துச் சொல்லி, அப்பால் வெங்கிட்டநாரணப்பய்யரைப் பார்த்து, "உங்களுடைய ராசாவினுடைய சுகம் யாதோ, யெந்தக் காரியம் உங்கள் ராசாவுக்குக் கூடி வந்து சுகப்படுவாரோ, அந்தக் காரியமே நான் செய்யுறதே அல்லாமல் பின்னை ஒரு காரியம் நான் செய்யத் தக்கதில்லை யென்று நான் சொன்னதாய் யெழுதி யனுப்புறது மல்லாமல், யென் பேரிலே விசுவாசமா யெண்ணி, நான் சொல்லுகிறபடிக்கு நம்பிச் செய்யச் சொல்லி யெழுதி யனுப்பு" மென்று சொன்னார்.

அதுக்கு வெங்கிட்டநாரணப்பய்யர் சொன்னது, "என் காகிதத்திலே யெழுதி உமக்குச் சொல்லச் சொன்ன தென்ன வென்றால், "நாம் உங்களை நம்பியிருக்கிறோம், உங்களை யென் தமையனாரைப் போலே யெண்ணி யிருக்குறோமே யல்லாமல் வேறேயில்லை" என்று சொல்லச் சொன்னாரென்று சொன்னதுக்கு, "அவர் அப்படி கெட்டியாய் நம்பி விசுவாசத்துடனே யிருந்தா லவர் மனோரதப்படிக்கு யெந்தக் காரியம் வேணுமென்று யெழுதி அனுப்புறது மல்லாமல், அவர் கோரின படிக்கு முசே மேசெனை அவருடனே கூடயிருக்கச் சொல்லி யெழுதி அனுப்பினே னென்றும், மமுதல்லி கான் பேரிலேயும் இங்ரேசுக்காரர்கள் பேரிலேயும் அவர்களைச் சேர்ந்த சீர்மையிலேயும் ஆயுதமெடுக்கப் போகாதென்றும் கெட்டியாய் யெழுதியனுப்பு" மென்று சொன்னதுக்கு, "மதுரை ஆலமுகான் (ஆலம் கான்) ஆட்கள் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அதின் பேரிலே சுனாயாசமாய் நாம் ராசகாரியம் பண்ணியிருக்கிறோம் (நாங்கள் கவலை கொண்டிருக்கிறோம்). அது மமுதல்லி கான் யிங்கிரேசுக்காரரைச் சேர்ந்தல்ல; (முன்பு) சந்தா சாயபு (வின் பெயரில் அது ஆலமுகானைச்) சேர்ந்திருந்தது. யிப்போ தனியாய் அதைக் கட்டிக்கொண்டு உபயத்திரவர் (பகைவர் தொந்திரவு இல்லாமல் யிரு வருஷம்) கஷ்டமில்லாம லிருக்கிறானென்றும் வக்கீல் சொன்னார். (ஆனால் பகைவர்கள்) திருச்சிராப்பள்ளியிலிருந்து கொண்டு ஆலமுகான் (வசமுள்ள மதுரையைப் பிடிக்கத் திட்டமிடக்கூடும்) என்ற சேதியும் சொன்னேன்.

அதின் பேரிலே மறவன் தொண்டமான் ஸ்தானாபதிகள் வரவில்லையா வென்று கேட்டார். யினி மேல் வருவார்களென்று சொன்னேன். அதின்பேரிலே வெங்கிட்டநாரணப்பய்யரைப் பார்த்து, "உங்கள் யெசமான் நந்திராசாவுக்கு யெட்டு கிசம் மயே தோப்புதோரும் (தங்க சரிகைத் துணி) ரெண்டு பின்தோலும் (Pistol) பெகுமதி அனுப்பிவிச்சேன். அது சேதி உங்கள் ராசா யெழுதினாரா?" வென்று கேட்டார். எங்கள் தமையனார் யெழுதினத்திலே முசே மேசென் சீமை சரிகைப் பிடவையும் சிரொப்பாவும் ஒரு துப்பாக்கி, பிஸ்தோலு சோடியும் ராசாவுக்கு பெகுமானம் பண்ணினாரென்று யெழுதினாரென்று சொன்னதுக்கு, "நான் குடுத்தனுப்பிவிச்சதென்று," சொன்னார். வெங்கிட்டநாரணப்பய்யரும் யிருந்துகொண்டு, "மதுரையின் பேரிலே மாபூசுகான் சண்டைக்குப் போக வேணுமென்று யிருக்கிறானென்றும், அவன் போய் சண்டை போட்டால், நாங்களும் சண்டை போடலாமே," யென்று கேட்டதுக்குத் தக்ஷண ராச்சியம் யெழுதியிருக்கிற காகிதப் படத்தைப் பார்த்துக்கொண்டு, மதுரை யின்ன விடமென்று பார்த்துக்கொண்டு, பின்னையும் சிறிது உபசாரமாய் பேச்சு நடந்தது. அதன் பிறப்பாடு வெங்கிட்டநாரணப்பய்யனைப் பார்த்து, "யென் சினேகிதம் நந்திராசாவுக்குத் தெரியுறதுக்கு ஆக அவர் யெழுதினபடிக்கு முசே மேசெனை அவருடனே கூட யிருக்கச் சொல்லி எழுதினேன். யெந்தக் காரியமும் முசே மேசென் யோசனையின் பேரிலே நட(ப்பிக்க வேணும்," என்றார்).

### *1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 19; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 6; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே கும்பினி வர்த்தகரும் யிருந்தார்கள். அவர்களையும் சரக்குகளையும் சீக்கிரமாய்க் கொண்டுவரச் சொல்லி, கண்டிப்பாய்ச் சொல்லி, அப்பால் கொவற்ணமாவுக்குப் (குவர்னர் மாளிகை)[1] (போனேன்). முசே கொதே முதலான சீனயோர்களி (பெரிய பிரெஞ்சு மனிதர்கள்) ருந்தார்கள். அவர்களுக்கு ஆசாரம் பண்ணின விடத்திலே முசே கொதேவும் முசே பெடுத்தல்மீயும் யிருந்துகொண்டு, யென்னை அழைக்கச் சொன்னவிடத்திலே நான் போன போது, முசே பெடுத்தல்மீ யிருந்து கொண்டு, முசே கோதேயுடனே சொன்னது, "கைக்குள நாட்டாமைக்காரர்

---

[1] இப்புதிய மிக்க நேர்த்தியான கலையம்சங்கள் கூடிய பளிங்குக் கல் மாளிகை துய்ப்ளேவால் கட்டப்பட்டு, அவர் 1752இல் அதில் குடி புகுந்தார். கிரேக்க–ரோமானியச் சிலைகளும் பொன், வெள்ளித் தகடுகளும் அதில் ஆங்காங்கே பொருத்தப்பட்டிருந்தன. தென்னிந்தியாவிலேயே மிகவும் கலை நேர்த்தியானது என ஆங்கிலேயரே புகழ்ந்த இக்கட்டடம் 1761இல் அவர்களாலேயே இடிக்கப்பட்டது ஒரு சோகம். நம் பிள்ளை இதனை விவரிக்கும் வரிகள் தொகுதி 7இல் உள்ளன.

ரெண்டு பேர் ஓடிப்போய்விட்டுக் காவலில் வைத்து யிருக்குதே, அந்தக்காரியம் ரங்கப் பிள்ளை சொல்லிக்கொள்ள (வந்திருக்கிறான்)."

"போன வருஷம் முசே செம்போல் (St. Paul) மதாம் துப்பிளேயிக்கு(விடம்) சொல்லி அனுப்பினபடிக்கு. குரிலு (இக்கைக்கோளர்—என்று ஆங்கிலப்பதிப்பில் உள்ளது) வகையிராக்க(ளுக்குச் சிலரை) நாட்டாமையாய் வைத்து, பலவந்தமாய் யெல்லார் (அச்சாதிக்காரர்) கையிலேயும் கையெழுத்து வாங்கினது மல்லாமல், (மறுத்த) சிறிது பேர்களையும் காவல் வைத்துக் கையெழுத்துப் போட்ட பிற்பாடு விட்டுவிட்டார்கள். அப்படி பலவந்தமாய் போட்டுக்கொண்டு நாட்டாமைத்தனம் வைத்தார்கள். நீங்கள் ஞாயமாம்படியே விசாரிக்குறதற்குத் தொரைத்தனத்துக்கு வந்திருக்கிறீர்களென்று சொல்லிக்கொண்டால் அது முன் பின் நடந்திருந்ததுகளையும், பலவந்தமாய் நடந்ததையும் விசாரித்து. யெங்கே நேரமிருக்குதோ (தவறியிருக்கிறதோ) அங்கே தெண்டிக்குறதுதான்," என்று சொன்னேன். முன் பின் நடந்த தென்ன யென்று (துரை) கேட்டார். அதுக்கு, "சாதியிலே பெரியதனம் வைக்கவேணுமானால் சாதியார் கூடி யோசனை பண்ணி, ரெண்டு பேரை நேமிச்சு அப்பால் பட்டணத்துக்குப் பெரிய துபாசியுடனே சொல்லி அவர் கையிலும் பாக்கு வெத்திலை வாங்கிக் குடுத்து ஊர்சிதப்படுத்திக்கொண்டு போறது வாடிக்கை. அந்தப்படிக்கி முசே கொதே நாளிலேயும் நடக்கவேண்டிய," தென்றும் சொன்னேன். அந்தப்படி முசே கொதேயாகிய துரையும் சின்ன துரையும் நமக்கு நடப்பிக்கச் சொல்லி உத்தாரம் குடுத்தார்கள்.

அப்பால் முசே பெடுத்தல்மீ நாகானாட்டார் தமிழர் (தமிழ் நாட்டார்கள்) கோயில் (1748இல் இடிக்கப்பட்ட வேதபுரீசுவரன் கோயில்) கட்டிக்கொள்ளுகிறதுக்கு உத்தாரம் கேழ்க்கிறதுமல்லாமல். கட்டிக் குடுக்கச் சொல்லி கூடக் கேழ்க்கிறார்களென்று சொன்னதுக்கு, முசே கொதே யிருந்து கொண்டு, கும்பினீர் பணம் போட்டுக் கட்டிக் குடுக்கிற பேச்சுக் கவையில்லை, கோயில் கட்டிக் கொள்ளுகுறதுக்குக் கும்பினியார் உத்தாரமில்லாமல் சொல்லப் போகாது யென்று சொன்னதுக்கு, "முன்னிருந்தவர்கள் ஞாயம் தப்பிதமாய் நடப்பிச்சபடியினாலே கோயிலையும் யிடிச்சும் பட்டணத்து சனங்களுக்கும் வருத்தத்தை உண்டாக்கிப் போனார்கள்; யிப்போ நீங்கள் ஞாயத்துடனே நடத்துகுறவர்கள் யென்றும், சகல சனங்களிடத்திலேயும் பூத தயவுடனே நடப்பீர்களென்றும் நம்பியிருக்கிறவர்களுக்கு நீங்கள் (இப்படி) உத்திரவு சொன்னீர்களே ஆனால், முன் பட்டணம் என்னமாயிருந்தது, அதுக்கும் கீழுக் கிறங்கிப் போறதுக்கு அய்யமில்லை," யென்று சொன்னதுக்கு, "சிவன் கோயில் ஒன்று விஸ்தாரமாயும் விஷ்ணு கோயிலொன்றும் யிருக்குதே போதாதா," வென்று கேட்டார். "சிவன் கோயிலிருக்குது,

யிது இடங்கை யாருடைய கோயில்; வேதபுரீஸ்வரன் கோயில் (இடிக்கப்பட்ட கோயில்) வலங்கையர் (கோயில்); அவர்கள் அதைக் கட்டிக் குடுக்கக் கேழ்க்கிறார்கள். அப்பால், முன்னே யிட்டொட்டும் (நடந்ததெல்லாம்) சொல்லி, அதினாலே தான் முசே எபெர் (M. Hebert) துரைத்தனத்திலே காளத்தீஸ்வரன் கோயில் கட்டிக்கொண்ட சேதி முதலானதை விஸ்தாரமாய்ச் சொல்லி, "அப்பால், தமிழருக்குத் தெய்வம் வந்து பிரதானமான காரியம்; அதிலே நீங்கள் தடையில்லாமல் (உங்கள்) ராச்சியத்திலேயும்—சென்னப்பட்டணம், நாகப்பட்டணம் வகையறாக்களிலே நடப்பிக்குறபடிக்குப் பணம் மாத்திரம் கும்பினீரிலேயிருந்து தருகுறதுண்டு; அது மாத்திரம் நிறுத்திப்போட்டு மத்தப்படி அவர்கள் நடப்பிக்குறபடி நடப்பிச்சீரானால், (இப்) பட்டணம் ரெண்டு வருஷத்துக்குள்ளே சமஸ்தமான தமிழரிலே உள்ள சாதியார், குசிராத்திகள், யிந்துஸ்தானிகள் வகையறா வந்து (இப்) பட்டணம் புஷ்ட்டி அடையு" மென்று சொன்னதுக்கு, முசே கொதேயும்....[1] "சென்னப்பட்டணம் யிங்கிரீசுக்காரர்கள், நாகப்பட்டணம் ஒலாந்தாக்காரர் வகையறா கும்பினீரீலே (கும்பினிகளிலிருந்து) மாசம் சிலவுக்கு குடுக்கிறதுமில்லாமல், திருநாள் வந்தால் பனிரெண்டு சொலுதாதுகள், ஒபிசியாலுமார்கள் (அதிகாரிகள்), சிப்பாயிகள், சேவுகர்கள் கூட வந்து யிருந்து, ஒருத்தரும் சச்சரவுமில்லாமல் நடப்பிச்சுக் குடுக்கிற வாடிக்கை நானறிவேனென்றும், அந்தப்படிக்கு நடப்பிக்காவிட்டால் யிந்தப் பட்டணம் விறுத்தியை அடையமாட்டாது யென்றும், கும்பினீர் (கும்பினி) வர்த்தகர்கள் முதலான பேர்கள் யென்னேரமும் வந்து சொல்லுகுறார்கள். யிந்தப்படி கெட்டியாய் நடப்பியாவிட்டால் பட்டணம் முன்னைய (நாள்) பார்க்கிலும் அலைக்கழிஞ்சு போகு" மென்று பிடிமானமாய்த்தானே விஸ்தரிச்சுச் சொன்னதுக்கு, முசே கோதே யிருந்து கொண்டு, "நானும் நன்றாயறிவேன். கும்பினியாருக்கு யெழுதி யனுப்பாமல் உத்தாரம் குடுக்கப்போகாது. இதினாலே தான் பட்டணம் விறுத்தியாகவில்லை," யென்றும் சொல்லி, "அவரவர்கள் சாதி ஆசாரமாம் படியே நடக்க உத்தரவு குடாமல் போனால் பட்டணம் விறுத்தி அடைய மாட்டாது," யென்றும், சொல்லிச் சும்மாயிருந்தார்.

யிந்தப் பேச்சுகளுக்கு ஒவ்வொரு பேச்சுக்கும் விகாதமாய்க் (மறுதலித்து) கூடயிருந்த பேர்களிலே முசே தெலார்ஷு சொல்லிக் கொண்டு வந்தான். அதிலே முசே பெடுத்தல்மீ யென்னைப் பார்த்து, தமிழரிலே சிறிது பேர் யிந்தக் கோயில் காரியத்துக்கு விகாதமாய்ப் (கட்டக்கூடாது எனப்) பேசுகிறார்களென்று சொன்னதுக்கு, நான் யிருந்துகொண்டு, "அவனவன் வேதத்துக்கு அவனவன் பேசுவானே அல்லாமல் விகாதம் சொல்லத் தக்கவனில்லை; ஆராகிலும் சொன்னானே

[1] இங்கு சில வார்த்தைகள் விடுபட்டுள்ளன.

ஆனால் அவன் தகப்பன் பீசத்துக்குப் பிறந்திரா னென்று கெட்டியாய் உங்கள் மனதிலே யிருக்கட்டும்," யென்று சொன்னாப் போலே, மூணு பேர்களும் ஒருத்தருக் கொருத்தர் முகம் பார்த்துக் கொண்டார்கள்.

அப்பால், யிந்தக் கோயில் யெப்போ யிடிச்சது யென்றும், கட்டிக் குடுக்குறோ மென்று யெப்போ துரைத்தனம் பண்ணினவர்கள் சொன்ன தென்றும் முசே கோதே முசே பெடுத்தல்மீயைப் பார்த்துக் கேட்டதுக்கு, அவர் இங்கிறேசுக்காரர் வந்து முத்திக்கைப் (முற்றுகை) போட்டு சுத்திக்கொண்டு சண்டை போட்டார்களே அப்போ செனங்களெல்லாம் வெளியே போயிருந்த சமயம் பார்த்து யிடிச்சுப் போட்டதென்று சொன்னார். முசே தெலார்ஷு ஆமென்று சொன்னார். கும்பினியார் சிலவு போட்டுக் கட்டிக் குடுக்குறோமென்று (சொன்னது) யெப்போது யென்று முசே கொதே கேட்டதுக்கு, நான் சொன்னது : "முசே லெனுவார் (M. Lenoir) நாளையிலே சீமையிலே யிருந்து வேதபுரீசுவரன் கோயிலை யிடிச்சுப் போடச் சொல்லி யெழுதி வந்த போதும், அதுக்கு முன்னே யெழுதி வந்த போதும், பதினெட்டு சாதியாரையும் அழைப்பிச்சுக் கோயிலைச் சுத்திப்பிறத்திலே (சுற்றுப்புறம்) கட்டிக் குடுக்குறோம். எங்கள் கோயில் கட்ட யிருக்கிறபடியினாலேயும் வீதிக்கு நடுவே யிருக்கிறபடியினாலேயும் யிடிச்சுப்போடச் சொல்லி ராசாவுனுடைய ஒடுதியும் வந்திருக்கு தென்று யெத்தனை விதமாய்த் சொல்லிப் பார்த்த (போதும்), கோயிலை யிடிச்சால் சனங்கள்—நாங்கள் சீவனை விட்டுவிடுவோ மென்று ரொம்ப வயிராக்கியமாய்ப் பேசின படியினாலே, அப்பால் சீமைக்குக் கூட யெழுதி அனுப்பி, அவரவர்கள் மதத் தனுசாரப் பிரகாரம் நடப்பிக்கச் சொல்லி உத்தரவு அழைப்பிச்(சார்). முசே லெனுவார் கோயில் களெல்லாம் கட்டிக் கொள்ளச் சொல்லி உத்தாரமும் குடுத்து, தேர்த் திருநாள் அவரவர் யெந்த மட்டுக்கும் வேடிக்கையாய் நடப்பிச்சுக் கொள்ளலாமோ அந்த மட்டுக்கும் நடப்பிச்சுக்கொள்ளச் சொல்லி உத்தாரமும் குடுத்து நடப்பிச்சபடியினாலே, அப்போ பட்டணம் யெத்தனை விறுத்தியாயிருந்து வியாபாரம் சாபாரம் யெல்லாம் யெத்தனை விஸ்தாரமாய் நடந்தது! யிந்தப் பட்டணம் கூட யிடம் போதாமல் கெவுனிக்கு அப்புறம் குண்டு சாலை யெல்லாம் நாலாயிரம் ஆறாயிரம் வீடுயிருக்கயில்லையா? லக்ஷாந்திரம் சரக்கு வேணுமானாலும் அகப்படும். (இப்போ) அப்படிப்பட்ட யிடமெல்லாம் (காலியாகி) வெளியிலே ஒரு வீடாகிலும் யில்லை. உள்ளே பட்டணத்திலே யிருக்கிற வீடுகளும் குடிகளில்லாமல் குட்டிச் செவுராய் யிருக்கிறதும் அல்லாமல், பட்டணத்துக்குள்ளே நூறு விராகன் சரக்கு வேணுமானாலும் அகப்படாது, பரபத்தியம் வேணுமானாலும் அகப்படாது, அப்படி நொந்து போச்சுது," யென்று சொல்லி, "பட்டணம் விறுத்தி பொருந்தி நடக்க வேணுமானால் முசே லெனுவார் நாளையிலே நடப்பிச்சபடிக்கு அவரவர்

நிச்சிந்தையாயிருக்க, அவரவர் கோரிக்கைப் பிரகாரம் காரியங்களை சென்னப்பட்டணம் முதல் நாகப்பட்டணம் வரை வெள்ளைக்காரப் பட்டணங்களிலே நடக்குறத்தில் கால் வரிசையாகிலும் அரை வரிசையாகிலும் நடப்பிச்சாலும் அப்போ பட்டணம் விறுத்தியாய் வருகுறதிலே உங்களுக்கு பரீக்ஷையுமாகும். முன்பட்ட ..... றென்கிற கீற்த்தி உமக்கும் வரும்" யென்று சொன்னதுக்கு, "அவரவர்கள் மனோரதப்படிக்கி யிருக்க வேண்டியதுதான் நல்லது. சனோரி மாசம் தையிலே சீமைக்குக் கப்பல் போகச்சே (என்ன செய்யலாமோ அப்படிச் செய்யலாம்)," யென்று சொன்னார். அதுக்கு முசே பெடுத்தல்மீ யிருந்து கொண்டு, சம்பாவுலுக் கோயில் சேஷ்ட்ட பாதிரி (St. Paul's Church) லவோர் அண்டைப் (போய்) சமாதானம் பண்ணிக் கொள்ளென்று சொன்னார். அதுக்கு நான், "அவரவர் காரியம் அவரவருக்கு வேண்டியது தான். ஆனபடியினாலே நீங்கள் அதிகாரஸ்தர், சமனாக நடக்கவேண்டிய," தென்று சொன்னேன்.

[1]அப்பால், அந்தக் கைக்குள (நெசவுக்காரர்) பட்டணத்தை விட்டுவிட்டு ஓடிப்போனவர்களையும் சுகமாய் வந்திருக்கச் சொல்லி, அவர்கள் சாதியிலே ரெண்டு பேர்களை அவர்கள் யெல்லாரும் கூடி சம்மதிச்சு வைத்துக் கொள்ளட்டும்," யென்று சொன்னார். "நீங்கள் தானே காவல் வைத்தவர்களையும் விட்டுப்போடச் சொல்லி (விடுதலை செய்து) போகச் சொல்லுங்கோளெ," ன்று சொன்னதுக்கு, "நல்லது," என்று சொல்லி பெரிய துரையும் யெழுந்தார். முசே தெலார்ஷும் யெழுந்திருந்தார்.

முசே பெடுத்தல்மீ அனுப்பிவிச்சுக் கொண்டு போன பிற்பாடு, முசே தெலார்ஷு துரையுடனே, "உடையார்பாளையம் பாளைக்காரனுக்கு ஒரு காகித மெழுதி அனுப்பச் சொல்லவேணும்; மூணு வருஷமாய் (அவன்) பெஷுக்கசு (பேஷ்கஷ்) குடுக்கவில்லை. குடுத்தனுப்பினாலாச்சு, யில்லாவிட்டால் யென் பவுன்சும்—திரிச்சிராப்பள்ளியிலிருந்து வருகுற பவுன்சும் விருத்தாசலத்தண்டையிலே யிருக்கிற பவுன்சும் உங்கள் காட்டையும் சீர்மையையும் சுவாதீனம் பண்ணிக்கொண்டு வேறொருத்தரை வைப்பார்கள்," யென்று யெழுதி யனுப்ப வேணுமென்று சொன்னதுக்கு, "மூணு வருஷமாய் அவனை யேன் கேட்டு வாங்கவில்லை," யென்று (துரை) கேட்டதுக்கு, "அப்படி யிருந்து போச்சுதெ" ன்று முசே தெலார்ஷு உத்தரவு சொன்(னார்). அப்பால் அசுவாரிசயமாய் யெழுதியனுப்பென்று சொன்னவுடனே, பேஷக்கசு மாத்திரம் அல்ல, —(அது) முன்னிருந்த உடையார் செத்துப் போனபடியினாலே ஒரு மாசமாச்சுது—அகப்பட்ட சரக்கையும் (துணி

[1] நான்கு பக்கங்கள் நீளுகின்ற இவ்வரிகளும் பதிப்பாசிரியரால் பத்திகளாகப் பிரிக்கப் பட்டுள்ளன.

வகையரா) கூட்டி அனுப்பச் சொல்லி யெழுத வேணும்." யென்று சொன்னார். அப்போவே தானே யெழுதிவிச்சு அவருட மோகரும் போட்டுவிச்சு நானும் ஒரு காகிதம் தாக்கீதாய் யெழுதிவிச்சு அனுப்பிவிச்சேன்.

அப்பால், முராரி ராயன் (வக்கீல்கள் வந்து), மேலே யெழுத வேண்டிய வயணமெல்லாம் உம்முடனே சொன்னது அல்லாமல், மேலே யெழுத வேண்டியது யென்ன யிருக்குது என்று கேழ்க்க, "உம்முடனே சொல்லவில்லையா, நீர்யெழுதயில்லையா?" என்று கேட்டார். அவர்கள் "நாங்கள் ரெண்டு பேரிருக்குறோம். அங்கே யிப்போ நான் போய் கணக்குக் காரியம் சொல்லிப்போட்டு வாறேன்," யென்று சொன்னதுக்கு, போகலா மென்று சொன்னார். அதுக்கு முசே தெலார்ஷு யிருந்துகொண்டு, அவர்கள் யெசமான் முராரி ராயன் சீர்மை யெல்லாம் பட்டாணியர் கொள்ளை யிடுகிற படியினாலே யினி மேல் அவர் நிற்கமாட்டார். அவர்கள் சீமைக்குக் கட்டாயம் போவா னென்று சொன்னதின் பேரிலே, "உங்கள் யெசமான் போனாப் போலே, நீங்களும் போய் விடுங்கள்" என்று சொன்னார். "நல்லது, கிராமங்கள் பேரிலே தனக்காப் பண்ணிக் கொண்டு (அடகு காரியமாய்) நாங்கள் பாப்பய்யப் பிள்ளைக்கு ரெசீது குடுத்த சம்மதி (வகையில்) சிறிது பணம் வந்ததும், யின்னம் முப்பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் பற்கானா பேரிலே அமுல்தாரர் பேரில் நிற்குறதுக்கு நீங்க ளுத்தாரம் குடுக்கிறோ மென்று சொன்னீர்களே," யென்று கேட்டதுக்கு, முசே தெலார்ஷு யிருந்து கொண்டு, "முன் துரை போய் விட்டாரே, அவர் சம்மதி அவருடனே போச்சுது. யினி மேல் அந்தப் பிரசங்கங்கள் யெடுக்கக் கவையில்லை," யென்று சொன்னான். முசே கொதேயும் அதற்கு அங்கீகாரமாய்ச் சொன்னார். "ஆனால் நாங்கள் ஏன் யிருக்குறோம்? நாங்கள் முராரி ராயனுக்குப் பணம் சேருதென்று ரெசீது கொடுத்(தோம்). பற்காணாவின் பேரிலே தனக்கா பண்ணி விச்சுக் கொண்ட பணத் (தில் ஒரு பகுதி தனக்குச் சேரவேண்டுமென்று முராரி ராயன் கேட்டார். அதனால்) யிந்த வூர் வர்த்தகர் கையிலே பன்னீராயிரம் பதிமூவாயிரம் ரூபா வாங்கிக் குடுத்தோம். அவர்கள் யெல்லாம் போராடுகிறார்கள்," (திரும்பிக் கொடுக்கச் சொல்லி) யென்று வக்கீல் சொன்னதுக்கு, முசே தெலார்ஷு பழய சம்மதியுடனே சேர்ந்ததென்றும், பேசத் தேவையில்லை யென்றும் சொன்னான்.[1] அந்த மட்டுக்கும்

---

[1] மூல ஏடுகள் தெளிவாக இல்லாததால், இவ்விஷயம் புரியவில்லை என்கின்றனர் ஆங்கில மொழி பெயர்ப்பாளர்கள்.

கிஷ்மாச்சாரியாரையும் போகச் சொல்லி நானும் அனுப்பிவிச்சுக்கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.[1]

1754 வருஷம், ஒயித்தோபர் மாசம், தேதி 17; புதவாரம் நடந்தது.[2] கோபாலநாரணப்பய்யன், பெட்டி யின்னாசி, முத்தாப் பிள்ளை வகையறாக்கள் கசோத்தில் துரையூர் சம்மதிக்கு (போடப்பட்டனர்). பாப்பய்ய பிள்ளை மருமகன் சந்திரசேகரன் அண்ணன் சுந்திரப்பெருமாளைக் கோட்டை மேலண்டை வாசற்படி பாதாளக் கிடங்குலே பணம் வைத்த யிடம் சொல்லச் சொல்லிப் போட்டார்கள்.

*1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 22; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 9; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தால யேழு மணிக்குக் கோட்டைக்குப் போனவிடத்திலே பெரிய துரையாகிய முசே கொதேயும் ஒபிசியால்மார், கப்பித்தான்மார் வகையிரா கூட கோயிலுக்குப் போய் பூசை கேட்டு கோவற்ணமாம் தாழ வந்து (கீழ்த்தளத்துக்கு வந்து) நின்று பேசியிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினவுடனே, யென்னைக் கிட்ட அழைத்து முராரி ராயன் அப்புறம் போனானா, ஆறணி அந்த வட்டத்திலே யிருக்குறானா வென்று கேட்டார். "அவ்விடத்திலே தானே யிருந்து கொண்டு வேலூர் ஆறணிக் கோட்டை வகையறாக்களிடம் லக்ஷம் குடு, அன்பதினாயிரம் குடு யென்று (அவன்) கேழ்க்குறது, அகப்பட்ட மட்டுக்கும் வாங்கிப் போறது, குடாவிட்டால் சீமையைச் சுட்டு (எரித்து) நிப்பாத்தம் பண்ணிப் போடுறது, யிந்தப் படிக்கிப் போளூர் சீர்மை(யையும்) சுட்டு, சிறைபிடித்து (பெண்களைச் சிறை பிடித்துத் தூக்கிப் போதல்), கொள்ளை யிட்டுத் தீத்தான். திருவண்ணாமலை சீர்மையும் அப்படித்தான். யிப்போ வேலூர் சீர்மை ஆரணி சீர்மை வகையிரா கொள்ளையிட்டுச் சிறை கூடப் பிடிக்குறது மல்லாமல், வீடுகள், கிராமங்கள் சுட்டு அங்காம் (அனியாயம்) பண்ணுகிறான். யிந்தப்படிக்கி வந்ததைச் சுத்திக்கொண்டு தங்கள் சீர்மைக்குப் போறவனா யிருக்குறான் யென்குற கபுறு (வந்தது) யென்று சொன்னதுக்கு, சென்னப்பட்டணம்

---

[1] 19ஆம் தேதிக்குப் பின் 17ஆம் தேதிக் குறிப்புகள் வருவதைக் காண்க. பிள்ளை பல நாட்களில் நேரமின்மை காரணமாகத் தனித் தனித் தாள்களிலே தன் குறிப்புகளை எழுதி, பின் அவற்றை நோட்டுப் புத்தகங்களில் பதிவு செய்யுமாறு சொல்வார். இதற்கென அப்புத்தகங்களில் விடப்பட்ட பல பக்கங்கள் காலியாகவே இருந்து விட்டன. அத் தனித் தாள்களில் சில பாரிஸ் நகரத்துத் தலைமை நூலகத்தில் இருந்தன. அவற்றில் சிலவற்றை ஒரு பிரெஞ்சு நண்பர் படியெடுத்து K.A. நீலகண்ட சாஸ்திரிக்கு அனுப்ப, அவர் அதை வெளியிட்டுள்ளார். முகவுரையில் நான் குறிப்பிட்ட எனது நூல்களில் அவை இணைப்பாகத் தரப்பட்டுள்ளன.

[2] அக்டோபர் 19 சனியென்றால், 17 வியாழனாகிது.

சமாச்சார மென்ன வென்று கேட்டார். அங்கேயும் மேஸ்தர் பிக்கட்டு விசாகப்பட்டணத்திலிருந்து சென்னப்பட்டணத்துக்கு கோவற்ணதோராய் அற்பிசி மாசம் 3 ஆம் தேதி வந்தார். யினி மேஸ்தர் சாந்தரேசு கொம்மாந்தாம் செனராலாயும் கொமுசாயிராயு மிருந்து யிந்த மூணு மாசம் .... ஆயுத மெடுத்து சண்டை பண்ணாமலிருக்கவும், யிதிலே சமாதானம் பேசித் தீத்துக் கொள்ளுகிற யெத்தனம், அதிலே யிருக்குறார் என்கிற கபுறு மல்லாமல், சிறிது சிப்பாயிகளை வாங்கிப் போடுறது (திரும்ப அழைத்தல்) மல்லாமல், அங்கங்கே யிருக்கிற ட்டாணாக்களில் (படை முகாம்) யெல்லாம் கொஞ்சம் மனுஷரை வைத்துப்போட்டு, மத்தப் பேரை யெல்லாம் சென்னப்பட்டணம் சேரச் சொல்லி யெழுதி அனுப்பினதாகவும், அங்கங்கே யிருக்கிற தாணையக்கார ரெல்லாரும் வந்து சேருவார்கள் யென்றும் திருச்சிராப்பள்ளியி லிருக்கிற யிங்கிரேசுக்காரர்களும் சொலுதாதுகளும் மேஸ்தர் லாரென்சும் பயணப் பட்டு தேவனாம்பட்டணத்துக்கு வரார்களென்றும், கொஞ்சம் சொலுதாதுகளும் ஒரு கொம்மாந்தாமும் திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் வைத்துப்போட்டு, யிவர்கள் வந்தவர்கள் தேவனாம்பட்டணம் ரெண்டு மூணு நாளையிலே சேருவார்களென்றும், யிப்போ ஒரு கப்பல் சீமைக்குப் போச்சென்றும், யின்னுமொரு கப்பல் சீமைக்குப் பயணமாயிருக்குதென்றும்,[1] .... யிந்தப்படிக்கி தாராளமாய் சென்னப்பட்டணத்திலேயும் தேவனாம்பட்டணத்திலேயும் நடக்குது யென்றும் சொன்னதுக்கு, "மெய்தான், நான் அறிவேன்," என்று (துரை) சொல்லி, அப்பால், "செனங்கள் நான் சமாதானம் பண்ணுகுறதை யிச்சிச்சு சந்தோஷமா யிருக்குறார்களா, முன் சண்டையின் போது நடந்ததை யிச்சிச்சு சந்தோஷப் படுகிறார்களா? யேது குணமா (நல்லது) யென்று சொல்லுகிறார்கள்," யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "ராச்சியமும் ராச்சியத்திலுள்ள செனங்களும், வர்த்தகரும், பிற சாதிகளும் பயிரிடுகிறவர்களும் சமாதானத்தை யிச்சிச்சு, யெப்போ யெந்தப் புண்ணியவான் வந்து சமாதானம் பண்ணிப் போடுவானோ, யிந்த ராச்சியத்திலே செனங்களை யெல்லாம் சுகப்படுத்துவானோ, ஆருக்கு யிந்தக் கீற்த்தி அடையுமோ வென்றும், நிம்மதியாய், நிற்சிந்தையாய் சுகமே யெப்போ யிருப்போ மென்று சுவாமியைப் பார்த்து ... பிரார்த்திக்குறார்கள். சிப்பாயிகள், சமேதாரர்கள், சொலுதாதுகள், ஒபிசியாலுமார்கள், குதிரைக்காரர்கள், கொள்ளையிட்டுக் கொண்டு போற கொஞ்சம் சனங்கள் மாத்திரம் சண்டையானால் தங்களுக்குப் பிழைப்பு உண்டென்று சந்தோஷப்படுகிறவர்கள்," யென்று சொன்னதுக்கு, மெய்யென்று சொன்னார்.

---

[1] இவ்விடத்திலுள்ள இரு வரிகள் விளங்கவில்லை. ஆதலால் ஆங்கிலப் பதிப்பிலும் அவை விடப்பட்டுள்ளன.

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு துரை அழைக்கப் போனவிடத்திலே மதனாந்த பண்டிதனும் வந்தான். அப்பால் மேல் வீட்டின் பேரிலே போய், தென்னண்டை பாரிசம் கிழக்குப் பார்த்த காம்பிறாவிலே (அறை) கபினேத்தாய் (அறை) வைத்துக்கொண்டு யெழுதுகுறது யிருக்குது; (அங்கே) அவர் தம்பி முசே குலுவெத்து, முசே லாசு (M. Laws) முதலான பேர்கள் யிருந்தவர்களுடனே (துரை) பேசியிருந்தவர், யெங்களைக் கண்டவுடனே கபினேத்தே போய் யெங்களை அழைச்சு (மராட்டிய பேஷ்வா) பாலாசி ராயன் (பாலாஜி ராவ்) காகிதம் முசே துப்பிளேயிக்சு பேருக்கு வந்ததை, யெங்கள் கையில் குடுத்துப் படிச்சுச் சொல்லச் சொன்னார்.

அதிலே யெழுதி யிருந்த வயணம், "முன் ரெண்டு, மூணு, காகிதமெழுதினோம். ஸ்தானாபதிகளையும் அனுப்பிவிச்சோம். ரெண்டு வருஷமாய் ஒரு காசளவிலே நம்முட சவுத்தாய்க்கு (சவுத் வரி) நீங்கள் குடுத்ததில்லை. யிப்பவும் நம்முட நரசிங்க ராயர் யென்கிறவரை அனுப்பிவிச்சோம். சவுத்தாய் அமுலுக்கு (வசூலுக்கு) அவர் மனுஷரை வைத்து அமுல்சாரி பண்ணி நடப்பிக்கவும். இதுவுமல்லாமல், (போன) ரெண்டு வருஷத்து சவுத்தாயுண்டானது குடுத்தனுப்பவும். இல்லாவிட்டால் உங்களுக்கும் யெனக்கும் யிருக்குற சினேகிதத்துக்கும் விருத்தம் வரும். அப்படி வராமல் படிக்கி நடப்பிச்சுக்கொள்ளவும். போன வருஷம் நம்முடைய பவுன்சு அவ்விடத்துக்கு அனுப்ப வேணுமென்று நினைத்தேன். ஆனால் ராச்சியம் ரொம்ப கெட்டுப் போயிருக்கிறது மல்லாமல் நம்முட பவுன்சும் போனால் ரொம்ப நொந்து போகப்போகுதென்று அனுப்பாமலிருந்தேன். யினி அனுப்ப வேண்டிவரும். அப்படி வராமல்படிக்கு நடப்பிக்கவும்," யென்று சொல்லி யெழுதி, அப்பால் ஒரு துணுக்கிலே (துண்டுக் காகிதம்), பேர்விளங்கன் (பேர் தெரியாத) "ஒரு தீவு சமுத்திரத்திலே கோட்டை கெடி ஸ்தலத்திலிருக்குது. அது அபசிகள் (இவர்கள் மராட்டியக் கடற் கொள்ளைக்காரர்) வசமிருக்கிறது. முன்பு யெங்கள் பெரியவர்கள் நாளையிலே (அதைப்) பிடிச்சு வாங்க வேணுமென்று, பத்து (ஏற்பாடு) பண்ணியிருந்தார்கள். அப்பாலந்தக் கோட்டையே வருகுறதுக்குக் (பிடிப்பதற்குக்) கூடாமல் போச்சுது. நான் (அதை) நிறைவேத்த வேணும் யென்று நிஷ்கருஷை பண்ணி பவுன்சும், சண்டைக்கு (வேண்டிய) சாமானெல்லாம் அனுப்பிவிச்சேன். நீங்களும் கடலின் பேரிலே சிறிது பவுன்சும் மருந்து குண்டு வகையிரா பீரங்கிகள் முதலானதுக ளெல்லாம் யேத்தி அனுப்பிவிச்சால், உங்களுக்கும் நமக்கும் யிருக்குற சினேகிதம் (மேலும்) விருத்தியாய் நடக்குறதுக்கு யேதுவாயிருக்கும்," யென்று யெழுதினது மல்லாமல், (மேலும்) காகிதத்திலே யெழுதியிருந்த தென்னவென்றால் தம்முடய தம்பி ரகுனாத

ராவு யென்குறவனும் தன் குமாஸ்தா மல்காரி ஒல்கார் (Mulhari Holkar) யென்குறவனும் டில்லியிலே அகம்மது சா பாதுசாவைக் காவலிலே வைத்து, ஆலம்கீர் பாதுசாவைப் பட்டத்திலே வைத்த சம்மதியெல்லாம் (சங்கதி) நீங்கள் கேழ்விப்பட்டுப் யிருப்பீர்கள், யெழுதி வந்திருக்கு மென்று யெழுதியிருந்ததைப் படிச்சுப் பார்த்துச் சொன்னதுக்கு, மதாம் துப்பிளேயிக்சு பேருக்கு யெழுதின காகிதத்திலே யென்ன யெழுதி யிருக்கு தென்று கேட்டார். "துரை முசே துப்பிளேயிக்சு பேருக்குக் காகிதம் யெழுதி அனுப்பிவிச்சோம். அவருக்குத் தெரியப் படச் சொல்லி ரெண்டு வருஷத்துக்கு (சவுத்தாய்) அனுப்பச் சொல்லியும், யிது முதல் சவுத்தாய் நரசிங்க ராவுவை வைத்து அவன் மாரிபத்திலே நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லியும் யெழுதியிருக்கு தென்று சொன்னதுக்கு, தெரிஞ்சுது யென்று (சொன்னார்).

அப்பால், முசே புசி மாரிபத்திலே யெழுதி அனுப்பின சலாபத்து சங்கு காகிதத்தைக் குடுத்துப் படிச்சுச் சொல்லச் சொன்னார். அந்தக் காகிதத்திலே யெழுதி யிருந்தது, "முசே புசி மெத்த சமர்த்தன், கெட்டிக்காரன், புத்திசாலி," யென்று அவன் தாரீபைத் (பெருமையை) தானே யெழுதி, "அவ(னுக்கு) ராசமகேந்திரபுரம், ஸ்ரீக்காகுளம் வகையரா தாலூக்குகள் .... குடுத்து, அந்தச் சீர்மையை பந்துபஸ்து பண்ணிப்போட்டு வரச் சொல்லி அனுப்பிவிச்சேன். அந்தப் பணங்காசு வர அட்டிபட்டாலும் (நீர் முசே புசிக்குப்) பணம் குடுத்து, சிப்பந்திக்கா(ரர்களைக் கொண்டு வரிப்பணம் வசூலித்து) முசே புசியை நம் மண்டைக்குப் போகச் சொல்லி உத்தாரம் குடுத்து அனுப்பு," மென்று யெழுதினது மல்லாமல், (மேலும்) "நாம் பாளையக்காரர் முதலான பேர்களின் பேரிலே பேஷ்கஷுப் பணம் வாங்க வேண்டி யிருக்குறது. ஆனபடியினாலே சீக்கிறமத்துக்கு முசே புசியை அனுப்பிவிச்சால் நீர் நம்முட பேரிலே பூர்ண தயவுண்டாய் நடந்து கொள்ளுவீர் யென்குறதுக்கு அடையாளமா யிருக்கும்," யென்றும் யெழுதியிருந்தது. அதைப் படிச்சுச் சொன்னோம்.

அதைப் போலே பின்னை ஒன்று யெழுதின துப்பிளிகேத்தா (Duplicate) குடுத்தார். அதைப் படிச்சுப் பார்த்து துய்பிளிக்கேத்தா முன் காகிதத்திலே யெழுதி யிருந்தபடிக்குத் தான் யெழுதி யிருக்குதென்று சொன்னதுக்கு, முசே புசி பேருக்கு சலாபத்து சங்கு அனுப்பின காகிதத்தையும் (சேர்த்து) மூணு காகிதத்துக்கும் சவாது யெழுதி வந்ததைக் குடுத்து படிச்சுச் சொல்லச் சொன்னார். மூணு காகிதத்திலேயும் சீக்கிறமத்துக்கு (புசியை) தம்மண்டைக்கு வரச் சொல்லி யெழுதி யிருந்ததைப் படிச்சுக் காண்பிச்சோம். அதுக்கு முசே கொதே, முசே புசியை போகச் சொல்லி யெழுதி அனுப்பினேன்னு சொன்னார். அப்படித் தான் செய்யவேண்டிய தென்று உத்தாரம் சொன்னேன்.

அப்பால் முசே புசி பேருக்கு பாசி ராயன் யெழுதின ரெண்டு காகிதத்துக்கு நகலும் குடுத்தார். (அவற்றில் கண்டது:) ரெண்டு வருஷத்து சவுத்தாய் புதுச்சேரியார் குடுக்கயில்லை யென்றும், புதுச்சேரி துரைக்கு யெழுதி அனுப்பி, ஆற்காடு சவுத்தாய் குடுத்துவிடுகுறது மல்லாமல் சவுத்தாய் (வசூலிக்க) யெங்கள் குமாஸ்தா நரசிங்க ராயனை அனுப்பிவிச்சோம், அவன் மாரிபத்திலே நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லியும், அபுசிகள் சமுத்திர நடுத் தீவுலே யிருக்கிறவர்கள் பேரிலே சண்டைக்குப் போறதுக்கு நாங்கள் பவுன்சு அனுப்பினோம், புதுச்சேரி துரைக்கு (ம் இது குறித்து) யெழுதி அனுப்பச் சொல்லியும், யிது முதலான சேதி யெழுதி யிருக்கிறதை யெல்லாம் சொன்னதுக்கு, பிரான்சுப் படுத்திக்கொண்டு வரச் சொல்லி யென் கையில் குடுத்தார். மதனாந்த பண்டிதர் கையிலே சவா பாசி ராயன் முன் முசே துப்பிளேயிக்சு பேருக்கு அனுப்பினது, மதாம் துப்பிளேயிக்சு பேருக்கு அனுப்பினது, சலாபத்து சங்கு முசே கொதே பேருக்கு அனுப்பினதும், சலாபத்து சங்கு முசே புசி பேருக்கு அனுப்பினதும், பாசி ராயன் முசே புசி பேருக்கு அனுப்பின காகிதத்தின் நகலுகளும் குடுத்து, முசே தெலார்ஷு கையில் பிரான்சு பாஷையிலே யெழுதிக் கொண்டுவரச் சொல்லிக் குடுத்தேன்.

அப்பால் முசே கொதே நந்திராசா காகிதத்தைக் குடுத்துப் படிச்சுச் சொல்லச் சொன்னார். (மதனாந்த பண்டிதர்) படிக்குறத்துக்குள்ளே, லக்கோடாவைப் (கடித உறை—envelope) பார்த்து, சீமைக் காகிதம் (ஐரோப்பியக் காகிதம்) அவர்களுக்கு (நந்திராசாவுக்கு) எப்படி வந்தது (கிடைத்தது), யிவ்விடத்திலே சிஷ்டிச்சாப் போலே (புதுச்சேரியில் எழுதப்பட்டது போலே) யிருக்கு தென்று மதனாந்த பண்டிதரைக் கேட்டார். அங்கேயிருந்து யெழுதி வருகுற யெழுத்தைப் போலேயிருக்குது, அங்கே யென்ன சீமைக் காகிதம் கிடையாதா வென்று சொல்லி வழவழயென்றாப் போலே (பண்டிதர்) சொன்னார். அதுக்கு துரையிருந்து கொண்டு, மதாம் துப்பிளேயிக்சு, "நான் யிப்படி அனேகக் காரியங்க ளெல்லாம் சிஷ்டிச்சு நடத்தினேன் (எழுதியிருக்கிறேன்), யிங்கே யிருக்கிறவர்கள் அப்படி நடந்துவார்கள், நீர் மோசம் போகப் போறீர்," யென்று (என்னிடம்) சொல்லிப் போனாள். நீர் தான் அந்த வித்தை செய்யுறவனாச்சுதே, யிந்த நந்திராசா காகிதம் யிவ்விடத்திலே சிஷ்டிச்சதுதான் அல்லவோ?" வென்று மதனாந்த பண்டிதனைக் (மீண்டும்) கேட்டதுக்கு, "மதாம் துப்பிளேயிக்சு பெகுசாய் நடத்தினதுண்டு. அவள் சொன்னபடிக்கி நான் செய்தது உண்டு," யென்று சொன்ன பிற்பாடு, நந்திராசா காகிதத்திலே யெழுதியிருந்த வயண மென்ன வென்று கேட்டார்.

அப்பால் அதில் யெழுதி யிருந்தது, "முன்னாம் யெழுதின காகிதத்திலே, பதினைஞ்சு நாள் உங்கள் பவுன்சு யிரு(க்க வேணும்),

இங்கிறேசுக்காரர்களும் மமுதல்லி கானும் முன் அறுபது லக்ஷம் ரூபாய் குடுக்கிறோம் யென்று பேசின (பேச்சுக்கு நான் சம்மதிக்கவில்லை). ஆனபடியினாலே பதினைஞ்சு நாளைக்கு உங்கள் பவுன்சு யிருந்தால் பணத்துக்கு மார்க்கம் பண்ணிக் கொண்டு, உங்களுக்குக் குடுக்க வேண்டியதும் குடுத்துவிட்டு, யெங்கள் சீர்மைக்கு நான் போகலாமென்று யெழுதினேன். (நீங்கள்) ஆயுதம் யெடுத்துச் சண்டை பண்ணக் கவையில்லை, மூணு மாசம் என்று நீர் என்னை (க் கேழ்க்காமல்) உடம்படிக்கை பண்ணிக்கொண்டீர்கள். அவர்கள் (திருச்சிக்) கோட்டையின் பேரிலே சண்டை போட்டு, ரஸ்த்து வரவொட்டாமல் செய்து, வெளியே போகக் கூட யில்லையே யென்று நிலை வந்த பின் அல்லவோ முன்பு அறுபது லக்ஷம் ரூபாய் குடுக்குறோம் யென்று அவர்கள் சமாதானம் பேசினது.[1]

"யிப்போ அந்த பயம் போனபடியினாலே, யிந்த மூணு மாசத்துக் குள்ளே ரஸ்தும் சேர்த்துக் கொள்ளலாம், பின்னையும் பெலக்கவும் பண்ணிக்கொள்ளலாமென்று யோசனை பண்ணித் தீத்துக்கொண்டு நிற்பயமாயிருக்கிறவன் ஒடம்படிக்கைக்கு வருவானா? ஆனபடியினாலே அவர்கள் பணம் குடுக்கத்தக்கதும் யில்லை, யினி அவர்கள் பெலத்துப் போவார்கள், அப்பால் தை மாசம் பிறந்தவுடனே கெடுவு ஆயிப்போம், வேறே யோசனை பண்ணுவார்கள், யிதுகளுக்கு உத்தார மெழுதி அனுப்ப வேணும். மத்த சமாச்சார மெல்லாம் வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யருக்கும் ஆனந்தரங்கராயருக்கும் யெழுதி அனுப்பிவிச்சேன். அவர்களைக் கேட்டால் அவர்கள் சேதி தெரியவருமென்று," யெழுதி யிருந்த மத்தலப்பைப் படிச்சுச் சொன்னதுக்கு, பிரான்சிலே யெழுதி வரச் சொல்லிப் போட்டு வண்டியின் பேரிலே யேறிக்கொண்டு ஒழுகரைக்குப் போனார். நாங்களும் யென் காசாக் கச்சேரியே வந்தோம்.

### *1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 25; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 12; சுக்குறவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்குப் பழஞ் செஞ்சியாருடய காறுபாரு ஒருத்தனும் பழஞ் செஞ்சி ராசாவினுடைய ஒறவு ஒருத்தனும் ஆக ரெண்டு பேர்களும் வந்து சீரொப்பாவும் கொண்டு வந்து துரையைப் பேட்டி பண்ணினார்கள். "உங்கள் சாகீருடனே சேர்ந்த பேஷ்கஷுவை உடனே பேசித் தீர்த்துக் கொள்ளுங்கோ," ளென்று சொன்னார்கள். அந்தப்படிக்குத் தீத்துக் கொள்ளுவோமென்று சொல்லி, பாக்கு வெத்திலை பன்னீர் குடுத்துப் போகச் சொன்னார்.

[1] இங்கு படி எடுத்தவர்கள் விளங்காதவாறு குழப்பியுள்ளனர். எனவே இவ்வரிகள் பதிப்பாசிரியரால் மிகவும் திருத்தப்பட்டுள்ளன.

அப்பால் அவர்கள் போன பிற்பாடு முசே தெலார்ஷு கடப்பை அப்துல் நபி கான் பேருக்கு அவர்கள் வக்கீலை அனுப்பச் சொல்லி ஒரு காகித மெழுதினதை மோகறு பண்ணி, அவர்கள் மனுஷர் பேர் விளங்கன் துலுக்கன் பிறகே நம்முட அறுக்காறுகள் ரெண்டு பேரைக் கூட்டி அனுப்பச் சொன்னார். அப்போ முசே தெலார்ஷு சொன்னது : "முசே துப்பிளேக்சு அப்துல் நபி கான் வக்கீல் முதாமியா நிமித்தியம் கடப்பையிலிருந்து பேச வந்த ஸ்தானாபதியைக் கசோத்திலே (சிறை) போட, அதின் பேரிலே முராரி ராயன் வக்கீல், மயிசூர் வக்கீல் வகையராக்க ளெல்லாரும் கூடி, "அவனை விடுகுறது (விடுங்கள்; இல்லையேல்) நாங்கள் யெல்லாரும் பிறப்பட்டுப் போறோ," மென்று கூக்குரல் போட்டதும் அல்லாமல், பெகு கெடுபடி பண்ணினதின் பேரிலே குண்டுக்கு வெளியே கொண்டு போய் (அவனை) விட்டு விட்டார்கள். அது முதல் யிவ்விடத்திலிருந்து ஆரண்டைக்காகிலும் ஸ்தானிதி பத்தியத்துக்குப் போகச் சொன்னால் ஒருத்தரும் மாட்டேனென்று (சொல்லி) போறதுமில்லாமல் தீந்து போச்சுது. முசே துப்பிளேயிக்சு அப்படி ஒவ்வொரு காரியத்திலும் ராச்சியத்துக் கெல்லாம் அவனம்பிக்கை பிறந்து போகும்படிக்கு அனேக காரியம் நடப்பிச்சுத் தீத்துப் போட்டா," ரென்று சொன்னார். அப்பால் தக்கா சாயபு பேருக்கு ஒரு காகிதத்துக்கு மோகறும் (பண்ணினோம்). திண்டிவனம் சீர்மை பவ வருஷம் (1754–55) குத்தகை அன்பதினாயிரம் ரூபாயும், அடுத்த வருஷம் (1755–56) குத்தகை அறுபதினாயிரமும், சாகீர், சிப்பந்தி (சிலவு தவிர) வினாயகப் பிள்ளை குத்தகைக்காரனும், பின்னை சுத்துக் கோட்டைக் கணக்கு (சுற்றியுள்ள கோட்டைகளுக்கான கணக்கன்) நயினியப் பிள்ளை என்கிறவனும் யிந்தப்படிக்கு யிசாரா வாங்கிக் கொண்டதாயும், குத்தகையப்பட்டத்திலே துரை மோகறாச்சுது.

தக்கா சாயபு காகிதத்திலே யெழுதிய வயணம்: "நீங்கள் அனுப்பின சீரொப்பாவும் குதிரையும் வந்து சேர்ந்ததுக்கு உங்கள் வக்கீல் சுப்ப ராயர் வசமாக யெழுதி அனுப்புறோம். திருவொத்தியூர் சீமை அய்யண்ண சாஸ்திரியை (நீக்கிவிட்டு) அகஸ்தியப்ப நயினார் மருமகன் உடையா நயினாரை அமானத்து அமுல் பண்ணி (அமுல்தாராக நியமிச்சு) அனுப்பறோம். அவர் வந்து சொல்லிக்கொள்ளுகிற காரியத்தை அனுகூலம் பண்ணிக் குடுக்க (வேணும்" யென்று) சொல்லி யெழுதி அனுப்பினார்கள்.

யிதல்லாமல் பின்னை ஒரு காகிதத்திலே பாப்பான் (மதனாந்த பண்டிதர்) மோகறு போட்டுக்கொண்டான். அந்த சம்மதி தெரியவில்லை. அப்பால் துரை முசே தெலார்ஷுவையும் என்னையும் போகச் சொன்னார். அந்த மட்டுக்கும் நாங்கள் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தோம்.

"மயிசூர் வெங்கிட்டநாரணப்பய்யர் நித்தியம் (விஷயம்) சமய மில்லாமல் போனாலெப்படி?" யென்று முசே தெலார்ஷு கேட்டார். அவர் (குவர்னர்) போகச் சொன்ன பிற்பாடு, மறுபடி அழைத்தாலே அல்லாமல் போகப்போகாதென்று சொன்னதுக்கு, அவர் வேசடையாய் அனுப்புவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போனார். நானும் யென் காசாக் கச்சேரியே வந்து கடப்பை காகிதத்தை அறுக்காறுகள் வசம் குடுத்து அவர்கள் தாலூக்குப் (கடப்பைக்கு) பட்டாணியனையும் கூடப் போகச் சொல்லி அனுப்பிவிச்சேன். யிதல்லாமல், முதாமியா சரீரம் செஞ்சியிலே புதைச்சு யிருந்ததை[1] யெடுத்துக் கொண்டு நாகூருக்குக் கொண்டு போகச் சொல்லி முசே பிரனியே (M. Brenier) பேருக்குத் (துரை) காகிதம் குடுத்தார். அந்தப்படிக்கு அவர்கள் மனுஷர் காகிதம் வாங்கிக் கொண்டு செஞ்சிக்குப் போனார்கள்.

### *1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 26; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 13; சனிவாரம்*

இத்தனாள் மத்தியானம் கேழ்விப்பட்ட சேதி, அப்பு முதலி பேரிலே குண்டுக் கிராமம் குத்தகைக்காரர்கள் பெரிய துரைக்கு பித்திசாம் யெழுதிக் குடுத்தாப்போலேயும், அதை (அவர்) சின்ன துரை முசே பெடுத்தல்மீ கையில் குடுத்து விசாரிக்கச் சொல்லிச் சொன்னதாகவும், அப்பு முதலியையும் குண்டுக் கிராமம் குத்தகைக்காரர்களையும் அழைப்பிச்சு பித்திசாமை விளக்கி கசோத்திலே போட்டதாயும், அண்ணாந்தாள் (கை கால் விலங்கிடல்) போட்டதாயும் வெய்யிலிலே வைத்து உபத்திரம் பண்ணி(னதாயும் கேழ்விப்பட்டேன்). அப்பு பதினாயிரம் ரூபா பரிதானம் (கையூட்டு) வாங்கி, அப்பால் பிறரைக் குத்தகைதாரர்களாக நேமிச்சதும், அழிசப்பாக்கத்திலே ரெண்டு காணி மானியம் குடுக்கயில்லை (கொடுக்காமல் போனதும்) இப்படிப் பலானதும் யேன் என்று (துரை) அப்புவை விளக்கிக் கேட்டார். "முசே துப்பிளேயிக்சு நடத்திவிச்சார், அவர் சொன்னபடிக்கு நான் நடப்பிச்சேன். அது முசே தெலார்ஷு, முசே தெபொசேத்துவைக் கேட்டால் தெரியும்," யென்று (அப்பு) சொன்னதின் பேரிலே, ரெண்டு பேர் சிப்பாயிகளைக் காவல் வைத்து அவன் பட்டணத்தை விட்டு வெளியே போகாதபடிக்கு வீட்டிலே காவல் வச்சு, யினி மேலும் விளங்கப் (விசாரிக்கப்) போறதாய்ச் சொல்லிப் போகச் சொன்னதாய் கேழ்விப்பட்டேன்.

இத்தனாள் சாயங்காலம் சின்ன பரசுராமப் பிள்ளை வினாயகப் பிள்ளை பேரிலே பித்திசாம் எழுதிக் குடுத்த சம்மதிக்கு முசே பெடுத்தல்மீ

[1] முதாமியா செஞ்சிச் சிறையில் இறந்துபோனார். அவரது சோகக் கதையை முந்தைய தொகுதியில் படிக்கலாம். எனது நூலிலும் அது கூறப்பட்டுள்ளது.

உபயத்திரவரையும் (இரு தரப்பாரையும்) அழைப்பிச்சுக் கேட்டு பதில் பித்திசாம் வினாயகப் பிள்ளையை-யெழுதி வரச்சொல்லி யெட்டு நாள் தவணை யிட்டு அனுப்பினதாய்ச் சேதி சொன்னார்கள்.

***1754 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 29; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 16; செவ்வாய்க்கிழமை***

இத்தனாள் காலத்தாலே மழையும் தூத்தலுமாயிருந்தது. காரிக்கமும் உடையார்பாளையத்துப் பிடவையும் பார்த்து சலவைக்கு விட்டார்கள். அப்பால் துரை யவர்களண்டைக்கு, நேத்துக் குடுத்த மூணு காகிதமும் திரான்சிலிட்டுப் பண்ணினதையும் கையிலே யெடுத்துக் கொண்டு போன விடத்திலே, மேல் வீட்டின் பேரிலே முசே பெடுத்தல்மீ, முசே தெலார்ஷு வகையிரா, பின்னை ஒரு ஒபிசியாலும் மூணு பேர் யிருக்க, முசே பெடுத்தல்மீ துரை, யுடனே "நேத்து கும்பினீர் சேவுகன் ஒருத்தனை முசே ஷாந்துவசோ (Mon. Chantoiseau) யென்ற கப்பல் வெள்ளைக்காரன் மீன் கொண்டு வந்து குடுக்கை யில்லை யென்று உமக்குக் காகிதம் எழுதினானே, அவர் அந்தச் சேவுகனை முப்பது அடி அடிச்சு போகச் சொன்னதை என்னுடனே அந்தச் சேவுகன் சொல்லிக் கொண்டான். அந்த சம்மதி யிப்படி அடிக்கலாமா?" வென்று கேட்டதுக்கு, யிவர் சிறிது ஞாயம் சொல்ல அந்தப் பிறஸ்தாபம் நடந்தது.

அப்பால் வசந்த செட்டி மனுஷர் யிங்கே யிருந்தவர்கள் பேரிலே தாம் காரைக்காலிலே தீத்த சம்மதியை (விவகாரத்தை) மதாம் துப்பிளேக்சுக்கு ஆயிரம் ரூபாயிலே ஒரு வச்சிர மோதிரம் குடுத்து, அவ்விடத்திலிருந்து திருவேங்கிடத்தைக் கூட அழைப்பிச்சு, யிங்கே அந்த வழக்கு தீத்தார்கள்; ரங்கப்பன் சம்மதி ஆயிரத்திறநூறு வராகனும், பாக்கு அடமானச் சீட்டுக்கு ஆயிரம் வராகனும்[1] குடுத்து விடச் சம்மதி தீந்ததது. அதுபத்திப் பேசக் கவையில்லை (மேலும் பேச அவசியமில்லை). அந்தப் பேச்சுப் பேசிப் போட்டுப் பின்னையும் யென்ன யென்னமோ பேச்சுகள் நடந்தது. அதுவும் பேசிக்கொண்டு அவர் போனார். யிது நிமித்தியம் அவரது துபாசி யென்கிறவனும் கூட வந்திருந்தான். நடந்த பூருவோத்திரம் அவனைக் கேட்டால் தெரியும்.

அப்பால் முசே தெலார்ஷு சந்தா சாயபு மகன் மாரிபத்திலே (மூலம்) யெழுதி அழைப்பிச்ச(படி) துரைக்கு ஒரு சீரொப்பாவும் ஒரு பதக்கமும் அவர் தம்பிக்கு ஒரு சீரொப்பாவும் சந்தா சாயபு மனுஷன் ராகவ பண்டிதன் கொண்டு வந்து ஒப்பிச்சான். அதுக்கு ஏழு பீரங்கி போட்டார்கள். அந்த

---

[1] இவ்விடத்தில் வராகன் என்று எழுதியிருப்பதையும் பிறவிடங்களில் விராகன் என்று எழுதி யிருப்பதையும் காண்க.

சீரொப்பாவோடு வந்த ராகவ பண்டிதனுக்கு பாக்கு வெத்திலை பன்னீரும் குடுத்துப் போகச் சொன்னார்.[1]

மதனாந்த பண்டிதனை (நான் அழைத்து) துரை முன்னே சலாம் பண்ணச் சொல்லி, "ரங்கோ பண்டிதன் என்கிறவனை தேவனாம்பட்டணத்துக் கோட்டையிலே சேக்கு அசேனு (ஷேக் அசேன்) டனே கூட போட்டு யிருந்தது. சேக்கு அசேன் ஓடி வந்து விட்டான். யிவன் மாத்திரம் காவலிலே கிடக்குகிறான். நீ வெள்ளைக்காரர் அவ்விடத்தியார் யிவ்விடத்தியாரை பிறிசொனேர்களை யெல்லாம் விட்டு விடுகிறாப்போலே ஆச்சுதே.[2] யிவனும் யெங்கள் அமுதல்தாரன் யென்று யெழுதி அனுப்பி விடுவிச்சுப் போடவேணுமென்று பாப்பான் கேழ்க்குறா," னென்று (நான்) சொன்னதுக்கு, முன் சம்மதியாமல் சொல்லி, அப்பால் நல்லது யெழுதி அனுப்புவோ மென்று சொன்னார். அந்த மட்டுக்கும் பேச்சுவார்த்தை நடந்து, அப்பால் கபினேத்தில் நுழையச்சே, நேத்து குடுத்த மூணு காகிதமும் அதை பிரான்சு படுத்தின காகிதம் மூணும் கையிலே குடுத்தேன். அதை வாசித்துக் கொண்டு, .... சவரிராயப் பிள்ளை, யின்னாசி முத்தப் பிள்ளை—ஆற்காட்டு முத்தப் பிள்ளை—மூணு பேரும் பரமானந்தம் பேரிலே (வசம்) கும்பினீருக்கு வருகிற பணத்தைக் குடுக்க வேண்டாமென்று யெழுதினதுக்கு (இவை) செடுதிப்பிக்கா (இம்மூன்று காகிதங்களும் அவர்கள் தந்த விளக்கமாகும்) மென்று முசே தெலார்ஷுடனே சொல்லி, யென்னைப் பார்த்து யிந்த சமாச்சாரங்கள் நன்றாய் விசாரி யென்று சொல்லிப்போட்டு காகிதங்களைக் கொண்டு உள்ளே நுழைந்தார். நாங்கள் அனுப்பிவிச்சுக்கொண்டு வந்து பிடவை பார்க்கிற சாலையிலே நான் போய் முசே மீரா (M. Miran) வுடனே பேசிக்கொண்டிருந்தேன்.

அங்கே விநாயகப் பிள்ளை வந்து பரசுராமப் பிள்ளை தன் பேரிலே பித்திசா மெழுதிப்போட்டா னென்று அக்கிறமமாய் பேசிக்கொண்டிருக்கச்சே, முசே மீரா யிருந்துகொண்டு பரசுராமப் பிள்ளையை "நீ அனியாயமாய் காவலிலே வைத்துப் பண்ணுகிற அயிர(?) யென்று சொல்லப் போமா வென்றும், யிந்தப் பட்டணத்திலே யிருக்கிற சனங்கள், பத்து வயதுப் பிள்ளைகள் கூட அறிஞ்சிருக்(கிறார்களே), அந்த அனியாயம் நீ நடப்பிக்க சக்குத்தயில்லை (நடப்பிக்கவில்லை) யென்று சொல்லப்போமோ?" வென்று சொன்ன (கேட்ட) விடத்திலே, வினாயகப் பிள்ளை, "நான் நடப்பிச்சது மெயிதான்; ஆரார் பேசவேணுமோ அவர்களெல்லாம் பேசலாம்; நான் நடப்பிச்சதுக்கு

[1] இத்தகைய வெகுமதிகளை யெல்லாம் விற்றுக் காசாக்கிக் கொள்வது வழக்கம்.

[2] வெள்ளைக்காரக் கும்பினிகள் வெள்ளைக்காரக் கைதிகளை மட்டும் பரஸ்பரம் பரிவர்த்தனை செய்து கொள்வது வழக்கம்.

யென்ன வந்தாலும் ஏத்துக் கொள்கிறேன்," யென்று யிப்படி ஒருத்தருக் கொருத்தர் பேச்சு நடந்தது. அப்பால் முசே மீரா யெழுந்து போன பிற்பாடு, வினாயகப் பிள்ளை தன் பேரிலே பித்திசாமெழுதிப் போட்டதைச் சொல்லி, "அந்த பித்திசியாமை[1] வாங்கிக்கொண்டு அதுக்குப் பிரதி (பதில்) யெழுதிக் குடுக்கப் போறதிலே நீங்கள் அறிவீர்கள் யென்று யெழுதிக் குடுக்கிறேன்," என்று யென்னுடனே சொன்னதுக்கு, "யென் பேர் மாத்திரம் யெழுத வேண்டாம்," யென்று சொல்லி, அங்கேயிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

அங்கே பனிரெண்டு மணி அடிச்சுப் போன பிற்பாடு முசே பெடுதல்மீ (யின்) துபாசி வசம்[2] யென்கிறவன் வந்து, நான் பல்லாக்கு யேறிக்கொண்டு வீட்டுக்கு வரச்சே வந்து, "நீங்கள் சொல்லாம லிருந்தாலும் நான் முசே பெடுத்தல்மீ யுடனே யெச்சரித்து, யின்றைக்கு முசே கொதேயுடனே, வசந்த செட்டி யென்கிறவன்—நாகப்பட்டணத்து வர்த்தகன்—பத்து வருஷமாய் ரங்கப் பிள்ளைக்கு ஆயிரத்திறநூறு விராகனும் ஆயிரம் விராகன் பாக்கு அடமானச் சீட்டும் குடுக்க வேணும்; அந்த ஞாயம் காரைக்காலிலே (முசே பெடுத்தல்மீ மூலம்) தீந்தது. அது தீத்த சம்மதிக்காக முசே துப்பிளேயிக்சு பெண்சாதிக்கு ஆயிரம் ரூபாய் வச்சிர மோதிரம் குடுத்தது. தீத்து யெழுதின சீட்டையும், அந்த மனுஷரையும் திருவேங்கிடத்தையும் (இங்கே) அனுப்பச் சொல்லி முசே துப்பிளேயிக்சு காகிதம் (எழுதினார். அதன் பேரில்,) புதுச்சேரியே வந்து யிங்கே சரிப்போனபடிக்குப் பண்ணிக்கொண்டு யிருக்குறார்கள். அவர்களைப் பிடிச்சு அந்த வராகனையும் சீட்டையும் வாங்கிப் போடுறேனென்று சொல்லிப் போட்டு வந்து, அவர்களைப் பிடிச்சுக் காவலிலே வைக்கச் சொல்லி, முசே திலார்ஷுவைக் கூட வைத்துக் கொண்டு, அந்த ஞாயத்தைக் கேட்டுத் தீத்துப்போடச் சொல்லி முசே பெடுத்தல்மீ சொல்லிக் கொண்டார்; யேனென்றால், தான் தீத்த ஞாயமான படியினாலே முசே திலார்ஷு (வுக்குத்) தெரியப்படுத்தித் தீத்துப்போடச் சொல்லுகுறேனென்று சொல்லி, அப்போ தீத்த ஞாயக் காகிதத்தை முசே திலார்ஷு கையில் குடுத்தார்; ரங்கப் பிள்ளை (தனக்கு) மூவாயிரம் விராகன் மட்டுக்கும் வரவேண் (டும் என்று தீந்ததுக்கு) சம்மதிக்கவில்லை. இப்படி அவர் யெழுதினதைக் கூட தள்ளிப்போட்டு நான் தீத்தேனென்று (முசே பெடுத்தல்மீ) சொல்லிக் கொள்கிறார்; யிது முதலான வயணங்களெல்லாம் முசே கொதேயுடனே சவிஸ்தாரமாய்ச் சொன்னாரெ" ன்று, யிந்தக் கபுறு வீட்டுக்கு வந்ததும் சொல்லிக் கொண்டான்.

---

[1] ஒரே வாக்கியத்தில் பித்திசாம், பித்திசியாம் என்று வருகிறது. நூற்றுக்கணக்கான இடங்களில் இத்தகைய வேறுபாடுகளை நாம் காணலாம். அதே போல் பல்லக்கு, பல்லாக்கு என்றும் இருவிதமாக எழுதப்பட்டுள்ளது.

[2] பின்னர் இத்துபாசியின் பெயர் ராமன் என்று வருகிறது. வசம் என்பது சரியென்று தோன்றவில்லை. ஆங்கிலப் பதிப்பில் வசமன் என்றுள்ளது.

முசே துய்ப்பிளேயிக்சுக்கு பித்திசா மெழுதின சம்மதி, நடந்த சம்மதி யெல்லாம் (நான் அவனிடம்) சொல்லி, பித்திசாமும் காண்பிச்சு, "உங்கள் துரைக்குக் காண்பி" யென்று குடுத்து அனுப்பிவிச்சேன். அப்பால் யெல்லப்பச் செட்டியை அனுப்பி அந்த பித்திசாமை வாங்கி வரச்சொல்லிப் பெட்டியிலே வைத்துக் கொண்டேன். நாம் கொண்டு போய் பிறசங்கத்துக்குத் தக்கதாய் காண்பிப்போமென்று வைத்துக்கொண்டேன். யிது விசேஷம் நடந்தது விஸ்தாரமானாலும் சாரம் மாத்திரம் யெழுதி வைத்தேன்.[1]

விழுப்புறம் சீமை நாட்டு (நாட்டான்) கோபால நாரணப்பய்யன் என்கிறவன், இத்தைனாள் முன் சுக்கில வருஷம் தை மாசம் (1749–50), சந்தா சாயபு கையிலே தெறக்குத்துராசியம் (அமுல்தார் பொறுப்பை) சேஷா ராயன் மாரிபத்திலே (மூலமாக) அமுல் எடுத்துக்கொண்டு, பணத்தைச் சுத்திக்கொண்டு, நாசறு சங்கு (படை வந்த) அமளியிலே கூடலூர் சேர்ந்தது மல்லாமல், அப்பால் நாசறு சங்குடனே கூடிக்கொண்டு, நம்முட பிரான்சுக்காரர் பேரிலே ராசகாரியம் பண்ணினான்; அதன் பிற்பாடு மமுதல்லி கானுடனே கூடிக்கொண்டு ராசகாரியம் பண்ணினான். இது முதலான சம்மதிகளை நடப்பிச்சுப்போட்டு, யிப்போ அங்கேயும் யிருக்கக் கூடாமல் சம்பாவுலுக் கோயிலார் (பாதிரிகள்) மாரிபத்திலேயும் முசே லாசு மாரிபத்திலேயும் வந்து பேசி துரை(யின்) பரவசம் (அனுமதி) வாங்கிக் கொண்டு, யித்தனாள் பெரிய துரையோடு பேட்டி பண்ணினான். முசே லாசு கூட வந்து பேட்டி பண்ணிவிச்சானென்று சேதி வந்து சொன்னார்கள். ஆனாலிவர் வந்தவர் (கோபல நாரணப்பய்யன்) யிங்கே சும்மாயிரார், ஏதாகிலும் சீமா (சீமை) மூலம் (பற்றி) எல்லாம் பேசுவாரென்றும் தோத்துது. அல்லது விழுப்புறமாகிலும் பேசுவாரென்று தோத்துது. நடக்கிறசேதி அறிய வேண்டியது.[2]

ரெண்டிலே மூணிலே முசே புசியின் சோடா, மச்சிலிபந்தரிலிருந்து வரும். அந்தப்படிக்கி யின்றைக்கும் வந்தது. சென்னப்பட்டணத்து மேஸ்தர் சாந்தரசு காகிதமும் வந்துது. மேஸ்தர் சாந்தரசு காகிதம் வருகுற சாடை பார்த்தால் மமுதல்லி கான் திருச்சிராப்பள்ளியி லிருந்து கூடலூர் வந்து சேருவானென்று கூடலூரிலே சொல்லிக் கொள்ளுறபடிக்கு வருவான், சமாதானப் பேச்சும் நடக்கும் போலே யிருக்குதென்று யென் புத்திக்குத் தோத்தி யெழுதிவைத்தேன்.

---

[1] இங்கு பிள்ளை எழுதியுள்ள நீண்ட ஒரே தொடர் வாக்கியம் வாசகர்களின் நலன் கருதி உடைத் தெழுதப்பட்டுள்ளது. வேறு பலவிடங்களிலும் இப்படிச் செய்ய நேரிட்டுள்ளது.

[2] முசே லா (Law) என்ற பெயரைப் பிள்ளை லாசு என்றே எழுதுகிறார். லா ஆங்கிலேயர்.

மழை நேத்து மத்தியானம் மேலே சுறுக்காய் துவக்கின மழை யின்று சாயங்காலம் ஆறு மணி மட்டுக்கும் பெகு சுறுக்காய் பேஞ்சபடியினாலே நான் வெளியே போகயில்லை.

மதனாந்த பண்டிதன் சொல்லி அனுப்பின சேதி: முசே தெலார்ஷு தன்னை அழைப்பிச்சு முன் மொத்தபர் கான் அண்டையிலே அரபி வேஷம் போட்டுக்கொண்டு (வந்த) வெள்ளைக்காரன்–பீரங்கி மேஸ்திரி யாயிருந்தவன்–அவ்விடத்திலே துவேஷப்பட்டு (நல்லுறவு முறிந்து) வந்து, சாமா ராயன் பவுன்சு வைத்திருந்ததிலே (படையிலே) வகாபு கான் வகையிரா துறுப்பு சுவாரிலே (குதிரை அணியில்–trooper) வந்திருந்தவன் (சேர்ந்திருந்தவன்), யின்றைய தினம் முசே கொதேயுடனே வந்து சொன்னது: முசே தொத்தேல் வகையிராக்களை வாலி கொண்டாபுரத்திலே பிடிச்ச போது அவர்களுது சண்டை சான்சாமி (பொருட்கள்) மருந்து, குண்டு, கடுத்தூசு (துப்பாக்கி, ரவை) வகையரா சிறிது சாமானுகளெல்லாம் முத்தபர் கான் வசமாகி, ரஞ்சன் கடை (Ranjangadai) ஒரு வீட்டிலே போட்டுயிருந்துது; முத்தபர் கான், முசே தொத்தேல் வகையராக்களை உபாயமாய்ப் பிச்சுக் குடுத்து, ரொக்கம் யிருந்ததை யெடுத்துக் கொண்டதுமல்லாமல், யிந்த சண்டை சான்சாமிகளை யிங்கிறேசுக்காரர், மமுதல்லி கான் வசமாக்கி விட்டான். இது முதலான சம்மதி களெல்லாம் முசே கொதேயுடனே அவன் சொன்னதாகவும், அவர் முசே தெலார்ஷுவை அழைப்பிக்கச் சொல்லி முத்தபர் கானுக்குக் காகிதம் எழுதி, அந்த சாமானை யெல்லாம் திரிச்சிராப்பள்ளிக்கு முசே மேசென் அண்டைக்கு அனுப்பிவிக்கச் சொல்லி கண்டிப்பாய் (கானுக்கும் அவன் வக்கீலுக்கும்) முத்தபர் தாக்கீதாய்ச் சொல்லி காகித மெழுதச் சொல்லி அனுப்பிவிச்சதாய் சேதி சொல்லி அனுப்பினார். அதுக்கு முத்தபர் கான் உத்தாரம் யென்ன யெழுதி அனுப்புறானோ அறியவேண்டியது.

இத்தைனாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் யிடவை பார்க்குற சாலையிலே நானும் முசே கொற்னேத்து (M. Cornet), முசே மடுத்தேன் (M. Martin) மூணு பேரும் பேசிக்கொண்டு ஒலாத்திக்கொண்டு யிருக்கச்சே (நான் சொன்னது : "என் வீட்டுக்கு யெதிராக (இருக்கிற) பாதிரி கோயிலிலே (சர்ச்) பழய துரை முசியே துப்பிளேயிக்கு மணிக் கூண்டு பெகு உன்னதமாய் யிவ்வருஷம் கட்டிவிச்ச போது சிறிது சுண்ணாம்பு பூசிக் கொண்டு வந்தார்கள். சுண்ணாம்பு பூசாத விடத்திலேயிருந்து கொஞ்சம் யிடிஞ்சு விழக் கண்டேன்; கூடயிருந்த ரெண்டு வெள்ளைக்காரருடனே சொன்னதுக்கு, தர்மசிவ செட்டியியிருந்து கொண்டு "யின்னம் ஒரு மழைக்கு விழுமே அல்லாமல் யிப்போ விழாதென்று சொன்னான்". வெள்ளைக்காரரிலே முசே மடுத்தேன் யென்குறவன், "யின்றைக்குச் செத்தவர்களுடைய

ஆத்துமங்களுக்கு (ஆத்மாக்களுக்கு) சடங்கு செய்யுற தமிழர் மாளைய பக்ஷம் சாடையாய் (எங்கள் சடங்கு—All Souls Day) நடக்கிறது. ஆனபடியினாலே யிப்போ முசே கொதே வகையிரா கோயிலுக்கு பெகு சனங்கள் போற வேளையானபடியினாலே நான் முன்னுதாகப் போய் யெச்சரிக்குறேனென்று, அவனும் நடந்து மேல் வீட்டின் பேரிலே யேறினான். நானும் கோயிலுக்குப் போய் கிட்ட ஒருத்தரையும் போகவொட்டாமல் தாக்கீது பண்ணினேன்.

கோயிலிலே மயிலாப்பூர் பாதிரி விசுப்பு (பிஷப்) நொரேஞ்ஞு (Bishop Noronha) வென்குறவர் பூசை சொல்லி, அவரந்த வாசலுனாலே பிறப்பட்டு போய் மறு பூசைக்கு யெத்தனம் பண்ணபோது, முசே லெகு (Mon. Legou) குமாரன் வகையரா நாலத்து ரெண்டு பேர் மாத்திரம் கோயிலுக்குள்ளே யிருந்தார்கள். அப்படிப்பட்ட அவசரத்திலே மேலே கட்டியிருந்தபடியே .... மணியும் கருங்கல்லினாலே மேலே கட்டின கூண்டும் கோயில் வாசற்படியிலே விழுந்துது. பின்னையும் கோயில் உள்ளேயும் கொஞ்சம் விழுந்துது. வடவண்டையிலே சுவர் அங்கங்கே பாளம் போலே நீங்கி நீங்கி விட்டுது. யிந்த சபுத்தம் கேட்டு சமஸ்தமான பேர்களும் வந்தார்கள். முசே கொதேயும் மேல்வீட்டின் பேரிலே வந்து பார்த்தார்கள். கோன்சேல்காரர்கள் வகையிராக்கள் மத்த உத்தியோகஸ்தர்க ளுள்பட பெகு சனங்கள் பார்த்து, முன் யிது கட்டச்ச தானே (கட்டின போதே) விழுமென்று சொன்னார்கள். அப்பால் கோயிலின் பேரிலே கட்டுறத்துக்கு யித்தனை நாளும் யிந்த முசே துப்பிளேயிக்சுக்கு சக்தி வராமல், யிப்போ வந்து கட்டினதென்ன வென்றால், கோயிலுக்கு பின்னம் வருகுறதுக்குக் காலம் வந்தபடியினாலே முசே மறிக்கு (மார்க்கிஸ்) துப்பிளேயிக்சு ஒசத்தி மணிக் கூண்டு கட்டினார். அது யிப்போ விழுந்தது துற்சகுனமாம். யிந்தக் கோயில் ஆயிரத்து எழுநூத்திருபத்தி மூணாம் வருஷம் கட்டித் தீர்ந்துது. யின்றைய வரைக்கும் முப்பத்தோரு வருஷமாச்சுது. யிந்தக் கோயில் கட்டின பணம் கோசா சபர் (Coja Saffar) யென்கிற அரண்மனைக்காரன் குடுத்ததுவாங்காட்டும். யிந்தக் கோயில் கட்டினது யிந்த மட்டுக்கும் பின்னம் யில்லாமல் யிருந்து யிப்போ பின்னம் கண்டுது ஆனபடியினாலே, யெந்த யெந்தக் காலத்திலே யெந்தந்த காரியம் யெதுயெது யென்னமாய் நடக்க வேணுமோ அந்தப்படிக்கு நடக்குமே அல்லாமல் அந்த அத்து தப்ப மாட்டாது. அது அறியாமல் செனங்கள் நடந்து கொள்ளுகிறார்கள் யென்று சொல்லப்போமோ? சொல்லப் போகாது. காலகெதியைத் தள்ளப்போமா?

அப்பால் துரை அவர்கள் முசே சொற்னேயை (M. Sornay) அழைப்பிச்சு பார்க்கச் சொல்லி, கோயில் சமீபத்திலே ஒருத்தரையும்

போகவொட்டாமல் சன்தினேர்களை (காவல்காரர்—sentinelle) வைத்தார்கள்.

அப்போ முசே கோதே செனரால் (General Godheu) கோன்செலியேர் வகையராக்கள் யெல்லாரும் மேல்வீட்டின் பேரிலே அலமு பண்ணி (காபிக் குடித்து), கோட்டைக்கு வெளியே யிருக்குற கப்புசுக் கோயிலுக்குப் போறதாயிருக்கச்சே நான் போயாசாரம் பண்ணி, "உம்முட பேரிலே சுவாமியுடைய கடாக்ஷம் யிருக்குறதை சனங்களுக்கு அறிவிக்கும் பொருட்டு யிந்த அத்தாக்ஷியைக் காண்பிச்சார். யிப்போ விழுந்தது, யின்னம் அரை மணி நேரம் பொறுத்து (விழுந்திருந்தால் உமக்கும்) பெகு சனங்களுக்கும் சேதம் வருமென்றும், அப்படிக்கு நீர் பாத்திரரல்ல (உமக்கு நடக்கக்கூடாது) வென்கிறதுக்கும் உம்முட பேரிலேயும் தம்முட கடாக்ஷம் யிருக்கிறதுக்கு சாக்ஷி செனங்களுக்குக் காண்பிக்கும் பொருட்டா யிது கண்டுதுவே அல்லாமல், மத்தப்படி அல்லா. யிப்படி சுவாமி கடாக்ஷம் உம்முட பேரிலே யிருக்கிறபடியினாலே பெகு சனங்கள் உம்மைத் தொட்டுச் சுகப்படக் காரணமாயிருக்குதென்று சுவாமி அத்தாட்சி காண்பிச்சாரெ" ன்று சொன்னேன். "அது மெயிதான். நான் யெப்போதும் செனங்களுக்கு சுகத்தைத் தேடிக்கொண்டேயிருக்கிற படியினாலே, சுவாமியும் யென் சுகத்தைத் தேடுகிறது நியாயம் தானெ"ன்று சொல்லி, "நீ சொன்ன உபசரணைக்கு நல்ல மனதுடனே பாத்தியப்பட்டு யிருக்குறேனெ"ன்று உபசாரஞ் சொல்லி, ஆசாரம் பண்ணினார். நானும் ஆசாரம் பண்ணினேன். அப்போ சமஸ்தமான கோன்சேலியோர் வகையிராக்களிருந்தவர்கள் யெல்லாரும் கேட்டுக் கொண்டிருந்து, யென்னைப் பார்த்து ஆசாரம் பண்ணினார்கள். ஒருத்தருக்கு மாத்திரம் முகம் வேறே கண்டுது. அது யாரென்றால் முசே தெலார்ஷு.

அப்பால் முசே தெலார்ஷு கொண்டு வந்த மாசச் சம்பளச் சீட்டுக் காகிதத்தைக் காண்பிக்க, (துரை) அதில் கையெழுத்துப் போட்டு, அப்பால் கோட்டைக்கு வெளியே தென்னண்டையிலிருக்கிற கப்புசுக் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்த பிற்பாடு, நந்திராசா காகிதம் வந்ததை யென்னை அழைப்பிச்சு யென் கையில் குடுத்துப் படிச்சுச் சொல்லச் சொன்னார். அதிலே யெழுதியிருந்த வயணம்: "தாங்களானால் முன்னூறு சொலுதாதுகளையும் ஆயிரம் பாறுக்காரர்களையும் கொம்மாந்தாமையும் வைத்து (விட்டு) மத்த பவுன்சை அழைப்பிச்சுக்கொண்டீர்கள். இங்கிறேசுக்காரர்களும் மமுதல்லி கானும் பெகு மோசக்காரர்கள். அவர்களுடனே சாவாசம் பண்ணி அனுபவிச்ச படியினாலே, யெனக்குத் தெரியுறாப் போலே மத்த பேருக்குத் தெரியாது. அவர்கள் பவுன்சானால், நாளுக்கு நாள் நூறு யிறநூறு சொலுதாதுகளும் சிப்பாயிகளும் கோட்டையிலே சமையாய்ச் சேக்குறார்கள். யிப்படி சேருகிறபடியினாலே

நாங்கள் கொஞ்சம் பவுன்சுடனே சீரங்கத்திலே யிருக்கிறபடியினாலே அவர்கள் துரோகம் பண்ண யெத்தனம் பண்ணினா லப்பால் உங்களுக்கு சேதி வந்து உங்களுடைய பவுன்சு வருகுற மட்டுக்கும் யென்னை காப்பாத்துகிறதுக்கு அடமான மென்ன? மேசர் லாரென்சு சென்னப்பட்டணத்துக்குப் போகச்சே கொஞ்சம் சொலுதாதுகளைக் கட்டிக்கொண்டு போனானே அல்லாமல், விஸ்தாரமில்லை (அது அதிக எண்ணிக்கையில்லை). யிப்படி கொம்மாந்தாம் கொஞ்சம் பவுன்சுடனே யிருக்குறபடியினாலே தங்களுக்கு எழுதினது".

யிதுக்கு வயணம் யெழுதி அனுப்பச் சொல்லி யெழுதி யிருந்ததைப் படிச்சு சொன்னதுக்கு, பதிலுத்தாரம், "நீர் அப்படி பயப்படத் தேவையில்லை. உம்முட பேரிலே அப்படி நடக்கவே நடக்காது. யெங்கள் வெள்ளைக்காரர்களுக்குள்ளே ஒருத்தர் உடம்படிக்கை பண்ணிக்கொண்டால் அது வழுவுதலையாய் நடவாது. அதுகொண்டு பயப்படதேவையில்லை." மமுதல்லி கான் கூடலூருக்கு வருகுறானென்றும், யிது முதலான சேதியும் அவருக்கு நம்பிக்கை பிறக்க யெழுதி யனுப்பி வையுமென்று சொன்னார். நல்லது யென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வந்து திரான்சிலிட்டுப் பண்ணின காகிதமும் யெழுதி வைத்துப் போட்டோம். யினி அவருக்கு அறிக்கை பண்ணி (தெரிவித்து) அனுப்ப வேண்டியது.

இத்தனாள் திரிச்சிராப்பள்ளி சீரங்கத்திலே யிருந்த பவுன்சு யெல்லாம் கொஞ்சம் முன்னூறு சொலுதாதுகளையும் ஆயிரம் சிப்பாயிகளையும் கொம்மாந்தாம் முசே மேசெனையும் திரிச்சிராப்பள்ளி சீரங்கத்துக் கோயிலிலே நிறுத்தி, மத்த பவுன்சு, சொலுதாதுகள் சிப்பாயிகள் குதிரைக்காரர்கள் உள்பட வண்ணாரந் துறை யாகிய சின்ன வெளிக்கோட்டையிலே வந்து யிறங்கினார்கள்.

சலவை பண்ணுகுற பிடவை யெல்லாம் கெட்டி மையிலே போட்டு, நனைவு (நனைத்த) பிடவைகளை மாத்திரம் வண்ணாரை விட்டு நனைச்சு மடிக்கச் சொல்லித் திட்டம் பண்ணினாலும் அவர்கள் கூடாதென்று (முடியாது என்று) சொல்லுகிறார்.

## நவம்பர் 1754

*1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 4; பவ வருசம், அற்பிசி மாதம், தேதி 22; சோமவாரம்*

இத்தனாள் முசே கொதே கொம்மாந்தாம் செனராலாகிய (கமாண்டர் ஜெனரல் முசே கொதே) வருடைய பேர் பண்டிகையான (name-day) படியினாலே அஞ்சு மணிக்கு யிருபத்தோரு வேட்டுப் பீரங்கி போட்டார்கள். ஆகையால் ஆறரை மணி காலத்தாலே நான் கோட்டைக்குப் போனேன். அப்போ கோட்டையிலே ஒருத்தரும் வரவில்லை. மேல் வீட்டின் பேரிலேயும் நிர்மானுஷியமாயிருக்குதென்று யிந்த வேளையிலே நாம் போய்க் காணுவோம் யென்று போனவிடத்திலே, அவர் அப்போ உடுத்திக்கொள்ள யில்லை யென்றும், தாங்கள் கூடப் போகப் போகாது யென்றும் யெல்லப்ப (ன்), நாகப்பிள்ளை ரெண்டு பேரும் சொன்னார்கள். அங்கே நடுச்சாலையிலே (மையக்கூடம்) யிருக்கச்சே, முசே லெபோமும் பின்னை ஒரு ஒபிசியாலும் வந்தார்கள். அப்பால் யெட்டரை மணிக்கு (துரை) வெளியே பிறப்பட்டவுடனே பூச்செண்டைக் கையிலே குடுத்து, "உம்முட ஷாறுலு ரோபேர் கொதே பேர் பண்டிகையிலே (Charles Robert Godheu) சம்பந்தமான செனங்களும் யெப்படி சந்தோஷமாக யிருக்குறார்களோ அப்படி முற்றிலும் யிருக்கவும், யிந்த சந்தோஷமே உமக்கு தினே தினே விறுத்தியாயிருக்கவும், உம்முட ஆயிசும் அயிசுவரியமும் நாளுக்கு நாள் வளர சுவாமியைப் பார்த்து பிரார்த்திக்குற மட்டுக்கும் சுவாமி யின்று முதல் தயவு பண்ணுவார். உம்முடய முன்னிலையாய் யிந்த ராச்சியத்து மனுஷரும் உம்முடய பட்டணத்து மனுஷர்களும் சுகப்பட சுவாமி உமக்கு புத்தி குடுத்து நடப்பிக்கவும், அதினாலே மகத்தான கீர்த்தி வந்து உம்மை அடையவும் வரவேணுமென்று கொடுக்குறோ" மென்று உபசாரமாய்ச் சொல்லி பூச்செண்டு குடுத்த உடனே வாங்கிக் கொண்டார். அப்பால் முசே நுயேல் (M. Noual) கையில் வாங்கி வந்த மூணு மோதிரத்திலே குண்டு ஆக யிருக்கிற முன்னூத் தன்பது விராகன் வயிர மோதிரத்தைக் கையிலே கொடுக்கப் போனேன். சறுவாத்துமனாகக் (உறுதியாக) கவையில்லை (வேண்டாம்) யென்று சொல்லி, (இனி இப்படித் தராதே) யென்று சொன்னார். யிதிலே வெள்ளைக்காரர்கள் வந்து ஆசாரம் பண்ணினார்கள். யெனக்குச் சொன்ன பதிலுத்தாரம், "நானு பகுயென்னை நினைக்காமல், நல்லவேலை செய்ய" வென்று[1] தித்திப்புப்

[1] இது விளங்கவில்லை. ஆனால் ஆங்கிலப் பதிப்பில், "நான் என்ன செய்து விட்டேன் என்று மக்கள் இப்படிப் புகழ்கிறார்கள்?" என்றுள்ளது.

பேச்சாய் பேசினார். "உம்மை(யே அவர்கள்) நம்பியிருக்க வேணு" மென்று உத்தாரம் சொன்னேன்.

அப்பால் வெள்ளைக்காரர்கள், வெள்ளைக்காரச்சிகள் வந்து சந்தடியாச்சுது. அப்பால் அவர்கள் கோயிலுக்குப் போனயிடத்திலே பூசை முடிகிறத்துக்குள்ளே மூணு தரம் துப்பாக்கிகள் சுட்டு, மூணு தரம் பீரங்கிகள் யிருபத்தோரு வேட்டு விழுக்காடு சுட்டுத் தீந்த பிற்பாடு, யிவர் கோயில் விட்டு நடந்து (கொண்டிருக்கையில்) பாறுக்குறார்கள் யீட்டிகளினாலேயும் கோயினாலேயும் (கொடி கட்டிய கம்புகளினாலேயும்) ஆசாரம் பண்ணினார்கள். குதிரைகள் பேரிலே யிருந்த வெள்ளைக்காரர்களுக்கு யெசமான் (கேப்டன்) உருவின கத்தியுடனே வாடிக்கைப்படிக்கு ஆசாரம் பண்ணினான். அப்பால் துரும்பேத்துகளும் தம்பூறுகளும் பில்லாங்குழலும் சப்திக்க கோட்டைக்குள்ளே வந்து கொவற்ணமாம் தாழ மேசை போட்டிருந்ததின் பேரிலே, வந்த வெள்ளைக்காரர்க ளெல்லாருடனேயும் கூட சாப்பிடத் துவக்கினார். அப்பால் ராசாவுடைய ஆரோக்கியத்தைச் சொல்லி சாராயங் குடிக்கச்சே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அப்பால் முசே கொதே முதலான பேர் சாப்பிட்டான உடனே முசே கொதே மேல் வீட்டின் பேரிலே போனார். அங்கே கும்பினீர் வர்த்தகர் ஒரு சீரொப்பா, சரிகை, யிருநூறு ரூபாய் (மதிப்புக்கு) பொறுபூ (பொற்பூ) வெள்ளைப்பூ (வெள்ளிப்பூ) ப்போட்டு யெழைத்த ஒரு வயிர மோதிரம் நானூறு வராகன் பொறுமானதும் குடுக்கப் போனால், சீரொப்பாவை மாத்திரம் வாங்கிக்கொண்டு, மோதிரத்தை வேண்டா மென்று சொன்னார். பழய கும்பினீர் வர்த்தகர்கள் அன்பது விராகனிலே லெங்கு சுசாம்பு (லுங்கி), வெள்ளைச் சாலுவை வகையிரா வைத்துக்கொண்டு கண்டார்கள். திருவீதி சேஷாசல செட்டி குமாரத்தியும் சலத்து வெங்கடாசல செட்டியும் ஒரு பட்டு சுருட்டு (roll)—அஞ்சாறு வராகன் பெறும்—வைத்தார்கள். பின்னையும் மத்தவர்கள் பத்து விராகனுக்கு உள்ளாகக் கொண்டு வந்து கண்டு யிருந்தார்கள். யெல்லாரும் யெலுமிச்சம் பழம் குடுத்துக் கண்டார்கள். பின்னையும் மயிசூர் வெங்கிட்டநாரணப்பய்யர் வகையராக்கள் கண்டார்கள். அப்பால் முசபர் சங்கு பிள்ளைகள் ஒரு சீரொப்பாவும் சேக்கு யிபராம் (ஷேக் இப்ராகிம்) குமாரன் ஒரு சீரொப்பாவும் குடுத்துக் கண்டார்கள். சேக் யிபராம் முசே கொதே பேருக்கு மொபார்க்கு பாதி (வாழ்த்து) காகிதமொன்று அனுப்பியிருந்ததையும் படிச்சுச் சொன்னோம். அப்பால் சந்தா சாயபு மகன் வருகுறானென்குற கபுறு (வந்த நேரத்திலே), டங்கா சாலையார் வந்தனர். அந்த சந்துக்கட்டிலே டங்கா சாலையார் நான் குடுத்த வயிர மோதிரத்தை யென் கையிலே மறுபடி குடுத்துவிட்டுப் போய்விட்டார்கள். அப்பால் சந்தா சாயபு மகன் அலி ரசாக் கானும்

(Ali Raza Khan), அல்லி நக்கி சாயபு வகையிராக்களும் வந்து துரையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்தார்கள். துரைக்கு சந்தா சாயபு மகன் கொண்டு வந்து குடுத்த பெகுமான நகைகள் வயணம்:

ரத்தினங்கள் செதுக்கின பன்னீர் தெளிக்குற சொம்பு. . . 1

மேற்படி வைக்கிற தட்டு (ரத்தின மிழைச்சது) . . . . . . 1

பொன்னாலே சாதா பன்னீர் தெளிக்குற செம்பு தட்டு . . 1

பானதான வெள்ளிக்காசு மணிலா வேலை கங்காசமுனி (நேர்த்தியான மணிலா வேலைப்பாடு கொண்ட வெற்றிலைத் தட்டு) . . . . . . . . 1

பொன்முலாம் பண்ணின தண்ணீர் குடிக்கிற பொன் கோப்பையும் தட்டும் . . . . . . . . . 1

உருமீன்சு முத்து கோத்தறுமாலை? ஒன்று, நாயகம் பச்சை(க்கல்) வைத்து சுத்திலும் செம்புக்கல் பதிச்ச முத்துமாலை கோத்த பதக்கம் . . . . . . . 1

லவங்கம், சாதிக்காய், சாபத்திரி, ஏலரிசி வைக்குற தட்டு பொன்னாலே பண்ணினது . . . . . . . 1

ரத்தினம் யிழைத்த துராயி . . . . . 1

பெரிய குதிரை எழுநூறு அறுநூறு ரூபா பெறும் . . . . 1

பொந்தான (வெற்றிலைத்தட்டு) ரத்திரம் யிழைத்தது . . . 1

பொன் சாதா பன்னீர் தெளிக்குற பன்னீர் செம்பு . . . . 1

மேற்படி தட்டு . . . . . . 1

யிதுகள் பத்து பனிரெண்டு ஆயிரம் ரூபா பெறுகுறது யென்று அவர்கள் சொன்னது. இவர்கள் (பிரெஞ்சுக்காரர்) விலை யெண்ணாயிரம் ரூபாய் தான் பெறும். இந்த நகைகள் கொண்டு வந்து வைத்துக்கொண்டு மொபார்க்கு பாதி குடுத்த உடனே, யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அப்பால் நாலு வார்த்தை உபசாரமாய்ச் சொல்லி, பெகுமானம் சந்தாசாயபு (மகனுக்கு) க்கு யெண்ணாயிரம் ரூபாய்க்கு சகலாத்துகள் (broad-cloth), யெதோப்புதோர் மகமல் (தங்க முத்திரை போட்ட வெல்வெட்டு), கலாம் (நகைகள்) வகையிரா தினிசுகள் கொடுத்து அனுப்பிவிச்சார்கள். அதை வாங்கிக் கொண்டு நடந்தார்கள். யிதுக்கு துபாசித்தனமும் (மொழி பெயர்த்தல்) சந்தி பேசினதும் முசே தெலார்சு ஆனாலேயும் தப்பு தப்பாகப் பேசினான். யிந்த ராச்சியத்து வழக்கம் தெரியாதபடியினாலேயும் ....

தெரியாது யிருபத்தோரு பீரங்கி போட்டது. அவர்கள் பெறுமானம் பதினைந்து ஆயிரம் ரூபா பெறுமானம் யென்று (தெலார்ஷு) சொல்லி, யெண்ணாயிரம் ரூபாய் பெறுமானம் வாங்கிக், குடுத்தான். மரியாதை முன், ஆற்காட்டார் அதிகாரம் பண்ணினபோது நடந்தபடிக்கி நடப்பிச்சானே அல்லாமல், சுக்கில வருச (1749–59) த்துக்குப் பிறபாடு நாம் அவர்களுக்கு யெசமானாகவும் அவர்கள் நம்முட குடியாகவும் முசே மறுக்கி துப்பிளேக்சு நடப்பிச்சுக் கொண்டு வந்தபடிக்கு யிப்பவும் நடத்தவேணுமே அல்லாமல் முன் ஆற்காட்டிலே நவாபுகிரி பண்ணி, கரை துறையிலே வியாபாரம் பண்ணிக்கொண்டு யிருக்கச்சே நடந்த மரியாதைப்படிக்கி நடப்பிச்சுப் போட்டான். யென்ன (செய்ய வேணும்) யென்று ஒரு கோன்சேல்க்காரர்களைக் கேட்டவருமல்ல, யென்னைக் கேட்டவருமல்ல. யிந்தப்படிக்கு பிரான்சுக்காரர்களுக்கு முன் துலுக்கர்களைத் துரையாய் வைத்த பாவனையா யிப்போ நடப்பிச்சுப் போட்டார்கள். பிரான்சுக்காரருக்கு நடுவே வந்த பாதி மேன்பாட்டை யின்றுடனே தீத்துப் போட்டார்கள். பழய குருடி கதவைத் தெறடி யென்று முசே தெலார்ஷு கொண்டுவந்து விட்டானென்று செனங்கள் சொல்லிக் கொண்டார்கள்.

சந்தா சாயபு குமாரனுக்கு பெகுமானம் குடுத்தனுப்பிவிச்ச பிறபாடு, யிமாம் சாயபு மகன் ஒரு சீரொப்பா கொண்டு வந்து கண்டான். அவனுக்கும் பாக்கு வெத்திலையும் குடுத்து அனுப்பிவிட்டார். அப்பால் கணக்கு ரங்கப்பிள்ளை அமுல்தாரர்களின் குத்தகைக்காரர்களை அழைத்து வந்து மோகராவும் வராகனுமாக நசர் வைக்கச் சொன்னான். அதுக்கு முசே கொதே வேண்டாமென்றார். அப்பால் பட்டு சுருட்டி (rolls) யேழெட்டு சுருட்டி கொண்டு வந்து கண்டார்கள். அப்பால் அவரவர்கள் போகலாம் யென்று சொல்லி அனுப்பிவிக்கச்சே, அந்த முத்துக் கோத்த பதக்கத்தைக் கையிலே வைத்துக்கொண்டு அண்ணனும் தம்பியும் பாத்துக் கொண்டு கண்ட சாடை செனங்களுக்குத் தோத்தத்தக்கதாக பிரமையாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நானும் பின்னையுமிருந்த வெள்ளைக்காரர்களும் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தோம்.

மத்தப்படி, சோபிச்சு யிருக்க யில்லை. யிவருக்கு பெரியதனமாயிருந்து யெந்தெந்த சம்மதி யெப்படி பேட்டி பண்ணி விச்சுக் கொள்ளவேணுமோ அது தெரியாது. ஒருத்தர் சொன்னாலும் கேழ்க்குறவருமல்ல. முசே தெலார்ஷு மயக்கத்திலே யிருக்குறார். அவனுக்கு யெது யெப்படிப் போனாலும் தனக்கு ஆதாயம் கூடிவந்தால் சரியென்று பார்க்குறபடியினாலே துரையினுடைய மகிமைப் பிரதானம்

ஒன்று நாசற் சங்குவை கொன்ற பிற்பாடு வந்து யிருந்ததை யின்றுடனே சரியாய்ப் போக்கடிச்சுத் தீத்துப் போடுவிச்சான். யிப்படி பிரான்சுக்காரருக்கு பாதுசா கூட பயப்பட்டுக் கொண்டிருக்கிறானென்குற பேருக்கும் (பேரையும்), பிரான்சுக்காரர்களுடைய குடிகள் போலே யாங்காட்டும் துலுக்கர் யென்குற கீர்த்தியையும் போக்கடிச்சு தீத்துப்போட்டான். அப்படி போற காலம் வராமல் பிரபுவுக்கும் நடத்த புத்தி வராது. சொல்லி செய்விக்குற முசே தெலார்ஷுக்கும் புத்தி அப்படியே தோத்தி செய்விக்குறான். ... அனுபவம் அறிந்தவனுக்கு யிந்த புத்தி வந்ததென்ன வென்றால், ராச்சிய லக்ஷ்மி பிடிச்சுயிருந்தது முசே துப்பிளேயிக்குடனே போறதுக்கு பிரகஸ்பதிச் சக்கரம் அவன் பிரயாண அறி குறிக்குச் சரியாய் யிருந்தபடியினாலே, அதின் பிற்பாடு அதுக்குத் தக்கதாய் பழய குருவாசனையைப் பிடிச்சுதென்று எண்ணிக் கொண்டேன். விஸ்தரிச்சு யெழுத வேண்டியதில்லை.[1]

### *1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 6; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 24; புதவாரம்*

திரிச்சிராப்பள்ளியிலிருந்து வந்த பவுன்சு பொம்பை அண்டையிலே யிறங்கியிருந்தது. மழையினாலே வண்ணாந் துறை யிலே வந்து சேர்ந்து நனைஞ்ச பிடவைகளை யெல்லாம் கிட்டங்கியிலே போட்டு முடிப்போட்டார்கள். வெள்ளைக்காரர் சோராவாரி (கொள்ளை, தொல்லை) ரொம்ப வென்று சொன்னார்கள். பெண்டுகளையும் பிள்ளைகளையும் பண்ணுகிற சோராவாரி மிதமில்லை யென்று சொன்னார்கள். பட்டணத்திலே தனித்தனி (ஒவ்வொருவனுடைய) துரைத்தனங்களும் அபந்தரையும் (தொந்தரையும்) காகிதத்திலே யெழுதமுடியாது. அதில் அவசியம் மாத்திரம் யெழுதி வைத்தேன்.

### *1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 9; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 27; சனிவாரம்*

இத்தனாள் பகலைக்கு மேலாக நாலரை மணிக்கு வண்ணாந் துறையிலே யெறங்கி யிருக்கிற தண்டு பார்க்க முசே கொதே வருகுறாரென்று சொன்னார்கள். ஒருவேளையிலே பிடவை பிரஸ்தாபம் நடக்கும், யிதைத் தொட்டு வேலை தவக்கமாய்ப் போனதுமல்லாமல், மரங்களைக் கெட்டணை போடுறதை (மர முத்திரைகள்) பூமியிலே போட்டு பொதைச்சுப் போட்டுவைத்தார்கள். அது கட்டணை (முத்திரை) போட பரிச்சேதம் உதவாது (வீணாயிற்று). அப்பால் கடசார் முடியமாட்டாதென்று

[1] ரகரத்தை றகரமாகவே பலவிடங்களிலும் எழுதியுள்ளார்.

(இது விளங்கவில்லை) சொல்லுவோமென்று நானும் அங்கே போனேன். வண்ணாந் துறை விசாரிக்குற முசே றேனும் (M. Renault) வந்தான். நாங்கள் போய்ச் சேந்தவுடனே, பெரிய துரையாகிய முசே கொதே, அவர் தம்பி முசே குலுவேத்து வகையரா மத்த சனங்களுடனே ஆறு குதிரைகள் கட்டின வட்டியின் பேரிலே வந்தார். யிவரைத் தெத்துவாசல் மட்டுக்கும் ஒரு கும்பினீர் சொலுதாதுகளும் யிறநூறு சிப்பாயிகளும் ஒரு கொடியும் எதிரே போயழைத்து வந்தார்கள். வெள்ளைக்காரர்க் குதிரையார்கள், யிப்பறம் அந்தலுலே யிருந்து (கொட்டாய்களிலே இருந்து) கூட அழைத்து வந்தார்கள். ஆயிரத்தி நானூறு சொலுதாதுகளும் ஆயிரத்தன்னூறு ரெண்டாயிரம் சிப்பாயிகளும் துப்பாக்கிகளை யெடுத்துக் கொண்டு வரிசை நின்றார்கள். அந்தஸ்தாம்படியே துரை வரச்சே அவரவர் ஆசாரம் பண்ணினார்கள். மினுத்து (சிறிய–minute) பீரங்கியினாலே யிருபத்தோரு வேட்டு முதல் வரிசையிலே வரச்சே சுட்டான். அப்பால் வெள்ளைக்காரரிருக்கிற வரிசையே வரச்சே அந்த பீரங்கியிலே தானே யிருபத்தோரு பீரங்கி சுட்டான். அப்பால் பின்னையும் சேத்து உரப்பாய் – பெரியதாயிருக்குற பீரங்கி வண்ணாந்துறை வாசற்படிக்கு நேரேயிருந்தது–அதிலே யிருபத்தோரு வேட்டு சுட்டான். அப்பால் யிந்த வரிசை யெல்லாம் பார்த்துக்கொண்டு உள்ளே னொழைஞ்சார். அப்போ யிருபத்தோரு வேட்டு சுட்டான். அப்பால் உள்ளே நுழையச்சே நானும் முசே றேனும் யெதிரே போய் நின்று ஆசாரம் பண்ணினோம். தலையை வளைத்து ஆசாரம் பண்ணினார். அப்பால் யெங்கும் பார்த்துக் கொண்டே போனார். நாங்களும் அந்த சேத்திலேயும் நரகிலேயும் கூடப் போனோம். அவரும் ஒன்றும் ஒருத்தரையும் கேட்டதுமில்லை, ஒருத்தரும் உத்தாரமும் சொன்னதுமில்லை. பார்த்துப் போட்டு வெளியே பிறப்பட்டு உடனே அந்த வாசற்படி அண்டையிலே யிருக்கிற பெரிய பீரங்கியினாலே யிருபத்தோரு வேட்டு சுடச்சே, யிவர் கிட்டப் போய்ப் பார்த்து யிப்பறம் வந்த பிற்பாடு சரியாய் யிருபத்தோரு வேட்டும் சுட்டார்கள். அப்பால் யிப்பறம் வந்து அசோக சாலை அண்டையிலே நின்ற உடனே பின்னை ஒரு சின்ன பீரங்கி, மினுத்துப் பீரங்கியினாலே, யிருபத்தோரு வேட்டு சுட்டான். யிவர் நின்ற விடத்திலே வெள்ளைக்காரர் வரிசையாம்படியே திருப்பி யிவர் நிற்குற யிடத்தை சுத்தினாப்போலே வரிசை யெல்லாம் நடந்து அப்பால் அவரைச் சுத்தினாப்போலே பழயபடி டிக்கானாவிலே (இடத்திலே) போய் நின்றார்கள். முசே செந்திலாசு (M. Saint Aulas) என்குறவன்– திரிச்சிராப்பள்ளியிலிருந்து பவுன்சுக்கு கொம்மாந்தாரிட்டவன் – முசே ஒமோ (M. Aumont) முதலான ஒப்பிசியால்மார், குதிரைகள் பேரிலே கத்திகளை உருவிக்கொண்டு, குதிரை சுவார்கள் யெல்லாம் வரிசையாய் பிறப்பட்டார்கள். யிதை யெல்லாம் பார்த்து வண்டியின் பேரிலே யேறிப்

போகச்சே யிருபத்தோரு வேட்டு பீரங்கி சுட்டார்கள். அப்பால் குதிரைச் சுவார்கள் சிப்பாயிகள் வகையிரா, யிதுக்கு சறுதார் முசே செந்திலாசு வகையிரா, ஒபிசியால்மார்கவெல்லாம் குதிரைகள் பேரிலே, குதிரை திறகோம் (dragoons) சுவார்களும் சென்னப்பட்டணம் வாசற்படி மட்டுக்கும் வந்து சிறிது குதிரைக்காரர்கள் கோட்டை மட்டுக்கும் போனார்கள். நானும் யென் காசாக் கச்சேரியே வந்து அப்பால் யெட்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் காலத்தாலே பொழுது கட்டி அப்பால் சூரியன் யேழு மணிக்கு மேல் பிரகாசமாச்சுது. நான் கோட்டைக்குப் போன விடத்திலே முசே கொதே அவர்கள் கோட்டைக்கு வெளியே கீழண்டை வாசற்படி அண்டையிலே பாறுபாவல் (பாறுகாவல் – guards) மாத்துற விடத்திலே வந்து பார்த்துக் கொண்டிருந்தார். அங்கே நானும் போயாசாரம் பண்ணினேன். அவரும் வளைத்து (தலை வணங்கி) ஆசாரம் பண்ணினார். அப்போ எல்லப்பிள்ளை யிருந்து கொண்டு, ஊரிலே வெள்ளைக்காரர் சாயங்காலமானால் கத்திகளை உருவிக்கொண்டு வெட்டுகுறதும் குத்துகுறதும் பெண்டுகளை அலங்கோலம் பண்ணுகிறதும் முதலான சம்மதிகளும், கெவுனி வாசலிலே பெண்டுகள் போகச்சே வரச்சே அலங்கோலம் பண்ணுகுற சமாச்சாரம் முதலான சேதிகளும் சொன்னால் துரை தாக்கீது பண்ணுவார் யென்று சொன்னான். முன்னே முசே தெசொசேயுடனே (M. Dusaussaye) சொல்லி, அப்பால் அவர்கள் (மூலம்) சொல்லுவோமென்று சொல்லி முசே தெசொசேயுடனே சொன்னதுக்கு, "நான் தாக்கீது பண்ணுகுறேன், நீர் துரையுடனே சொல்லவாண்டா" மென்று சொன்னான். நல்லதென்று சொன்னேன்.

### *1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 12; பவ வருசம், அற்பிசி மாசம், தேதி 30; செவ்வாயிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போன போது சென்னப்பட்டணத்திலே நொவம்பர் மாசம் தேதி 6 வரைக்கும் ஒரு சீமைக் கப்பல் யிருந்ததென்று சொன்னதுக்கு, துரை மெய்தான் யிருந்த தென்று சொன்னார். முராரி ராயன் வெங்கடகிரி யென்குற துற்க்கமிருக்குது, அவன் கோட்டை, அதிலே போய்ச் சேந்தானென்று கபுறு யிருக்குதென்று சொன்னதுக்கு, மெயிதான் நான் அறிவேன் யென்று சொன்னார். அப்பால் பட்டணத்திலே வெள்ளைக்காரர்கள் பெண்டுகளைச் சோராவரி பண்ணுகிறது, கெவுனி வாசலிலே தண்ணீர் கொண்டு வருகுற பெண்டுகள் முதலான பேர்களை ஸ்தனியங்களைப் பிடிக்குறதும், சோராவாரியாய்ப் பண்ணுகுற அலங்கோலம் யெல்லாம் சொல்லி, ஆண் பிள்ளைகளையும் குத்துறதும் வெட்டுறதும், கடைகளிலே வந்து சோராவரி பண்ணுறதும், காசுக் கடைகளிலே சோராவரி

பண்ணுறதும், வண்ணாந் துறையிலே வேலை நடவாமல் யிருக்குற சம்மதிகள், கெட்டணை மரங்களை பொதைச்சுப் போட்டும் பிடிங்கிப் போட்டும் நடத்தி, ராத்திரி சோராவரி யெல்லாம் சொன்னதுக்கு, பட்டணத்திலே சோராவரி பண்ணுத படிக்கி முசே சேந்திலாசையும் முசே பிஷோவையும் (M. Pichard) அல்மாஞ்ஞு (ஜெர்மானிய) பவுன்சு சறுதாறுகளையும், சொலுதாதுகளை சாயங்காலமானால் வெளியே பிறப்படாமல் தாக்கீது பண்ணச் சொல்லி, வண்ணாந்துறைக் காரியத்துக்கும் முசே செந்திலாசுக்குத் தாக்கீது பண்ணிச் சொல்லி, அங்கே யிராமல் அனுப்பிவிடுகுறோம் யென்று சொன்னார்.

இத்தனாள் பகலைக்கு மேலாக சலாபத்து சங்கு (இருக்கும்) முசே புசி அறமாத்துக்குப் (படை முகாம், தண்டு) போகத்தக்கதாக முசே லாசு கொமாந்தாமும், அலமாஞ்சுக்காரரிலே நூறு பேர்களும் பிரான்சுக்காரரிலே நூறு பேர்களும், ஆக யிறநூறு சொலுதாதுகளையும் பயணமாக்கி, நூறு சிப்பாயிகளும் கூடப் பயணமாய்ப் போய் நம்முடைய சாவடியிலே யிறங்கிப் போனார்களென்றும், வினாயகப் பிள்ளை அவர்களைப் பயணம் பண்ணி அனுப்பிப்போட்டு வரப் போனான் யென்றும் கபுறு வந்து சொன்னார்கள்.

***1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 13; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 1; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கு முசே கொதே அவர்களைக் கண்டு பேசப் போனவிடத்திலே அவர் மேலே அலமுசு சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அப்போ நான் போயாசாரம் பண்ணினேன். அவரும் அவ்விடத்தில் ஆசாரம் தலை வளைத்தார். அப்பால் முராரி ராயன் வக்கீல் கிருஷ்ணமாச்சாரி யென்கிறவன் வந்து, முராரி ராயன் காகிதமொன்று கொண்டு வந்து கொடுத்தான். அதை துரை வாங்கிக் கொண்டார்.

அப்பால் கும்பினீர் வர்த்தகர் கோந்திராத்துப் (காண்ட்ராக்ட்) பணம் கேழ்க்க வேணுமென்று வந்தார்கள். செக்கிடி[1] (Sekkidi) கில்லேதாரன் குலாம் ரசூல் கான் பிள்ளைகள் ஒரு சீரொப்பாவும் காகிதமும் அனுப்பியிருந்தார்கள். அந்த சீரொப்பாவும் குடுத்து, காகிதமும் படிச்சுச் சொன்னதுக்கு, உபசாரமேயல்லாமல் காரியம் யெழுதி யிருக்க யில்லையா யென்று கேட்டார். நீர் வந்ததுக்கு மோபார்க்குபாதியும் யெழுதி, உமக்கு சீரொப்பாவும் அனுப்பிவிச்சார்கள் யென்று சொன்னேன். அதுக்குப் பதிலுத்தாரம் உபசாரமா யெழுதிக் குடுக்கவேணும், யெழுதிக் குடுங்கோளென்றும் சொன்னார்.

---

[1] இது மதுரை மாவட்டத்திலுள்ள சாக்குடியாக இருக்கலாமென்று ஆங்கிலப் பதிப்பில் அடிக்குறிப்புள்ளது.

அப்பால் முராரி ராயன் காகிதம் குடுத்து படிச்சுச் சொல்லச் சொன்னார். அதிலே யெழுதியிருந்த வயணம்: தாமிந்த பிராந்தியங்களுக்கு வந்து வேலூர் வகையிரா கில்லேதார் சம்மதி பார்த்துக் கொண்டு (அவர்களிடம் பணம் பறித்துக்கொண்டு), ஒரு மார்க்கமாய் தீத்துக் கொண்டு, யென் தேசத்துக்குப் போறோமென்றும், உங்கள் சீர்மையை யெங்கள் குதிரைக்காரர்கள் தீண்டாமல் திட்டம் பண்ணி நடப்பிச்சுக் கொண்டே னென்றும், தங்கள் பணத்தை சீக்கிறமாய் குடுத்து தங்கள் வைக்கீலை(யும்) மனுஷரை(யும்) கூடக் கூட்டி அனுப்பச் சொல்லியும், முசே துப்பிளேயிக்சு பிரான்சுக்காரர் சொன்ன வாக்கு பிசகாமல் நம்பி (நடந்து கொள்வார் என்று) மெனத்துப் பண்ணினோ மென்றும், முசே துப்பிளேக்சு சீமைக்குப் போனார், அந்த யிடத்துக்கு தாம் யேற்பட்ட படியினாலே, தம்முட (உம்முடைய) பேரிலே பாரத்தைப் போட்டுத் தாம் (நீர்) தீத்து அனுப்பினபடிக்குச் சம்மதிச்சுக் கொள்ளுகிறோம் யென்றும் யெழுதியிருந்தது. யிந்த வயணம் சொன்னதுக்கு, பிரான்சுப்படுத்திக் கொண்டு வந்து குடுக்கச் சொல்லிச் சொன்னார். நல்லதென்று வாங்கிக் கொண்டோம்.

அப்பால் துறையூர் ரெட்டி யெழுதின காகிதத்தைக் குடுத்து படிச்சுச் சொல்லச் சொன்னார். அதிலே யெழுதியிருந்த வயணம்: "முன் பாப்பய்யப் பிள்ளையும் நந்திராசாவும் முசே மென்வீல் கொம்மாந்தாமும் யெங்கள் கையில் மூணு லக்ஷம் ரூபாயும் வாங்கிக் கொண்டு, யெங்கள் சமஸ்தானத்தையும் முழுக்கடிச்சுப் போட்டார்கள். யிதின் பிற்பாடு நீங்கள் வந்தீர்கள். யினி மேல் கலாபம் அடங்கிப் போய் ராச்சியமும் நாங்களும் சுகப்படுவோம் யென்று நம்பியிருக்கிறோம். யிப்படி யிருக்க முசே மேசென் கொமாந்தாம் உத்தாரப் படிக்கி பரமானந்தப் பிள்ளை வந்து, 'புது துரை வந்தார், அவருக்கு முப்பதினாயிரம் ரூபாய் வெகுமதி குடுக்க வேணு'மென்று வந்து போராடினார். கும்பினீருக்குப் பயந்து அதுக்கும் ஒப்பிக் கொண்டு சிறிது பணமும் செலுத்தினோம். மத்தப்பணம் செலுத்திப் போடுறோம். யிப்படி யிருக்க நந்திராசா வரதா ரெட்டி யென்று ஒருத்தனைக் கையில் பிடிச்சுக் கொண்டு, ராணுவு சேவுகம் பண்ணிக் கொண்டு, யெங்கள் பேரிலே சண்டைக்கு யெத்தனம் பண்ணுகிறார். யெங்கள் சமஸ்தானம் பெகு நொந்து போய் பெகுசாய் யிறங்கிப் போயிருக்கிற படியினாலே யெங்கள் வழிக்கி வராமல் நந்திராசாவுக்கு ஒரு காகிதமும் முசே மேசெனுக்கும் ஒரு காகிதமும் யெழுதி அனுப்ப வேணும். (எல்லாம்) யெங்கள் வக்கீல் கஸ்தூரி ரங்கய்யர் முகவார்த்தையிலே தெரியவரும் (நேரிலே சொல்வார்)" யென்று யெழுதியிருந்தது. யிந்த வயணமாம்படியே சொன்னதுக்கு, பிரான்சிலே யெழுதிவரச் சொல்லிக் குடுத்து, பழஞ் செஞ்சியாருக்கு சீரொப்பாவும் காகிதமும் வந்ததுக்குப் பதில் காகிதம் உபசாரமா யெழுதிக் குடுக்க

யில்லையா வென்று கேட்டார். "அவர்கள் காரியக்காரனை முசே தெலார்ஷுடனே பேசித் தீத்துக் கொள்ளச் சொல்லிச் சொன்னீர்கள் அல்லவா? அது தீர்ந்த பிற்பாடு அவர்கள் ஊருக்குப் போகச்சே யெழுதிக் குடுக்கிறோ" மென்று சொன்னதுக்கு, "உபசாரமா யொன்று யெழுதிக் கொடுங்கோள்," யென்று அவர்கள் காகிதத்தை திரான்சிலிட்டு பண்ணக் குடுத்தார்.

அப்பால் முதாமியா மருமகன் அயிதர் கான் காகிதத்துக்கு பதில் காகிதம் (எழுதச் சொன்னார்). "முதாமியா சரீரத்தை யெடுத்துக் கொண்டு வந்து நாகூர் சேர்க்கிறதுக்கு செஞ்சி கில்லேதாரன் பேருக்குக் காகிதம் யெழுதிக் குடுத்தபடிக்கு சரீரம் வந்து சேர்ந்துயிருக்குமே; உங்களுடைய ஞாயத்துடனே சேந்த விவகாரத்திலே, நியாயமானபடிக்குத் தீற்குற வேளை வந்தபோது தீத்துப்போடுகுறோமென்று," உபசாரமா யெழுதி அனுப்பிவிடச் சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கி யெழுதி அனுப்பிவிக்குறோமென்று சொன்னோம்.

அப்பால் அரியலூரானுக்குக் காகிதம் யெழுதி அனுப்பச் சொன்ன வயணம்: "முசே சேந்திலாசு வந்து கேட்டால் (பணம் கேட்டபோது) யேன் குடாமல் போனீர்கள்? முசே மேசென் வக்கீலை அனுப்பிவிச்சால் அவனை யேன் அடிச்சீர்கள்? உங்களை ஆர் பணம் குடுக்க வாண்டாமென்று சொன்னவர்கள்? கும்பினீர் சேவுகர் வந்தவர்கள் ஆர்?" யென்றும், அது வயணம் யெழுதி அனுப்பச் சொல்லி தாக்கீதுக் காகிதமொன்று யெழுதச் சொல்லி, மத்தலப்பை ஒரு துணுக்கையிலேக் குறித்துக் குடுத்துப் போகச் சொன்னார்.

முராரி ராயன் வக்கீல் காகிதம் குடுத்தானே யென்று சொன்னதுக்கு, "அவர்களை ஊருக்குப் போகச் சொல்லு; அவர்களோட யெசமான் கணவாய் யேறிப் (கடந்து) போனான். அப்படியே போகலாமென்றும், உபசாரமாய் சினேகம் மறவாமல் நடப்பிக்கச் சொல்லியும், மத்த சமாச்சார மெல்லாம் உங்கள் வக்கீல் சொல்லத் தெரியவருமென்றும் எழுதி ஒரு காகிதம் குடுத்துப் போகச் சொல்லிவிடவும். யிவ்வளவு காரியம் என் நிமித்தியம் என்னண்டைக்கு வரவேண்டிய தென்ன? நீர் தானே சொல்லிப் போகச் சொல்லு" மென்று துரை சொன்னார்.

பழய துரை முசே மறுக்கி துப்பிளேயிக்சுவினுடைய ஆனைகள் ஒன்பது ஆனைகளிருந்ததை சம்புதாஸ் குமாஸ்தாவும் குண்டூர் பாலி செட்டியும் நாற்பத்தையாயிரம் ரூபாயாய் முசே தெலார்ஷு, முசே தெபொசேத்து கையில் வாங்கி, சலாபத்து சங்கு தண்டிலே விக்க, முசே லாசு பிறகே அனுப்புறதாய் சேதி சொன்னார்கள். யிதல்லாமல் புது துரை

முசே கொதேயிக்கி நந்திராசா குடுத்த ஆனை ஒன்று, சந்தா சாயபு மகன் குடுத்த ஆனை ஒன்று, ஆக ரெண்டு ஆனை கூட வாங்கி யித்துடனே கூட அனுப்புறதாய்ச் சொன்னார்கள்.

*1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 15; பவ வருசம், காற்த்திகை மாசம், தேதி 3; சுக்கிறவாரம்*

இத்தனாளும் நேத்தய தினம் பார்க்க அதனமாய் மழை வருஷிக்கத் துவங்கினதினாலே வீட்டிலே யிருக்கச்சே துரை அழைக்குறாரென்று வந்து அழைச்சார்கள். போனவிடத்திலே மதனாந்த பண்டிதனையும் சேவுகன் போயழைத்து வந்தான். அப்பால் நாங்கள் ரெண்டு பேரும் முசே கொதே ஒண்டியா யிருக்கச்சே போய்க் காண்பிச்சுக் கொண்டோம்.

நந்திராசா வுடைய காகிதத்தைக் குடுத்தார். அதைப் படிச்சுச் சொன்னதுக்குப் பிரான்சுப் படுத்திக் கொண்டு வந்து குடுக்கச் சொன்னார். நல்லதென்று அதை வாங்கிக் கொண்டோம். அதிலே யெழுதி யிருந்த மத்தலப்பு: "நீங்களும் யிங்கிலீசுக்காரர்களும் ஒடம்படிக்கை சமாதானத்துக்கு பேசத் துவக்கினால் ஒலாந்தாக்காரர்களையும் தின்மார்க்கர்களையும் மத்தியஸ்தமாய் வைத்துக் கொண்டு பேச வேணும். அப்போ உங்களுக்கு யிதாயத்து மொகதின் கான், சலாபத்து சங்கு, சந்தா சாயபு யெழுதிக் கொடுத்த பர்வானவைக் காண்பிச்சால், யிங்கிறேசுக்காரர்களும் நாசறுசங்கு பர்வானாவையும் காசுதின் கான் பர்வானாவையும் காண்பிப்பார்கள். யிதல்லாமல் இவை யெல்லாம் பார்த்து மத்தியஸ்தர் தீர்த்தால் சீக்கிறமாய்த் தீரும். யிதல்லாமல் அவர்கள் மமுதல்லி கான் கக்ஷியும் நீங்கள் (எங்கள்) கக்ஷியும் ஆகப் பேசினால் யெங்களுக்கு மமுதல்லி கான் திருச்சிராப்பள்ளிக் கோட்டைக்கும் அதனுடைய சீமைக்கும் (எங்களுக்கு) யெழுதிக் குடுத்திருக்கிற பெலாப்புனாலே (பர்வானாவினால்) மமுதல்லி கான் செயிக்கமாட்டான். யிதுகள் யிப்படிப் பேசுகுறோம் யென்று ஒன்றும் யெனக்கு யிந்த மட்டுக்கும் யெழுதி அனுப்பினதில்லை. யிதெல்லாம் அறிந்து நடத்த வேண்டிய தென்றும், மத்தியஸ்தம் வைக்காமல் நீங்களும் இங்கிறேசுக்காரர்களும் பேசினால் ஒரு கல்ப்ப கோடி காலத்திலேயும் தீரப்போறதில்லை யென்றும், யிதுகளுக்கெல்லாம் யெனக்குத் தோத்தினதை நானெழுதினேன். சுவாமி உமக்கு அதிசெயமாய் புத்தி குடுத்தப்படியினாலே உமக்கு நன்றாய்த் தோத்தி யோசனை பண்ணியே யிருப்பீர். அந்த வயணம் தெரிய யெழுதியனுப்ப வேணு," மென்று யெழுதியிருந்தது. யிதைத் தான் படிச்சுச் சொன்னதும் அவர் பிரான்சு பாஷையிலே யெழுதிவரச் சொன்னார். அந்தப்படிக்கி யெழுதிக் கொண்டு வந்து அந்த வயணம் தெரிஞ்சிருக்க சாரம் யெழுதி விச்சேன்.

அப்பால் யென் கையிலிருந்த முராரி ராயன் காகிதம் திரான்சிலிட்டும் அந்த பாரிசுக் காகிதமும் (மூலக் காகிதம்) துறையூர் ரெட்டிக் காகிதமும் அதை பிரான்சு பாஷைப் படுத்தி யெழுதினதும், செக்கடி கில்லேதாரன் குலாம் றசூல் கான் பிள்ளைகளனுப்பின காகிதமும், அதை பிரான்சுலே எழுதினதையும், பழஞ் செஞ்சியானுக்குப் பதிலுத்தாரம் யெழுதினதுக்கு பிரான்சிலே யெழுதினதும், முதாமியா அக்காள் மகன் அயிதர் கானுக்கு யெழுதின பதிலுத் தரத்துக்கு பிரான்சிலே யெழுதினதும், அரியலூர் நயினாருக்கு யெழுதின தாக்கீது காகிதத்தை பிரான்சிலே யெழுதின காகிதத்தையும், முசே கொதே கையில் குடுத்து, யிவர்களுக்கு யெழுதின பதிலுத்தாரத்துக்கு யெல்லாம் மொகறு பண்ணிவிச்சுக் கொண்டு, அவருத்தாரப்படிக்கி அவரவர்கள் காகிதம் அவரவர் மனுஷர் கையிலே குடுக்கச் சொல்லி மதனாந்த பண்டிதன் கையிலே குடுத்து, அதிலே அரியலூராருக்கு யெழுதின தாக்கீது காகிதத்தை மாத்திரம் துரை கையில் குடுத்த போது, யென்னைத் தானே அரியலூருக்கு அனுப்பச் சொன்னதினாலே அதை நான் வாங்கிக் கொண்டேன்.

### *1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 17; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 5; ஆதிவாரம்*

நான் சென்னப்பட்டணம் வாசற்படி கடந்து வரச்சே வினாயகப் பிள்ளை, கிருஷ்ண ராயர் ரெண்டு பேரும் பல்லக்கு யேறிக் கொண்டு, முசே லாசு—அயிதராபாத்துக்கு சலாபத்து சங்கு தண்டுக்குப் போற முசே லாசு—வகையிரா பவுன்சு பொட்டி பத்தன் சாவடி யண்டையிலே யிறங்கி யிருக்கிற யிடத்துக்குப் போகப் பயணம் போறார்களென்று வந்து கபுறு சொன்னார்கள். கிருஷ்ண ராயர் முசே லாசு பிறகே அயிதராபாத்துக்கு சம்பளத்துக்குப் போறவர். வினாயகப் பிள்ளை சதிரங்கப்பட்டணம் மட்டுக்கும் முசே லாசு கூடப் போய், அப்பால் அவ்விடத்திலிருந்து அவர்களை அனுப்பிவிச்சுப் போட்டு வரச்சொல்லி துரை சொன்னாரென்று போறாரென்று சொன்னார்கள். யிதல்லாமல் பின்னை ஒரு சேதியும் சொன்னார்கள். முசே லாசு பிறகே வினாயகப் பிள்ளையை அயிதராபாத்துக்கு கூடப் போகச் சொன்னதாயும், நான் போற வாடிக்கையில்லை யென்றும் (மத்த) மனுஷர் (யாரையாவது) போகச் சொல்லுகிறது (சொல்லுங்கள்), நானிங்கே யிருந்து காரியம் பார்க்கிறதென்று சொன்னாப்போலேயும், "யிருக்கிறவர்கள் காரியம் பார்ப்பார்கள், நீ போ" வென்று வினாயகப் பிள்ளையை (துரை) கோபம் பண்ணினாப்போலேயும், அதின் பேரிலே முசே தெலார்ஷுவைக் கொண்டு சொல்லி விச்ச விடத்திலே சதுரங்கப்பட்டணம் மட்டுக்கும் போய் வரச் சொல்லிச் சொன்னதாகவும், அதின் பேரிலே சதுரங்கப்பட்டணம் மட்டுக்கும் போய் வாரதாய்ச் சொன்னார்கள்.

இத்தை நாள் முசே கொதே கபினேத்தே போனார். அப்பால் முசே கொற்னேத்தும் நானும் அனுப்பி விச்சுக்கொண்டு வரச்சே, முசே கொற்னேத்துச் சொன்னது: "நீர் கும்பினீருக்குப் பவழச் சம்மதி (விற்பனை சம்பந்தமாக) நிலுவை[1] குடுக்க வேணுமல்லவா? யிது வாங்கி துலைக்கி (தூரத்து இடங்களுக்கு) அனுப்பின பிற்பாடல்லோ யிங்கிறேசுக்காரர் கலாபம் வந்ததும், அதின் பிற்பாடு அன்வறதிகானை வெட்ட பவுன்சு அனுப்பினதும், அடுத்த அஞ்சாறு மாசத்தைக்கு யெல்லாம் நாசறு சங்கு வந்ததும், அப்பால் அவன் செத்ததும், அப்பால் யிதாயித்து மொகதீன் கான் வகையிரா செத்ததும், அப்பால் திரிச்சிராப்பள்ளியிலே சந்தா சாயபு வகையிராக்கள் செத்ததும், யிந்த மட்டுக்கும் கலகம் துடங்கி யிருந்த படியினாலே குடுக்கல் வாங்கல் கேழ்க்கவும் கூடாமல் போச்சுது. கலகத்தைத் தொட்டு ராச்சியம் அழிஞ்சு பாழானபடியினாலே, யெங்குத்து (எனக்கு வரவேண்டிய) நிலுவை அங்கங்கே முழுகிப் போச்சுதென்று வயணமாய்ப் பித்திசாம் யெழுதிக் குடுத்தால் தள்ளுப்பட்டுப்போம். யிதல்லாமல் முசே பொலோ போன துரைத்தனத்தாரன் (துய்ப்ளே) பேரிலே சரிப்போனாப் போலே யெல்லாம் (புகார்) சொல்லுகிறான். யின்ன மொரு துரைத்தனம் வந்தாலிப்போ சொல்லுகிற பேர் மூக்கெல்லாம் ஒடைஞ்சு போம்" யென்று சொல்லி, "நீ பித்திசா மெழுதினதை யெனக்குக் கொண்டு வந்து காண்பி" யென்று சொன்னான். நல்லது யென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

***1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 23; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 11; சனிவாரம்***

இத்தைனாள் கேழ்விப்பட்ட சேதி : நேத்து காலத்தாலே (நேத்து காலை) கோன்சேலியேர் (கவுன்சில்) கூட்டத்திலே சாராயக் கிட்டங்கிக்கு மேலண்டையிலே யிருக்கிற தண்ணீர் ஒடைக்குக் கீழ்ப்புறம் யெல்லாம் வெள்ளைக்காரர்களுக்குத் தமிழர் வீடுகள் யிருக்கிறதை விட்டு விடுகுறதும், அந்த வீடுகளுக்குக் கிரயம் வெள்ளைக்காரர்கள் வீடுகள் கட்டிக் கொள்ளப் போறவர்கள் குடுக்கிற தென்றாப் போலேயும், யிங்கே வீடுகள் கட்டியிருந்த பேருக்கு யெல்லாம் பவழம் (பவழப்) பேட்டை அந்த வட்டங்களிலே யிருக்கிற நிலங்கள் தோட்டங்களைப் பார்த்து பதிலுக்குக் குடுக்குறது யென்றும், யிந்த அத்துக்கு வெள்ளைக்காரர்கள் பிரபஞ்சமாயிருக்க (தனியாக இருக்க) யிதுக்கு செவர் (சுவர்) ஒன்று போட்டு மூணு வாசற்படியிட (வாசல் அமைக்க) யிந்தப் படிக்கிக் கோன்சேலிலே தீத்து ... யெழுதினதாய்ச் சொன்னார்கள். பட்டணம்

[1] பவழ நிலுவை துய்மா நாள் விவகாரம். மேலும், சகலாத்து வியாபாரத்திலும் நிலுவை கொடுக்க வேண்டும் என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

முன்னையே நொந்து போய், பட்டணத்து சனங்கள் பத்து வருஷமாய் யிங்கிரேசுக்காரர்கள் கலகம் துவக்கினது முதல் கொண்டு வியாபாரங்கள் யில்லாமல் .... நொந்து போயிருக்கிறபடியினாலே பெகு சனங்களுக்கு யிக்கட்டும் கிலேச முமாயிருக்கிறதும் அல்லாமல், பட்டணத்துக்கு சனி வீக்ஷணம் யிருக்கிறபடியினாலே, பட்டணத்து சனங்களுக்குக் கஷ்டம் காணுமென்று சோசியமும் சொல்லியிருந்தபடியினாலே, அப்படிக்கி பழய புதுச்சேரி யென்கிறது ... அனாதிப் பட்டணமாகி யிருந்தது மல்லாமல், பெகு குடிகள் பஞ்ச மயமாய் யிருக்கிறபடியினாலே, பெகு சனங்களுக்கு யிக்கட்டு யிதல்லாமல், பவழப்பேட்டை, மீராப்பள்ளி முதலான யிடங்களிலே யிருக்கிறவர்களுடைய நிலத்தை வாங்கிக் கொண்டு யிவர்களுக்கு விடுகிறபடியினாலே பட்டணத்திலே உள்ள சனங்களுக்கெல்லாம் ஏக கஷ்ட்ட காலம் பிடிச்சு தென்றும், முசே லெனுவார் யிந்தப் பட்டணத்தை மாமுறு (அழகு) பண்ணி, குடிசைகளா யிருந்த வீட்டை யெல்லாம் கல் வீடாக்கினது மல்லாமல் பட்டணத்தை, கால் நாழிகை வழி தூரமாயிருந்த பட்டணத்தை, ரெண்டு நாழிகை வழி நிகளமாக்கினார்; அப்படி லக்ஷ்மீகரம் தாண்டவம் ஆடின பட்டணம் யிப்போ மூணு வருஷமாய்ப் பிடிச்சு நாளுக்கு நாள் பீடாய் வந்து யிவ்வருஷம் மழையினாலே பெகு சேதம் வந்து தென்று செனங்கள் சொல்லிக் கொண்டிருந்ததுக்கு புதுச்சேரியிலே யிருக்கிற தமிழர் வீடுகளை யெல்லாம் வெள்ளைக்காரர்களுக்கு விட (வேணும்) யென்று கோன்சேலிலே தீந்தது; (அதல்லாமல்) யிடிஞ்ச வீடுகளைக் கட்டவாண்டாமென்று தமுக்குப் போட்டபடியினாலேயும் செனங்கள் படுகிற தாபந்தத்தைக் காகிதத்திலே யெழுதி முடியாது. ஆனாலும் செனங்களும் சொல்லிக் கொள்ளுகிற சேதியை சுவல்ப்பமாயிருப்பதைத் (சுருக்கமாய்) தெரியும் படியாய் யெழுதிவைத்தேன்.

1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 25; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 13, திங்கள்கிழமை முதல் தினசரி யெழுதத் துவங்கினது.[1]

### *1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 26; பவ வருசம், காற்த்திகை மாசம், தேதி 14; செவ்வாயிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருக்கச்சே, முசே மீரா கோந்துவாரிலேயிருந்து யெழுதிக் கொண்டு

[1] இது ஒரு தனித் தாளிலே எழுதியிருந்ததாய் ஆங்கிலப் பதிப்பு தெரிவிக்கிறது. (ஆனால் இத்தேதிய நடப்புகள் பற்றிய குறிப்பு இல்லை. இதற்கு முன்னும் பின்னும் பல நாள் குறிப்புகள் இல்லை என்பதையும் கவனிக்கவும்.) ஆங்கில மொழி பெயர்ப்புக்குப் பயன்படுத்த நாட்குறிப்புப் புத்தகத்தில் இதனை அடுத்து டிசம்பர் 4–7 தேதிகளுக்கான rough notes இருந்தன என்றும் அது தெரிவிக்கிறது. அவை அடிக்குறிப்புகளாக ஆங்கிலப் பதிப்பில் அந்த அந்த தேதிக் குறிப்புகளின் கீழ் தரப்பட்டுள்ளன.

யிருந்தவன், நான் வந்த சேதி அறிந்து, யென்னை அழைத்து உளுக்கார வைத்துக் கொண்டு, "நாகப்பட்டணம், வேதாறணியம் (மற்ற தெற்கத்தியக்) கரை துறையிலே (பெருங் காத்தடிச்சு) மழை பேஞ்சுது. புதுச்சேரி மட்டுக்கும் சிறிது விடத்திலே காத்தும் மழையும் சேதப்படுத்தின சேதியும், தேவனாம்பட்டணம் கூடலூரிலே மஞ்சகுப்பத்திலே, கெடிலத்திலே ஆத்தோரத்திலே புதுப்பேட்டையிலே[1] – பிரான்சுக்காரர் யிங்கிறேசுக்காரர் கலகத்து நிமித்தியம் உண்டாக்கினது விஸ்தாரமாய் வீடுகள் கட்டி பெரிய மனுஷர்களெல்லாம் குடியிரு(க்கிறது)–ஆறு தண்ணீர் வெள்ளம் வந்து யேகமாய் சலப் பிறளயமாய் கோத்துக்கொண்ட படியினாலே, அவனவன் சீவன் தம்பினால் போதும் யென்று உருப்படிகளைத் தப்பிச்சுக் கொண்டு, மேட்டுப்பக்கம் யிருக்கிற வீட்டுகளிலே போயிருந்தும், வெள்ளைக்காரர் வீடுகள் உன்னதமாய் கட்டியிருக்கிறதிலே போய் சேர்ந்தும் தப்பிச்சுக் கொண்ட(னர்); பிடவை சீலை தட்டுமுட்டுகள் பணங்காசு உடமை உப்பத்தி (முதலியவை) வீடுகளிலே வைத்துப் போட்டு பிறப்பட்டவர்களு முண்டு. சிறிது பேர் நகை, விராகன், உடமைகள் வகையரா யெடுத்துக் கொண்டு பிறப்பட்டது முண்டு. அது போக மத்தப் பேருது பெகு சனங்களுது ஆறு தண்ணீர் பிடிச்சதிலே மண்ணின் கீழே மறைந்து போனதும், ஒருத்தன் வீட்டு தட்டு முட்டுகளுடனே விட்டு ஒதுக்கியும், யிப்படி பெகு அலங்கோலம் கொத்தப்பேட்டையிலேயும் நடந்ததாகவும், அதுக்கு அரை வாசி வண்டிப்பாளையம், திருப்பாதிரிப்புலியூர், கூடலூர் வகையிரா யிடங்களிலே நடந்ததினாலே பெகு சேதங்கள் வந்து தென்றும், பட்டம் பகலில் வெள்ளம் வந்தபடியினாலே செனங்கள் சேதமில்லை யென்றும், யிது நிமித்தியம் ஒருத்தருடமை ஒருத்தரைச் சேர்ந்தால் அவரவருடமையை பிறசங்கம் பண்ணிக் குடுத்து விடுகிறது, குடாவிட்டால் ஆணை அபராதமுண்டென்று தமுக்குப் போட்டார்களென்றும், பறங்கிப்பேட்டையிலே பிரான்சு பெத்திரி, இங்கிறேசு பெத்திரியை ஆறு சாங்கமாய் அடிச்சுக்கொண்டு போச்சுது, ஒலாந்தா பெத்திரி முப்பது அடியிலே (தண்ணீருக்குள்) நிற்குது, அவர்கள் வண்ணாந் துறையில் பெத்திரி கட்ட விருக்கிறார்கள் யென்றும், யிது முதலான பேச்செல்லாம் பேசியிருந்ததுக்கு, நேத்துப் பகல் முசே கொதேக்குப் பறங்கிப் பேட்டையிலே யிருக்கிற வெள்ளைக்காரன் காகித மெழுதி அனுப்பினான். அப்போ மேசை மேலே முசே தெறுஷேயுடனே (M. Dargy)[2] பிரஸ்தாபம் பண்ணிக்கொண்டு, அப்பறத்திலே கட்டுகிறதா யோசனை பண்ணிக் கொண்டுயிருந்தார்கள். நான் சொல்லுவேன் அப்படி (நடக்காது); ஒலாந்தாக்காரர்களுக்கு வியாபாரம் பண்ணுகிற

[1] இது இன்றைய கடலூர் N.T. (New Town)
[2] பிராக்கெட்டில் உள்ளது ஆங்கிலப் பதிப்பில் உள்ளபடி.

பட்டணத்தைக் காப்பாத்தத் தெரியும், அதுக்கு அரை வரிசை இங்கிறேசுக்காரரைச் சொல்லலாம். பிரான்சுக்காரர்களுக்கு வியாபாரம் பண்ணவும் தெரியாது, செனங்கள் பரிபாலனம் பண்ணவும் தெரியாது, பட்டணத்தை விறுத்தி பண்ணி நடப்பிக்கவும் தெரியாது. கோபமே பிறதாபமாய் காரியத்தைக் கெடுத்துப் போடுவார்கள்." அதைத் தொட்டு நானொன்றும் சொல்லாமலிருந்தேன். யிவர்கள் பெத்திரி கட்டினால் மறுபடி யெடுத்துப் போமே அல்லாமல் நிற்குறதில்லை, யென்று பேசிக் கொண்டிரு(ந்தோம்); அல்லாமல் தாப்பித்தாவிலே (ட்ஃபேட்டாத் துணி) பூவெழுதி மெழுக்கு மேல் தோச்சதுகள் முதலான சேதியும், மறுபடி மழை ஆரம்பிச்சது முதலான சேதியும் பேசியிருக்கச்சே, "நீர் யேன் வந்தீர்? நல்ல நாளையிலேயே (மழையில்லாத நாளிலும்) கோட்டையிலே ஒரு காரியத்தையும் காணோம்; யிந்த மழை அடவிலே ஆர் வாறார்கள். அவரேது (துரை) பேசகுறது, நீர் போ," மென்று சொன்னான். நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

***1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 27; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 15; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே (துரை) அலமுசு பண்ணி ஆனவுடனே, யென்னை அழைத்துக் கொண்டு கபினேத்தைப் போய் கபினேத்திலே துறையூரார் அனுப்பின காகிதமிருந்ததைப் படிச்சுச் சொல்லச் சொல்லி கையிலே குடுத்தார். மதனாந்த பண்டிதனில்லை. நான் தானே படிச்சு சமாச்சாரம் யெழுதியிருந்த மத்தலப்பை சொன்னேன். பிரான்சிலே யெழுதிக் கொண்டு வாவென்று சொன்னார். அந்தப்படிக்கி யெழுதிக் கொண்டு வாறே னென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன்.

அதிலே யெழுதி யிருந்த வயணம்: "தாங்கள் வந்த பிற்பாடு நான் சீரொப்பாவும் அனுப்பி வக்கீலையும் அனுப்பி, அதின் பிற்பாடு ஆறு காகிதமும் அனுப்பி விச்சேன். ஒரு காகிதத்துக்கும் பதில் அனுப்பாமல் போனீர்கள். திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்த பாளையக்காரரெல்லாம் மமுதல்லி கான் திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலே யிருக்கிறபடியினாலே அவனைக் கண்டு சேவிச்சுக் கொண்டு யிருக்கிறார்கள். நாங்கள் மாத்திரம் பிரான்சுக்காரர் வசன சுத்தியுள்ளவர்கள், சத்தியவந்தர்க ளென்றும், யிவர்களை அடைக்கலம் சேர்ந்து நடந்து கொண்டால் நாம் சுகப்படலா மென்றும் யிருந்ததுக்கு, யெங்கள் கையிலே மூணு லக்ஷம் ரூபா மட்டுக்கும் நந்திராசாவும் உங்கள் பிரான்சுக்காரர்களும் வாங்கினது மல்லாமல், எங்கள் சீமை யெல்லாம் பாழாக்கி மூணு தரம் பட்டணத்தையும் கொள்ளையிட்டு, பெகு அவஸ்தைப் படுத்தியும் யிப்போதும் சிறிது பணம் குடுக்க வேண்டுமென்றும், நீங்கள் புதுசாய் துரைத்தனம் பண்ணுகிறதுக்கு

வந்ததுக்கு நசர் குடுக்க வேணுமென்றும் கேட்டதுக்கு, யெங்கள் சமஸ்தானம் யெத்தனை நொந்து யிருந்தாலும் பரமானந்தப் பிள்ளை மாரிபத்திலே முசே மேசெனுக்குச் சிறிது பணம் செலுத்தினோம். குறைப் பணமும் செலுத்திப் போடுறோம்.[1] யிப்படி யிருக்க திரும்பியும் நந்திராசா யெங்க ளண்டையிலே யிருந்த மனுஷர்களைப் பிடிச்சுக் கொண்டு, பவுன்சு கூட்டித் திரும்பியும் யெங்கள் பேரிலே தானே ராசகாரியம் (சண்டை) பண்ணி, யெங்கள் சமஸ்தானத்தை வாங்கிக் கொள்ளத் தக்கதாக யிருக்கிறார். யெங்கள் வழி வராமல் படிக்கு நந்திராசா பேருக்கு ஒரு காகிதமும் முசே மேசென் பேருக்கு ஒரு காகிதமும் யெழுதி அனுப்பிவிக்க வேணு" மென்று யெழுதி யிருந்தது. யிதனை மரியதாசை அழைப்பிச்சு அவன் கையிலே குடுத்து பிரான்சு வார்த்தையிலே யெழுதச் சொல்லி யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

### *1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 28; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 16; குருவாரம்*

இத்தை நாள் காலத்தாலே நாம் காரியத்தைக் காண்பிப்போம் (கவனிப்போம்?) யென்று நேத்து துறையூரார்க் காகிதத்தைக் குடுத்து பிரான்சு பாஷையிலே யெழுதிவரச் சொன்னாரே அந்தக் காகிதமும் பிரான்சுப்படுத்தின காகிதமும், முன் நொவம்பர் மாசம் தேதி 16 நந்திராசா அனுப்பின காகிதத்தைக் குடுத்து, பிரான்சுலெழுதி வரச் சொன்னாரே, அந்தக் காகிதமும்–பிரான்சு யெழுதினதும் மழையினாலே குடுபடாமலிந்தது–அதுவும் கூடி துரை கையிலே குடுத்தவுடனே, அதையும் யிதையும் பார்த்துக் கொண்டு துறையூர் ரெட்டிக்கு, "உன் வழி நந்திராசாவும் கொமாந்தாம் முசே மேசெனும் வராமல் படிக்கி நாம் காகிதங்களை யெழுதி அனுப்பிவிச்சோம். நிர்ச்சிந்தை பண்ணாமல் சுகமாய் யிருக்கவும்," யென்று பதிலுத்தாரம் யெழுதிக் கொண்டு வாரும் யென்று சொன்னதுக்கு, நாளைக் காலமே யெழுதிவாறோம் யென்று சொல்லி, நேத்து பவழக்காரர்களை அழைத்து வரச் சொன்னீர்களே அவர்கள் சுரம் கண்டு யிருக்கிறார்கள் என்றும் சொன்னேன்.

### *1754 வருசம், நொவம்பர் மாசம், தேதி 29; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 17; சுக்கிரவாரம்*

பகலைக்கு மேலாக மூணு மணிக்கு துரை சேவுகன் வந்து அழைக்கப் போனவிடத்திலே முசே கொதே தம்பியும் முசே பொயிலோவும் யிருந்து, "உம்மை நாங்கள் துரை உத்தாரப்படிக்கு அழைப்பிச்சோம்.

---

[1] ஆங்கிலேயரும் இப்படித்தான் பாளையக்காரர்களைக் கொள்ளை யடித்தனர். ஆனால் அதனை எழுதி வைப்பதற்குச் சென்னையிலே ஒரு ஆனந்தரங்கப் பிள்ளை இல்லாமல் போய்விட்டார்.

யேது நிமித்திய மென்றால், முசே குயோனேத்து (M. Guyonnet) பெண் சாதியையும் அவன் பிள்ளைகளையும் முசே அல்பேர் (M. Albert) கூட்டிக் கொண்டு போய் பாராவிலே (காவல்) போட்டு வைத்துக் கொண்டு யிருக்கிறானென்று முசே குயினோத்துக்குச் சேதி வந்தது. ஆனபடியினாலே கஞ்சாம் விசயராம ராசாவினுடைய சீர்மையான படியினாலே, விசயராம ராசா பேருக்கு முசே கொதே பேரில் காகிதம் யெழுதி), அந்தப் பிள்ளைகள் ரெண்டையும் முசே மேசென் காகிதமும் மனுஷர்களும் மச்சிலிபந்தரிலேயிருந்து (வருவார்கள்), அவர்கள் வசம் ஒப்பிச்சுப் போடச் சொல்லி காகிதம் யெழுதிவி யென்றார். அந்தப்படிக்கி அவர்கள் முன்பாக மதனாந்த பண்டிதர் கையிலே பாரிசிலே யெழுதி விச்சு, அப்பால் துரை அண்டைக்கு அவர் தம்பி மோகறு போய் கேட்டு வாங்கி வந்து முத்திரை குத்தி குடுத்துப்போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தோம். யிந்தக் காகிதத்தின் பேரிலே போடுறதுக்கு மோகறு அவர் தம்பி கேட்டதுக்கு அவர் தடை சொல்ல, மறுபடி முசே பொலோவுடனே வந்து சொல்ல, முசே பொலோவும் பாரிசிலே யெழுதின மத்தலப்பை ஒரு காகிதத்திலே யெழுதி அனுப்பிச் சொல்லச் சொல்லி அவர் தம்பியுடனே சொல்லி அனுப்ப, அவர் போய் மறுபடி சும்மா வந்து, நாளைக் காவுதென்று சொல்ல, மச்சிலிபந்தர் சோடா (குபால்) யிப்போ போகுதே யென்று திரும்பியும் யென்ன யென்னமோ சொல்லி அனுப்ப, அதின் பேரிலே மோகறு வந்து, காகிதம் மொகறு பண்ணி அந்த க்ஷணம் கொண்டு போய் குடுக்கப்பட்டது. யிப்படி கோன்சேல்காரன் அவனைக் கூட (துரை) நம்பயில்லை. காசு பொறாத காரியம், அதுக்குப் பெரிய காரியம் ஆனால் யெப்படியோ தெரியாது.

## டிசம்பர் 1754

*1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 3; பவ வருசம், காற்த்திகை மாசம், தேதி 21; செவ்வாய்கிழமை*

இத்தை நாள் பாற்குற சாடையிலே யிங்கிறேசுக்காரர்களுக்கும் பிரான்சுக்காரர்களுக்கு மூணு மாதம் ஆயிதம் யெடுக்கக் கவையில்லை, சண்டை மோக்காப்பு பண்ணி (நிறுத்தி) சமாதானம் பேசயென்று ஒடம்படிக்கை பேசித் தீந்து ஒயித்தோபர் மாசம் 11 தேதி முதல் சனேரி மாசம் 11 தேதி வரைக்கும் யென்று ஒரு நிபந்தனையும் பண்ணிக் கொண்டு பிற்பாடு சிப்பாயிகள், பாறுக்காரர்கள், குதிரைக்காரர்கள் வகையரா அங்கங்கே பற்கானாவுகளிலே கும்மக்கு (தண்டு) யிருந்தவர்களை யெல்லாம் பெகு பேர்கள் தள்ளிப்போட்டது (அனுப்பிவிட்டது) மல்லாமல், யிருக்கிற பேர்களுக்குச் சம்பளம் கூட யில்லாமல் ஒன்றரை மாசம் ஒரு மாசம் யிப்படி சேவிச்சும் (கொடாமல்) யிதுகள் தாது பிராது யில்லாமல் நாளுக்கு நாளாய் (அகதியாய்?) வந்ததுகள். அஞ்சாறு நாளாய் நாளுக்கு நாளாய் அவரவர்களை அழைத்து சம்பளம் தீத்துக் குடுக்கிறோம், சம்பளப் பிறதி யெழுதி வரச் சொல்லி (யிருக்கிறோம் என்று இழுத்தடிக்கின்றனர்). அப்பால் லற்கணாவிலே (இருந்த) கும்மக்குகள் (படையினரையும்) பட்டாணிகளையும் கூட்டி மறுபடிக்கும் மக்குக்கு (தண்டுக்கு) பவுன்சு அனுப்பச் சொல்லியும் நடக்குறதாய் சேதி கேழ்விப்பட்டபடியினாலே, யிங்கிறேசுக்காரர்களுக்கும் பிரான்சுக்கார்களுக்கும் சமாதானம் பேசுகிறதில் வித்தியாசம் வந்த சாடை யென்று நினைக்கிறேன். ஆனால் நடக்குற காரியத்தையின் பேரிலே அறிய வேண்டியது.

*1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 4; பவ வருசம், காற்த்திகை மாசம், தேதி 22; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே பறங்கிப்பேட்டையிலே ஆனைகள் கொண்டு வந்து யிறக்கின பட்டாணி வர்த்தகர்கள் அனுப்பின காகிதத்தைப் படிச்சுச் சொல்லச் சொன்னார். அதிலே புவனகிரி பட்டணம் வகையரா கிராமங்கள் வழியே போகவேண்டி யிருக்குது, அங்கங்கே ஆசில் சபராய்க் (சுங்கம் கூடுதலாய்க்) கேழ்க்கிறார்கள், முன்பு இருந்த படிக்கி வாங்கிக் கொள்ளச் சொல்லி யெழுதி அமீலுகளுக்கு யெழுதுங்கள் என்று யெழுதியிருந்தது. இப்படி தாக்கீது பண்ணச் சொல்லி யெழுதியிருந்த மத்தலப்பைப் படிச்சுச் சொன்னதுக்கு, பதிலுத்தாரம் துரை யெழுதச் சொன்னது: "முன் பின் இருந்த படிக்கி

வாங்கிக் கொள்ளச் சொல்லி நாம் கொம்மாந்தாம் பேருக்கு யெழுதி அனுப்பிவிச்சோம். அவர் அமீலுகளுக் கெல்லாம் தாக்கீது பண்ணுவார். நீங்கள் சுகமாய் ஆனைகளைக் கொண்டு வந்து போகலா"மென்று பிறதி உத்தாரம் யெழுதச் சொன்னார். அங்கே தானே யெழுதி மோகறு பண்ணி சேருவைக்காறன் கையில் குடுத்தோம்.

அப்பால் முசே பொலோ அழைத்து, "மூணு சாக்குலே ரூபாய் கட்டினதும் காகிதங்களும் குடுத்து," முசே கொதே உத்தாரம், உம்முட வசத்திலே குடுத்து சீரங்கம், விறுத்தாசலம், செஞ்சி மூணு யிடத்துக்கும் மூணு காகிதமும் மூணு சாக்கு ரூபாயும் அனுப்பச் சொன்னா" ரென்று, சாக்கையும் காகிதங்களும் குடுத்து, ஆயிரத்தி நானூத்தி சில்வானம் யிருக்கிற ரூபாய் சீரங்கத்திலே யிருக்கிற நோவாளிகளுக்கும், அப்பால் அறுநூத்தி நாற்பது சில்வானம் ரூபாய் யிருக்கிறதை விறுத்தாசலத்திலே யிருக்கிற நோவாளிகளுக்கும், யிறநூத்தி நாற்பத் தெட்டு ரூபாய் யிருக்கிறது செஞ்சிக்கும் யென்று வயணம் சொல்லிக் குடுத்தான். அப்போ வேறே ஒரு பிரஸ்தாபம் யில்லாமலிருக்கச்சே, முசே பொலோ யிருந்து கொண்டு "சமாதானம் பேசுகிறார்களே, உன் சாகீரும் உன் குமாரன் அண்ணாசாமி சாகீரும் கில்லாவும் மன்சுபா (மன்சப்–mansab) சாகீரும் உமக்கு யெழுதி யிருக்கிற பற்வானாவைக் காண்பிச்சுத் துரையுடனே சொல்லிக் கொண்டீரா? இங்கிறேசுக்காரர்கள் அல்லவோ கட்டிக்கொண்டார்கள் (அவற்றைப் பிடித்துக் கொண்டார்கள்)!" யென்று கேட்டார்.

"முசே துப்பிளேயிக்சு போன வருசம் மாசி மாசத்திலே (பிப்ரவரி) சதுரங்கப்பட்டணத்துக்கு சம்பாவுலு கோயில் சேஷ்ட்ட பாதிரி லவோர் (Father Lavaur), முசே தெபொசேத்து, முசே கேறுசாம் (M. Kerjean) வகையரா வெள்ளைக்காரர்களைச் சந்தி பேச அனுப்பி யிருந்தபோது யெழுதி அனுப்பி யிருப்பார்களே, அதினாலே முசே கொதே கையில் அந்தக் காகிதங்க ளெல்லாம் யிருக்கிறபடியினாலே சொல்ல வேண்டிய தென்ன யென்று யோசனை பண்ணி யிருக்கிறது மல்லாமல், நாமாய் ஒரு வேளை இங்கிறேசுக்காரர்களும் நீங்களும் சமாதானம் பேசிக் கொள்ளுகிறீர்களே, யெங்கள் சாகீரெல்லாம், கில்லா வகையரா சம்மதியெல்லாம் சொன்னால், செகேரத்தாம் (ரசகிய) காரியமாய் நடக்கிற காரியம் உனக்கு யார் சொன்னார்களென்று கேழ்க்கப் போறார் என்றும், அப்படி தீர்க்குற வேளையிலே உங்கள் பற்வாணா கேளாது போவோமா வென்றும், (வேறு என்ன) சொல்லுவாரோ வென்றும் பின்னையும் அனேக விதங்களை யெண்ணி நான் பேசாமல் மையமாய் சமையம் பார்ப்போ மென்று யிருந்தே" னென்று சொன்னதுக்கு, அப்படியல்ல, அவருடனே சொல்ல வேணுமென்று சொன்னார். "நான் பிரான்சிலே யெழுதி வைச்சுக்

காண்பிக்குறேன், அதை நீர் பார்க்க வேணு" மென்று சொன்னதுக்கு, "கவையில்லை நான் சொல்லுகுறேன்" யென்று சொல்லி, முசே கொதே காம்பிராவே விட்டு வெளியே வந்தவுடனே, அவர் கிட்டப் போய், என்ன என்னமோ சொன்னான். அதுக்கு அவர், "நான் அறிவேன். பற்வானாக்களைக் கொண்டு வந்து காண்பிக்கச் சொல்லும். யெல்லாம் சொல்லுகிறே" னென்று சொன்னா ரென்று முசே பொலோ வந்து சொன்னான். அப்பால் (துரை) மறுபடியும் உள்ளே போனார். முசே பொலோ பிறப்பட்டுப் போயிவிட்டான்.

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு துரை அழைக்குறா ரென்று ரெண்டு சேவுகர் வந்து அழைக்க வந்தார்கள். நான் போனவுடனே காம்பிராவை விட்டு வெளியே வந்து "செஞ்சி, சீரங்கம், விறுத்தாசலம் மூணு யிடத்துக்கு மூணு சாக்கிலே ரூபாய் கட்டி உன் கையில் குடுத்து முசே பொலோ அனுப்பச் சொல்லி யின்று காலத்தாலே சொன்னானே, அதுக்கு அவன் காகிதங்களாங்காட்டும் குடுத்தது. இதோ யென் காகிதங்கள். அந்த மூணு காகிதங்கள் மூணு யிடத்துக்கு அந்தப் பணத்துடனே கூட அனுப்பெ"ன்று குடுத்து, "நந்திராசாவுக்குக் காகித மெழுதிக் குடுத்தானா?" வென்று கேட்டார். "குடுக்கயில்லை, நாளைக் காத்தாலே ஆகுதென்று சொன்னீரே," யென்று சொன்னதுக்கு, "யிப்போ யெழுதித் தாறே," னென்று சொல்லி உள்ளே போய், கணக்கன் முசே ஷெவிரே (M. Chevereau) யென்கிறவனுடனே சொல்லி யெழுதி வைத்து யென் கையில் குடுத்து, நந்திராசாவுக்கு (தெலுங்கிலே இக்) காகிதம் யெழுதி வாருமென்று சொன்னார். நல்லதென்று வாங்கிக் கொண்டவுடனே, யென்னைத் தம்முட காம்பிராவிலே அழைத்துப் போய், "யெனக்குத் தெரியாததா யிருக்கிறதை நீர் சொல்லாவிட்டால், யெனக்கு யெப்படித் தெரியும்?" யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : "நீர் எந்தக் காரியம் கேட்டீர்? நானெந்தக் காரியம் சொல்லாமல் போனேன். நீர் வந்தவுடனே நீரும் முசே பொலோவும் யிருந்து கொண்டு, 'நீர் முசே துப்பிளேயிக்சுக்குப் பயப்படுவா யென்றும், அவரை உத்தியோகம் தகீர் பண்ணினார்கள், நான் ஏத்துக் கொண்டேன், யினி காரியம் கவைகள் செவ்வையாய் நடப்பிக்கிறது உன் கடனென்று' சொன்னீர். நல்லதென்று அந்தப்படியே சலாபத்து சங்கு, சவா பாசி ராயன் வகையிரா, தக்கன் சுபேதாரர்கள் வகையிரா, காசுதின் கானுக்குக் கூட டில்லி மட்டுக்கும் காகிதங்களும், தஞ்சாவூர், மயிசூர்—நந்திராசா—வகையிரா சமஸ்தானாதிபதிகளுக்கும் கில்லேதார் வகையிராக்களுக்கும் காகித மெழுதி அனுப்பிவிச்சு, யிவ்விடத்துக் காரியங்களும் பந்துபஸ்துவாகக் (கவனமாக நடத்திக் கொண்டு வந்தேன்). அப்பால் பல விதத்திலே (என்னை) விட்டு விட்டபடியினாலேயும் யென்னை அழைத்துச் சொல்லாததினாலேயும், நானேதாகிலும் வந்து சொன்னால்...

உத்தாரம் (சொல்லாது) போனபடியினாலேயும், உங்கள் மன தென்னமோ வென்று சும்மாயிருந்ததே யல்லாமல், மத்தப்படி யென்னைத் தொட்டு அட்டியானதில்லை (தூதமானதில்லை)," யென்று சொன்னதுக்கு......

***1754 வருசம், டிசம்பர் மாசம், தேதி 4; பவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 22; புதவாரம்[1]***

22 ஆம் தேதி புதவாரம் காலத்தாலே நடந்தகாரியக் குறிப்பு : முசே பொலோ துரை அழைப்பிச்சு, சீரங்கத்துக்கு 1400 ரூபாய் விருத்தாச்சலத்துக்கு ரூபாய்....... ரூ.427–6 பணம் செஞ்சிக்கு......... 248 ரூபாய்.......

***1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 5; பவ வருசம், காற்த்திகை மாசம், தேதி 23; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு துரை அண்டைக்குப் போய் நேத்து, நந்திராசா(வுக்குக்) காகிதம் பிரான்சிலே யெழுதிக் குடுத்து, தெலுங்கிலே யெழுதி வரச் சொன்னீரே, (இதோ) வந்ததென்று காண்பிச்சதுக்கு, மொகறு பண்ணச் சொல்லி, மொகறு எடுத்துக் குடுத்தார். அந்த பிரான்சிலே யெழுதிக் குடுத்ததை அவர் கையிலே குடுத்து, காகிதத்தின் பேரிலே மோகறு பண்ணின பிற்பாடு, நந்திராசா வண்டைக்கு அனுப்பச்சொன்னார். அவர் வக்கீல் வசத்திலே குடுத்து அனுப்பிவிக்கச் சொன்னார். நல்லது அந்தப்படியே குடுக்கிறேன் யென்று வாங்கி மதனாந்த பண்டிதர் கையில் குடுத்து மயிசூரார் வெங்கிட்ட நாரணப்பய்யன் அண்டைக்கு அனுப்பச் சொன்னேன்.[2]

---

[1] முன்பே குறிப்பிட்டுள்ளபடி, டிசம்பர் 4ஆம் தேதிக்கான (rough draft), தனித்தாளிலே எழுதியது, கீழ்வருமாறு ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. (புதுவை மைய அரசு ஆவணக் காப்பகக் கிளைப் பிரதியில் அது சிதைந்து போய், இரண்டு வரிகளே முழுமையாய் உள்ளன.) ஆங்கிலப் பதிப்புக்குப் பயன்படுத்திய மூல ஏடும் மிகவும் சிதைந்திருந்ததாம். "22ஆம் தேதி புதன்கிழமை காலை, கவர்னர் முசே கொதே அழைத்து, சீரங்கத்துக்கு மூன்று பைகளில் 1,400 ரூபாயும், விருத்தாசலத்துக்கு 427 ரூபாய் 6 பணமும், செஞ்சிக்கு 248 ரூபாயும் போட்டு, கடிதங்களோடு அனுப்பி வைக்குமாறு சொன்னார். முசே பொலோ என் சாகீர் பற்றிக் குறிப்பிட்டதற்குக் கவர்னர் பதில் சொல்லியது. துறையூர் கடிதம் மோகறு பண்ணப்பட்டது. பறங்கிப்பேட்டையில் யானைகள் வைத்திருக்கும் சவுக்கார்கள் அந்த மார்க்கமாக அவற்றைக் கொண்டு வர முடியுமா என்று ஷேக் இப்ராகிம் கேட்டான். கவர்னர் சொன்ன பதில்..

"இன்று பிற்பகல் மூன்று மணிக்கு கவர்னர் என்னை அழைத்து, நந்திராசாவுக்கு பிராஞ்சிலே எழுதின காகிதத்தைத் தெலுங்கு படுத்தச் சொன்னார்."

4ஆம் தேதிப்பதிவு மீண்டும் இங்கே வருகிறது. ஆங்கிலப் பதிப்பில் இது இல்லை. இப்பதிவு ஏடு மிகவும் சிதைந்துள்ளது.

தெசம்பர் 5 (ஆங்கிலப் பதிப்பில் உள்ளபடி) (rough draft) "23 ஆம் தேதி வியாழக்கிழமை நந்திராசா கடிதம் முகறு பண்ணி, அவரது வக்கீலிடம் குடுக்கப்பட்டது."

***1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 7; பவ வருசம், காற்த்திகை மாசம், தேதி 25; சனிவாரம்***

இத்தனாள் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு துரை அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைக்கப் போன விடத்திலே துரையும் தம்பியும் யிருந்தார்கள். மதனாந்த பண்டிதனும் வந்திருந்த விடத்திலே நந்திராசா காகித மொன்று யென் பேருக்கு வந்ததைக் குடுத்து, "யிது ஆருக்கு வந்த" தென்று கேட்டார். "யென் பேருக்கு வந்த" தென்று சொன்னேன். "யென் பேருக்கு வரயில்லையா" யென்று கேட்டார். "ஒரு வேளை யெனக்குத் தானே யெழுதி உங்களுக்குச் சொல்லச் சொல்லி யெழுதுகுறதும் உண்டு," என்று சொன்னேன். "என்ன யெழுதியிருக்குது, படிச்சுச் சொல்லு," யென்று சொன்னார். "முசே பிளாக் – கூரும் (M. Flacourt) உங்கள் துபாசிகளங்கே யிருக்கிறவர்களும், நாங்கள் உங்கள் சிலவுக்கும் பணம் குடுக்கச் சொல்லி (யிருக்கச்சே), நாங்கள் பாளையக்காரர் கையில் வாங்குற பணத்தைக் கூட வாங்க வொட்டாத படிக்குத் (குடுத்து) நடத்துகிறபடியினாலே நாம் பிறப்பட்டுப் போய் விடவேண்டியிருக்கிறது. துறையூரார் கையில் ரெண்டு லக்ஷம் ரூபாய் வாங்குறதை ராமலிங்கம் பிள்ளை யென்கிற அரும்பாத்தப்பிள்ளை மனுஷனும் பரமாணந்தனும் பிளாக்கூரும் மேல் வாங்கிக்கொண்டு, லக்ஷம் ரூபாயாய்த் தீத்துக் கொண்டாராம். யினி மேல் அவர் சீர்மை வழி போறதில்லை யென்று நம்மைக் கறாறு நாமா யெழுதிக் குடுக்கச் சொல்லி பண்ணின லச்சை (தொந்திரவு) சேனே (நிறைய) உண்டு. அதினாலே யெழுதிக் குடுத்தோம். யிப்படி சோராவாரி பண்ணி அவனவன் ஆசையைக் குறிச்சு அரண்மனைக் காரியம் கெடுத்துப் போடுகிறார்கள். அது உங்களுக்குத் தெரியவில்லை. நாங்கள் யெழுதினாலும் மெய்யாய் எண்ணயில்லை. பரமானந்தப் பிள்ளையைப் பிடிச்சுக் காவல் பண்ணி அனுப்பின பிற்பாடு, ராமலிங்கம் பிள்ளையும் முசே பிளாக்கூரும் நடத்துகிற காரியம் தொட்டு ஒன்றும் நடக்கிறதாய்க் காணவில்லை. வேறே (ஒருவரை) அவ்விடத்திலிருந்து அனுப்பினால், அவர் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருக்கச் சொல்லி அனுப்பினால், நாமிருக்கிறோம்; யில்லாவிட்டால் போய் விடுகிறோம்," யென்று சொல்லச் சொல்லி யெழுதியிருந்த மத்தலப்பைச் சொன்னதுக்கு, பிரான்சிலே யெழுதி வாருங்கோளென்று சொல்லி, அப்பால் யென்னை அழைத்துக் கொண்டு ஒரு காம்பிராவிலே போய், "நானொரு விஷயம் கேழ்க்கிறேன். உள்ளபடி சொல்லு. முன் துரைத்தனம் பண்ணினவர்க ளெல்லாரும் யிந்தப் பட்டணத்துக்கு அதிகாரம் பண்ணச்சே சம்பாத்தியம் பண்ணவில்லையா? அப்படி நானும் ஞாய மார்க்கத்துடனே சம்பாதிக்க வேணுமென்று கருத்து யிருக்குது. யிதுக்கு உபாயம் உன்னைத் தவிர வேறே ஒருத்தன் மார்க்கமாய் வாங்கிக் குடுக்கமாட்டான். முசே லெனுவார் கொவற்ணதோர்

துரைத்தனம் பண்ணின நாளையிலே வர்த்தகர்கள், குடிகள் வகையிராக்கள் சமாதானமாய் நடந்துகொண்டு கும்பினியாருக்கும் ஆதாயம் வருவித்துவிச்சு, தானும் பெகு சனங்களும் சுகப்(பட்டுக்) கொண்டும், தானும் பெகு நிரம்பாய் சம்பாதிச்சுப் போனான் யென்று யேரோப்பிய ராச்சியம் யெல்லாம் பேராயிருக்குது. முசே தும்மா அது ஒரு சாடையாய் சம்பாதிச்சதாய்க் கேழ்விப்பட்டுது. முசே துப்பிளேயிக்சு பெகு அனியாயம் பண்ணிக் கொண்டிருந்தான் யென்று கூக்குறலாய் நடந்த சமாச்சாரமும் நான் யிங்கே வந்து பார்த்ததிலேயும் யெனக்கு நன்றாய்த் தெரியவந்துது. யிப்படிப் பட்ட சம்பாத்தியம் யெனக்கு சறுவாத்துமனாகக் கவையில்லை. முசே லெனுவார், முசே தும்மா சம்பாதிச்சபடிக்கு எனக்கும் மாற்கம் பண்ண வேணு" மென்றும், பின்னையும் சொல்லத்தக்கதாகச் சாடைக ளென்ன உண்டோ அந்த சாடைக ளெல்லாம் சொல்லிக் கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "முசே லெனுவார் (காலத்திலே) பட்டணத்து வற்த்தகர், குடிகள் மூலமாய்ச் சம்பாதித்(தது உண்டு); பண்டிகைகள்—சனேரி பண்டிகைகள், (பேர்ப் பண்டிகைகள்) வகையிராவிலே வந்த வரத்தும் (உண்டு). கும்பினீர் வற்த்தகர் கோந்திராத்துக்கு ஒரு மார்க்கமாய் அவர்களாய்க் கொண்டு போய்க் குடுத்தும், பரிச்சேதம் கவையில்லை (அது தேவையில்லை) யென்றும் (மத்தபேர்) அல்ப்ப சுல்ப்பம் குடுத்தால் அதுவும் வாண்டாமென்றும் சொல்லுவார். யிப்படி நடந்துதே அல்லாமல் பரிதான ரூபமாய் (லஞ்சமாய்) வாங்கினதுயில்லை. அவருக்கு மோக்கா (Mocha) வியாபாரத்திலே விஸ்தாரமாய் (லாபம்) கூடி வந்ததே அல்லாமல், மத்தப்படி வேறே சம்பாத்தியமில்லை. முசே தும்மாவுக்கு வியாபாரத்திலும் பல விதத்திலேயும் ஆறசினை (வருமானம்) உண்டு. முசே துப்பிளேக்கிசு சம்பாதிச்ச மாற்கம் தான் உங்களுக்குத் தெரியும்," யென்று சொன்னதுக்கு, "நானும் முசே லெனுவார் நாளையிலே சம்பாதிச்சபடிக்கி சம்பாதிக்கிறதுக்கு வியாபார நாளில்லவே (வியாபாரம் இப்போது நடக்கவில்லையே); முசே தும்மா நாளைய சாடையாய்ப் பார்த்து சம்பாத்தியம் பண்ண வேணு," மென்று சொன்னார். "வியாபாரத்துடனே சேர்ந்தது தான் உங்களுக்குத் தெரிஞ்சுயிருக்கு. சீர்மையிலே மொகத்துமாவுடனே சேர்ந்ததுக்கு மாற்கமாயிருக்க வேண்டியது.[1] அதுக்கு நீர் பாப்பய்யப் பிள்ளையைப் பிடிச்சவுடனே, சீர்மா மூலம் கணக்கையும் யிசாரா (குத்தகை வசூல்) குடுக்கிறதும் உம்முட கைக்குள்ளே வைத்துக் கொண்டு நடத்தாமல் (போய்விட்டீர்). முசே தெலார்ஷுவையும் முசே துப்பிளேயிக்சு கணக்கு ரங்கப் பிள்ளையையும் (நிர்வாகம் பண்ணச் சொல்லியபடியினாலே) அவர்களுக்கு புலந் தெரியாமல் (போச்சுது).

[1] அதாவது, "சீர்மை விவகாரங்களைப் பொறுத்த வரையில் அவற்றைக் கவனமாக நிர்வகிக்க வேண்டும்."

பாப்பய்யப் பிள்ளையைப் பிடிச்சு காவல் வைத்தவுடனே அவரவர் (பயந்து) ஆறு லக்ஷம் ரூபாய் குடுக்கிறோமென்று வந்து பேசினர். அந்த சூட்டிலே நடத்தாதபடிக்குக் கெடுத்துப்போட்டபடியினாலே, அந்தப் பணமும் முழுகிப் போய் சீமா (சீமை) குத்தகை குடுக்கிறத்திலும் கண்டவன் நின்றவன் அவனவன் பத்துப் பணம் அபகரிச்சு ஆனாப் போலே முடக்கி வைத்தார்கள். புராணா (பழைய) சிப்பந்தி யென்றும், கும்மக்குச் சிப்பந்தி (உதவியாளன்) யென்றும் ரெண்டுண்டு. அதிலே கும்மக்குச் சிப்பந்திக்கு அவரவர் அரைக் கால்வாசி யென்றும் கால்வாசி யென்றும் வாங்கிக் கொண்டு உங்களுக்குச் சொல்லி பணத்தை வாங்கிக் குடுத்தார்கள். யிப்படி நானா விதத்திலேயும் கும்பினீர் காரியம் கெட்டுப் போனாலும், முசே துப்பிளேயிக்சுக்கு சுய காரியத்திலே ஆகிலும் (பணம்) சேர்ந்துது. யிப்போ உங்கள் அமுலிலே, கும்பினீரைச் சேர்ந்ததையும் விறுதாவாய்ப் பல பேர் சாப்பிட்டுப் போனார்கள்; உங்களுக்கும் ஒண்ணுமில்லாமல் போச்சுது," யென்று சொன்னதுக்கு, "போன காரியத்துக்கு ஆரைத் தொட்டுத் தானென்னயிருக்குது? யினி மேல் நீரெப்படி சொல்றீரோ அப்படி கேழ்க்குறேன். கும்பினீர் காரியமும் நடக்கவேணும், ஞாயத்துடனே யெனக்கும் பிரயோசனம் வறவேணும். அதை யோசனை பண்ணி வந்து சொல்ல வேணும்," யென்று சொன்னார்.

நல்லதென்று சொல்லி, யிப்படி பேசியிருக்கச்சே, அவருடனே கூட வந்த முசே குலுவேத்து யென்குற சிக்கிறத்தார் (செக்ரடரி) வந்தான். வநதவுடனே, "நாளையத் தினம் வாரும், சாவகாசமாய் பேசுவோ" மென்று (துரை) சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக்கொண்டு பிடவை பார்க்குற சாலையே வந்து, சத்து மந்தாரமும் தூத்தலுமாய் சாடையாயிருந்தது. அந்த மட்டுக்கும் யென் காசாக் கச்சேரியே வந்து, அப்பால், வீட்டுக்குப் போனேன்.

***1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 12; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 1; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போன விடத்திலே முசே கொதே உடுத்திக் கொண்டு, வெளியே கோட்டை வாசற்படி யிடத்துக்குள்ளேயிருக்கிற சவுக்கி (காவல்காரர்) மாறுகிற வெள்ளைக்கார சொலுதாதுகளைப் போய்ப் பார்த்துப்போட்டு, கேட்டைக்குப் போகச்சே நான் போயி சலாம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பால் மேல் வீட்டின் பேரிலே போய் வெள்ளைக்காரர்களுடனே கூட கப்பே குடிச்சானாப் போலே, அவரவர் வந்து கண்டு பேசினவர்களுக் கெல்லாம் உத்தாரம் சொல்லி அனுப்பிப்போட்டு, யென்னை அழைத்துக் கொண்டு காம்பிராவிலே (போய்), தாமும் மேஸ்தர் சாந்தரசும் (பேசியும்) இவ்விடத்திலே சமாதானம் இங்கிறேசுக்காரர்களுக்கும் யெங்களுக்கும்

முடியாதபடியால், "நாங்கள் பிப்ரேயி மாசம் ஆகிய மாசி மாசத்தையிலே சீமைக்குப் போறோம். ஆனபடியினாலே முசே திம்மா (துய்மா), முசே லெனுவார் துரைத் தனத்திலே சம்பாத்தியம் பண்ணி சீமைக்கிப் போனபடி நானும் அந்தப்படிக்கி யெவ்வளாகிலும் சம்பாதிச்சுக்கொண்டு போகலாமென்று யோசினை பண்ணுகிறேன். யிதல்லாமல், முசே திம்மா சீமைக்குப் போகச்சே, அவர் (செனங்களிடம் கட்டாயம் பண்ணி, முடிந்தவரை) மாத்திரம் குடென்று வாங்கினானா? மெய்தானா?" வென்று கேட்டார். "சம்பாத்தியம் பண்ணிக் கொண்டு போனது மெய்தான். ஆனால் முசே தும்மா போகச்சே அவரவரைக் கேட்டு வாங்கின பேச்சுப் பொய்," யென்று சொல்லி, அது றௌத்திரி வருஷத்திலே (1740) மராட்டியர் றகோசி பூசலா (Raghoji Bhonsala), பத்தே சங்கு (Fateh Singh) வந்து தோஸ்தல்லிகானை வெட்டின (கொன்ற) போது ஆற்காட்டுப் பிறசைகள் இவ்விடத்துக்கு கலாபத்தினால் ஓடிவந்தபோது, சிலவுசித்தாயம் சென்றதென்று பெரியமனுஷர்கள் கையிலேயும் வெளியிலேயிருந்து வந்தவர்களிலே சிறிதுபேர்களிடமும் பதினாயிரத்து சில்வானம் விராகன் மட்டுக்கும் வாங்கினதுண்டு. அதன் பேரிலே வெளியிலிருந்து வந்தவர்கள் பெகுபேர் பிறப்பட்டுப் போயிவிட்டார்கள். அது கும்பினீர் கணக்கிலே வரவு வைத்து யிருக்குதோ அல்லது அவர் சொந்தத்திலே சேர்ந்ததோ யென்னமோ தெரியாது?" யென்று சொல்லி, "அப்படிக்கு ரூபா வாங்கிறதுக்கு, பட்டணத்திலே யிருக்கிற சனங்கள் வகையிரா யிந்த பத்து வருஷமாய் யிங்கிறேகக் கலாபமுமாய், இன்றைய வரைக்கு வர்த்தகப் பிறவர்த்தங்கள் இல்லாததினாலேயும் ஷாமத்தினாலேயும் (மழையில்லாமையாலும்) முன் சம்பாதிச்சதெல்லாம் சாப்பிட்டுப் போட்டுக் கடனுக்குள்ளாயி வீட்டைக் காத்துக் கொண்டு யிருக்குறார்கள். யேழெட்டுப் பத்துப்பேர் பூஞ்சையாயி திரியூரார்கள். மத்தப் (பேர்வசம்) சத்தே (காசுகூட) யில்லை," சீமை (சீர்மைகள் வருவாய்) மூலம் நடக்கிறபடியினாலேயும், சிப்பாயிகள் யிருக்கிறதைத் தொட்டுப் பட்டணம் யிந்த மட்டுக்கும் ஆகிலும் யிருக்கிறதே அல்லாமல், யிது (இந்த வருவாயும்) ஒடுங்கினால் அப்போ (உங்களுக்குத் தெரியும் பட்டணம் சர்வ நாசமாயி விட்டது) என்பது. லெனுவார் நாளையிலே யேறின பட்டணம், யிப்போ குடிகளில்லாமல் வீடுகளெல்லாம் பாழாயி குட்டிச் சுவர்களாயிக் கிடக்குது. அது நீங்கள் சவாரி பிறப்பட்டுப் பாத்தால் தெரியும், யென்று சொன்னதுக்கு, "நானும் யெவ்வளாகிலும் கொண்டு போக வேணுமே, அதுக்கு மார்க்கம் சொல்லு," யென்று கேட்டார்.

அதுக்கு நான் சொன்ன வயணம்: "சீமா மூல (சீர்மை நிர்வாகம்) வகையிரா, வர்த்தகர், டங்கா சாலை வகையிரா யென்று யென்ன யிருக்குதோ அதுகள் ஒன்றும் யென் மாரிபத்திலே மூணு வருஷ காலம் முசே துப்பிளேயிக்சு நடத்தாமல், தன் பெண்சாதி மாரிபத்திலே

நடப்பிச்சபடியினாலே ஒருகாரியமும் நான் சொன்னபடிக்கு வரமாட்டாது. அதுகள் யென் வசமாயி, முசே மடுத்தேன் (M. Martin) நாள் முதல் கும்பினீர் பெரிய துபாசி மாரிபத்திலே சகல காரியங்களும் நடந்த படிக்கி நடப்பிச்சால், ஞாயத்துடனே கூச்சலில்லாமல் (மக்கள் புகார் சொல்லாமல்) ஒத்திகையானது (வேண்டியதை) ரெண்டு மாசத்திலே ஆனப் பண்ணிக் குடுக்கிறேன்," யென்று சொன்னதுக்கு, "நல்லது நாளை காலமே வருகிறாயே, அப்போ பேசிக் கொள்ளுவோ" மென்று சொன்னார்.

அப்போ முசே குலுவேத்து காகிதம் கொண்டு வந்து கண்டு பேச வந்தான். நானு மனுப்பிவிச்சுக் கொண்டு பிடவை பார்க்கிற சாவடியிலே யிருந்து, அப்பால் வீட்டுக்குப் போனேன். யிவர் மறுபடி மேஸ்தர் சாந்தரசுடனே கூட யிந்த விவகாரம் சீமையிலே போயி தீத்துக்கொள்ள வேண்டி வந்தபடியினாலே, வந்த மட்டுக்கும் ஞாயத்துடனே ஆறசிக் (சேர்த்துக்) கொண்டு போவோமென்று யெத்தனம் பண்ணினார். நாளைய தினம் யென்ன நடக்குதோ அறிய வேண்டியது.

***1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 18; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 7; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஆறு மணிக்கு முசே கொதே, தம்பி முசே குலுவேத்து, திலார்ஷு, முசே சொற்னே (M. Sornay) வகையிரா வெள்ளைக்காரர்கள் வண்டியின் பேரிலே ஏறி பிரம்பை அண்டையிலே யிறங்கியிருக்கிற பிரான்சு தண்டு பாத்து, அப்பால் வழுதாவூர் கோட்டை விழுந்து (இடிஞ்சு) போனதும் பாத்து, அது கட்டுவிக்கச் சொல்லி முசே தெலார்ஷுக்கும் முசே சொற்னேக்கும் உத்தாரம் குடுத்து அங்கே சாப்பிட்டு, சாயங்காலம் யேழரை மணிக்கு நம்முட திருவேங்கிடபுரத்துக்குப் போய், அங்கே பதிமூணு நாளாகக் குடியாயிருக்கிற முசே தெபோசேத்து, முசே கில்லியார் (M. Guillard) வகையிராக்களைக் கண்டு அங்கேயே சாப்பிட்டு வந்தார்கள்.[1]

***1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 21; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 10; சனிவாரம்***

இத்தனாள் முசே தெலார்ஷு வீட்டிலே, ரசா சாயபு, அல்லி நக்கி பேக், கவுகார் பாபா குத்தூஸ் பேக் (Gowhar Baba Kuhddus Beg) பேசிக்கொண்டு பணம் (திரட்டுவது பற்றி பேசிக்கொண்டு) சம்பாதிக்கிறதிலே யிருக்கிறதாயிச் சொன்னார்கள்.

இத்தனாள் காலமே முசே கொதே செனறால் (அவர்)

[1] ஆங்கிலப் பதிப்பும் தமிழ்ப்பிரதியும் சற்றே மாறுபடுகின்றன.

களண்டைக்குப் போகச்சே மயிசூர் வெங்கட்டநாரணப்பய்யர் கூடவந்தார். வந்தவிடத்திலே அவரும் நானும் கூட யெட்டரை மணிக்கு மேல் வீட்டின் பேரிலே போனவிடத்திலே செனறால் அவர்கள் அலமுசு சாப்பிட்டுக் கொண்டிருந்து, ஒரு யிங்கிறேசுக்காரன், தேவனாம்பட்டணத்திலே யிருந்து சென்னப்பட்டணத்துக்குப் போறவன், இவடத்துக்கு வந்து இவரைக் கண்டு பேசிப்போக வந்தவனை, அனுப்பிப் போட்டு யென்னைப் பார்த்து யென்ன சமாச்சாரம் யென்று கேட்டார். "முந்தாம் நாள் 19 தேதி சாயங்காலம் அழைப்பிச்சு நந்திராசாவுக்கு அனுப்ப வேண்டிய காகிதத்துக்கு பிரான்சிலே யெழுதிக் குடுத்து, தெலுங்கிலே யெழுதி வரச் சொன்னபடிக்கு தெலுங்கு காகிதத்தைக் காண்பிச்சு மொகறுபண்ண வேணும்," மென்று சொல்லி, காகிதமும், 14 தேதி நந்திராசா (பாரிசிலே எழுதின) காகிதம் வந்ததையும், பிரான்சிலே யெழுதினதையும், பறங்கிப்பேட்டை பெத்திரி ஆத்திலே அடிச்சுப் போனதுக்குப் பதில் நிலம் பெத்திரி கட்டிக் கொள்ளுகிறதுக்கு வூருக்கு வடக்கே விட்ட நிலம் பறங்கிப்பேட்டை வூரார் மரக்காயமார்கள் யெழுதிக் கொடுத்த ராசினாமாவும் (உடன்படிக்கை உறுதிப் பத்திரமும்), அந்த நிலம் சொந்தக்காரர் விட்டதுக்கு ராசினாமாவும், அதை பிரான்சிலே எழுதின காகிதமும் கூட துரை கையிலே குடுத்தபோது, வெங்கிட்ட நாரணப்பய்யரை அழைப்பித்து, திருநெல்வேலியை நந்திராசா யிப்போ கட்டிக்கொண்டாரென்று சென்னப்பட்டணம் கொவற்ணதோர் செனறால் (General) மேஸ்தர் சாந்தரசு எழுதினது மெய்தானா வென்று கேட்டார். அதுக்கு வெங்கிட்டநாரணப்பய்யர் சொன்னது : "நாங்கள் திருநெல்வேலி சீமையை பிறமோதூத வருசம் (1751) மாசி மாசம் பங்குனி மாசத்தையிலே கட்டிக்கொண்டு, யிதுவரைக்கும் மூணு வருஷமும் பத்து மாசமாயி அனுபவிச்சுக் கொண்டு வந்ததே அல்லாமல், யிந்த மூணு மாசம் சண்டை கவையில்லை என்று (சமாதான) ஒடம்படிக்கை பண்ணிக்கொண்ட காலத்தில் கட்டினதுண்டானால் நீங்கள் யிட்ட ஆக்கினைக்கு உள்ளாகுறோ," மென்று சொன்னார். "நல்லது, அவர்கள் எழுதினா லென்ன ஆச்சுது? நானும் முசே மேசெனுக்கு யிந்த பூறுவோத்திரம் விசாரிச்சு எழுதி அனுப்பச் சொல்லி எழுதினேன். உங்கள் நந்திராசாவுக்கு யிப்போ காகித மெழுதி யிருக்குது. அதை மொகறு பண்ணிக் குடுக்கிறேன். நீரும் யிந்த வயணம் யெழுதி அனுப்பி மறு உத்திரம் அழைப்பியு," மென்று சொன்னார்.

அப்பால், "பிடவை சரக்கு வருகிறதை மறிச்சார்க ளென்று எழுதினதுவும், மதுரை கோட்டை மேலே சண்டை போடுறீரென்று எழுதினதும், மெய்தானா" வென்று கேட்டார். "மதுரைக் கோட்டை மமுதல்லி கான் வசத்தில் யிருந்து, நாங்கள் சண்டை போட்டால் யெங்கள் (பேரிலே குத்தம் சொல்லலாம்). (அப்படியல்லாமல்) பட்டாணி ஆலம்கான்

யென்கிறவன் நாங்களும் மமுதல்லிகானும் யேகஸ்தராய் (சினேகிதராய்) யிருக்கச்சே, எங்கள் கையிலே யிருந்து வந்த மதுரைக் கோட்டையை சந்தா சாயபு மனுஷனாக வந்து பட்டாணி ஆலம்கான் கட்டிக் (பிடிச்சுக்) கொண்டான். அப்பால் சந்தா சாயபு காரியம் தீந்துபோன பிற்பாடு, மமுதல்லி கானும் யிங்கிறேசுக்காரரும் போய் சண்டை பண்ணிப் பார்த்து, நிறுவாகமில்லாமல் (ஜெயமில்லாமல்) யேகத்தாக முறிஞ்சு போய்விட்டார்கள். அப்போ முசே துப்பிளேயிக்சு, ஆலமுக்கான் (ஆலம் கான்) சந்துருக்கள் (மதுரையைக்) கட்டிக்கொண்டு போறதா யிருக்கிறது, (இதைத் தடுக்க) குமுக்கு (உதவி) அனுப்பச் சொல்லி எழுதினதுக்கு தாதுபிராதில்லாமல் போச்சுது. அப்பால் பட்டாணியர் மயானா கூட்டம் வந்து (மதுரையை) கட்டிக்கொண்டு போனார்கள். அது முதலாக (அவ்வூர்) மமுதல்லி கான் யிங்கிலீசுக்காரர் பாரிசமுமில்லை, நம்முட பிரான்சுக்காற வகையிரா யெங்கள் வசத்திலேயு மில்லாமல், மத்தியே அவன் (பட்டாணியன்) கொண்டு போனான்; யிந்த மூணு மாசம் உடம்படிக்கைக்கு முன்பாக நாங்கள் பவுன்சை அனுப்பி, சிறிது சீர்மைகளையும் கட்டிக்கொண்டு கோட்டையும் சுத்திக்கொண்டு, முத்திக்கைப் போட்டுக்கொண்டு கோட்டையின் பேரிலேயும் சண்டை பண்ணிக்கொண்டிருந்தோமே அல்லாமல், யிந்த மூணு மாசம் ஒடம்படிக்கையிலே நாங்கள் ஆயுத மெடுத்து சண்டை பண்ணினதில்லை. திருநெல்வேலிக் கோட்டையிலே சண்டை பண்ணப் போகாதென்று (கூடாதென்று) யேமாறியிருந்த யெங்கள் பவுன்சின் பேரிலே, (மமுதல்லி கானும் மத்த) சத்துருக்களும் பட்டாணிகளுமாக மோசம் பண்ணி விழுந்து, ஆப்த்தமா யிருக்கப்பட்ட யெங்கள் சறுதாரையும் வெட்டிப்போட்டு சிறிது பவுன்சையும் சேதப்படுத்திப் போட்டு, திருநெல்வேலிக் கோட்டையும் கட்டிக் கொண்டு போய்விட்ட சேதி உங்களுக்கு முன்னமே யெழுதியிருக்குது. யிப்போ பிரான்சுப்படுத்தி எழுதிக் குடுத்தக் காகிதத்திலேயும் எழுதி யிருக்கிற தென்று முன் பின் நடந்த பூறுவோத்திரம் நன்றாய் விசாரித்து, பிய்போ கட்டினதும் முன் கட்டினதும் நன்றாய் விசாரித்தால் அப்போ யிங்கிறேசுக்காறர், மமுதல்லி கான் பேச்சு மெய்யென்று சொல்லுகுறதும், எங்கள் பேச்சு மெய்யென்கிறதும் உங்களுக்குத் தெரியவரும். அல்லாமல் யெங்கள் பேச்சுப் பொய்யானால் ஆக்கினைக்கு உள்ப்படுகிறோமென்று," கெட்டியாய் விஸ்தரிச்சுச் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லி, யிங்கிறேசுக்காரர்களும் மமுதல்லிகானும் யெப்போதும் மோசம் பண்ணுகிற பேர், அவர்கள் யிப்போ யிந்த பேச்சுப் படி எழுதி மோசம் பண்ணப் பார்க்கிறார்க ளென்று சொன்னதுக்கு, "அதுகளெல்லாம் யெங்களுக்கு நன்றாய்த் தெரியும், திருநெல்வேலி சீர்மை பேச்சும் மதுரைக் கோட்டை பேச்சும் முசே மேசென் குமாந்தான் பேருக்கு நாம் முன் பின் நடந்த பூறுவோத்திரம் யெல்லாம் விளங்கியெழுதி

அனுப்பிவிக்கச் சொல்லி எழுதினேன். அதுதான் உங்கள் ராசாவுக்கும் எழுதினது" (என்று துரை சொன்னார்).

"பிடவை சரக்குகளைத் தடை பண்ணினதாய் மேஸ்தர் சாந்தரசுக்கு யெழுதின தென்ன," வென்று கேட்டார். "அது யெனக்கு நன்றாய்த் தெரியாது. எழுதி அனுப்பி அறிஞ்சு சொல்ல வேணும். அது தானும் யிந்த கெடுவுக் குள்ளே நடத்தினது அல்ல, முன் நடந்திருக்கும். அது பிசகில்லை ஆகிலும் அது விசாரியாமல் சொல்லப் போகா," தென்று (வெங்கடநாரணப்பய்யன் சொல்ல), பேசிக்கொண்டே அவர் (துரை) எழுதுகிற பிலத்திலே (அறை) போன உடனே, "நீங்கள் மமுதல்லி கான் பேச்சிலே விழுந்தாப்போலே யிருக்குது. அப்படி முன் விழுந்து தான் மெத்த மோசம் (போனீர்கள்); யிப்பவும் உங்கள் ராசாவுக்கும் மமுதல்லிகானுக்கும் ஒருத்தருக் கொருத்தர் சிறிது உடம்படிக்கைகள் (பேச்சுவார்த்தைகள்) நடக்கிறதாய் சேதி கெட்டியாய் கேட்டேன். அப்படி நடந்தால் நீங்கள் கிணத்திலே கெட்டியாய் விழுவீர்கள், யென் பேச்சைக் கெட்டியாய் நம்புங்கோ" ளென்று சொன்னார்.

அதுக்கு மயிசூர் வெங்கிட்டநாரணப்பய்யன் சொன்னது: "அப்படி அவர்கள் அனுப்புற ராசவட்டம், பின்னையும் அந்தக் கோட்டையிலே யிருக்கிற சிறிது போர்களனுப்புகிற ராசவட்டம் யெல்லாம் அப்போதைக் கப்போது உங்களுடனே சொல்லி, அதுக்குத் தக்கனையாய் நடத்தவேண்டிய தெல்லாம் உங்களுடைய யோசனைப்படிக்கு நடந்துதே அல்லாமல், உங்கள் யோசனையில்லாமல் நடத்தினதில்லை," யென்று சொல்லி, "யெங்கள் ராசா முதலாவது சுவாமியையும் ரெண்டாவது உங்களையும் நம்பியிருக்கிறதே அல்லாமல் வேறேயில்லை," யென்று சொன்னதுக்கு, துரை சொன்னது: "அதெல்லாம் பேச்சு மாத்திரந்தான், காரியத்திலே ஒன்றும் காணோம்," என்று சொன்னார். "அப்படி நாங்கள் நடப்பிச்சது யென்ன" யென்று கேட்டார். "நான் வந்து அஞ்சு மாசமாகுது. யிந்த மட்டுக்கும் வாய்ப்பேச்சு பேசினதே அல்லாமல் பணம் யென்ன நீங்கள் குடுத்தீர்கள்? நான் முசே துப்பிளேயிக்சு (கணக்கெல்லாம் பார்க்க வேணும்); யிப்போ அறமாத்துக்கு (ராணுவம்) செலவுக்குப் பணம் மாசம் மாசம் குடுத்து விடச் சொல்லி யெத்தனை சொன்னாலும் நீங்கள் குடுக்கிறதில்லை. வாய்ப் பேச்சு மாத்திரம் விஸ்தாரமாயிச் சொல்லுகிறீர்கள். காரியத்திலே ஒன்றும் காணோம்," யென்று யிது முதலான பேச்சுகள் அனேகமாய் நடந்தது. அப்பால், "மாசம் யிவ்வள வென்று யிப்போ கட்டளை பண்ணினால் அந்தப்படிக்கு யிது முதலாக மாசாமாசம் குடுத்து விடுகுறோ," மென்று கேட்டார். அதுக்கு, "மாசம் மாசம் இவ்வளவு யென்று முசே துப்பிளேயிக்சு தீத்து எழுதி குடுக்கயில்லையா?" வென்று (துரை) கேட்டதுக்கு, "அவர் யென்ன

எழுதிக் குடுத்தாரோ உங்கள் கையில் (என்பது எங்களுக்குத்) தெரியாது. யெங்களுக்கும் அவருக்கும் நடந்திருக்கிற ஒடம்படிக்கையிலே நிகுதி யில்லை (திட்டவட்டமாய் எதுவுமில்லை). வந்த சொலுதாதுகள், சிப்பாயிகள் வகையிராக்களைக் கெணிதப்படி படிச்சுக்கொண்டு, (கணக்கு எடுத்து) உள்ளது குடுக்க ஒடம்படிக்கை. அதின் பிற்பாடு யெண்ணிக்கைப் பிடிச்சு நிகுதி பண்ணினது யில்லை; யினி மேல் தீரப் போகச்சே அதுகளெல்லாம் பேசப்போறோ," மென்றும் யிது முதலான பேச்சுக்கள் நடந்தது.

அவர் பணப் பேச்சிலே, "யினி மேல் அப்போதைக் கப்போது குடுத்தால் உங்கள் காரியத்திலே நாங்கள் பிறயாசப்பட்டு உங்கள் பேரிலே காத்து அடியாமல்ப் படிக்குப் பார்த்துக் கொண்டிருக்கிறதும் அல்லாமல், உங்கள் மனோரதப்படிக்கிக் காரியம் (நடக்கும்); பணம் குடுத்தாலாச்சுது, யில்லாவிட்டால் யெங்கள் பவுன்சை அழைப்பிச்சுக் கொள்ளுகிறதுமல்லாமல் உங்கள் ராச்சியத்தின் பேரிலேயும் கோட்டையின் பேரிலேயும் யிக்கட்டுகள் கூட நடக்கும். யிது களெல்லாம் (எங்கள் காகிதத்திலே நாம் யெழுதயில்லை; நீர் கண்டிப்பாய் யெழுதி அனுப்பு" மென்று (துரை) விஸ்தாரமாய்ச் சொல்லி, நந்திராசாவுக்கு எழுதின காகிதத்தையும் மோகறு பண்ணிக் குடுத்துப் போகச் சொன்னார். "அந்தப்படிக்கி யெழுதி அனுப்பிவிச்சு மறு உத்தாரம் அழைப்பிக்குறே," னென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு யென்னையும் வாடிக்கைப்படிக்கி காகிதமெழுதி குடுக்கச் சொல்லியும், தம்மா பண்டிதனை (Damma Pandit) அனுப்பிவிக்கச் சொல்லியும் பின்னையும் சிறிது பேச்சுகள் பேசிக்கொண்டு மயிசூர் வெங்கிட்டநாரணப்பய்யர் போனார். அப்பால் துரை பண்டிகை யென்று கோயிலுக்குப் போனார். நான் யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

### *1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 26; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 15; குருவாரம்*

நேத்தய தினம் சாயங்காலம் ஆறு மணிக்கு துரையவர்கள் அழைத்தனுப்பிவிச்சார்கள். வந்த மனுஷருடனே யெனக்கு உடம்பு சொஸ்த்த மில்லை யென்று சொல்லி அனுப்பினதின் பேரிலே, அதின் பிறகு யெல்லப் பிள்ளையுடனே துரை சொல்லி அனுப்பினது: பாசி ராயன் குமாரன் பாலாசி ராயன் வெகுமானம் வந்திருக்குதே, அந்தப் பெகுமானம் காலமே யெதிர்கொண்டு போயி கொண்டு வரவேணும். அது நிமித்தியம் அவரவர்களுக்கு மேளதாளம் நட்டு முட்டுக்காரர் பசட்டிக் கழிக்காரர் ஆகியோரை வரச்சொல்லி அந்தப்படிக்கி நயினாருக்கு உத்தரவு

கொடுத்து உங்களையும் ஆறு மணிக்கு காலமே வரச் சொல்லி, துரை அவர்கள் சொல்லச் சொன்னார்கள் யென்று சொன்னார்.

இத்தனாள் காலமே துரையவர்கள் அண்டைக்குப் போகு முன்னாலே முசே துப்பிளேயிக்சு நாளையிலே பாசி ராயன் குமாரன் பெகுமானம் வந்தபோது அப்போ நடந்த மரியாதை நம்முடைய தஸ்த்திரத்தில் எழுதி வச்சிருந்ததை பிரான்சிலே யெழுதி வரச் சொன்னோம். அதிலே யென்ன யிருந்ததென்றால், வெகுமானம் வந்த போது யிங்கேயிருந்து முசே திலார்ஷு, முசே அல்பேர் இவர்கள் ரெண்டு பேரும் நானும் மேளவாத்திய நடனாட்டியத்துடனே நவபத்து (கொடிகள் முதலியனவற்றுடனே) சாரத்துக் கொளத் தண்டையிலே (போய், அங்கே) நிறுத்தி யிருந்த பெகுமானத்தை யெடுப்பிச்சுக் கொண்டு வந்து, துரை அவர்களண்டையிலே கொண்டு போய் வைச்சோம். வக்கீல் சாமா ராயர் கூட வந்ததும், அவர் கொண்டு வந்ததை துரை அவர்கள் வாங்கிக்கொண்டு யிருக்கச்சே பதினஞ்சு பீரங்கி சுட்டார்கள். அப்பால் அவரை உட்காரச் சொல்லி குசலப் பிறசினம் பண்ணி (நலம் விசாரித்து), அவரை விடுதிக்கு அனுப்பி உலுப்பி சாமக்கிரியை குடுத்து (சமையற் பொருட்கள்), மறுபடி அவர் ஊருக்கு போகச்சே பெகுமானம் வஸ்திரங்கள் குடுத்தனுப்பிவிச்சது முதலானது எழுதியிருந்த பிரான்சுக் கடுதாசி கொண்டு போய் குடுத்து, வாய் விசேஷம் (விளக்கிச்) சொல்லச்சே, அந்தக் கடுதாசை அவர் பார்த்துக்கொண்டு, “முன் நடந்த பிரகாரந்தானே நடப்பிப்போம்,” என்றார். அப்பால் முசே யித்தா (Itta) முசே ரொமோயின் (Romain) இவர்கள் ரெண்டு பேரையும் அழைத்துக் கொண்டு துரை அவர்கள் யேறுகிற பல்லக்கு, நீசான், யீட்டிக்காரர், கொம்பு தம்பட்டம், சேர்வைக்காரர், சோபுதாரர்கள், நயினார், அசனுதிகான் (Hasan-ud-din Khan) வளர்த்துக்கொண்ட முசபர் கான்[1] குமாரன் பயக்கு மங்கா[2] வகையிராவுடனே போனேன்.

சென்னப்பட்டணம் வாசற்படிக்கு அடுத்த பூரசு மரத்தண்டையிலே கூடாரம் போட்டு வெகுமானம் வச்சிருந்தது யென்ன யென்றால்: துரைக்கு ஒரு சீரோப்பா, நாலு நகையும், ஒரு பட்டாக்கத்தியும், துரையவர்கள் தம்பிக்கி ஒரு சீரொப்பா, நாலு நகையும் ஒரு கத்தியும், இதுகளெல்லாம் பல்லக்கிலே வச்சுக்கொண்டு முன் போன பரிட்டவணை யோடே கூட அந்த வெகு மானத்தை யெடுப்பிச்சுக் கொண்டு கோட்டைக்கு வந்து

---

[1] மாயே சிப்பாய்களின் மூத்த தலைவனான ஜமேதார் ஷேக் அப்துர் ரஹ்மான் என்பவன் முசபர் கான் என்ற சிறப்பானதோர் பெயர் அல்லது பட்டத்தினைப் புனைந்து கொண்டான். அத்தோடு மீன் சின்னமிட்ட கொடியையும் அவன் தக்கண நிசாமிடமிருந்து பெற்றான்.

[2] இப்பெயர் ஆங்கிலப் பதிப்பில் இல்லை.

துரை அவர்கள் பெகுமானமும் தம்பி பெகுமானமும் அவர்களண்டையிலே வச்சோம். இதின் பிறகே முசபர் கான் மனுஷன் திலாவர் கான் யென்கிறவனும் கூட வந்திருந்தான். அவனையும் கூட அழைச்சுக் கொண்டுபோய் பேட்டி பண்ணிவச்ச உடனே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். அதன்பிறகு பாலாசி ராயன் அனுப்பின காகிதம் பாரிசிலே யிருந்ததை மதனாந்த பண்டிதன் அவிழ்த்துப் படிக்கச்சே, அதுக்கு முசே திலார்ஷு துபாசித்தனம் (மொழிபெயர்ப்பு) பண்ணி, துரை அவர்களுக்குச் சொன்னது : "முசே துப்பிளேயிக்சு அவர்கள் சீமைக்குப் போய்விட்டார்க ளென்றும், தாங்கள் வந்திருக்கிறீர்க ளென்றும் சேதி கேட்டோம். முன்னாலே முசே துப்பிளேயிக்சு அவர்களுக்கும் நமக்கும் யெப்படி சினேகம் நடந்ததோ அப்படித்தானே நடக்க வேணும்; யிதல்லாமல் முசபர் கான் சாகீர், அசனுதி கான் சாகீர், அவர்களுக்கு நடக்கிற (மூடு) பல்லக்கு, (மீன்கொடி) வகையிரா மரியாதை யென்னென்ன வுண்டோ, அதுகளெல்லாம் நடப்பிக்க வேணும்; யிதல்லாமல், முசபர் கான் மருமகன் அயிதர் அல்லி கான் யென்கிறவனுக்கு சூரத்து கில்லேதாரன் மொயினித்தி கான் (Muin-ud-din-khan) குமாரத்தியைக் கலியாணம் பண்ணுகுறதுக்கு யெத்தினம் பண்ணிக்கொண்டு யிருக்கிறார். அதுக்கு முசபர் கான் குஞ்சு குழந்தைகளை சமுசாரத்துடனே அனுப்பச் சொல்லியும்," இப்படி எழுதியிருக்கிறது யென்று முசே திலார்ஷு துரையுடனே சொன்னார். அதுக்கு துரை அந்தப்படியே தானே அனுப்பிவிப்போ மென்று சொன்னார். அவர்களுக்கு நடக்கிற சாகீர் வகையிரா மரியாதை யெல்லாம் நடப்பிப்போம் யென்றும் முசே திலார்ஷுவைப் பாத்துச் சொன்னார். அதுக்கு முசே திலார்ஷு அசனுதி கான் வளத்துக் கொண்ட பிள்ளை பக்குரி மியான் (Baqir Miyan)[1] யென்கிறவனைப் பார்த்து, "உமக்கு சாகீரும் மரியாதையும் காகிதத்திலே யெழுதிவந்தபடிக்கி துரை அவர்கள் உத்தாரம் குடுத்தார். நீர் குரனீசு (நன்றி சொல்லி வணக்கம்) பண்ணு," மென்று சொன்னார். அந்தப்படியே அவர் குருனீசு பண்ணினார்.

அப்படியிருக்க முசபர் கான் துரைக்கு பாரிசிலே எழுதியனுப்பின கடுதாசி மதனாந்த பண்டிதன் படிக்க, முசே திலார்ஷு துரை அவர்களுடனே சொன்னது: முசே புசியும் முசே ரூமி கானும் (Rumi Khan)[2] சலாபத்து சங்கு அண்டையிலேயிருந்து, அவருடனே தப்பும் தாருமாய் சொல்லி, யென்னுடனே யிருந்த தட்டு முட்டு சாமான் வகையிரா ... அஞ்சு லக்ஷம் பெருமானமா மட்டுக்கும் யெடுத்துக் கொண்டது மல்லாமல், நாலா காரியங்களிலேயும் முப்பது நாற்பது லக்ஷம் மட்டுக்கும்

---

[1] மேலே பயக்கு மங்கா என்று பிரதி எடுத்தோர் எழுதியுள்ளதைக் காண்க.

[2] இவன் புசியின் திவானாகப் பணிபுரிந்தான்.

சம்பாதிச்சு யிருக்கிறார்கள். யிதல்லாமல் ரூமி கான் யென்கிறவனும் பத்து பனிரெண்டு லக்ஷ மட்டுக்கும் சம்பாதிச்சு யிருக்கிறான். நம்முடைய குஞ்சு குழுந்தைகளை அயிதரல்லி கான் கலியாணத்துக்கு அனுப்பிவிக்க வேணும்; (மத்தது) யெழுதி அனுப்பினதைப் பார்த்துக் கொண்டால் தங்கள் சித்தத்திற்கு தெரியவரு," மென்று எழுதியிருந்தது. நீங்கள் சீமையிலேயிருந்து யிவ்விடத்துக்கு துரைத்தனமாயி வந்த சேதியை முசபர் கான் பாலாசி ராவுக்குச்[1], சொல்லி பீரங்கி போடு விச்சு சக்கரையும் வழங்கினார்களென்று இப்படிப்பட்ட சேதிகளெல்லாம் முசே திலார்ஷு துரை அவர்களுக்குச் சொன்னார்.

அதன் பிறகு முசபர் கான் துரையவர்களுக்கு (எழுதின) பிரான்சுக் கடுதாசியைப் பார்த்துக் கொண்டார். அந்தக் கடுதாசியிலே யிருந்த வயணமாவது: "நான் மாயேயிலேயிருந்து வந்த நாள் முதல் கொண்டு கும்பினீர் காரியங்களிலே—முதலாவது சென்னப்பட்டணத்தின் பேரிலே போயி சண்டை பண்ணினது, ரெண்டாவது யிங்கிறேசுக்காரர் புதுச்சேரியின் பேரிலே வந்து யிறங்கி யிருக்கச்சே சண்டை பண்ணினது, மூணாவது யிதாயித்து மொகதின் கான் சந்தா சாயபுடனே கூடயிருந்து அன்வரதி கான் பேரிலே சண்டை பண்ணினது, நாலாவது தஞ்சாவூர் பேரிலே போயி சண்டை பண்ணினது, அதன் பிறகு யிதாயித்து மொகதின் கானுடனே கூடப் போயி கந்தனூர், கடப்பை யிதுக்குள்ளே யிருக்கப்பட்ட பாளையக்காரர்களை செயித்து, அப(வு)ரங்காபாத்து மட்டுக்கும் போனது—(இப்படி பல சண்டைகளில் போரிட்டுத் தொண்டு செய்தேன்); எனக்கு முசே புசி பேரிலே வரவேண்டிய ரூபாய் ஞாயம் விசாரிச்சு வாங்கிக் குடுக்கச் வேணும்." யித்தியாதி வயணங்களாய் எழுதின கடுதாசை துரை பார்த்துக் கொண்டார். அந்தக் கடுதாசியிலே தம்முடைய குஞ்சு குழந்தைகளை அனுப்பச் சொல்லி எழுதாதபடியினாலேயும், சாகீர் வகையிரா விட்டுத்தரச் சொல்லி எழுதாத படியினாலேயும், முன் திலார்ஷு சொன்ன சேதிகளெல்லாம் (துரை) மனசுக்கு (மெய்யென்று தோன்றவில்லை; ஆகவே) "முசபர் கான் எழுதின கடுதாசியிலே குஞ்சு குழந்தைகளை அனுப்பச் சொல்லி யெழுதாதபடியினாலே நாம் அவ்விடத்துக்கு (அவர்களை) அனுப்பிவிக்கிறதில்லை," யென்று உடனே சொன்னார். முசபர் கான் மகன்—அசனுதி கான் வளர்த்துக்கொண்ட பிள்ளையாண்டான்—யெதிரிலே உளுக்கார்ந்து யிருந்தான்.... யிந்தப் பிள்ளையாண்டானுக்கு இவ்விடத்திலே கலியாணம் பண்ணிப் போடுவோமென்றும், சூரத்துக்குப் போகக் கவையில்லை என்றும் (துரை) சொல்லி, முகத்திலேயும் வெகு

[1] இந்த முசபர்கான் (ஷேக் அப்துல் ரஹ்மான்) அப்போது சலபத் சங்கைக் கைவிட்டு, அவருக்கு விரோதியான மராட்டிய பாலாஜி ராவின் கீழ் பணிக்குப் போய்விட்டான்.

கடுகடுப்பு (ஏற்பட்டது). அது யெதுனாலே யென்றால், தமக்கு வந்த வெகுமானம் அன்பது ரூபாய் பொறும், அவர் தம்பிக்கு அனுப்பின பெகுமானம் நாற்பது ரூபாய் பெறும். இப்படித் தாழ்த்தியாய் வந்தது. அசனுதி கான் மகனுக்கு (மட்டும்) முசபர் கான் அனுப்பின பெகுமானம் புராணாபுரியிலே (இன்றைய பர்கான்பூர்) செய்த பிரகாசமான ரெத்தின மிழைத்த ஒசந்த நகைகளும் கத்தி ஒன்றும் வந்தது. இதுகள் வந்ததை துரை கையிலே குடுப்பிச்சு வாங்கித் தாங்கள் தரிச்சுக் கொண்டபடியினாலே, தங்களுக்கு வந்தது மட்ட சீரொப்பா–நூறு ரூபாயி பெறும் படியினாலேயும், அவனுக்கு வந்த ஒரு சீரொப்பா அறு நூறு ரூபாய் பெறும்படியினாலேயும், துரை அவர்கள் மனசுக்கு ரொம்பவும் கோபமாயிருந்தார். இனிமேல் முசபர் கான் காரியத்திலே அனுகூலமாயிரார் போலே தோணியது.

யிதல்லாமல் அப்போ நடந்த சேதி, பெகுமானத்துப் பிறகே வந்த திலாவர் கான் யென்கிறவன் முசே திலார்ஷைப் பார்த்து, துரையவர்களுடைய வக்கீலா யிப்போ பாலோசி ராயனண்டையிலே யென்னை அனுப்பினால் தங்களுடைய மனசுப் பிறகாரம் காரிய பாகமாய் நடந்து கொள்ளுகிறேனென்று யிந்துஸ்தானிப் பேச்சிலே சொன்னான். அந்தப் பேச்சு முசே திலார்ஷுவுக்குத் தெரியாதபடி (யினாலும்), பாரிசி பேச்சு மாத்திரம் தெரிஞ்சபடியினாலும், இந்தச் சம்மதி துரை அவர்களுடனே சொன்னது யென்ன யென்றால், "உங்கள் வக்கீல் பாலோசி ராயன் அண்டையிலே யிருக்க வேணுமென்றும், எங்கள் வக்கீல் உங்கள் அண்டையிலே யிருக்க வேணு," மென்றும் பாலாசி ராயன் சொன்னார் யென்று துரையவர்களுடனே சொன்னார். அதுக்கு துரை சீரகம்பனம் பண்ணி (தலையசைப்பினாலே மறுத்து) சும்மாயிருந்தார். அதன் பிறகு துரையவர்கள் யென்னைப் பார்த்து, இப்போ வந்த கடுதாசிகள் பிரான்சுப்படுத்தச் சொல்லி, எழுதின உடனே கொண்டு வந்து குடுக்கச் சொல்லி, அந்தக் கடுதாசிகளை யென் கையிலே குடுத்தார்.

யிதல்லாமல், சந்தா சாயபு மகன் ரசா சாயபுக்கு பாலோசி ராயர்[1] எழுதின கடுதாசியை, "நீ கொண்டு போயி குடு," என்று (என் கையிலே) குடுத்தார். முசே திலார்சு யிருந்து கொண்டு, "பாலாசி ராயனண்டையிலே யிருந்து ரசா சாயபுக்கு அனுப்பின பெகுமானம் முசபர் கான் மனுஷர் கையிலே இருக்கிறது; அதைப் பல்லக்கிலே வைத்துக் கொண்டு வந்து சம்பிறமத்துடனே சீங்கோர் (Senhor–மிக மரியாதையான போர்த்துக்கீசிய வார்த்தை) ரங்கப்பிள்ளை, நீர் கொண்டு குடுத்துப்போயி, அசனுதின்

[1] பானோசி ராயர் என்று கையெழுத்துப் பிரதியில் எழுதப்பட்டுள்ளது. அது சரியில்லை. பாலாஜி; பாலோசி அல்ல.

கான் மகனை அவன் வீட்டு மட்டுக்கும் கொண்டு போயிவிட்டால், உமக்கு ரொம்பவும் கீர்த்தியும் பிரதிஷ்ட்டரமும் உண்டு," யென்று ரொம்பவும் உபசாரமாய்ச் சொன்னார். யிது ஒரு நாளும் யில்லாத வாடிக்கையாச்சுதே, துரை அவர்களைக் கேழ்க்க வேணுமென்று யோசனை பண்ணினேன். கேட்டால் திலார்ஷு துரை அவர்கள் உத்தாரந்தா னென்று சொல்லிக் கொண்டிருக்கச்சே, நாம் போய்ச் சொன்னால் அவர் மனசிலே தாங்கலாயிருக்கும், நமக்கென்ன வீண் பொல்லாப்பு யென்று யோசனை பண்ணிக் கொண்டு மேல் வீட்டிலிருந்து பிடவை பார்க்கிற சாலையிலே வந்துவிட்டேன். முசே திலார்ஷு தம்முடைய கோந்துவாருக்குப் (அலுவலக அறை) போனார்.

யென்னுடனே மதனாந்த பண்டிதரும் கூட வந்தார். அவருடனே நான் சொன்னது: "நீசான்கள் (கொடிகள்), பல்லக்கு கொண்டு போறது ஒருக்காலு மில்லாத வாடிக்கை ஆச்சுதே, அதுவும் நீர் அறிவீரே, அதை நன்றாய்த் தீர முசே திலார்சைக் கேட்டுப்போட்டு வாரு," மென்று சொன்னதுக்கு, அவர் சொன்னது, "யிதுக ளெல்லாம் முன்னே தானே துரை அவர்களுடனே சொல்லித் தீந்து யிருக்கிற வயணம். அது நான் நன்றாய் அறிவேன். கேழ்க்க வேணும் என்கிறதே தேவையில்லை," யென்று சொல்லிக் கொண்டே போனார். "அப்படியல்ல. நன்றாய்த் தெரிஞ்சுகொண்டு வந்தால் நமக்குப் பளுவுயில்லை," யென்று சொல்லிக் கொண்டே யிருக்கையிலே, யிதுக்குள்ளே முசே திலார்ஷு கூண்டு (கோச் வண்டி) யேறிக்கொண்டு பிறப்பட்டார். (உடனே) அந்தக் கூண்டை நிறுத்தி யென்னை, சீங்கோர் ரங்கப்பிள்ளை, பல்லக்கு நீசானுடனே போகச் சொல்லி துரை அவர்கள் உத்தாரம் அந்தப்படிக்கித் தானே போகச் சொல்லிச் சொன்னார். "இது விசேஷம் துரையவர்களைப் போயி கேழ்க்கட்டா யென்று கேட்டதுக்கு, தேவையில்லை, நான் கேட்டு உத்தாரம் வாங்கியிருக்கிறே" னென்று சொன்னார். "நல்லது, நீர் சொன்னால் போதும்," யென்று ஒத்துக்கொண்டு வந்து அந்தப்படிக்குத் தானே சந்தா சாயபு மகன் ரசா சாயபுக்கு வந்த சீரொப்பா அறுபது ரூபாய் பெத்ததையும், கடுதாசியும் பல்லக்கிலே வைச்சுக்கொண்டு அந்தப் பரிட்டவணை யோடே (பரிவாரத்தோடு) கூட சந்தா சாயபு வீட்டுக்குப் போனோம்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன யென்றால், முசே தெலார்ஷுவுக்கு நந்திராசா அனுப்பிவிச்சது ஒரு பச்சைக் கல் பிடி போட்ட பாங் (கேடயம்) ஒன்றும், வாத்தி? பூசின பச்சக் கல் கெம்பு—கப்புக் கல் எழைச்சக் கெடாரி (குத்துக் கத்தி) ஒன்றும், முத்து தாவடம் (மாலை) ஒன்றும், புகைச்சுறுட்டு வாயிலே பிடிக்கிற கொழாயி (ஊக்கா), சின்னப் பொடிக் கெம்புக் கல்—பச்சக் கல் யெழைச்ச சுங்கான் ஒன்றும், இதுகளும் (விலை யுயர்ந்த) மதாயி நகை சீரொப்பாவும் அனுப்பி, யெங்கள்

காரியங்களை யெல்லாம் அனுகூலப்படுத்தித் தரவேணு மென்று எழுதி வந்ததாய் நான் சேதி கேழ்விப்பட்டேன். மயிசூர் வெங்கிட்டநாரணப்பய்யர், ஒரு சீரொப்பா மாத்திரம் யென்று சொன்னார். மதனாந்த பண்டிதர் பதக்கமும் சீரொப்பாவும் என்று சொன்னார். இப்படி இந்தக் காரியம் மூணு விதமாய்ப் பிறந்த படியினாலே நான் கேழ்விப்பட்டது நிசம் போலே காணுது. அதுவும் ரெண்டு மூணு நாளையிலே விசிதமாயித் தெரியும்.

### *1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 29; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 18; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப் போனவிடத்திலே முசே பெடுத்தல்மீ தவிர மத்த கோன்சேலியேர், ஒபிசியால்மார் (அதிகாரிகள்) வகையிராக்கள் யிருந்தார்கள். அப்போ நான் போயி முன் (12 தேதி) நந்திராசா முசே கொதே பேருக்கு அனுப்பின காகிதமும், யிமாம் சாயபு உடம்பிறந்தாள் மகள் வழுதாவூரிலிருந்து அனுப்பின காகிதமும், நேத்து 17தேதி சனி வாரம் பதினோரு மணி வேளைக்கு துறையூரார் அனுப்பின காகிதமும் பிரான்சுப் படுத்தி, அவர்களனுப்பின காகிதமும் கூட வைத்துக் கொண்டு போயி குடுத்தவுடனே, அதைப் பார்த்துக்கொண்டு பிரான்சிலே யெழுதின மூணு காகிதத்தையும் அவர் சின்ன சக்கிறத்தோர் (இளநிலைச் செயலர்) முசே ஷெவரோ (M. Chevreau) என்கிறவன் கையில் குடுத்து, அசல் காகிதத்தைத் தம்முடைய அவசி (இது விளங்கவில்லை) பேரிலே போட்டுக் கொண்டு, ஒன்பது மணி வேளையான படியினாலே கோவிலுக்குப் போய் பூசை கேட்டு வந்து, அப்பால் தமக்கு நந்திராசா அனுப்பின ஒத்தைக் கொம்பு ஆனையும் ரசா சாயபு குடுத்த ஆனையும் ஆக ரெண்டு ஆனையும் அழைப்பிச்சு, அது அரிசி தின்னுகிற வேடிக்கையும் தேங்காய் ஒடைச்சு சாப்பிடுகிறதும், வாழப்பழம், ரொட்டி முதலானதுகளையும் கொண்டு வந்து போடச்சொல்லி, அது சாப்பிடுகிற வேடிக்கை பார்த்து, அப்பால் ரூபாய் போட்டதை யெடுத்து மாவுத்தன் கையிலே குடுத்தது முதலான வேடிக்கை ரெண்டு நாழிகை தேசகாலம் பார்த்தார்கள்.

அப்பால் மேல்வீட்டின் பேரிலே யேறப்போகச்சே முசே தெசொசே (M. Dusaussaye) சிறிது காகிதங்களைக் கொண்டு வந்து காண்பிச்சார். அப்பால் மேல்வீட்டின் பேரிலே யேறின பிற்பாடு முசே திலார்ஷு தொடந்து, சாத்துக்கடை (சாத்கட்–Satgarh) யிராசத்து கான் (Hirasat Khan) செத்த கபுறும் சொல்லி, அதுக்கு அவர்களுக்கு துக்கசமனக் கடுதாசி யெழுதிவிச்சு அனுப்பிக்கவும், ரசா சாயபு உடம்பிறத்தாளை யிராசத்து கான் கலியாணம் பண்ணியிருக்கிறபடியினாலே, ரசா சாயபுவிடம் போயி

[1] துக்கசமனம், துக்க சபனம் என்று இருவேறு வகையில் எழுதப்பட்டிருப்பது காண்க: பொருள் துக்கம் விசாரித்தல்.

துக்கசபனம்[1] சொல்லத் தக்கதாக (சொல்வதற்காக) முசே துரையவர்கள் பரமத்தியாயி (இதன் பொருள் விளங்கவில்லை) முசே தெபுசேத்து, முசே தெசொசே, தானும் போய் விசாரிச்சு சுபா உத்தாரம் கேட்டு வாங்கிக் கொண்டு வர (முடிவு செய்தனர்). யிராசத்து கான் செத்துப்போனவனுக்குப் பிள்ளையில்லாமல் நாலு பெண்ணாய்ப் பிறந்து யிருக்கிறபடியினாலேயும், வெள்ளாட்டி வயத்துப் பிள்ளை ஒன்று சிறு பிள்ளையா யிருக்கிறபடியினாலேயும், அண்ணன் தம்பி ஒருத்தரும் யில்லாதததைத் தொட்டு வேலூர் மீருத்தசால்லி கான் (முர்த்தசா அலி கான்) சாத்துக்கடையை கட்டிக் (பிடித்துக்) கொள்ள வேணுமென்று அவர் சொஸ்தமில்லாமல் யிருக்கச்சேயே யோசனை பண்ணிக் கொண்டிருந்தபடியினாலேயும், ஆர்க்காட்டு சுபைதாரன்[1] அப்துல் வகாபு கான் பேரிலே (அவன்) போயி சண்டை பண்ணாமலிருக்கத் தக்கதாகவும், யிதுகளுக்குச் சென்னப்பட்டணம் கொவற்ணதோர் மேஸ்தர் சாந்தரசுக்குக் (துரையின் உத்திரவுப்படி முசே தெலார்ஷால்) காகிதம் எழுதி அனுப்பப்பட்டது. அப்துல் வாகாபு கான் வகையிராக்கள் சாத்துக்கடையின் பேரிலே ஒரு பொல்லாப்பும் பண்ணாமல் மேஸ்தர் சாந்தரசுக்கும் காகிதம் தாக்கீதாயிற்று (அனுப்பப்பட்டது). இப்படி (யிருக்கச்சே) துரையவர்களண்டைக்குப் போயி இந்த சமாசாரங்களெல்லாம் அறிஞ்சு கொண்டு காசாக் கச்சேரியே வந்து வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் பகலைக்கு மேலாக நாலு மணிக்கி துரையவர்கள் அழைச்சு அனுப்பினார்கள். நான் போனவிடத்திலே மதனாந்த பண்டிதனும் அங்கே வந்தான். நந்திராசா வண்டையிலே யிருந்து துரை அவர்கள் பேருக்கு ரெண்டு கடுதாசியும் யென் பேருக்கு ரெண்டு கடுதாசியும் வந்தது. என் பேருக்கு வந்த கடுதாசியை யென் கையிலே குடுத்து, தம்முடைய பேருக்கு வந்த கடுதாசியைக் குடுத்துப் படிச்சுச் சொல்லச் சொன்னார். ஒரு கடுதாசியிலே யெழுதியிருந்த வயணம்: "தாங்கள் பிறீதியுடனே எழுதி அனுப்பின கடுதாசியைப் பார்த்துக் கொண்டு அத்தியந்தம் சந்தோஷமாச்சுது; முன்னே நாம் ஸ்ரீரங்கத்திலேயிருந்து தீரவேணும் யென்று விஸ்தாரமான சொலுதாதுகளையும் சண்டை சாமானும் நானா வித குண்டு மருந்து வகையிரா அனுப்பிவிக்குறோமென்றும் (எல்லாம்) அனுகூலம் ஆகும் (என்றும் எழுதியிருக்கிறீர்கள்). உங்களுக்குக் குடுக்கவேண்டிய பணத்தையும்

[1] சுபா, சுபை என்று இரு விதமாகவும் பிள்ளை எழுதுகிறார்.

உடனே அனுப்பச் சொல்லி யெழுதியிருக்கிறீர்கள். இப்படி பிறீதி அந்தக்கறணத்துடனே எழுதினது பார்த்துக் கொண்ட உடனே இந்தக் காகிதம் வருகிறதுக்கு முன்னேயிருந்த கிலேசமில்லை. இந்தக் காகிதம் வந்து பார்த்துக் கொண்ட பிறகு ராச்சியங்களெல்லாம் கைக்கு வந்தால் யெந்த சந்தோஷமோ அதைவிட அதிகமான சந்தோஷத்தை அடைஞ்சோம்" யென்று எழுதியிருந்தது.

பின்னை ஒரு காகிதத்திலே, தாங்கள் விஸ்தாரமாக அனுப்பிவிக்குறோமென்ற பவுன்சுகளுக்கும் சண்டை சாமான் அனுப்புகிறதுக்கும் உண்டான திரவியம் (பணம்) மாசா மாசம் குடுத்து விடுகுறோமென்றும், யிதல்லாமல் முன் சம்மதியுடனே சேர்ந்த (முன் பாக்கிப்) பணம் கணக்குப்படிக்கிக் குடுத்து விடுகுறோமென்றும், பவுன்சுடனே சேந்ததும் சண்டை சாமான் வகையிராவுடனே சேந்ததும் சீக்கிரமத்துக்கு அனுப்பச் சொல்லியும் எழுதியிருந்தது. (மேலும்) யிங்கிலீசுக்காறர், மமுதல்லி கானை மெத்த வஞ்சனை பண்ணுகிறார்கள். அதுக்கு யெப்படி தாங்கள் அவர்களை அதம் பண்ண வேணுமோ அப்படிப் பண்ண வேணுமென்று(ம் எழுதியிருந்தது). "முன்னிருந்தவர்கள் யெல்லாம் கும்பினீருடைய உத்தாரத்தின் பேரிலே வந்தவர்கள்; நீங்கள் பிரான்சு ராசாவுக்கு மந்திரியாயிருந்து இவ்விடத்துக்கு (அவரது) பிரதிநிதியாயி வந்து, யிவ்விடத்துக் காரியங்களெல்லாம் செயம் பண்ண வந்திருக்கிறபடியினாலே தாங்கள் நினைச்ச காரியம் அனுகூலமாகாம லிருக்காது. யென் மனோரதமும் நிறைவேறும். இந்தச் சேதிகளெல்லாம் வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யருக்கு எழுதி அனுப்பிவிச்சோம். அவர் சொல்ல சகலமும் தெரியவரும்," யென்று இந்தப்படிக்கி எழுதியிருந்த வயணத்தைச் சொன்னதுக்கு, துரை அவர்கள் சொன்னது, "வாய்ப் பேச்சும் காகிதத்திலே யெழுதியிருக்கிற புஷ்ட்டி மாத்திரமே அல்லாமல், நான் வந்து அஞ்சு மாசமாய் பார்க்குறேன், காரியத்திலே ஒன்றும் காணோம்," யென்று விஸ்தரிச்சுச் சொல்ல, அதுக்கு நான் சிறிது உத்தாரங்கள் சொல்ல, அதின் பேரிலே இதை பிரான்சிலே எழுதிக்கொண்டு வாறோம் யென்று சொன்னேன்.

அப்பால், "இந்தப் பட்டத்துக்குள்ளே குமிசெல்லியோர், சின்ன துரை இவர்கள் மனசுப்படியே கவை காரியங்கள் நடப்பிச்சுப் போடுகிறார்கள்; அது யெனக்குச் சம்மதியில்லை. யெனக்கு ஒன்றும் கபுறு ஆகிறதில்லை. இனி மேல் அப்படி கவையில்லை (நடக்கக் கூடாது). யெல்லாம் யென்னுடைய உத்தாரப் படிக்கு நடக்கவேணு," மென்று

சுருக்காயும் விஸ்தரிச்சும் உத்தாரஞ் சொன்னார். அதுக்கு நான், "உங்களுக்கு யெல்லாம் புதுசாய்த் தோணுகிறது. நீங்கள் யிப்போ வந்து இந்த ராச்சிய வாடிக்கை வர வரத் தெரிஞ்சு கொள்ளுகிறபடியினாலேயும், இனி மேல் உங்களுடைய சமுகத்திலே தானே (நீங்கள் சொல்லுகிறபடி தானே) நடக்கு" மென்று சொல்லவேண்டிய வயணமாம்படியே சொல்லி, யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

யிராசத்து கான் செத்துப் போனதுக்கு சந்தாசாயபு வீட்டுக்குப் போயி துக்கம் சொல்லிப் போட்டு வீட்டுக்குப் போனேன். நான் போகச்சே முசே திலார்ஷு, முசே தெபொசேத்து, முசே தெசொசே வந்து மெனவிப்போட்டுப் போனார்கள்.

*1754 வருசம், தெசம்பர் மாசம், தேதி 31; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 20; செவ்வாய்கிழமை*

இத்தனாள் வெள்ளைக்காரர் சொல்லிக்கொண்ட சேதி யென்ன வென்றால், மூணு மாசம், அற்பிசி மாசம் முதல் மார்கழி மாசம் வரை (அக்டோபர்–டிசம்பர்) ஆயுதம் யெடுத்துச் சண்டை பண்ணத் தேவையில்லை யென்று பண்ணியிருந்தார்களென்றும், இப்போது தை மாசம் முதல் பதினெட்டு மாசம் வரைக்கும் சண்டை கவையில்லை (போடக்கூடாது) யென்று சீமையிலே தானே பிரான்சுக்காரருக்கும் இங்கிறேசுக்காரருக்கும் தீந்து வரந் தனியும் இங்கே சண்டை பண்ணக் கவையில்லை யென்றும் (உடன்படிக்கைக்) காகிதம் கொண்டு முசே குலுவேத்து (சென்னைக்குப்) போனார். நாலு நாளையிலே அந்தப்படிக்கி ஒடம்படிக்கை பேசிக்கொண்டு வருவார். இனி மேல் சண்டை நடவாது.

மயிலாப்பூர் விசுப்பு பாசி ராயர்[1] வருகிறார் யென்று (சொன்னதாக) ஒருத்தருக் கொருத்தர் சொல்லிக் கொண்டு யிருந்தார்கள்.

[1] பாஜி ராவ் மராட்டிய அரசரைக் கொலுப் பொம்மையாக்கி, புனாவிலிருந்து அப்பேரரசை ஆண்டு வந்த பேஷ்வா.

## சனவரி 1755

*1755 வருசம், சனேரி மாசம், தேதி 2; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 22; வியாழக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே துரை அவர்கள் என்னை அழைச்சு அனுப்பினார். போனவிடத்திலே, "திபாசியோமிலே (office of the Dubash) யெழுதி யிருக்கிறபடிக்கி வெள்ளைக்காரர் தவிர மத்த தமிழர், துலுக்கர் சமஸ்தமான யிந்துக்களுக்கு நீ யெசமானான படியினாலே உனக்குக் கீழ்ப் படிஞ்சு, உன் சொற்படி கோட்டு, உன் ஆணை ஆக்கினைப்படிக்கிக் கேட்டு, உனக்கு வந்து கபுறு சொல்லத்தக்கதாக சமஸ்தமான பேருக்கும் நான் ஒரு (ஆணை) குடுக்கிறேன். நீர் கும்பினீர் காரியத்திலே சாக்கிறுதையா யிருந்து சத்தியத்துடனே யிப்போ கும்பினியாருக்கு பெகுலுக்குசான் (கஷ்ட நஷ்டம்) வந்திருக்கிறபடியினாலே, உன்னைத் தொட்டு கும்பினியாருக்குப் பிறயோசன பிரதிஷ்டை வரும்படியாய் நடப்பிச்சுக் கொள்ள,"ச் சொல்லிச் சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "கோவற்ணதோர்களா யிருக்கிறவர்கள் தயவு பண்ணி நடப்பிக்கிறதினாலே கும்பினீர் காரியத்திலே நான் பிறயாசப்பட்டு நடந்து கொள்ளுகிற கிரிகையிலே தங்கள் சித்தத்திற்கு சந்தோஷம் வரவே வரும். சத்தியத்துடனே நடந்து கொள்ள வேணுமென்று நீங்கள் சொன்னால் நான் சொல்ல வேண்டிய தென்ன யிருக்குது," என்று சொன்னதுக்கு, அவர் சிரிச்சுக் கொண்டு, அப்பால் யென்னைப் போய் மகாநாட்டார் பின்னையும் கும்பினீர் உத்தியோகஸ்தர், சமஸ்தமான பேரையும் கூட்டிக் கொண்டு பதினோரு மணிக்கி வரச் சொல்லி சொன்னபடிக்கி நான் யென் காசாக் கச்சேரிக்கி வந்து, சகலமான பேரையும் சமை (ஏற்பாடு) பண்ணுகிற நிமித்தியம் அவரவரண்டைக்கிச் சேவுகரைப் போயி அழைச்சுக் கொண்டு வரச் சொல்லி அனுப்பி விச்சேன்.

துரை அவர்கள் யெனக்கு பெகுமானம் குடுக்கிறதுக்கு, சிறபெஞ்சு, கலிக்கி, துராய் வகையரா, ரத்தின நகை பூஷணங்களும் அழைப்பிச்சு, மெல்லீசு ரெண்டு சிப்பம் சகலாத்தும் மயேதோப்புதோர் பட்டு உருப்படிகளும் (cloth of gold woven in silk) (அனுப்பச் சொல்லி) முசே பொலே கையிலே முசே மீரா பேருக்கு ஒரு (துணுக்கு) யெழுதிக் குடுத்து, அப்பால் பீரங்கி மேஸ்திரியை அழைப்பிச்சு பதினஞ்சு பீரங்கி போடச் சொல்லியும் திட்டப்படுத்தி விச்சார்.

நான் பதினோரு மணிக்கு நேரே காசாக் கச்சேரியிலே யிருந்து மகாநாட்டார், கும்பினீர் உத்தியோகஸ்தர் வகையிராக்களை அழைச்சுக்

கொண்டு கோட்டையே போய் துரை அவர்களைப் பேட்டி கண்டு, (வாடிக்கைப்படிக்கி) சனேரிப் பண்டிகைக்கு (புத்தாண்டு) நதீர் (நன்கொடை) வைத்து ஆன பிற்பாடு, (துரையவர்கள்) கும்பினீர் உத்தியோகஸ்தராயிருக்கப்பட்ட அரும்பாத்தை வினாயகப்பிள்ளை, கடலோரம் (கடற் சுங்க அலுவலகத்து) ராமச்சந்திரய்யன், டங்கா சாலையார், புகையிலைக் கிடங்கு பாபுராயனது (Bapu Rao) சாவடி மணியக்காரர், சுத்துக்கோட்டையார் (கோட்டைக்கு வெளியே வசிப்போர்) வகைபிராக்களையும், சீமா (சீர்மை) ஆமீல் ரங்கப்ப முதலியார், கும்பினீர் வர்த்தகர், நயினார் உள்பட, மகாநாட்டாரையும், பேர் பேர் வழியா அழைச்சு, "யினி மேல் நீங்கள் என்னண்டைக்கு வந்து கபுறு சொல்லத் தேவையில்லை; யெதுவும் ரங்கப் பிள்ளைக்குப் போய்க் கபுறு சொல்லுகுறது, அவர் சொற்படி கேட்டு நடந்து கொள்ளுகிறது, யிதிலே யாதாமொருவர் அத்து தப்பி நடந்தால் ஆக்கினை அபராதம் வாங்குவோ" மென்று யிந்தப்படி சகலமான பேருக்கும் துரை அவர்கள் ஒடுதிக் கட்டளை (order-ஆணை) யிட்டு, அப்பால் யெனக்கு மேலே யெழுதப்பட்ட பூஷணங்களும் மயேதோப்புதோர் வகையிரா தினிசுகளும் வெகுமதி பண்ணி, பன்னீர் பாக்கு வெத்திலை குடுத்து ஆனவுடனே கோட்டையிலே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள்.

அப்பால், துரை அவர்கள் பெகு சந்தோஷத்துடனே தாம் யெனக்கு நடப்பிச்ச பெகுமதி வரிசையுடனே, சின்னத் துரை முதலான கோன்சேல்க்காரர் வீடுகளுக்குப் போய்க் கண்டு போட்டு, அப்பால் வீட்டுக்குப் போகச் சொல்லி உத்தாரம் குடுத்து அனுப்பிவிச்சார். நான் ஆசாரம் பண்ணி அனுப்பிவிச்சுக் கொண்டு சங்கீதம் மேளம் நட்டுமுட்டு நடனாட்டகங்கள் சாலையுடனே சமஸ்தான கும்பினீர் உத்தியோகஸ்தர், மகாநாட்டார் வகையிராக்களுடனே பிறப்பட்டு, துரையவர்கள் சொற்படிக்கி சின்ன துரை முதலான கோன்சேல்க்காரர் வீடுகளுக்குப் போய் அவரவர்களைக் கண்டு உபசாரமாய்ச் சொன்னதுக்கு, அவர்களும் வெகு சந்தோஷத்துடனே மொபாற்குபாதி சொல்லி பன்னீர் பாக்கு வெத்திலை குடுத்தனுப்பிவிச்சார்கள். முசே திலார்ஷு மாத்திரம் யின்றையத் தினம் யெனக்கு சாவகாசமில்லை, நாளையாவது (அதற்கு அடுத்த நாளாவது) வரலாம் யென்று சொல்லி அனுப்பிவிச்சபடியினாலே அவர் வீட்டுக்கு மாத்திரம் போகயில்லை. அப்பால் அந்த சம்பிறமத்துடனே வீட்டுக்குப் போனவிடத்திலே அவரவர் யெனக்கு நதீர் வைத்துக் கண்டார்கள். நானும் அவர்களுக்குப் பன்னீர் பாக்கு வெத்திலை குடுத்து அனுப்பிவிச்சேன்.

***1755 வருசம், சனேரி மாசம், தேதி 5; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 25; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போயி துரை அவர்கள்

மேல் வீட்டின் பேரிலே போன உடனே துரை அவர்களாகிய முசே சார்லு ரொபேர் கொதே குமாந்தான் தறுவாயி (Commander-in-Chief ஆகிய) குவர்ணதோரும், கொம்மிசேர் (Commissary) ரெண்டு பேர்கள் முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார் முதலான குமுசேலியோர் அனைவரும், யிதல்லாமல் முசே குலுவேத்தும் கூட, மேல்வீட்டின் பேரிலே யிருக்கச்சே, நான் போயிக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அப்பால் யேகத்துக்குக் கூடியிருந்த பேர்எல்லாம துரை அவர்கள் காம்பிராவிலே போயி குமிசெல் கூடினார்கள். முசே குலுவேத்து மாத்திரம் வெளியிலே ஒலாத்திக் கொண்டுயிருந்தார்.

இப்படி யிருக்கச்சே, (சிறிதுநேரம் சென்று) வெள்ளைக்காரர் வரிசை வச்சுக் கொண்டு (வரிசையாய்) தம்பூறு அடிச்சு, புதுசாயி(ய்) வெள்ளைக்கொடி ஒன்றும், வெள்ளையும் சிகப்பும் போட்ட கொடி ஒன்றும், வெள்ளையும் நீலமும் போட்ட கொடி ஆக கொடிகள் நாலும் (மூன்று தானே ஆகிறது) பிடிச்சுக்கொண்டு, துரை அவர்கள் (தலைமையிலேயே எல்லோரும்) கோயிலுக்குப் போனார்கள். (அங்கே) பூசை கேட்டு, கொடிகளுக்கு ஞானஸ்நானம் குடுப்பிச்சு சுவாமியைப் பார்த்து சகல செனங்களும் சுகப்படும்படிக்கி ரெண்டு வருஷத்துக்கு[1], யிங்கிறேசுக்காறருக்கும் நமக்கும் கலாபம் (சண்டை) இல்லாமல் உடம்படிக்கையா யிருக்க, ஆறாகிலும் வடக்கேயிருந்து சண்டைக்கு வந்தாலும், மராட்டியர், துலுக்கர் முதலாகிய பேருக்குள்ளே யாதாமொருத்தர் சண்டைக்கு வந்தாலும் நாங்கள் ரெண்டு பேரும் கூடி (இவர்களை யெதிர்த்து) சண்டை குடுக்கத் தக்கதாகத் தீத்துக்கொண்டோம்; ஆகையாலே யெல்லாரையும் சுவாமி ரெக்ஷிக்க வேணு மென்று சுவாமியை நன்றாகப் பிரார்த்திச்சுக் கொண்டு வெளியிலே வந்து, சகல செனங்களும் அறியும்படியாயி(ய்) (பெரிய) காகிதம் யெடுத்துப் படிச்சது யென்னவென்றால் : “யிங்கிறேசுக்காறர் சாதிக்கும் பிரான்சு சாதிக்கும் சீமையிலே போயி(ய்) தீந்து வருமளவும் பதினெட்டு மாசத்துக்கு ஆயுதம் யெடுத்து சண்டை பண்ணக் கவையில்லை (கூடாது); ஆராகிலும் சண்டைக்கு வந்தால் யிருவரும் கூடிச் சண்டை பண்ணுகிற (து—என்று) இப்படி தீந்துது,” யென்று படிச்ச பின், பிரான்சு ராசா அவர்கள் சிரஞ்சீவியாய் யிருக்கவேணுமென்று ராசாவை வாழ்த்தி இருபத்தோரு பீரங்கியும் போட்டு, துரையவர்கள் கொச்சின் சீனாவிலேயிருந்து வந்த வீசுப்புடனும் (பிஷப்) மத்த குமுசேல்காரருடனும் கூட கோயிலிலே சடங்கு பண்ணிப் போட்டு மேல் வீட்டின் பேரிலே போயி வீசுப்புக்கு வெகு ஆசாரம் பண்ணி உபசரணைப் பண்ணினார்கள்.

---

[1] 18 மாதம் தான்.

அப்புறம் அவர்கள் அலமுசு சாப்பிடுகுறதுக்கு முஸ்தீபா யிருக்கச்சே, நான் கும்பினீர் வர்த்தகரையும் அழைச்சுக் கொண்டு போயி நிற்கச்சே, யென்னைக் கண்டு துரை அவர்கள் யெதிரே வந்தார். நானும் கும்பினீர் வர்த்தகரும் ரொம்ப ஆசாரம் பண்ணினோம். அவரும் குளுந்த முகத்துடனே ஆசாரம் பண்ணி, "இப்படியாகப் பதினெட்டு மாசத்துக்குக் கலாபமில்லை, சொஸ்தமாயி தீத்துக்கொண்டோம், சகல செனங்களும் சுகமாயிருக்கலாம். யிதுவுமல்லாமல் வர்த்தகர்கள், குடிகள், வழி நடைக்காரர் (பயணிகள்) சகலரும் நிர்ச்சிந்தையா யிருக்கலாம்," யென்று துரை அவர்கள் சொன்னதுக்கு, நான் சொன்னது, "நீங்கள் வந்த பிறகு கலாபம் (சண்டை) யில்லாமல் பண்ணினீர்கள். பதினெட்டு மாசத்துக்குக் கலாபம் பண்ணாமலிருக்கும்படிக்குப் பண்ணீர்கள். இனி மேல் கலாபம் நடக்கத்தக்க தில்லை. சகல செனங்களும் சுகப்படும்படிக்கிச் செய்தீர்கள். முன்னாலே யிந்தக் கலாபம் தொட்டு பெகு சனங்கள் ஸ்திதியைப் போக்கடிச்சுக் கொண்ட பேரும், சீவனைப் போக்கடிச்சுக் கொண்ட பேரும், இந்தப்படி யெல்லாம் நொந்து போயிருக்கிற ராச்சியத்து சகல செனங்களும் சுகப்படும்படிக்கி நடத்தின படியினாலே இந்தியாவிலேயும் யீரோப்பாவிலேயும் உங்களுக்கு யென்றைக்கும் நிற்கும் படிக்கி கீர்த்தி வந்தது," யென்று பின்னையும் அனேகம் யிருக்கிற உபசாரங்கள் சொன்னோம்.

அதின் பேரிலே பெருமுக்கல் மியா(மியான்) சாயபு துரையவர்களுக்குக் காகிதம் அனுப்பியிருந்தார். அதிலே யெழுதி வந்த வயணம், "தாம் யிவ்விடத்துக்குச் சினேகமாயி, நம்பி யிருக்கிறோம். தம்முடைய சாகீர் சீமையிலே சிறிது சீமை இங்கிறேசுக்காறர் கட்டிக்கொண்டார்கள், மமுதல்லி கான் சிறிது கட்டிக்கொண்டான். நம்முட சாகீரிலே (பலவும்) போச்சுது. இப்படிப் போக நான் கூச்சமாயி (கொஞ்சம்) சாகீருடனே யிருக்கிறேன். இப்படி யிருக்கச்சே, என் திட்டு ஆத்திலே உப்பளம் உண்டு. அதிலே முசே சொற்னே வலை போட்டு ரொம்ப சேதங்களாயி நடத்திவிக்கிறார். அதுக்கு தாங்கள் தயவு பண்ணி உபாதையை நீக்கி வைக்க வேணு," மென்று யெழுதி யிருந்த சேதியைத் துரை அவர்களுக்குச் சொன்னேன். அப்போது அதை பிரான்சு பண்ணிக்கொண்டு ஆறு மணிக்கு வரச் சொன்னார். அல்லாமலும், "அவர் நமக்கு மித்திரர் ஆக யிருக்கிறபடியினாலே, அந்த உபாதியை நீக்குவோ" மென்றும் சொன்னார். அனுப்பிவிச்சுக் கொண்டு யென் காசாக் கச்சேரியே வந்துவிட்டேன்.

*1755 வருசம், சனேரி மாசம், தேதி 6; பவ வருசம், மார்கழி மாசம், தேதி 26; சோமவாரம்*

இத்தனாள் காலமே மயிசூர் வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யன்

நந்திராசா கடுதாசி ரெண்டு துரை அவர்களுக்குக் கொண்டு வந்து காத்துக் கொண்டு யிருந்தபடியினாலே, அவரையும் அழைச்சுக் கொண்டு மேல் வீட்டின் பேரிலே போனோம். போனவிடத்திலே துரை அவர்கள் முசே பெடுத்தல்மீ, முசே பொலோ, துரை அவர்கள் தம்பி முசே குலுவேத்து வகையிராக்களுடனே தென்னண்டைச் சாலையிலே (கூடம்) ஒலாத்திக் கொண்டிருந்தார்கள். அப்போ வெங்கிட்டநாரணப்பய்யர் ஆசாரம் பண்ணி நந்திராசா அனுப்பின ரெண்டு கடுதாசியும் குடுத்தார். அதை துரை அவர்கள் வாங்கி யென் கையிலே கொடுத்தார். அப்போ துரை அவர்கள் வெங்கிட்டநாரணப்பய்யரைப் பார்த்து, "நேத்து சமாதானமான சேதி ரங்கப்பன் உம்முடனே சொன்னானா?" வென்று கேட்டார். "ஆம் அய்யா, சொன்னாரெ"ன்று சொல்லி ஆன பிறகு, வெங்கிட்டநாரணப்பய்யரைப் பார்த்து, "நாம் வந்து அஞ்சாறு மாதமாச்சுது. உங்கள் வழிபாத்துக்கொண்டிருந்தோம். நீங்கள் யிது வரையில் சேத சம்மதிக்கும் வர்த்தமானம் நடக்கவேண்டிய சம்மதிக்கும் யின்னபடி யென்று ஒரு வழியிலேயும் சமாதானம் சொல்லாமல் போனீர்கள். நாம் யெத்தனை நாள் பார்த்துயிருப்போம்? நம்முட பொட்டிப் பணம் சிலவாறபோது அதுக்கு (பெட்டி மறுபடியும் நிறைவதற்கு) மார்க்கம் நாம் பார்க்கவேணுமே! ஆகையினாலே இங்கிரேசுக்காறரும் நாங்களும் பதினெட்டு மாசத்துக்குச் சமாதானமாயிப் பேசிக்கொண்டோம்", யென்று சொன்னார்.

### *1755 வருசம், சனேரி மாசம், தேதி 13; பவ வருசம், தை மாசம், தேதி 4; சோமவாரம்*

இத்தனாள் கபுறு, சவா பாசி ராயன் கிருஷ்ணா நதிக்கு அப்புறம் அஞ்சுமசிலிலே[1] ஆதோனி யென்கிற வூரிலே யிறங்கி, கற்னாடகத்துக்கு வருகிறாரென்றும் மகாமகத்துக்குக் கும்பகோணத்துக்கு வருகிறாரென்றும் அவரவருக்குக் கடுதாசி வந்ததாயி சொல்லிக் கொள்ளுகிறார்கள். யிதுவுமல்லாமல், இவரை கற்னாடகத்துக்குப் போக வொட்டாமல் தடை பண்ண வேணுமென்று சலாபத்து சங்கு பிறகே துடர்ந்து வருகிறாரென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். சுவாமியினுடைய சித்தம் கால கெதி எப்படியோ அப்படி நடக்கப்போகுது.

---

[1] அஞ்சு மசில் (தூரத்திலே) –இந்துஸ்தானியில் மஜில்– என்பது Five stages என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. Stage அல்லது மசில் என்பது ஒரு நாட் பயண தூரத்தைக் குறிக்கிறது போலும்.

***1755 வருசம், சனேரி மாசம், தேதி 14; பவ வருசம், தை மாசம், தேதி 5; செவ்வாய்கிழமை***

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அழைக்குறார் யென்று சோபுதாரன் வந்து அழைச்சான். போனவிடத்திலே வெலிகோட்டு பங்காறு யாச்சம நாயக்கன்,[1] துரை அவர்களுக்கு முபார்குபாதி எழுதின கடுதாசியை யென் கையிலே குடுத்தார். அதிலே யிவர் புதுசாயி துரைத்தனத்துக்கு (வந்ததுக்கு) முபார்க்குபாதி எழுதின சேதியும் சொல்லி, (கீழ்வருமாறு) பெகுமதி அனுப்பிருந்தார். முகம்மூடி (முகமுதி)–1, படகா–1, முகிஷிபாகை–1, சீருப்பியேசு–1, குதுனி (கட்டணி)–1, உத்தாரிசல்லா–2, ஆக யேழு நகையும்[2] குடுத்தான்.

பிற்பாடு, பைகோ ராசா (பெகு ராஜா) எழுதின கடுதாசியும், அவருட மந்திரி எழுதின கடுதாசியும் ஆக ரெண்டு கடுதாசி, துரை அவர்கள் தங்களுக்கு வந்தது யென்று என் கையிலே குடுத்துப் படிச்சுக் காண்பிக்கச் சொன்னார். அதிலே யெழுதி யிருந்த வயணம்: முசே புருனோ (M. Bruno) வசம் தாங்கள் யெழுதி அனுப்பின கடுதாசியும் பெகுமதி வஸ்திரமும் வந்து சேர்ந்து வெகு சந்தோஷமாச்சுது யென்றும், தங்களுடைய கவை காரியத்துடனே சேர்ந்ததுக்கு முசே பொ(பு)ருனே சொன்னபடிக்கி சாஞ்சாமி (சேகரம்) பண்ணி அனுப்பிவிச்சோம் யென்றும், தங்களுக்கு வெகுமானமாக[3] ஒரு ஆனை குடுத்து அனுப்பிவிச்சோ மென்றும் ராசா கடுதாசிலே எழுதியிருந்தது. அதையும், மந்திரி கடுதாசியிலே மூணு ஆனை அனுப்பிவிச்சோமென்றும் யெழுதி யிருந்ததையும் அவர்களுடனே சொன்னவிடத்திலே, துரையவர்கள் சொன்னது : "முசே பொ(பு)ருனே எழுதின கடுதாசியிலே ஆனை சேதியே எழுதி அனுப்பயில்லை. அது யென்ன?" யென்று சொல்லி, நல்லது அந்தக் கடுதாசியை பிரான்சுப்படுத்திக் கொண்டு வரவேணுமென்று சொன்னார். அதின் பேரிலே நான் அனுப்பிவிச்சுக் கொண்டு, உப்பிட்டு சாம்பய்யன் வளவிலே சீமந்தக் கலியாணமான படியினாலே அவர் வீட்டுக்குப் போய்விட்டு வீட்டுக்கு வந்தேன்.

இதல்லாமல் திரிச்சிராப்பள்ளியிலே யிருந்து மமுதல்லி கான்

---

[1] இவர் 'வேங்கடகிரி ராஜா' என்ற ஒரு பாளையக்காரர், 'யாச்சம நாயினி வாரு' என்று முதல் தொகுதியில் இவர் சுட்டப்படுகிறார்.

[2] முன்பு சொல்லப்பட்டவை அக்காலத்திய முஸ்லிம் ஆடை வகைகள். அவையன்றி யேழு நகைகள் என்று ஆங்கில மொழி பெயர்ப்பாளர்கள் எழுதியுள்ளனர்.

[3] பெகு, வெகு என்று ஒரே வாக்கியத்தில் வருவதைக் காண்க. அதேபோல் ஓரிடத்தில் சரஞ்சாமி என்றும், மற்றவிடத்தில் சாஞ்சாமி என்றும் உள்ளது. பல சொற்களும் பல்வேறு இடங்களில் இப்படி எழுதப்பட்டுள்ளன. சரஞ்சாம் என்பதே (இந்துஸ்தானி) சரியான பிரயோகம். பெப்ரிசியஸ் அல்லது வின்ஸ்லோ அகராதியினைக் காண்க.

மனுஷன் நாரோ பண்டிதன் (Naro Pandit) யென்கிற வக்கீலும், பேர் விளங்கன் (பேர் தெரியாத) துபாசி ஒருத்தனும் சீரங்கத்திலே யிருக்கிற முசே மேசென் அண்டைக்கு வந்து கண்டு பேசிப்போட்டு, அப்பால் நந்திராசா அண்டைக்குப் போய் பணம் காசு ஒப்பு—உடன்படிக்கையாயி கண்டு பேசினவிடத்திலே, அதுகளுக்கெல்லாம் அவர் சம்மதியாமல், மமுதல்லி கான் தங்களிடத்திலே நடப்பிச்ச அவசத்தியங்களும் இங்கிறேசுக்காறர் (மோசம் பண்ணும் செயல்களும்) நடப்பிச்ச அப்பிறமாணிக்கங்களும் (மோசம் பண்ணும் செயல்களும்) ஒரு தரத்துக்கு ரெண்டு தரமாயி(ய்) அவர்களுடனே சொல்லி, மறுபடி (திருப்பி) அனுப்பிவிட்டதா(ய்) எழுதி வந்தது.

***1755 வருசம், சனேரி மாசம், தேதி 16; பவ வருசம், தை மாசம், தேதி 7; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே யேழு மணிக்கு துரையவர்கள் அழைச்சு வரச் சொன்னார்க ளென்று கும்பினீர் சேவுகன் வந்து அழைச்சான். அதின் பேரிலே துரை அவர்கள் அழைக்கச் சொன்ன மட்டுக்கும் போகவேணுமென்று யோசிச்சு உடனே பத்தியம்[1] வாங்கிக்கொண்டு, யெட்டு மணிக்குக் கோட்டைக்குப் போய் துரை அவர்களைக் காண்பிச்சுக் கொண்டோம். அப்போ துரை அவர்கள் சொன்னது : "யிராசத்து கான் நம்முடயவராச்சுதே, அவர் விழுந்து போனார் யென்றதினாலே அந்த ஸ்தானத்திலே ஆர் யிருக்கிறார்களோ அவர்களுக்கு மத்தத்து (மரியாதை) பண்ணி யிடத்தில் வச்சுக்கொள்ளச் சொல்லி வேலூர் மிருத்தசால்லி கானுக்கு நாமும் காகிதப் பத்திரம் யெழுதியிருக்கிறோம். நீரும் அதுக்கு யெப்படி யெழுத வேணுமோ அப்படி யெழுதி அனுப்புவியும்," யென்று சொன்னார். நல்லது, அந்தப்படியே எழுதி அனுப்பிவிக்கிறேன் யென்று சொன்னேன்.

அதன் பேரிலே எலவானசூர் கோட்டையிலேயிருக்கிற மீர்அப்துல் றயிமான் என்கிறவன் நம்முட கிராமங்களிலே ரொம்ப தாம்தூம் பண்ணுகிறானென்று எழுதி வந்ததென்று சேதி சொன்னேன். அதுக்கு துரை அவர்கள் சொன்ன சேதி: அவருக்கு தம்முடைய பேரில் காகிதம் யெழுதச்சொல்லி, அந்த காகிதத்திலே, "நம்முடவனாயிருந்த உன்னை முன்னிருந்த பேர் மார்க்கமாயி நடத்தவில்லை; நான் உனக்கெந்தப்படி நடந்து கொண்டேன். 'யெனக்கு கவுல் காகிதம் (நில உரிமைப் பத்திரம்)

[1] உடல் நலமின்றி, பத்திய உணவில் பிள்ளை இருந்தார் போலும்.

அனுப்பினால் நான் வந்து தங்களைக் கண்டு தாங்கள் சொன்ன புத்தியிலே நடந்து கொள்ளுகிறே' னென்று முன்னாலே நமக்கு எழுதி அனுப்பிவிச்சாயி(ய்); அந்தப்படிக்கி நீ யிப்போது சீமையிலே தாம்தூம் நடத்துகிறாயாம். அது உனக்குக் காரியமல்ல. நமக்கும் யிங்கிறேசுக்காரருக்கும் பதினெட்டு மாசத்துக்குச் சண்டை தேவையில்லை யென்று தீத்துக்கொண்டோம். இப்பவும் நீர் மார்க்கமாயி(ய்) வந்து நடந்துகொண்டாயானால் நல்லது, இல்லாவிட்டால் நம்முடைய பவுன்சை யெல்லாம் தன்னண்டைக்கு அனுப்பிவிச்சு, தனக்கு அதுக்கேத்த தண்டனை பண்ணி நாம் நஷ்டம் பண்ணிவிப்போம்;" யென்று பிரான்சிலே காகிதம் யெழுதச் சொல்லி, என்னையும் அவனுக்குத் தாக்கீதமாய் (அதிகாரமாய்) காகிதம் எழுதச் (சொன்னார்).

அதன் பேரிலே வாலிகொண்டாபுரம் உசேன் சாயபு குமாரன் மொதபர் கான் (முதபர் கான்) துரையவர்கள் பேருக்குக் காகிதம் யெழுதி அனுப்பினான். அதிலே, "முசே தொத்தேல் முன்னாலே வாலிகொண்டாபுரத்திலே யிங்கிறேசுக்காரருடனே சண்டை நடந்தபோது அகப்பட்ட சிறிது மருந்து குண்டுகளும் போயியி (இது விளங்கவில்லை) வகையிரா ஆயுத வகைகளும் இங்கே வச்சியிருந்ததாகச் சேதி கேட்டோம். அது சீரங்கத்துக்கு அனுப்பச் சொல்லி எழுதி அனுப்பிவிச்சீர்களே, அப்போ முசே தொத்தேல் சகல தட்டுமுட்டுக்கும் டாப்பு (பட்டியல்) யெழுதி யிங்கிறேசுக்காரர் கையிலே குடுத்தார். அவர்கள் அதுகளெல்லாம் ஒன்றும் வைக்காமல் யெடுத்துக் கொண்டு போனார்கள். இங்கே ஒரு சாமானும் வச்சதில்லை," யென்று மொத்தபர் கான் எழுதி அனுப்பின காகிதச் சேதியைத் துரை அவர்களுடனே சொன்னேன். அதை பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச் சொன்னார்.

அதின் பேரிலே பைகோவு (பெகு) ராசா காகிதமும் (அவரது மந்திரி காகிதமும், பங்காரு யாச்சம நாயக்கன் காகிதமும் ஆக) இந்த மூணு காகிதமும் துரை பேருக்கு வந்ததை பிரான்சு படுத்தியிருந்தோம். (அந்த) மூணும் துரையவர்கள் கையிலே குடுத்தேன். அதை வாங்கி வைச்சுக் கொண்டார். வேலூர் முறு(ரு)த்த சல்லிக்கானுக்கு எழுதின காகிதத்துக்கு நகல் பிரான்சிலே யெழுதினதும் குடுத்தேன். அதையும் வாங்கி வச்சுக்கொண்டார். அதன் பேரிலே அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

யெலவானசூர் மீர் அப்துல் ரயிமானுக்குப் பாரிசிலே காகிதம்

யெழுதி விச்சு, அதுக்கு நக்கல் பிரான்சிலே எழுதித் தயார் பண்ணி யிருக்கிறது. வாலிகொண்டாபுரம் மொத்தபர் கான் அனுப்பின காகிதத்தையும் பிரான்சு படுத்தச்சொல்லி அனுப்பிவிட்டிருக்கிறோம்.

முசே வெறி (M. Very) என்கிறவர் நமக்குக் கடுதாசி அனுப்பிவிச்சார்.[1] அதிலெழுதியிருந்தது, "முன்னாலே நாம் அய்யன் சாஸ்திரிக்கு (முன்பு, அய்யண்ண சாஸ்திரி) சாமீன் னின்று[2] சீமை வாங்கிக் குடுத்திருந்தோம். அப்போது உங்கள் பாரிசமாச்சுதே, நீரும் அந்தப்படிக்கி அவருக்கேச் சீமை குடுக்க வேணுமென்று நான் வந்து உம்முடனே கேட்டதுக்கு, அப்படியே வேறொருத்தர் கேழ்க்கிறதிலே கொஞ்சம் நஞ்சம் சவுகிரியம் (இருந்தாலும்) அவர் (அய்யன் சாஸ்திரி) கையிலே குடுக்கிறோமென்று சொல்லி யிருந்தீரே! அப்படிக் குடாமல் வேறே (ஒருத்தருக்குக்) குடுத்ததாய் சேதி கேட்டோம். இப்படி நடத்தலாமா?" வென்று எழுதி அனுப்பினார்.

அதுக்கு நாம் உடனே மறுகாகிதம் எழுதினோம். "உம்முடனே சொன்னபடிக்கு அய்யன் சாஸ்திரியை அழைத்துக் கேட்டோம். அதுக்கு அவர் நமக்கு அப்படித் தேவையில்லை, உங்களுக்கு சரிப்போன பேர்கள் கையிலே குடுத்துக் கொள்ளுங்கோளென்று கராறு நாமா (ஒப்பந்தம், சம்மதம்) யெழுதிக் கையெழுத்துப் போட்டுத் தந்து நாலு நாளாச்சுது. அதின் பேரிலே நாலு நாள் பிடித்து வேறே குடுத்தோமே அல்லாமல், அவரை அழைப்பிச்சுக் கேளாமலும், அவர் கையெழுத்து வாங்காமலும் குடுக்கயில்லை," யென்று மறு காகிதமெழுதி முசே வெறி அண்டைக்கு அனுப்பிவிச்சோம்.

### *1755 வருசம், சனேரி மாசம், தேதி 19; பவ வருசம், தை மாசம், தேதி 10; ஆதிவாரம்*

அப்பால் முசே பொயிலோவும் (முன்பு பொலோ என்று எழுதியுள்ளது) துரை பிள்ளையும் (மகனும்) அரை நாழிகை நேரம் பேசியிருந்து கோயிலுக்குப் போனார்கள். அப்பால் நான் மேல் வீட்டிலிருந்து யிறங்கி வரச்சே, ஆலம்புரிக்[3] கோட்டை கில்லாதாரனாகிய முசே துலிராம் (M. Duliron) என்கிறவன் வந்து, (என்னிடம்) "கருங்குழி சீர்மை யிங்கிரேசுக்காரர் சப்த்தி (கைப்பற்றினர்) பண்ணார்களே, அந்த

[1] இவர் உத்தரமேரூரில் அப்போது கொம்மந்தாம் ஆக இருந்தார்.

[2] சீமை வாங்கித் தருகிறோம் என்று லஞ்சம் பெற்றுக்கொண்டு, இப்படி ஜாமீன் கையெழுத்துப் போட்ட பிரெஞ்சுக்காரர் பெரும்பாலும் கடைசியில் கம்பெனியின் மொத்த குத்தகைதாரரான பிள்ளையை ஏமாற்றி, அவரைக் கடனாளியாக்கினர்.

[3] முந்திய தொகுதிகளில் ஆலம்புரவி, எனவும் ஆங்கிலத் தொகுதியில் ஆலம்பரை எனவும் அச்சிடப்பட்டுள்ளது. இன்றும் ஆலம்பரை என்றே அழைக்கப்படுகிறது.

வயணம் துரை யென்ன யென்று கேழ்க்குறார். அந்தச் சம்மதி யென்ன?" யென்று கேட்டான். அவனை நான் முசே துலோராம் (M. Dulauren) மகன் யெழுதுகிற சோந்துவாருகுள்ளே அழைத்துப்போய், அவன் கையாலே ஒரு அறிக்கை எழுதுவிச்சேன். அது வென்றால், "யிங்கிறேசுக்காரர் தாலூக்கு அன்பது குதிரை சுவார், அன்பது பேர் பாறுக்காரர்கள் (சிப்பாயிகள்), அன்பது பேர் கற்னாடகச் சேவுகரும் வந்து, கண்டறச்சேரியிலே யிறங்கியிருந்து, அப்பால் கிளியாநகர் தாலூக்கு கிராமம் 8, முருங்கப்பாக்கம் கிராமம் 12, பெருக்கறணை மாகாணம் கிராமம் 15, சுயப்பாக்கம் (கோயப்பாக்கம்) மாகாணம் கிராமம் 15, ஆக கிராமம் 50–ம் வந்து சப்த்தி பண்ணினார்கள். அச்சரப்பாக்கமும் சூணாம்பேட்டு செய்யூர், குளத்தூர் வகையிரா சப்த்தி பண்ணுகிறதாய் அவர்கள் சொன்னார்கள் யென்கிற சேதி வந்தது.[1] அந்தப்படிக்கி ஆனால் ஆலம்புரிக் கோட்டை தவிர மத்ததெல்லாம் அவர்கள் வசமாய்ப்போம்," யென்று சொன்னேன். அந்தப்படிக்கி அவனும் காகிதத்திலே யெழுதிக் கொண்டுபோய் துரை கையில் குடுத்தான். நானு மிந்தச் சம்மதி யெழுதி யிருந்தபடிக்கித் துரையவர்களுக்குச் சொன்னேன். அதுக்கு, துரை யிருந்துகொண்டு யிந்த வயணத்துக்குச் சென்னப்பட்டணம் கோவற்ணதோருக்குக் காகித மெழுதி அனுப்பிவிக்குறோமென்று சொன்னார். நத்து வீராம யென்கிறவனும் நான் முசே கொதேயுடனே சொல்லி கொண்டு ரெண்டு காகிதம் மூணு காகிதமானாலும் வாங்கி அனுப்பிவிக்குரோமென்று யென்னுடனே சொல்லி, அனுப்பிவிச்சுக் கொண்டு போனேன்.

### *1755 வருசம், சனேரி மாசம், தேதி 20; பவ வருசம், தை மாசம், தேதி 11; சோமவாரம்*

இத்தனாள் பகலைக்கு மேலாக நான் துரை அவர்கள் தமக்கு நந்திராசா பெகுமானம் அனுப்பிவிச்ச ஆனையும் குதிரையும், ரசா சாயபு பெகுமானமாய்க் கொடுத்த ஆனையும் குதிரையும் பின்னையும் (அவரவர்கள்) பெகுமானங்கள் அனுப்பிவிச்ச குதிரைகளையும் வித்துப் போடச்சொல்லிக் கப்பித்தான் குவாடுதுவை (captain of the guard) என்னுடனே செல்லச் சொல்லி அனுப்பிவிச்சார். அவன் வந்து என்னுடனே[2] [சொன்னான். நல்லது என்று நான் சொன்னேன்.

---

[1] போர் நிறுத்தம் அமுலிலிருந்தும், பிரெஞ்சுக் கம்பெனியின் ராணுவ பலவீனத்தை உணர்ந்து ஆங்கிலேயர் ஆக்கிரமிப்புகளில் இறங்கிவிட்டனர்.

[2] இது முதல் பிராக்கெட்டில் உள்ள பகுதிகள் புதுவை நகலில் விடுபட்டுள்ளன. எனவே ஆங்கிலப் பதிப்பிலிருந்து இவை என்னால் சேர்க்கப்பட்டவை.

### *1755 வருசம், சனவரி மாசம், தேதி 24; பவ வருசம், தை மாசம், தேதி 11; சோமவாரம்*

இன்று காலை உத்தரமல்லூர், ஆலம்புரி, செஞ்சி, விருத்தாசலம், திருவீதி முதலான கில்லாவிலிருந்த வெள்ளைக்கார கொம்மாந்தான்களுக்கு துரை ஒரு ஆணை பிறப்பித்தார். அதில் கண்டது: இனி மேல் என் (பிள்ளையின்) குத்தகையிலிருக்கும் சீர்மை விவகாரங்களில் அவர்கள் தலையிடக் கூடாது; தங்களுக்கு வேண்டியதை அவர்கள் என்னுடைய அமுல்தாரைக் கேட்டே பெறவேண்டியது; அவர்கள் தம்முடைய சொல்தாதுகளையும் சிப்பாய்களையும் கட்டுப்படுத்தி வைத்திருக்க வேண்டும், ஆகியன.

இங்கிலீசுக்காரர்கள் கருங்குழிச் சீர்மையைப்[1] பிடித்துக் கொண்டார்கள் என்று கவர்னருக்குத் தெரிவித்தேன். "அதைப் பற்றி நீர் ஏதும் கவலை யடைய வேண்டாம்; சென்னப்பட்டணம் துரைக்கு நான் எழுதியிருக்கிறேன்; அவர்கள்] விட்டாலாச்சுது. யில்லாவிட்டால் யிருக்கிற சொலுதாதுகளை அனுப்பி நம்முட யெல்லைச் சறகத்திலே வைத்து, அப்பால் யிங்கிறேசுக்காரர் வசமாயிருக்கிற சீமையும் கட்டிப் போடுவேன்" யென்று சொன்னார். அந்தமட்டிலே அனுப்பிவிச்சுக்கொண்டு நான் வீட்டுக்குப் போனேன்.

### *1755 வருசம், சனேரி மாசம், தேதி 25; பவ வருசம், தை மாசம், தேதி 16; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே, நேத்தய தினம் நாம் பண்ணிவிச்ச முஸ்தீப்புடனே துரை அவர்கள் தம்பி வழுதாவூர் மார்க்கமாயி செஞ்சிக்குப் பயணமாயிப் போனார். நம்முடைய அய்யாவும்,[2] கூட குருவப்பச் செட்டி, நாச்சன பிள்ளை வகையராக்களை அனுப்பிவிச்சேன். அப்பால், துரை அவர்கள் (ளைச் சந்திக்கச்) சமயமில் லாததினாலே வீட்டிலே தானே யிருந்தேன்.

அப்பால் பதினொன்றரை மணிக்கு அழைப்பிச்சு, தம்முட தம்பி சாகிப் (பயணம்) போன சேதி கேட்டார். சாகிப் போனார்க ளென்று சொன்னேன். அப்பால் சமயமாயிருந்த படியினாலே துரை அவர்களுடனே நான் சொன்ன விபரம் என்ன வென்றால் : முன் குரோதன வருஷத்திலே (1745 பிப்ரவரி) யிங்கிறேசுக்காறருக்கும் நமக்கும் சண்டை ஆரம்பிச்ச நாள் முதலாய் யிங்கிறேசுக்காறர் கமாண்டோர் மேஸ்தர் பெத்தோம்

---

[1] இது பிள்ளையின் குத்தகையி லிருந்தது.

[2] இது அப்பாவு என இருக்க வேண்டும். ஆங்கிலத்திலும் அய்யாவு என்றே இருக்கிறது.

(Mr. Peyton) வகையிராக்களுடைய கப்பல்கள் பிறப்பட்டு நம்முடைய கப்பல்க ளெல்லாம் பிடிச்சுக் கொண்டு, நம்முடைய பட்டணத்துக்கு ஒரு வியாபாரமும் பண்ணாமல் (நடைபெறாமல்) படிக்கு பந்தோபஸ்து (முற்றுகை) பண்ணி, அப்பால் அவர்களுடைய கப்பல்கள் நம்முடய துரையிலே வந்து பெடாயாயி (தமது பலத்தைக்) காண்பிச்சுப் போற போது, முசே துப்பிளேயிக்சு கோவற்ணதோர் அவர்கள் யென்னை அழைச்சு, "யிப்படியானால் யிக்கட்டு வந்திருக்குது; நீ மேல் வாங்கிக் கொண்டு கவை காரியங்கள் காத்தாலே அல்லாமல், நிறுவாகமாக மாட்டாது" என்று சொன்னபடியினாலே, நான் மேல் வாங்கிக்கொண்டு அப்போ நம்முடய பட்டணத்திலே சகலமான செனங்களுக்கு யிக்கட்டா யிருக்கிறது மல்லாமல், கும்பினீரிலேயும் பணமில்லாமல் (போனதாலும்) சிப்பந்தி வகையிரா(க்களுக்கு) சான்சாமிகள் நடத்தி நிபாயிச்சு (சம்பளம் கொடுத்து சமாளித்து) செனங்களையும் போஷிச்சுக் கொண்டு வந்(தேன்); அப்பால் அந்த சத்துருக்களா யிருக்கிற யிங்கிறேசுக்காறர்களுக்கு மக்கினம் (குறைவு) வரத்தக்கதாக அவர்களது ஆதிக்க ஸ்தானமா யிருக்கப்பட்ட சென்னப்பட்டணம் பிடிக்கும் பொருட்டாயி, அதுக்கேத்த சதுர்வித உபயாமாய் அந்தனையும் (செய்து), அந்த சென்னப்பட்டணத்தைப் பிடிச்சு, அவ்விடத்துக் கொவற்ணதோர் மேஸ்தர் மார்சு முதலான கொமிசேலியோர்களைப் பிடிச்சு பந்திக்காணா (காவல்) பண்ணிவிச்சு, அப்பாலவர்களுக்கு மத்தத்தாயி (உதவியாய்) பவுன்கடனே வந்த நபாபு மாபூசு கானை அடிச்சு (விரட்டி), அந்த மாபூசு கானை மறுபடி சமாதானப் படுத்தி யிவ்விடத்துக்கு அழைத்து வந்தேன்.[1] யிங்கிறேசுக்காறர் கோந்தே அமிராலாகிய (Rear-Admiral) மேஸ்தர் புஸ்கவேன் நாற்பது கப்பலுகளுடனே கடலின் பேரிலேயும் கரையிலேயும் மூணு மாசம் (புதுச்சேரியைச்) சுத்திக்கொண்டு சண்டை பண்ணின போது நிறுவகிச்சேன். அது முதல் கொண்டு நவாபு அன்வரதிகான் ஒன்றுக்கொன்று நம்முடய பிரான்சுக்காறர் பேரிலே யிட்டோட்டு (தகராறு) பண்ணிக் கொண்டு யிருந்தபடியினாலே அவனை அதம் பண்ணிக் கொண்டிருக்கிற நிமித்தியம் யிதாயித்து மொகதின் கான் சாயபுவை விஸ்தாரமான பவுன்சுடனே அழைப்பிச்சு, யிவ்விடத்திலிருந்தும் பசுன்சை அனுப்பி, அன்வரதிகானைக் கொண்ணு (கொன்று), அப்பாலவன் வசமாயிருந்த ஆற்காட்டு கற்னாட்டகம் ராச்சிய மெல்லாம் நம்முடைய பிரான்சுக் கும்பினீருக்குச் செல்லத்தக்கதாகவும், தஞ்சாவூர் பிரதாப சிங்கு ராசா முதலான ராசாக்க ளெல்லாம் நமக்குக் கப்பங்கட்டத் தக்கதாகவும்

[1]இப்போரில் முக்கிய பங்காற்றிய கடற்படைத் தளபதி லபோர்தொனா, தரைப் படைத் தளபதி பராதி, ஆளுநர் துய்ப்ளே ஆகியோரை இங்கு விட்டுவிடுகிறார் பிள்ளை. தனது சிறிய பங்கினை மட்டும் மிகைப்படுத்திக் காட்டுகிறார்.

திட்டப் படுத்தின பிறகு, நவாபு நாசறு சங்கு லக்ஷம் குதிரை, பத்து லக்ஷம் கால் பலம், விஸ்தாரமான தோப்புகானா (பீரங்கி) முதலான சான்சாமி பாரி பவுன்சுடனே (வந்தார்). கடப்பை, கந்தனார், சாவனூர், பங்காபுரம், ஆற்காடு, தஞ்சாவூர், திரிச்சிராப்பள்ளி, மைசூர் வகையிரா சுபேதாறர், சமஸ்தானாபதிகள், யிங்கிறேசுக்கார் முதலானவர்கள் மத்தத்துடனே (கூட சேர்ந்து), நம்முடைய புதுச்சேரியின் பேரிலே வந்து ஒரு வருஷ காலம் யிறங்கி சண்டை பண்ணபோது, யிவ்விடத்திலே நாம் தானே சிப்பந்தி, மருந்து, குண்டு, பீரங்கி, துப்பாக்கி வகையிராக்கள் சமுதாயிச்சுக் (திரட்டிக்) கொண்டு, வெளியிலே விஸ்தாரமான சத்துருக்களுடைய பவுன்சு வந்து யிறங்கி சண்டை பண்ணச்சே, அவர்களுக்கும் சபாபு (பதிலடி) குடுத்து, அவர்கள் தண்டையும் அதலகுதலம் பண்ணி, ராச்சியத்தையும் சுவசம் பண்ணிக்கொண்டு, நம்முட பவுன்சு வருகிறதென்று சத்துருக்களுக்குப் பயம் பிறந்து யிருக்கத் தக்கதாய் பந்துபஸ்து பண்ணி நடப்பிச்சு, அகோராத்தியும் (அல்லும் பகலும்) நித்திரையும் ஆகாரமுமில்லாமல், பிறயாசப்பட்டு யிப்படி ஒரு வருஷ காலம் போராடி, அப்பால் அந்த நாசறு சங்குவைக் கொன்று, அவனுடைய ஆவிமூல்லாவி (திரவியத்தை) யெல்லாம் கொள்ளையிட்டு, அந்தத் தக்கன சுபா யிதாயித்து மொகதின் கானுக்குப் பட்டாபிஷேகம் பண்ணிவிச்சு, பிரான்சுக் கும்பினீருக்கும் ராசாவுக்கும் கோடி சூரியப் பிரகாசமாயி, கீற்தி உண்டாக்கினதும், அப்பால் யிதாயத்து மொகதின் கான் தன் பட்டணத்திலேயே தோட்டி முதல் கொண்டு (யாரையும்) அதிகாரம் பண்ண செல்வாக்கு நடப்பிச்சு (இல்லாமல் செய்து)... முன் கோடி சூரியப் பிரகாசமாயி (ய்) சம்பாதிச்ச கீற்திக்கிப் பிற்பாடு வந்த மகத்தான அபகீற்தியான காடாந்தகாரமான யிருட்டு வந்து மூடிக்கொண்டு போனது—முதலான சம்மதிக ளெல்லாம் (எனது செயல்களை) சவிஸ்த்தாரமாயி(ய்), வயணமாயி(ய்), விசிதப்பட்டுத் தெரியத் தக்கதாக நான் துரை யவர்களுடனே சொன்னேன்.[1] அவரதை யெல்லாம் நன்றாயிக் கேட்டு, "யிப்போ நீர் சொன்ன சம்மதிகளெல்லாம் சீமையிலே கும்பினீரண்டையிலே யெப்போதும் பிரஸ்தாபம் நடக்கச்சே யெல்லாம் நான் நன்றாய் கேழ்விப்பட்டிருக்கிறேன். (மேலும்) அந்த சம்மதியெல்லாம் யிங்கே நான் வந்த அஞ்சு மாசமே பிடிச்சு சவிஸ்தாரமாயி விசாரிச்சு யெனக்கு நிசமான பிறகு, உனக்கு யிந்த அதிகாரம் யேற்பாடு படுத்தி விச்சதே அல்லாமல், மத்தப்படி அல்ல," வென்றும் ... "உன்னுடைய சாமர்த்தியமும் தைரியமும் கும்பினியாருக்கும் நன்றாய்த் தெரிஞ்சு யிருக்குது. ராசாவுக்கும் நன்றாய்த் தெரிஞ்சு யிருக்குது. ஆனால், யிப்போ நீர் சொன்ன சம்மதியாம்படியே பிரான்சிலே எழுதி, யென் கையிலே

[1]இங்கு மூன்று பக்கம் நீண்டு போகிற ஒரே வாக்கியத்தினை உடைத்துள்ளேன்.

குடும் நான் அதை சீமைக்குக் கொண்டு போயி ராசாவுக்குக் காண்பிச்சு, நானும் சொல்லி ராசா (விடமிருந்து) உமக்கு மேன்பாடான முத்திரையும் பெகுமதியும் (வாங்கிக் குடுக்கிறேன்); யிந்த பிரான்சு கும்பினீர் உள்ள நாள் மட்டுக்கும் யிந்த அதிகாரம் உம்முடைய பிள்ளை தலைமுறையாய் நடக்கத் தக்கதாக ராசாவினுடைய ஒடுதியும் வாங்கிக் கொண்டு, நான் பதினெட்டாம் மாசம் வரச்சே உமக்குக் கொண்டு வந்து குடுக்கிறே" னென்று சொன்னார். அதுக்கு நான் ஆசாரம் பண்ணி, "உங்கள் கடாக்ஷம் யென்னிடத்திலே பரிபூரண மாயிருக்கச்சே சகல ஆதிபத்தியத்துடனே யிருக்கிறதுக்கு, ஆலோசனை யென்ன யிருக்கு," தென்று உபசாரமாய்ச் சொல்லி, அனுப்பிவிச்சுக் கொண்டு பனிரெண்டரை மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

### *1755 வருசம், சனவரி மாசம், தேதி 26; பவ வருசம், தை மாசம், தேதி 17; ஆதிவாரம்*

இத்தனாள் அலுமாஞ்சு சொலுதாதுகளுக்கு சறுதாறுகளான மூணு பேர் கொமாந்தமார்கள் அவர்களுடைய (துரையுடைய) பேட்டிக்கு வந்து தங்களுக்குச் சம்பளம் சாடி குடுக்கயில்லை யென்று சுறுக்காய் (முரட்டுத்தனமாய்) பேசினபடியினாலே, துரை அவர்களுக்குக் கோபம் வந்து அந்த (மூணு) கொமாந்தாமாரையும் காவல் பண்ணி விச்சு, அப்பாலவர்கள் தாலுக்கு அலுமாஞ்சு சொலுதாதுகள் நானூறு அன்னூறு பேர் யிருந்தவர்கள் கையிலே யிருந்த கடுதாசிகளும் (ரவைகளும்) துப்பாக்கிகளும் மாத்திரம் குடுத்து, அவர்கள் கையிலே யிருந்த கடுதாசிகளும் துப்பாக்கி பயோனேத்துக்களும் வாங்கிக் கொண்டு, அப்பால் பிரான்சு சொலுதாதுகளுக்கு முன் யிருந்ததைப் பார்க்கிலும் ரெட்டிப்புக் கடுதாசிகள் குடுத்து, அஸ்தமனமான யேழு மணிக்கு கெவுனி வாசற்படிகள் யெல்லாம் சாத்திப் போடச் சொன்னார்கள்.

இத்தனாள் நாளது தை மாசம் 13ஆம் தேதி முசே தெசொசே கொமாந்தாம் போயி, சீரங்கம் லஸ்கர் (துண்டு) ... சனவரி மாசம் 22 ஆம் தேதி (போய்ச் சேர்ந்தார். அடுத்த நாள்) நந்தி ராசா மிலாகத்து ஆயிவர (நந்திராசாவைப் பேட்டி கண்டு, அவர்) முசே தெசொசேக்கு ரெண்டாயிரம் மூவாயிரம் ரூபாயிக்குச் சரிகை நகையும் பதக்கமும் குதிரையும் பெகுமானம் பண்ணினதாயி நம்முடய வக்கீல் தியாகய்யன் யெழுதி அனுப்பிவிச்சான்.

### *1755 வருசம், சனவரி மாசம், தேதி 28; பவ வருசம், தை மாசம், தேதி 19; செவ்வாய்கிழமை*

இத்தனாள் சாயங்காலம் தம்பூறு அடிச்சது என்ன யென்றால், யிங்கிலீசுக்காறருடைய சொலுதாதுகளை யெல்லாம் காவல் (சிறை) விட்டு அனுப்பியிருக்கிற படியினாலே, நம்முடைய பிரான்சுக்காறருடைய

சொலுதாதுகளையும் அவர்கள் விட்டு விட்டார்கள். ஆனபடியினாலே யினி மேல் ஒபிசியால்மார், சொலுதாதுகள் கூடலூர், சென்னப் பட்டணத்(துக்கு) ஓடப்போனால் அவர்கள் நம்முடய வசத்திலே ஒப்பிச்சுப் போடுவார்கள். யிங்கிறேசுக்காறருடைய ஒபிசியால்மார், சொலுதாது யிவ்விடத்துக்கு ஓடிவந்தால் நாங்கள் ஒப்பிச்சுப் போடுவோ மென்று இப்படியாகத் தீந்து கடுதாசிப் படிச்சு தம்பூறு அடிச்சார்கள்.

### *1755 வருசம், சனவரி மாசம், தேதி 29; பவ வருசம், தை மாசம், தேதி 20; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே தேவனாம்பட்டணத்திலே யிருந்து மூணு ஒபிசியால்மார் வந்(தார்கள்). யிவ்விடத்திலே காவலிலே யிருந்து கொண்டிருக்கிற இங்கிலேசு சொலுதாதுகள், ஒபிசியால்மார் முன்னூத்திச் சில்வானம் யிருந்தவர்களை அங்கே யிருந்து வந்து ஒபிசியால்மார்கள் பிறகாலே கூட்டி தேவனாம்பட்டணம் அனுப்பி விட்டார்கள். யிவர்கள் போயி சேர்ந்தவுடனே, யிவர்களுக்குப் பதிலாயி(ய்), யிவர்கள் யெத்தனை பேர் யிருக்கிறார்களோ அதுக்குச் சரியாய் பிரான்சுக்காறருடைய சொலுதாதுகளை யெண்ணி யிவ்வடத்துக்கு அனுப்பிவிட்டு, மத்த அதனமாயிருக்கிற சொலுதாதுகளைச் சீமைக்குப் போற கப்பலிலே யேத்தி, இங்கிலீசுத் தேராவிலே (துறையிலே) யிறக்கி பிரான்சிலே கொண்டுபோய் விட்டு விடத்தக்கதாக பேசிக்கொண்டு அனுப்பி விட்டார்கள். அந்த மட்டிலே வீட்டுக்கு வந்துவிட்டேன்.

### *1755 வருசம், சனவரி மாசம், தேதி 30; பவ வருசம், தை மாசம், தேதி 20 (அல்ல, 21); குருவாரம்*

முசே கொமாந்தாம் செனரால் தம்முடய தம்பி செஞ்சிக்குப் போயிருந்த படியினாலே, யித்தனாள் காலமே அவர் வில்லியநல்லூருக்கு வர, யிவர் யெதிர் கொண்டு போக, யிந்தப்படிக்கி முன்னேதானே பேசியிருந்தபடியினாலே, யித்தனாள் காலமே யேழு மணிக்கிப் பயணம் பிறப்படுகிறதுக்கு என்னை வரச் சொல்லி யிருந்தபடியினாலே, நான் அஞ்சு மணிக்கி நவபோத்து, சங்கீதம், மேளம், பயிறக்கு (கொடி, சாமரம்) வகையிரா சம்பிறமங்களுடனே கோட்டைக்குப் போனேன். அப்போ துரை அவர்கள் உடுத்திக்கொண்டு முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே பொயிலோ,[1] தலங்கம்பாடி சின்னதுரை முசே மெயர் (M. Meyer) யென்கிறவர், முசே தெபறேன், சொலுதாதுகள் கப்பித்தானும் மயோறுமா (Major) யிருக்கிற முசே குப்பில் (Goupil) முசே குலுவேத்து வகையிரா

---

[1] முன்பு பொலோ என்று பிரதியில் வேறிடங்களில் எழுதப்பட்டு உள்ளது. பொயிலோவே – Boyelleau – சரியான உச்சரிப்பு. அதே போல் குப்பில் என்பதை குப்பி என்றே பெரும்பாலான இடங்களில் பிரதியில் காண்கிறோம்.

குமிசெல்க்காரர் ஒப்பிசியால்மார்களுடனே அசனுதி கான் வீட்டிலே யிருந்த மறாதபு (fish-standard) யிதுகளெல்லாம் ஆனைகள் பேரிலே வச்(சார்கள்). துரையவர்களுக்குப் பாவாடை, நேமிலி, பிஞ்சம், விஞ்சாமரம் யிதுகளெல்லாம் போடத்தக்கதாக (வழி நெடுகிலும் துணி விரித்துப்போட்டு, மயில்தோகை விசிறி, வெண்சாமரம்) திட்டம் பண்ணிக் கொண்டு யிருக்கச்சே, யேழரை மணி ஆச்சுது.

அப்போ நான் துரை அவர்களண்டைக்குப் போயி, வெய்யல் சுறுக்காயிருக்குதே, அலுமுசு யிங்கே சாப்பிட்டுப் பிறப்படுகிறீர்களா, அல்ல அரும்பாத்தப் பிள்ளை சாவடிக்குப் போயி சாப்பிடுகிறீர்களா யென்று கேட்டதுக்கு, யிங்கே அலுமுசு சாப்பிடயில்லை, அரும்பாத்தப் பிள்ளைச் சாவடிக்குப் போயித்தான் சாப்பிடுகிற தென்று சொன்னதுக்கு, நான் அப்படியானால் சீக்கிறத்துக்குப் பிறப்படவேணும் யென்று சொன்னதுக்கு, நல்லது என்று உடனே பிறப்பட்டு விட்டார். அப்போ அண்ணாசாமி, அய்யாசாமி (இவர்கள் பிள்ளையின் மகன்கள்) வகையிரா நம்முடைய தாலுக்கு (தரப்பு) மனுஷர்களுடனே யெட்டு மணிக்கு அரும்பாத்தப் பிள்ளைச் சாவடிக்குப் போயி, துரை அவர்கள் யிறங்கின உடனே யிருபத்தோரு பீரங்கி வேட்டு சுட்டார்கள். அப்பறம் போயி உளுக்காா்ந்தவுடனே தாசிகள் வந்து நாட்டியம் ஆடினார்கள். அப்பால் அண்ணாசாமியையும் அய்யாசாமியையும் அழைச்சுக்கொண்டு, (இருவரும்) ரெண்டு யெலிமிச்சம் பழம் குடுத்து துரை அவர்களைப் பேட்டி பண்ணிவிச்சுக் கொண்(டார்கள்). உடனே, "ரெண்டு பேரும் உன் பிள்ளைகள் தானா?" வென்று கேட்டார். ஆமென்று சொன்னேன். பெண்கள் யெத்தனை யென்று கேட்டார். ரெண்டு பெண்கள் என்று சொன்னேன். உன்னுடைய தம்பிக்கு யெத்தனை பிள்ளைகளும் பெண்களும் யென்று கேட்டார். முசே கொம்மாந்தாம் அவர்களுடனே (செஞ்சிக்குப்) போனானே, அந்தப் பிள்ளையும் ஒரு பெண்ணுமென்று சொன்னேன். "அண்ணாசாமி தாயி முகச் சாயலோ?" வென்று கேட்டார். ஆமென்று சொன்னேன். "அய்யாசாமி உன் முகச் சாயல் போலே காணுது," யென்று சொன்னார்.

அப்படியிருக்கச்சே, முசே பெடுத்தல்மீ, முசே தெபறேன், முசே பொயிலோ யிவர்களைப் பார்த்து துரை அவர்கள் சொன்னது: "தாயி முகச் சாயல் மூத்த பிள்ளையும், யிளைய பிள்ளை தகப்பன் முகச் சாயலுமா யிருக்கிறது லோக வாடிக்கை. நாங்கள் அண்ணன் தம்பிகளிருக்கிறோமே அந்தப்படிதா" னென்று (சொன்னார். அப்பால்) அய்யாசாமியைப் பார்த்து, "யிவன் மெத்த சுறுக்கா (சுட்டியாய்) யிருப்பா னென்றும், விஷமனா யிருப்பானென்றும் (சொன்னார்). "லோகத்துடைய வழக்கம் மூத்தவன் வந்து மெத்த சாதுவா யிரு(க்கிறதும்), யிளையவன்

வந்து சுறுக்காயிருக்கிறதுமான படியினாலே, யிப்போ யெங்களுக்குள்ளே(யும்) அப்படித்தானியிருக்கிற" தென்று சொல்லி, அப்பால் அண்ணாசாமியைப் பார்த்து "யிவனுடைய நேத்திரமும் விலாசமும் முக அந்தமும் லக்ஷணமும் பார்த்தால் யிவன் மகா நன்றாய் ராசயோகத்துடனே மகாவறத் தஷணுவாயிருப்பா (இது விளங்கவில்லை)" னென்று சொன்னார். அதின் பேரிலே, முசே பெடுத்தல்மீ, முசே பொலோ, முசே தெபறேன் வகையரா வெள்ளைக்காரர் பெரிய மனுஷர்களெல்லாம், "மெய்தான் யிவன் ராச யோகமாயிருப்பான். ... நிசந்தா" னென்று ஆசீர்வாதம் பண்ணினார்கள். அப்பால் துரை அவர்கள், நம்முட றங்கப்பனுட வமுசம் கும்பினீருடைய பாமிலி (family) யென்று சொன்னபடியினாலே, கிட்டயிருந்த வெள்ளைக்காரர்களுக்கெல்லாம் இந்தத் துரைக்கு றங்கப்பன் பேரிலே மெத்த தயவாயி விசுவாசமாயிருக்கிறாரென்று நன்றாய் தோத்தும் படியாயி(யிருந்தது). "இவர்கள் வந்து கும்பினீருடைய பாமிலி யென்று மறுபடியும் துரை சொல்லி, அப்பால் அண்ணாசாமி தரிச்சுக் கொண்டிருந்த கல்கிதுரா, யிதுதானி பதக்கம் (நீலமணிப் பதக்கம் என்று ஆங்கிலத்தில் உள்ளது) வகையிரா எழைச்சிருந்த றெத்தனங்களைப் பார்த்து, "இந்த நகைகள் ஒசத்தியான நகைகளாயிருக்கிறது. யிது நாசறு சங்கு அவாந்தரத்திலே (வீழ்ந்த போது) அகப்பட்ட நகைகள் போலே காணுது," யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "நாசறு சங்கு அவாந்தரத்திலே அகப்பட்டதல்ல; யெங்கள் தகப்பனாருடைய சம்பாத்தியமே அல்லாமல், யிப்போ யிருக்கிறது யென்னுடைய சம்பாத்தியம் அல்லா" யென்று சொன்னேன். அதுக்கு துரையவர்கள் இப்படிப்பட்ட நகைகள் யெல்லாம் உங்களுடைய தகப்பனாருடைய சம்பாத்தியமாகிற மட்டுக்கும், இப்போ உன்னுடய நாளையிலே யிதுக்கும் நேத்தியான நகைகள் (நீ) சம்பாதிப்பாய்," யென்று சொன்னதுக்கு, நான் ரொம்ப உபசாரமாய் (நன்றி) சொன்னேன்.

அப்பறம் யெட்டரை மணி ஒன்பது மணி அடிக்கிற வேளையான படியினாலே அலுமுசு கொண்டு வரச் சொன்னார். அலுமுசு அவர்கள் முஸ்தீப்பு பண்ணயில்லை. பகல் தீனிக்கு மாத்திரம் அவர்கள் முஸ்தீப்பு பண்ணுகிறார்களென்று சொன்ன படியினாலே, ரெண்டு வாழப்பழம், சாராயம் கொண்டு வரச் சொன்னதுக்கு, அது முதலாயி (அதுவும் தாமதமாக) இனிமேல் வருமென்று சொன்(னேன்). புதுச்சேரிக்கு சீக்கிரத்துக்கு ஒரு மனுஷனை அனுப்பி, ரொட்டியும் சாராயமும் அழைப்பிக்க யென்னுடனே சொன்னார். நல்லதென்று அந்த க்ஷணம் ஒரு மனுஷனைப் பயணம் பண்ணி அனுப்பிவிச்சேன். அதின் பேரிலே கேளிக்கை சத்து நேரம் பார்த்து, அப்பால், "தம்பி வில்லியநல்லூருக்கு வருவான், நானும் போகவேணும்," யென்று சொல்லி, துரையவர்கள் வகையராக்களுடனே பயணப்பட்டு வில்லியநல்லூருக்குப் போனார்கள்.

நானும் அண்ணாசாமி, அய்யாசாமி வகையிராக்களுடனே பயணப்பட்டுப் போனோம். அப்போ கணக்கு றெங்கப்ப முதலி வகையராக்கள் மேளதாளம் ஆடல் பாடல்களுடனே யெதிர் கொண்டு வந்து, அவர்கள் முஸ்தீப்பு பண்ணின பந்தலுக்கு அழைச்சுக் கொண்டு போனார்கள். அவ்விடத்திலே போயி சத்து நேரம் கேளிக்கை பார்த்து அப்பால் அலுமுசு யின்னம் வரயில்லையா யென்று கேட்டார். யின்னம் வராததைத் தொட்டு றெங்கப்ப முதலியுடனே சொல்லி பகுவின் பால் காச்சி சர்க்கரையும் அழைப்பிக்கச் சொல்லிச் சொன்னேன். அந்தப்படி அவர் அழைப்பிச்சார். அதன் பேரிலே ரெண்டு தொன்னை சாப்பிட்டார்கள். யிதிலே புதுச்சேரியிலே யிருந்து ரொட்டி சாராயமும் வந்தது. அப்பால் அலுமுசு சாப்பிட்டவுடனே பதினோரு மணி வேளையாச்சுது. அந்த மட்டுக்கும் துரையவர்கள் தம்பி வந்து சேராமல் போனபடியினாலே, அவ்விடத்திலேயிருந்து தென்புறமாயி புதுசாயி கட்டியிருக்கிற கோட்டை பார்க்கவேணுமென்று, யிதுவரைக்கும் அந்தக் கோட்டையைப் பாராததைத் தொட்டு பார்க்கப் போனார். அப்பா லதைப் பார்த்து, "வேலை வந்து பத்திரமான வேலையா யிருக்கிறது. விலாசமா யிராமல் அறை அறையாயி (இருக்கிற) படியினாலே, முசே துப்பிளேயிக்சு யோசனை தப்பிதமாயிக் கட்டி விச்சுப் போட்டான். யிந்த வேலை பத்திரமா யிருக்கிறதுக்கு, விலாசமா யிருந்தால் மெத்த சவுகிரியமாயிருக்கும். யிதின் பேரிலே பதினாறு பீரங்கி, நூறு பேர் சொலுதாதுகளிருந்தால் நாலாயிரம் அய்யாயிரம் குதிரை வந்தாலும் துரத்தி அடிக்கலா" மென்று யிப்படியாகப் பார்த்துக் கொண்டிருந்(தார்).

அப்பால் கும்பினீர் வர்த்தகர் தங்களுடைய மளிகை (கிடங்கை வந்து) பார்க்க வேணுமென்று அழைப்பிச்சபடியினாலே, அங்கே போனவிடத்திலே அவ்விடத்திலே யிருக்கிற காரியங்கள், (சித்திர வேலைப்பாட்டுடன் கூடிய) சீட்டி, கிண்டன் (ஒரு வகை முரட்டுத் துணி) அதுகளைக் கொண்டு வந்து காண்பிச்சார்கள். அதைப் பார்த்துப் போட்டு, அப்பால் "யிதுகளுக் கெல்லாம் ஆயம் வாங்குகிறார்களே, யென்னமாயி வாங்குகிறார்கள்?" யென்று துரை கேட்டதுக்கு, வில்லியநெல்லூர் அமில் கணக்கு றங்கப்ப முதலி கூடயிருக்கச்சே நான் சொன்னது : "ஆயம் வாங்குறது சபுறு சாஸ்தியாயித்தானே வாங்குகிறார்கள். ஆனால் வழுதாவூர் ஆயம் நம்முட புதுச்சேரிப் பட்டணத்திலே யிருந்து வாங்குறது யுக்த்தமல்ல (அது புதுச்சேரி எல்லைக்குள் வந்துவிட்டது). ஆனால் முன்பு யிருந்த முசே லெனுவார் நாளையிலே கெனிசாயிப் (அதுபற்றி எதுவும் செய்யாமல்) போனாலும், அப்பால் சபித்தரல்லி கான், சந்தா சாயபு வகையிரா நவாபுகள் யிவ்விடத்திலே மராட்டியர் தாம் தூமிலே வந்திருந்தபோதும் முசே தூம்மா யிந்த ஆயம் தள்ளி விக்காமல் போனார் யென்று முசே துப்பிளேயிக்சு சொல்லிக் கொண்டிருந்து, அப்பால்

அவருக்கும் ஞாபகமில்லாமல் போச்சுது. யிப்பவும் அந்த ஆயம் புதுச்சேரியிலே வாங்காமல் பண்ணினால், அதினாலே செனங்களும் சுகப்படுவார்கள். பட்டணத்திலே வர்த்தக வியாபாரம் விஸ்தாரமாயி நடக்கு," மென்று சொன்னேன். அவர் யிந்த ஆயத்தினுட ஆமிஷேமம் (கணக்கு) எழுதிக் கொண்டு வந்தால், அப்பால் கேரிசாயி நடக்கத் தக்கதாகச் செய்துப் போட்டுவிடுகுறதென்று (கவனிப்பதாகச்) சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்போ கணக்கு றெங்கப்ப முதலிக்கு முகம் செத்து சின்னதாயி அப்பாலே போனான்.

அந்த மட்டுக்கும் தம்பி வராதபடியினாலே யென்னமோ யென்று மெத்த விசாரமாயி, அதையும் யிதையும் பார்த்துப் போட்டு மறுபடி பந்தலிலே போனார். அப்பால் முசே பெடுத்தல்மீ, முசே பொயிலோ, முசே தெபறேன் வகையிராக்களுடனே நான் சொன்னது: "யிந்தப் பந்தல் முஸ்தீப்பு பண்ணதெல்லாம் முசே கொம்மாந்தோர் நிமித்தியமாக்கும் போட்டது. அவர் வருகிற மட்டுக்கும் நாங்களிலிருந்து வருகுறோம். நீங்கள் யெல்லாம் அரும்பாத்தப் பிள்ளை சாவடியிலே போங்க," ளென்று சொன்னதுக்கு, துரையிருந்து என்ன வென்று கேட்டார். நான் சொன்ன விஷயம் யெல்லாம் அவர்கள் துரையவர்களுடனே சொன்னார்கள். அதுக்கு அவர், "மெய்தான் கொம்மாந்தோர் நிமித்தியம் தான் இதுகளெல்லாம் றங்கப்பன் முஸ்தீப்பு பண்ணிவிச்சபடியினாலே, அவனிருந்து அழைச்சு வரவேண்டியது ஞாயம் தான்," யென்று சொன்னார். இப்படியிருக்கச்சே, முசே கொம்மாந்தோர் வருகிற சமாச்சாரம் வந்து, உடனே கணக்கு றங்கப்ப முதலியை மேளதாளத்துடனே யெதிர் கொண்டு அழைச்சு வரச் சொல்லி அனுப்பி விச்சபடிக்கி, சகல சம்பிறமத்துடனே முசே கொம்மாந்தோரை அழைச்சுக் கொண்டு அந்தப் பந்தலிலே வந்தவுடனே, நம்முடைய அப்பாவு வகையிராக்களும் வந்தார்கள். துரையவர்கள் மத்துமுண்டான குமிசெல்க்காரர்கள் சகலமான பேர்களும் மகா சந்தோஷத்துடனே அவரை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு வர, செஞ்சி, விழுப்புரம், திருவதி வகையராக்க ளிடங்களுக்குப் போயிப் பார்த்து வந்த சமாசாரங்கள் பேசிக் கொண்டிருக்கச்சே, கணக்கு றங்கப்ப முதலி ஆயிரம் ரூபாயிக்கு யேதோப்புதோர் (துங்க சரிகையிட்ட துணி) வகையிரா, சுருட்டிகள் வகையிரா முசே கொம்மாந்தோருக்கு நதிர் (நசர்) கொண்டு வந்து வச்சான். அப்பால் துரை தம்பியுடனே நம்முடைய அய்யாவுவை[1] பார்த்து, "யிவன் மகா கெட்டிக்காரன். ராவும் பகலும் கட்டிக் காத்து யென் மனசு வர வெகு சாகிறுதையாயி நடந்து கொண்டான். யிவன் பேரிலே எனக்கு யிருக்கிற பிறீதி மட்டுலே சொல்லப்போகாது," யென்று சொல்லி, அப்பால் யென்னுடனேயும், "உன் தம்பி குமாரன் மெத்த சமத்தன், மகா திராணி (திறமை) உள்ளவன். யிவன் பேரிலே யெனக்கு மகா பிறீதியாயிருக்கிற" தென்று சொன்னார். அதுக்கு நான், "யிவன் உங்களுடைய

வேலைக்காரன், உங்கள் தயவுக்குப் பாத்திரமாயிக்கப்பட்டவ," னென்று சொன்னதுக்கு, துரை, துரை தம்பி முதலான பேர்கள், "யிவன் முன்னுக்கு, (பின்னுக்கு என்றிருத்தல் வேண்டும்) மகா போக (யோக?) சாலியாயிருப்பான்," யென்று சொன்னார்கள். அப்பால் பனிரெண்டு அடிச்சு ஆன படியினாலே பகல் தீனிக்கி அரும்பாத்தப் பிள்ளை சாவடிக்குப் போனார்கள். அந்த மட்டிலே நான், அண்ணாசாமி, அய்யாசாமி, அய்யாவு[1] (தவறு, அப்பாவு) வகையிராக்களுடனே வில்லியநெல்லூரிலே சாப்பிட்டுப் போட்டு நாலு நாலரை மணிக்கு அரும்பாத்தப் பிள்ளை சாவடிக்குப் போனோம். அப்போ துரை அவர்கள், மேல் படி தம்பி, குமிசெல்காரர்களுடனே கேளிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நாங்களும் போயி ஆசாரம் பண்ணினோம். அப்போ மறுபடியும் துரை அவர்கள் "கும்பினீருடைய பாமிலிகள்," யென்று சொன்னார்.

அப்படி யிருக்கச்சே, வினாயகப் பிள்ளை வெகுமானம் யேதோப்புதோர் வகையிரா தினிசுகளைக் கொண்டு வந்து நதீர் வைச்சார். அப்புறம் பாண வித்தை சம்பிறமம் சத்து நேரம் பார்த்துப்போட்டு, யெட்டரை மணிக்கு அவ்விடம் விட்டுப் பிறப்பட்டு சகல சம்பிறமத்துடனே ஒன்பது மணிக்குக் கோட்டை வந்து சேந்து, மேல் வீட்டின் பேரிலே கொண்டு போய்விட்டு, அனுப்பிவிச்சுக் கொள்ளச்சே துரை அவர்கள், "நல்லது ரொம்ப ஆயாசப்பட்டாயி(ய்), ஆசுதாவாயிப் போ யிரு. நாளை காலமே பேசிக்கொள்ளலாம்," யென்று சொன்னார். அதின் பேரிலே அனுப்பிவிச்சுக் கொண்டு சகல சம்பிறமத்துடனே வீட்டுக்கு வந்தோம்.

### *1755 வருசம், சனவரி மாசம், தேதி 31; பவ வருசம், தை மாசம், தேதி 22; சுக்கிரவாரம்*

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அழைச்சனுப்பப் போனவிடத்திலே, அவர் சென்னப்பட்டணம் கோவற்ணதோர் மேஸ்தர் பிக்கட்டு யென்கிறவன் ஆற்காட்டு அப்துல் வகாப் கான் பேருக்கு நம்முடைய சீமைகளிலே சோராவரி பண்ணவாண்டாமென்றும், பண்ணினால் யெங்களுக்கும் பிரான்சுக்காறருக்கும் பதினெட்டு மாசம் சண்டைக் கவையில்லை யென்று 1754 வருசம் ஒயித்தோபர் மாசம் 11 தேதி முதல் மூணு மாசமும், யிப்பறம் பதினெட்டு மாசமும் ஒடம்படிக்கை யேற்ப்படச்சே, ஆரார் வசம் யெந்த யெந்த சீமைகளிருந்துதோ அந்தந்த சீமைகளவர்கள் வசமிருக்கவும், சீமைக்குப் போயி, அங்கேயிருந்தும் சமாதானம் பேசி வருகிறபடிக்கி நடந்து (கொள்ள வேண்டுமென்றும் எழுதினார். ஆனாலும்) அத்து தப்பி மமுதல்லி கான் மனுஷர் நடத்துகிறபடியினாலே, நாம் சென்னப்பட்டணம் கோவற்ணதோர் மேஸ்தர்

[1] இது தவறு. அப்பாவு என்றிருத்தல் வேண்டும்.

பிக்கட்டு யெழுதினதுக்கு, அவர் அப்துல் வகாபு கான் ஆற்காட்டு கில்லேதாரனுமாய் வந்து காரியம் விசாரிக்கிறவனுமாக யிருக்கிறானே, அவன் பேருக்கு அத்து தப்பி நடவாமல் படிக்கி தாக்கீது யெழுதி அனுப்பிவிச்சார். அந்தத் தாக்கீது யிதோ யென்று குடுத்து, தம் (பெயரில்) ஒரு காகிதம் (அப்துல் வகாப் கானுக்கு) யெழுதச் சொன்னார். அதென்ன வென்றால், "செனங்கள் சுகப்படவேண்டும் என்று தை மாசம் 18 தேதி, ஜனவரி 22 (அல்ல, ஜனவரி 27ஆம் தேதி முதல்) சண்டை கவையில்லை யென்று திட்டம் பண்ணி, அத்து மோப்புப் (வரையறை) படுத்தியிருக்கச்சே, உங்கள் மனுஷர் அத்து தப்பி வந்து சீமைகளிலே கலாபம் பண்ணுகிறார்கள். ஆனபடியினாலே உங்களுக்கு எழுதி அனுப்புகிறது யென்ன வென்றால், உங்கள் மனுஷருக்குத் தாக்கீது பண்ணி, கராறுப்படுத்தி அதிலே யிருக்கச் சொல்லவும். அத்து தப்பி நடந்தால் நாங்களும் யிங்கிறேசுக்காறர்களும் உங்களுக்கு சத்துருவாயிருப்போம். அப்போ உங்கள் காரியம் மெத்த மோசத்திலே வந்து போம்; யிது நிமித்தியம் சென்னபட்டணம் கோவற்ணதோர் மேஸ்த்தர் பிக்கட்கு உமக்கு எழுதின காகிதத்தை அனுப்பி விச்சோம். அது பார்த்துக் கொள்ளச்சே தெரியவரும்," யென்று காகித மெழுதிக் கொண்டு (வரச் சொன்னார்). (அதைத் தமது) வீவுறு மேலே (புத்தகத்திலே) யெழுதிக் கொள்ளுகிறதுக்கு பிரான்சிலே யெழுதி வரச் சொல்லி உத்தாரம் குடுத்தார். நல்லதென்று மேஸ்தர் பிக்கட்டு அனுப்பின காகிதத்தை வாங்கிக் கொண்டேன்.

அப்பால், "செஞ்சிக்கு என் (தம்பி) பிறகே உன் தம்பி குமாரன் போயிருந்தானே, அவன் வெகு கெட்டிக்காரன், பெகு புத்திசாலி, மகா சாமர்த்தியமுள்ளவன். அவன் யென் தம்பி அண்டையிலே சகல காரியத்திலேயும் பெகு சாகிறுதையாயி நடந்து கொண்ட சம்மதி யெல்லாம் யென் தம்பி வந்து யென்னுடனே விஸ்தாரமாயி சொன்னதினாலே எனக்கு அத்தியந்தமான சந்தோஷமாச்சுது. ஆனால் அவன் (அளவுக்கு) காரியம் கவைகள் சாகிறுதையாயி நடத்துகிறதற்கு உன்(னால் கூட) ஆகாது யென்று தோத்துது," என்றார்.

இத்தனாள், முன் யிவ்விடத்திலே காவலிலே யிருந்த யிங்கிறேசுக்காற சொலுதாதுகளைக் காவல் (வி)ட்டு தேவனாம்பட்டணத்துக்கு அனுப்பி விச்சபடியினாலே, அவ்விடத்திலே காவலிலேயிருந்த நம்முட பிரான்சு சொலுதாதுகளிலே நல்ல வயது ஆள்களாய் பொறுக்கி நூத்து அறுபத்து யேழு பேர் சொலுதாதுகளும் சிறிது மெஸ்தீசுக்களையும் (mestice) சட்டைக்காரர்களை(யும்), பதிலுக்குக் கூட்டி யனுப்பி, யித்தனாள் (அவர்கள்) வந்து சேர்ந்தார்கள்.

## பிப்ரவரி, 1755

*1755 வருசம், பிப்ரவரி மாசம், தேதி 4; பவ வருசம், தை மாசம், தேதி 26; செவ்வாய்கிழமை*

இத்தனாள் வடக்கேயிருந்து சமாச்சாரம் வந்துது யென்ன வென்றால், சலாபத்து சங்கு லபரி(?), ஆதோனி யிந்தப் பிராந்தியத்திலே யிருக்கிறானென்றும், கோசா நேமத்துல்லா கான் (Coja Namatullah Khan) யென்கிற ஆதோனி என்கிறவனுக்கு சீமை அமீலா (amil) யிருந்து, பிறகு அவன் அமீலை மாத்தி, பேர் விளங்கன் மொகலுனுக்கு (மொகலாயனுக்குக்) குடுத்தார்க ளென்றும், சவாயி (சவாய்) நானா யென்கிறவர் பூனாவிலே யிருந்து குசிப் பண்ணி (படையோடு) கர்னாட்டகம் யிந்த பிராந்தியத்துக்கு வருகிறதுக்கு முஸ்தீப்பா யிருக்கிறாரென்றும், யிதல்லாமல் மயிசூராருடைய வக்கீல் நானா கிட்டயிருக்கிறார் யென்றும், சலாபத்து சங்கு(க்கும்) நானாவுக்கும் இந்த மட்டுக்கும் ஒருத்தருக் கொருத்தர் சமாதானமில்லாமலிருந்து, யிப்போ யிருவருக்கும் சமாதான மாயி, யிருவரும் யோகோபவிச்சு மயிசூருக்கு ... வருகிறார்கள், அங்கேயிருந்து யிவடத்துக்கு வருகிறார்களென்றும் எழுதியிருக்குது. யிதல்லாமல் டில்லிச் சேதி(யும் வந்துது. அங்கே) ஆலம்கீர் பாச்சா அவர்கள் பெகு லேபடியா (பலத்துடனே) யிருக்கிறார் யென்றும், அவர் கிட்ட காசுத்தின் (காசியுதீன்) கான் ... (மிக்க செல்வாக்கோடு) யிருக்கிறார்; அந்தப் பிராந்தியத்திலே பாளையக்காரருடைய சோராவரி மிச்சமானபடியினாலே மல்காரி ராவு கோல்க்காருடைய பவுன்சு போயி ரொம்ப தெத்தமாயி (?) பாளையக்காரர் செயிக்கப் பட்டார்கள்; அப்புறம் டில்லியிலே யிருந்து சலாபத்து சங்கு அவர்களுக்கு பற்வானா, சீரொப்பா, நகை 11, கல்க்கி, சீறுபேசு, வகையரா தினிசுகள் அவுரங்காபாத்துக்கு வந்துது; முல்காரி ராவு ஹோல்க்காருடைய் பவுன்சு போயி டில்லியிலே சோராவரி பண்ணினபடியினாலே, ஹோல்க்காரைப் பிடிச்சு தலையை வெட்டிப் போட்டார்கள்; யிதுகளெல்லாம் தங்கள் சித்தத்திற்குத் தெரியவேண்டிய தென்று யிப்படியாக யெழுதி வந்தது.

புதுச்சேரிக்கும் குல்பர்க்கும் காதம் 50க்கு வயணம்:

| | |
|---|---|
| புதுச்சேரிக்கும் ஆற்காட்டுக்கும் காதம் | 10 |
| ஆதோனிக்கும் ஆற்காட்டுக்கும் காதம் | 25 |
| ராச்சூருக்கும் ஆதோனிக்கும் காதம் | 5 |
| கிஷ்ணைக்கும் ராச்சூருக்கும் காதம் | 1 |
| குல்பர்குக்கும் கிஷ்ணைக்கும் காதம் | 9 |
| – ஆக காதம் மொத்தம் கூடுதல் காதம் | 50 |

| | |
|---|---|
| கோல்கொண்டைக்கும் குல்பற்க்கைக்கும் காதம் | 15 |
| கொல்பற்க்காவுக்கும் அபறங்காபாத்தைக்கும் காதம் | 25 |
| அவுறங்காபாத்துக்கும் கோல்கொண்டைக்கும் காதம் | 40 |
| ஆதோனிக்கும் உதனாபாத்துக்கும் காதம் (யிது சந்திர சேனன் தாலூக்கு); | 10 |
| அபறங்காபாத்துக்கும் புராணபுரிக்கும் காதம் | 8 |
| புராணபுரிக்கும் நர்மதைக்கும் காதம் | 8[1] |

***1755 வருசம், பிப்ரவரி மாசம், தேதி 5; பவ வருசம், தை மாசம், தேதி 27; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே சலாபத்து சங்கு (வட) பெண்ணை (நதி) கிட்ட வந்தாரென்றும், ஆதிவெண்ணை, (ஆதோனி), குல்பற்க்கு, நாராயணப்பேட்டை யினண்டையிலே வந்திறங்கி யிருக்கிறதாகவும், அவரிப்புறம் மயிசூருக்கு வந்து, யிப்பால் கர்னாட்டகத்துக்கு வருகிறதாயி(ய்) சமாச்சாரம் வேலூருக்கு எழுதி வந்ததாயி சொன்னேன். ஆனால் முசே புசிக் கடுதாசி நமக்கென்ன எழுதி வரயில்லை யென்று (துரை) சொன்னார்கள். அது வரப் போகுதென்றும் சொன்னேன். யென்னமோ (புசி எழுதிய பின்) அறியவேணுமென்று சொன்னார்.

யிதல்லாமல், டில்லி பட்டணத்திலே ஆலம்கிரி பாதுசாத் தானே தக்குத்திலே (அரியணையிலே) இருந்தாலும் சகல குலத்தாரியும் (அதிகாரமும்) காசுத்தின் கான் (கையில்) யிருக்கிறதாகவும், மல்லாரி கோல்க்காரை டில்லியிலே ஸ்ரீமுலங்களிலே(?) சோராாவாரியாய் நடந்தபடியினாலே அவனைத் தலையை வெட்டிப் போட்டார்களென்றும்[2] நேத்திய தினம் தினசரிக் குறிப்பிலே எழுதியிருக்கிறபடிக்கி பிரான்சிலே எழுதிவிச்சுக் கொண்டு போயி குடுத்தேன். அதைப் பார்த்துக் கொண்டு டில்லி சேதி நாம் கேட்டதில்லை யென்று சொன்னார். யிது மெய்யாயித் தானே யிருக்கும், முசே புசியுடனே யிருந்து காயிதம் வருமென்று சொன்னேன்.

---

[1]எத்தனை விதமாக ஊர்களின் பெயர்கள் வேறுபாடாக பிரதி செய்யப்பட்டுள்ளன!

[2]நிசாம்–உல்–முல்க்கின் (இவனே முதலாவது தக்கண நிசாம்) மகனான காசியுத்தின் இமாதுல் முல்க் டில்லியில் முகலாய மன்னர் அகமது ஷாவைச் சிறையிலிட்டு, குருடாக்கிவிட்டு, 1754இல் வேறொருவனை 2ஆம் ஆலம்கிர் என்ற பட்டத்தோடு அரசனாக்கினான். ஆனால் காசியுத்தினே வசிர் (தலைமை அமைச்சர்) ஆக இருந்து உண்மையில் ஆட்சி நடத்தியவன். அரச அதிகாரத்தைப் பெற வேண்டுமென்று ஆலம்கீர் முயற்சித்த போது அவரையும் கொன்று தீர்த்தான் காசியுத்தின். இதிலெல்லாம் மல்ஹாரி ஹோல்காரும் உடந்தையாயிருந்தான். ஆனால் இவன் கலகம் செய்து கொல்லப்பட்டான் என்ற செய்தி சரியல்ல. மல்ஹாரி ஹோல்கார் மேலும் பல ஆண்டுகள் உயிருடன் இருந்தான்.

மஷோ யென்கிற கப்பல் (Machault) சீமையிலேயிருந்து மயே வந்து, அவ்விடத்திலேயிருந்து யிவ்விடத்துக்கு வந்தது. (அதில் வந்தது) வெள்ளிப் பெட்டி 33; (மொத்த எடை மார்க்கு 12,018; (மதிப்பு) சுமாறு ரூபாயி 2,50,000, இரண்டு லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாய்.

அதன் பிற்பாடு துரை அவர்களிருந்து கொண்டு, 'நாமானால் (நாம்) யின்னு யெட்டாம் நாள் புதவாரத் தன்றைக்குப் பயணமாயி கப்பலேறிப் போறோம். முசே லெறியித் (M. Leyrit) யிவ்விடத்துக்கு வருகுறாரே, அவர் யிந்த மாதம் கடைசியிலே வருவார். அவரிவ்விடத்துக்கு வருகிற மட்டுக்கும் யிவ்விடத்திலே யிருக்கிற சின்ன துரையைத் தொட்டு ஒரு அதிகாரமும் நடக்கத் தக்கதில்லை. முன் ஆரார் எந்த காரியத்திலே யிருந்தார்களோ அந்தப்படிக்கி மிஞ்சின சோலிகளுக்குப் போகத்தக்கதில்லை. நான் ஒரு கடுதாசி யெழுதி அந்தக் கடுதாசியிலே சகல காரியமும் உம்முட மாரிபத்திலே நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லியும், உம்மை யல்லாமல் ஒரு காரியமும் நடக்கத் தேவையில்லை யென்றும் யெழுதி கோன்சேலியேர் கையில் கையெழுத்துப் போட்டுவிச்சு, நம்முடைய கையெழுத்தும் போட்டு முத்திரை போட்டு ரெண்டு மூணு நாளையிலே உன் கையிலே குடுத்துவிட்டுப் போறேன். அதை வச்சிருந்து முசே லெறிது வந்தவுடனே குடும். நாமெழுதி யிருக்கிறபடிக்கி நடப்பிப்பார்," யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது : "யென்னுடைய காரியத்துடனே தங்கள் தயவு யெனக்கு யிருக்கவே யிருக்குது; சுவாமியுட சித்தம் உண்டானபடிக்கி நடக்கப் போகுது. பட்டணங்களிலேயிருக்கிற செனங்களெல்லாம் மெத்த அங்கலாயிக்குறார்கள் (நிம்மதியின்றி இருக்கிறார்கள்). பட்டணத்திலே யென்ன வித்தியாசங்களாயிருக்கப் போகுதோ யென்கிறதாயித் தானே யோசனையாயிருக் (கிறார்கள்)" யென்று சொன்னேன்.

அதுக்கு அவர் நகைத்து, "அப்படி யெல்லாம் வராது. சின்ன துரைக்கி ஒரு எக்கித்தியாரும் (அதிகாரமும்) குடுக்கயில்லை. அதைக் கெட்டியாயி யெண்ணி, நான் குடுக்கிற கடுதாசியை வச்சிருந்து, முசே லெறிது கையிலே குடுத்ததுண்டானால் சகலமும் உம்முடைய மாரிபத்திலே தானே நடப்பிப்பார்" யென்று சொன்னார்.

அப்படியிருக்கச்சே, "யிந்தப் பட்டணத்திலே யிருக்கப்பட்ட வீடுகள் யெல்லாம் யென்னத்தினாலே பாழாயிப் போச்சுது," யென்று கேட்டார்கள். அதுக்கு நான் சொன்னது, "முன்னாலே ஒரு படியாயிருந்துது. பிறகு முசே லெனுவார் வந்த பிறகு யிவ்விடத்தில் வெகுசாயி வர்த்தகம் (நடந்து), கைக்களர், சேடர், சேணியர், யெழுத்துக்காரர், பல பட்டடைகள் சகலமான பேரும் வந்து சேர்ந்து தொழில் துறை விஸ்தாரமாய் நடப்பிச்சார்கள். அதினாலே கூரை வீடுகளெல்லாம் போயி, கல்லு வீடுகளாயி கட்டிக்

கொண்டும், யேழைகளா யிருக்கிற பேரெல்லாரும் மகா ராசாக்களானதும், அவரவர் பதினாயிரம் யிருவதினாயிரம் நாற்பதினாயிரம் அன்பதினாயிரம் லெக்ஷம் யிந்தப்படிக்கி வருமானத்துக்குத் தக்கதாயி, ஆஸ்தியுடனே பணம் (காணாதவ னெல்லாம்) பணங் கண்டான்; உடமை காணாதவ னெல்லாம் உடமை கண்டான். .... வர்த்தகம் விஸ்தாரமானபடியினாலே வெளியிலே காடுகளாயிருந்த விடங்களெல்லாம் வீடுகள் கட்டிக்கொண்டு யெங்கே பார்த்தாலும் அழகாயி வேடிக்கையாயிருந்தது. பிறகு முசே தும்மா நாளையிலே அதிலே அரைவாசி நடந்துது. பிற்பாடு முசே துப்பிளேயிக்சு நாளையிலே யென்னேரம் பார்த்தாலும் மராட்டியர் கலாபத்தினாலேயும் துலுக்கர் கலாபத்தினாலேயும் யிங்கிறேசுக்காரர் கலாபத்தினாலேயும் சீமைகளெல்லாம் அழிச்சுக் கொள்ளை, வல்லிடிகள் (?), ஓரண்டை சிறை பிடிக்கிறது மாயி அவரவர் வீடு போயி, வாசல் போயி, தட்டும் போயி, முட்டும் போயி, சனங்கள் யெல்லாம் யிழந்து போயி இப்படியாயிப் போச்சுது," யென்று சொன்னேன். "யிதல்லாமல், செனங்கள் சொல்லுகிறதிலே நிசமிருந்தது. முசே லெனுவார் ஒரு தோட்டக்காரனா யிருந்து நில மெல்லாம் திருத்தி உழுது யெருப்போட்டுப் பக்குவப்படுத்தி, செடி நட்டுப் பயிராக்கி, செடி பயிராய் பூ பூத்து, காயிக் காச்சுப் பழம் பழுத்து, கொஞ்சம் அவரனுபவிச்சார். முசே தும்மா வந்து பழமெல்லாம் அவர் சாப்பிட்டார். முசே துப்பிளேயிக்சு நாளையிலே பெருங் காத்து அடிச்சு மரமெல்லாம் அடியோடே படு கேடையாயி விழுந்துப் போச்சுது. அப்படி (இருக்கச்சே), சாமி யிதைச் சொல்லி தேவரீர் அவர்கள் யிப்போ வந்து செடிகளுக்கு பக்குவப்படுத்தி பயிர் செய்தீர்கள். விசேஷப் பயிராயி காயாயி காச்சு பழம் பழுத்து யெல்லாரும் சாப்பிடலாமெ யென்று எண்ணியிருந்தேன். யிதுக்குள்ளே நீங்கள் பயணமாயிப் போயி விடுகிறீர்களே! யிதுக்குள்ளே யெங்கே பெருங் காத்தடிச்சு மரங்க ளெல்லாம் விழுந்து போகப் போகுது யென்று யெல்லாரும் தாபந்தப்படுகிறார்கள்" யென்று சொன்னேன்.

அதின் பேரிலே, "முசே லெறிது வருகிறாரே, அவர் நல்ல தோட்டக்காரன். மெத்த பயிர் சூர்மை உண்டானவர். மெத்த நல்ல சீனோர், யினி மேல் யெல்லாரும் சுகப்படுவார்கள்," யென்று சொன்னார்கள். அந்தப்படி அந்தமட்டிலே ரொம்பவும் உபசாரமாயி சொல்லிப்போட்டு வளவுக்கு வந்துவிட்டேன்.

### *1755 வருசம், பிப்ரவரி மாசம், தேதி 9; பவ வருசம், மாசி மாசம், தேதி 1; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே யேழு மணிக்குப் போயி துரை அவர்களைக் கண்டவிடத்திலே, "மயிசூரார் வக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யர் வந்து

நான் ஒரு தரம் நந்திராசா வண்டைக்குப் போயி வரவேணும்; அவரும் வரச் சொல்லிக் கடுதாசி எழுதி அனுப்பி(யிருக்கிறார்); திருநெல்வேலி அந்தப் பிராந்தியத்(துக்கு) குமிசெல்லியரை (அல்ல, கொம்மிசேர்) அனுப்பிவிக்குறோம் யென்று சொல்லியிருந்தீர்களே; (யாரை அனுப்பத் திட்டமிட்டிருந்தீர்கள்?) நீங்களானால் சீமைக்குப் போறீர்களே, அந்தச் சேதியும் தங்களுடனே சொல்லித் தெரிஞ்சு கொண்டு யென்னையும் வரச் சொல்லி எழுதி வந்தது," யென்று யிந்த வயணை மெல்லாம் பிரான்சிலே எழுதிக் கொண்டு வந்து குடுத்தார். அவர் அதைப் பார்த்துக் கொண்டு, "நாம் சீமைக்குப் போனாலென்ன? முசே லெறிது வருகிறாரே, அவர் நம்மைப் பார்க்க (அதிக திறமையுள்ளவர்). அதின் பேரிலே அவர் வந்த பிறகு யெல்லாக் காரியத்துக்கும் அவருடனே சொல்லிக் கொண்டால் உங்கள் மனதும்படியே செய்விச்சுக் குடுப்பார். நீர் போறதுக்கு முசே லெறிது வந்த பிறகு அவர் உத்தூரத்தின் பேரிலே போறதே அல்லாமல், யிப்போ போகவேண்டாம்," யென்று சொல்லி, முந்தின நாள் நந்திராசா கடுதாசி வந்ததையும், யென் பேருக்கு வந்த கடுதாசியையும் குடுத்துப் பிரான்சு படுத்திக்கொண்டு வரச் சொல்லி யிருந்த யிந்தக் கடுதாசியையும் பிரான்சு படுத்திக் கொண்டு வந்த (கடுதாசியையும் பெற்றுக்கொண்டு), "உடனே நந்திராசாவுக்கு பதில் உத்தரவு எழுதிக் குடுக்கிறோம். நீரும் எழுதி அனுப்பு" மென்று சொல்லி வெங்கிட்டநாரணப்பய்யனை அனுப்பிவிச்(சார்).

அவர் போனவுடனே துரையவர்கள் "மோக்கா (Mocha) கப்பல் பயணத்துக்கு முஸ்தீப்பு பண்ணி, அவ்விடத்திலே யிருக்கிற, மோக்கா அரபி ராசாவுக்குக் கடுதாசி யெழுதச் சொன்னேனே அது ஆயிற்றா?" என்று கேட்டார். அந்தக் கடுதாசியிலே எழுதியிருந்த வயண மென்னவென்றால், "பேத்தில்பேக்கு (Betelfaqi) யென்கிற கப்பேக் (காபி) கொட்டை சமையாகிற(?) விடத்திலே, பிராக்கு வருஷம்[1] அவரவர் பேரிலே வரவேண்டிய நிலுவைகளை யெல்லாம் தாங்கள் யேத்துக்கொண்டு அந்தப் பணத்துக்கு கப்பே கொட்டையாவது பின்னை யாதோ சரக்காவது அனுப்பிவிடுகுறோமென்று எழுதி அனுப்பிவிச்சீர்களே. அது யிது வரைக்கும் வரயில்லை. இப்பவும் கப்பல் பயணம் பண்ணி முசே லங்கற்னேயை (Lenguerne?) அனுப்பிவிச்சோம். அந்தக் கப்பலுக்கும் மத்தத்து பண்ணி, முன் நிலுவைகளுக் கெல்லாம் கப்பேக் கொட்டையாயித்தானே யேத்தி அனுப்பச்" சொல்லி, யிது முதலான சேதிகள் யெழுதி, முன் பின் முசே துப்பிளேயிக்சு நாளையிலே எழுதுகிற வக்கணையும் உபசரணையும் எழுதியிருந்த வயணம் யெல்லாம் துரை அவர்களுடனே சொல்லி, அந்தக் கடுதாசி மொகறு பண்ணிவிச்சு முசே லங்கற்னே கையிலே குடுத்து விட்டோம்.

---

[1] பலவிடங்களில் முஸ்லிம் மாதங்களை இப்படிக் குறிப்பிடுகிறார்.

அதின் பிறகு வடக்கே யிருந்து நானா[1] (ஆட்கள் மூலம்) கடுதாசி ரெண்டும், முசபர் கான் கடுதாசி (ஒன்றும்) பிரான்சிலே யெழுதி வந்தது. அந்தக் கடுதாசியை யென் கையிலே குடுத்து பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச் சொன்னார். முசபர் கான் கடுதாசி பிரான்சுலே எழுதியிருந்த படியினாலே அதை அவர் கையிலே குடுத்துவிட்டு, நந்திராசா கடுதாசி(யும்) நானா கடுதாசியும் எல்லாம் பிரிச்சு வாசித்துப் பார்த்துக் கொண்டு, பிரான்சு படுத்திக்கொண்டு வரச் சொல்லி மதனாந்த பண்டிதனை முசே லபோம் அண்டைக்கு போகச் சொல்லி அனுப்பிவிட்(டேன்)...

(அப்போது) துரையவர்கள் சொன்னது : "நானும் (நாமும்) வியாழத் தன்றைய தினம் சீமைக்குக் கப்பல் யேறிப் போறோம். .... உன்னை அல்லாமல் ஒரு காரியமும் நடத்தாமல் படிக்கி சகலமும் நான் உன் வழியாயே யெந்தப்படிக்கி நடத்தினேனோ அதுக்குப் பத்து பங்கு அதனமாயி நடப்பிக்கத் தக்கதாக, முசே லெறிதுக்குக் கடுதாசி எழுதி முத்திரை போட்டு வச்சு நாலு நாளாச்சுது. முசே லெறியும்[2] அந்தப்படிக்கி நடப்பிப் பார். அந்தக் கடுதாசியை உன் கையிலே குடுக்கிறோம்," யென்று சொல்லி, "முசே லெறி வருகிற மட்டுக்கும் நீர் கும்பினீர் காரியம், வெளிக் காரியம் சகலமும் விசாரிச்சு, அவர் வந்த உடனே அவருக்கு நீ கணக்கு ஒப்பிக்கிறதே அல்லாமல், அதுக்கு முன்னே யிவடத்திலே நாம் நேமிச்சு வச்சவர்களுக்கு நீ கணக்கு ஒப்பிக்கத் தேவையில்லை. நாமும் யிவ்விடத்திலே நேமிச்சு வச்சவர்களுக்கு யிந்தப்படி ஒடுதி குடுத்து யிருக்குறோம்," யென்று யிது முதலான சேதிகளாயிச் சொன்னார். அதுக்கு நான் எல்லாம் உங்களுடைய பெருமைதா னென்று ரொம்ப உபசாரமாய்ச் சொன்னேன். அதின் பிறகு துரையவர்கள், "வழுதாவூர் ஆயம் தள்ளிப் போட்டோமே, சென்னப்பட்டணத்துக் கோட்டைக்கு வெளியிலே யிந்தப்படிக்கி ஆயம் வாங்கயில்லையா?" வென்று கேட்டார்.

அதுக்கு நான் சொன்னது, "சென்னப்பட்டணத்துக் கோட்டைக்கு வெளியே யெல்லாம் மமுதல்லி கான் சீமையானபடியினாலே, ஆயம் வாங்குறது வாடிக்கைதான். முன்னே புதுச்சேரிக்கு வெளிச் சீமையெல்லாம் துலுக்கருடைய சீமையாயிருந்தபடியினாலே வெளியிலேயும் ஆயம் வாங்கினார்கள். கோட்டைக்கு உள்ளேயும் ஆயம் வாங்கினார்கள். இப்போ வழுதாவூர் வில்லியநெல்லூர் வகையிரா கும்பினீருக்குச் சாகீராய்ப் போனபடியினாலே வெளியிலே ஒரு ஆயமும்

[1] நானா பாஜி ராவின் மகன். இரண்டாம் பாலாஜி ராவ் என்றும் பலாஜி பாஜி ராவ் என்றும் அழைக்கப்பட்டார்.

[2] Leyrit என்ற பெயர் லெறித் என்றும் லெறி என்றும் இருவிதமாகக் கைப் பிரதியில் உள்ளது.

கோட்டைக்குள்ளே ஒரு ஆயமும் (வாங்கினால்) செனங்களுக்கு வெகுலுக்குசான(?) வற்த்தகம் நன்றாய் நடவாது.... கரை துறை களிலேயும் இந்தப்படி ரெண்டாயம் வாங்குறதில்லை. ஆனபடியினாலே, முன்னால் துரைத்தனம் பண்ணினவர்கள் யிந்த ஆயத்தைத் தொட்டு பட்டணம் மாமூறு (அபிவிருத்தி) ஆக மாட்டாது யென்று யோசனை பண்ணி தள்ளிப்போட வேணுமென்று யிருந்தார்கள். அவர்களுக்கு அந்த கீர்த்தி கிடையாமல் தாங்கள் புண்ணிய புருஷனான படியினாலே தங்களுக்கு யிந்த கீர்த்தி கிடைச்சுது," யென்று ரொம்பவும் உபசாரமாயிச் சொன்னேன். அதுக்கு அவர், "நல்லது குமிசெல் வீட்டிலே கோன்சேல்காரர் கூடியிருக்கிறார்கள்; நானும் கோன்சேலிலே பேசுகுறோ" மென்று சொல்லிக் கோன்செல்[1] கூடியிருக்கிற யிடத்துக்குப் போனார். அந்த மட்டுக்கும் நான் அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்கு வந்து விட்டேன். பகலைக்கு மேலாக வெளியிலே போகாதபடியினாலே ஒரு சேதியுமில்லை.

### *1755 வருசம், பிப்ரவரி மாசம், தேதி 10; பவ வருசம், மாசி மாசம், தேதி 2; சோமவாரம்*

இத்தனாள் முசே தெருஷே (M. du Rocher) என்கிறவன், வெள்ளைக்காரன், துரையவர்கள் ஒடுதி என்னைத் தன்னண்டைக்கி வந்து கண்டு பேசிக் கொள்ளச் சொல்லிக் குடுத்தனுப்பிவிச்சான். அந்தப்படிக்கி அவன் அண்டைக்குப் போய்க் கண்டு பேசின விடத்திலே, அவனிருந்து கொண்டு, "நான் கருங்குழி சீமைக்கு யிவ்விடத்திய கொமிசேயறுகள் (கொம்மிசேர்) ரெண்டு பேரும், யிங்கிறிசுக்காறர் கொமிசேயறுகள் ரெண்டு பேரும் போய், யிந்த சமாதானத்துக்கு ஆதியிலே ஆரார் வசத்திலே யெந்த சீமையிருந்துதோ அந்த அத்திலே யிருக்கத்தக்கதாக விசாரிக்க வேண்டிய கவை காரியங்களுக்கு யெல்லாம் நான் வந்து விசாரிச்சுப் போக வந்தேன். யிந்த சமாதானம் துவக்கத்திலே யிருந்த பூருவோத்திரமும், அப்பால் அவர்கள் வந்து நடப்பிச்ச காரியங்களும் அமுல்தாரைக் கேட்டு யெழுதிக் கொண்டு குடுக்க"ச் சொன்னான். அதுவுமல்லாமல், "அந்தப்படிக்கி நீர் எழுதிவிச்சு நாளை காலமே உம்முடைய பழய கச்சேரியிலே வந்திருந்தால், நான் வந்து கண்டு பேசிக் கொள்ளுகிறேனெ"ன்று சொன்னான். அப்பால் நான் கணக்கு றெங்கப்ப முதலியை அழைப்பிச்சு முன் பிறட்டாசி மாசம் 29ஆம் தேதி, அக்டோபர் மாசம் 11 ஆம் தேதி, முசே தெலார்ஷுக்கு யிங்கிறிசுக்காறர் நடப்பிச்ச சங்கதிகளுக்கு ஒரு பிறதி யெழுதிக்

[1] Conseil (council) என்பதை குமிசேல், கோன்சேல் என இருவிதமாக எழுதியிருப்பதைக் காண்க. வில்லியநல்லூர், நெல்லூர் என்பதும் இப்படியே.

குடுத்திருந்தார்களாம், அந்தப்படிக்கு யெழுதிக் குடுக்கச் சொல்லியும்; அப்போ வந்தவாசி சீமை அமுல் பண்ண அய்யன் சாஸ்திரியையும் கருங்குழி சீர்மை அமுல் பண்ண றெங்காசி[1] (ரங்காஜி) பண்டிதனையும் அழைப்பிச்சு அப்போ நடந்த சங்கதிகளும் சம்மதிகளும் சொல்லச் சொல்லியும், யிதல்லாமல் அப்போ கருங்குழி பாளையத்திலே முத்துமல்லா ரெட்டியார் யிங்கிறேசுக்காறர் பாடுத்தியா (பக்கமாய்) யிருந்தபடியினாலே, அவரையும் அழைப்பிச்சுக் கேட்டு அந்தப்படிக்கி யெழுதி முஸ்தீபு பண்ணிக் கொண்டு வரச் சொல்லி அனுப்பிவிச்சேன்.

### *1755 வருசம், பிப்ரவரி மாசம், தேதி 11; பவ வருசம், மாசி மாசம், தேதி 3; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலத்தாலே கணக்கு றங்கப்ப முதலியும், கருங்குழி சீர்மை முன் அமுல் பண்ண வெங்காசி பண்டிதனையும் வந்தவாசி சீர்மை முன் அமுல் பண்ணின அய்யன் சாஸ்திரியையும் திண்டிவனம் சீர்மை நாட்டு (நாட்டான்) முத்துமல்லா ரெட்டியையும் அழைப்பிச்சு யென் (பழைய) காசாக் கச்சேரியாகிய பாக்குக் கிட்டங்கிலே போயிருங்கள், நான் முசே தெரூஷேவை அழைத்துக்கொண்டு அவ்விடத்துக்கு வருகுறேனென்று சொல்லி அவர்களை போகச் சொல்லி, நான் முசே தெரூஷே வீட்டுக்குப் போய் அவனைக் கண்டு பேசி, "நேத்து நீர் சொன்னபடிக்கி கணக்கு றங்கப்ப முதலி வகையராக்களை யெல்லாம் யென் காசாக் கச்சேரியே போயிருக்கச் சொன்னேன். நீரும் அவ்விடத்துக்கு வந்தால் முக (நேரில்) தாவிலே பேசிக்கொள்ளலாமென்று சொன்னதுக்கு, "யின்னம் ரெண்டு நாழிகை நேரம் பொறுத்து அவ்விடத்துக்கு வருகுறேன். நீர் முன்னே போய் அவர்களை வைத்துக் கொண்டிரும் வாரோம்," என்று சொன்னான்.

அவன் கையிலே அனுப்பிவிச்சுக் கொண்டு, கோட்டையே போய் துரை அவர்களைக் கண்டு அடச்சி மழுங்கல்? பொன்கட்டியைக் குடுத்து, "கும்பினீர் பெரிய துபாசி குரோதன வருசம் மாசி மாசம் 4 தேதி (12 பிப்ரவரி 1746) கனகராய முதலியார் செத்துப்போன பிற்பாடு நான் அந்த பெரிய துபாசி யிடத்துக்குப் போய் பிறவேசிச்ச பிற்பாடு சென்னப்பட்டணம் பிடிக்குறதுக்கு, வேகுக்காரர் முதலான பேரை அனுப்பி விசாரிச்சு அந்த நிலவரங்களறிந்து, அப்பால் முசே லபோடுதொனேயுடனே கூட சென்னப்பட்டணம் சண்டை பண்ணி வாங்கிக் கொள்ளுகிறபோது, யென் தம்பி திருவேங்கடம் பிள்ளையை அனுப்பினது முதல் ஆதியாய், அப்பால்

[1] முன்பு ரங்காஜி எனவும் பின்பு வெங்காஜி எனவும் உள்ளது. பின்னதே சரியெனத் தோன்றுகிறது.

சென்னப்பட்டணம் வாங்கின பிற்பாடு மாபூசு கான் வந்து சண்டை பண்ணினதும், அவனங்கே உபாதியிலடிபட்டு காஞ்சிபுரம் போய்ச் சேர்ந்து, அங்கே யிருந்து மமுதல்லி கான் கூடக் கூடிக்கொண்டு தேவனாம்பட்டிணத் தண்டையிலே பெண்ணை ஆத்தங்கரை யோரத்திலே யிறங்கி, அங்கேயிருந்து புதுச்சேரியின் பேரிலே சண்டை பண்ணின போது சமாதானம் பண்ணினதும், அப்பால் மேஸ்தர் புஸ்கவேன் அமீராலம்பாரா[1] யிருக்கிற இங்கிறேசுக்காறர், அமிரால் கப்பலும் சுலுப்புமாய் நாற்பது உருப்படியுடனே விபவ வருசத்திலே (1748) புதுச்சேரிப் பட்டணத்தைக் கடலின் பேரிலேயும் கரையின் பேரிலேயும் மொற்சா (முற்றுகை) போட்டுக்கொண்டு ரெண்டு மாச காலம் சண்டை பண்ணின போது, சமஸ்தமான பேர்கள் தமிழர் கிறிஸ்துவர் வகையிரா பெண்டுகள் ஆண் பெண் பிள்ளைகள் வகையரா வெளியே போய் விட்டார்கள். நான் மாத்திரம் யென் சமுசாரத்துடனே யிருந்து, பட்டணத்துக்குள்ளே யிருந்து, வெளிக் கபுறுக ளெல்லாம் அழைப்பித்துச் சொல்லி, அந்த தீக்குடுக்கைகள் பீரங்கிக் குண்டுகள் வகையரா நெருப்பிலே யிருந்து நிறுப்பாகம் பண்ணி(னேன்). அப்பால் சந்தா சாயபுவையும் அழைப்பித்து யிதாயித்து மொகதின் கானையும் அழைப்பிச்(சேன்). அன்வரதிகானாகிய ஆற்காட்டு சுபேதாரனை ஆம்பூரிலே முசே தொத்தேல் வகையரா போய்ச் சண்டை பண்ணித் தலை வெட்டினதும், அப்பால் நாசறு சங்கு வந்து சண்டை பண்ணி யிதாயித்து மொகதின் கானைப் பிடிச்சுக் கொண்டபோது சந்தா சாயபு புதுச்சேரியே ஒடிவந்து, நம்முடைய பவுன்சு வந்து விட்ட பிற்பாடு நாசறு சங்கு ஆற்காடு சேர்ந்தவனைத் தேசூரண்டையிலே வந்து சண்டை பண்ணிச் செயிச்ச பிற்பாடு, யிதாயித்து மொகதின் கான் யிவ்வடத்துக்கு வந்து தக்கன் சுபா பட்டங் கட்டிக் கொண்டு, மறுபடி பிறப்பட்டு ஆற்காட்டுக்குப் போன மட்டுக்கும், நான் சகல பிரயாசைப்பட்டு துபாசித்தனம் (பண்ணினேன். அப்போது) முசே தெலார்ஷு, யிதாயித்து மொகதின் கானுக்குத் துவிபாஷித் தனம் பண்ணினது பதினைஞ்சு நாள். அக்காரியத்துக்கு (அவன்) அஞ்சு (லக்ஷம் ரூபாயும்) கோன்சேல் உத்தியோக(மான) கசேரும் (caissier–கேஷியர்) பெத்ததும், அதுக்கு முன் முசே வெனுவார் யெனக்கு புத்திமதி சொல்லி பறங்கி (ப்பேட்டை) பெத்திரி (factory) கப்பித்தனாக்கி (கேப்டன்) சகல வியாபாரம் முத(லிய யாவும்) யென் மாரிபத்திலே நடப்பிச்சதும், (எனது) வெண்காங்குக் கட்டு (நீலத்துணி மூட்டைகள்–bales) வகையராவுகளைச் சீமைக்கி அனுப்புகிற கட்டிலே யெரி (R) யென்கிற (என் முதல்) யெழுத்துப் போட்டு, சீமைக்கி யென் பிறயாச (மெல்லாம்) யெழுதியனுப்பி, அவர்கள்

---

[1] Admiral Mr. Buscawen, the Unlucky, என்று ஆங்கிலப் பதிப்பில் இது மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது.

மோறசா (நன்றி) சொல்லிக் காகிதம் (யெழுதி) அழைப்பிச்சது முதலாய், யின்றைய வரைக்கும் நடந்த சேதியெல்லாம் பிரான்சு யெழுத்திலே (நான் ஒரு நோட்டுப் புத்தகத்தில்) யெழுதி வைத்துயிருந்த (அந்தக்) காகித லீவுறு கயேவை[1] அவர் கையிலே குடுத்து, முன் நடந்த சேதிகளும் தோணின மட்டுக்கும் சொன்னதுக்கு, "நான் சொன்ன பரவசம் தப்புகிறவனல்ல. யிந்தக் காகித யாதியைக் (குறிப்புகளை) கும்பினியாருக்கும் மினிஸ்தருகளுக்கும் காண்பிச்சு, உனக்கு முத்திரை(யும்) பெகுமானமும் உன் பிரயாசத்துக்குத் தக்கதாய் ஒரு திகை–(தொகை?) திரவியமும் அனுப்புவிக்குறேன்," யென்று சொன்(னார்). அப்பால், பதினெட்டாம் மாசம் (அவற்றைக்) கொண்டு வருகுறேன், வராமல் போனால் அனுப்புவிக்கிறது மல்லாமல், வருஷா வருஷம் உன் பேருக்கு யிவ்விடத்திலே துரைத்தனம் பண்ணுகிற பேருக்கு உனக்கு நன்றாய் நடப்பிக்கச் சொல்லிக் காகிதங்களும் அனுப்பிவிக்குறேன்; முசே லெறிதுக்கும் காகித மெழுதி வைத்தேன். அந்தக் காகிதத்தை உன் கையிலே நாளை அன்றைக்குத் தாரேன்" என்று சொல்லி, "நான் சனி யன்றைக்குப் போறேன், யின்னம் சாவகாசமாய் (பின்) சொல்லுகுறேன், யிப்போ (நீ) போகலாம்," என்று சொன்னார்.

யிதிலே முசே குலுவேத்து வந்தான். அவனுடனே (துரை) பேசியிருந்தார். நான் அனுப்பிவிச்சுக் கொண்டு பிடவை பார்க்கிற சாலையே யெங்கள் குதிரை யெல்லாம் ஓடுகிற[2] விடத்திலே அப்பாவை வைத்துப் போட்டு, நான் முசே தெருஷே வருகுறேனென்று சொன்னானே அங்கே போகவேணு மென்று பிறப்படச்சே, முசே செமீர்சுப்பயன்[3] மகன் வந்து, "உனக்கு பெகுமானம் குடுக்க பொன் கொலுசு (இன்று, செயின்), பதக்கம், சிறபேசு, துராயிக்கு, (மொத்தம்) முன்னூறு வராகனுக்குக் கிரயம் (மதிப்புள்ளது), முசே கோற்னே (ஒடுதி) யெழுதிவிச்சுத் துரை கையிலே கையெழுத்து வாங்கினான்; அது (அந்த ஒடுதி) நான் யெழுதிவிச்சுப் போட்டேன்,"[4] யென்று சொன்னதுக்கு, (நான்) அறிந்த உபசாரம் யெல்லாம் சொல்லிப்போட்டு, அங்கேயிருந்து யென் காசாக் கச்சேரியே வந்தேன் அங்கே முசே தெருஷேயும் வந்தான். அங்கே நடந்த சேதி–[5]

---

[1] கையே (cahier) -நோட்டுப் புத்தகம், பதிவேடு என்றிருத்தல் வேண்டும்.

[2] தவறு 'ஏலம் விடுகிற' என்றிருக்கவேண்டும்.

[3] இவர் யார் என்பது விளங்கவில்லை. இப்பெயரே தவறு எனத் தெரிகிறது.

[4] இவையெல்லாம் நம் பிள்ளைக்குத் துரை வெகுமதியாக அளிக்க விருந்தவை. தமிழ்ப் பிரதியில் இது குழப்பி எழுதப்பட்டுள்ளது.

[5] இதன் விவரம் மூல ஏட்டிலேயே விடுபட்டுள்ளது அல்லது சிதைந்து அழிந்து போனது.

***1755 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 18; பவ வருசம், மாசி மாசம், தேதி 10; செவ்வாய்க்கிழமை[1]***

இத்தனாள் காலத்தாலே முசே பெடுத்தல்மீ அண்டையிலே யிருக்கிற வேலைக்காரன் ராமன் யென்கிறவன் (வந்து சொன்னது : தன் யெசமான்) “அவரவர்களை அழைப்பிக்குறது, தாம் துரைத்தனம் பண்ணுகிறபடியினாலே உன் காரியம் அப்படி செய்து தாரேன், இப்படி செய்து தாரேன் என்று நூறு ரூபாய் முதல் (பத்து) ஆயிரம் ரூபாய் மட்டுக்கும் (வாங்குகிறது); ஒருத்தரை யெடுத்து ஒருத்தர் மேலே போட்டு யென்னென்னமோ நடத்துகிறது; முசே கொதே நாளையிலே யிவன் வெகு லஞ்சம் வாங்குறவன் ஆன படியினாலே யிவனை முசே லெறிது வருகிற மட்டுக்கும் துரைத் தனத்துக்கு நேமிச்சால் பிஞ்சு உதிர, பூ வுதிர அடிச்சுப்போடு வானென்று, கோன்சேலிலே அல்லாமல், யிவன் ஒரு வேலையும் செய்யக் கவையில்லை யென்று (கொதே) திட்டம் பண்ணிப்போட்டுப் போனார். (ஆயினும்) யிப்போ (இவன்) நடத்துகிற காரியந்தொட்டு சுவாமி யிவனுக்கு யென்ன பொல்லாப்பு பண்ணிவிக்குறாரோ தெரியாதென்று சனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.”[2]

இத்தனாள் காலத்தாலே (பெடுத்தல்மீயிடம் நான் சொன்னது:) நம்முடைய ட்டாணா உலக நல்லூர், கச்சிராயன் பாளையம், மங்களூர் வகையரா (மொத்தம்) யேழெட்டு யிடங்களிலே யிருந்தவர்களிலே உலக நல்லூரிலே யிருந்தவர்களுக்கு மயோராயிருந்த மோகுலன் (மொகலாயன்) தனக்குச் சம்பளம் வரயில்லை யென்று, சிப்பாயிகளுக்குக் கப்பித்தான்களா யிருக்கிறவர்களை யெல்லாம் யேகத்துக்கு அனுகூலம் பண்ணிக் கொண்டு (தன் பக்கம் சேர்த்துக் கொண்டு), யிறைவாசநல்லூர் கோட்டையிலே யிருக்கிற (மீர்) அப்துல் றயிமானுக்குச் சொல்லி அனுப்பிவிச்சு, அவர்கள் மனுஷர்களோடு யிவர்களும் யேகமாயி (ஒன்று சேர) ஆணை சத்தியப் பிரமாணம் பண்ணிக் கொண்டு, (பின்) யேகஸ்தனாய், கல்லக்குறிச்சி சீமை—இது வருஷம் ரெண்டு லக்ஷம் ரூபாயி பொருமானது – அதன் குடிகளெல்லாம் பிடிச்சுக் கொண்டு வந்து, நெல்லு (வயல்களை யெல்லாம்) அறுப்பு அறுக்கச் சொல்லி,

---

[1] இதற்கு முன் ஒரு வாரப் பதிவுகள் கிடைக்கவில்லை. எனவே 16ஆம் தேதி கொதே கப்பலேறிப் போனது, பெடுத்தல்மீ, போயலோ, கில்லியார் ஆகிய மூவரைக் கொண்ட குழுவை நியமித்து, லெறித் வரும் வரையில் முக்கியமான எம்முடிவையும் அக்குழு மேற்கொள்ளக்கூடாது என அவர் ஆணையிட்டுப் பொறுப்பை ஒப்படைத்தது போன்ற செய்திகள் கிடைக்காமல் போயின.

[2] இங்கே தமிழ் வாசகம் புரிந்து கொள்ள முடியாதபடி எழுதப்பட்டுள்ளது. ஆங்கிலப் பதிப்பைக் கொண்டு சரிசெய்ய நேர்ந்துள்ளது. இப்படிப் பல பக்கங்களில் செய்யப்பட்டுள்ளது.

பண(மும் பிடுங்கிக் கொண்டான்) என்று கபுறு யிருக்கிறது (வந்துது); யென்னுடைய அமுல்தாரன் போனவனை யெங்கேயும் கண்ணிலே காட்டாமல் அமுல் தாகல் ஆக (அமுல் செய்ய) ஒட்டாமல் பண்ணுகிற கலாப நிமித்தியம் மிதமில்லை. யிதல்லாமல், வேட்டவும் பாளையத்துக்குள்ளே அவர்களும் (அதன் பாளையக்காரனும் அப்படித் தானென்று, யிந்த பூறுவோத்திர மெல்லாம் விசிதமாய் (பெடுதல்மீயிடம்) சொன்னதுக்கு, தாக்கிதின் பேரிலே (காகிதத்திலே) யெழுதிக் கொண்டு வாரும் யென்று சொன்னார்.

மீர் அப்துல் ரயிமான் யிப்போ தானே அல்ல, வெகு நாளாய் அமுல் காவல் பண்ணிக் கொண்டு திருநாமநல்லூரைச் சுத்தமாயி கட்டிக் (பிடித்துக்) கொண்டு ஆன பிற்பாடு, யிந்தப் பக்கத்திலே திருவீதி வகையிரா சீமை யெல்லாம் கலாபம் பண்ணுகிறான். அந்த வட்டத்திலே கல்லடக்குரிச்சி[1] சீர்மை, விழுப்புரம் சீமையெல்லாம் யேகத்துக்குக் கவுல் பண்ணிக் கொண்டு (குடிகளுக்குக் கவுல் கொடுத்து), நாற்பதினாயிரம் அன்பதினாயிரம் ரூபா மட்டுக்கும் குடிகளைப் பிடிச்சுக் கொண்டு அறுவு பண்ணிக் கொண்டான். யிது முதலான சேதிக ளெல்லாம் யெழுதிக் கொண்டு வாரேனென்று சொன்னதுக்கு, அப்படியே எழுதிக் கொண்டு வாரும் யென்றும், அதுக்கு மருந்து குண்டு சொலுதாதுகள் வகையிரா அனுப்பிவிப்போ மென்றும், அதுக்கு செஞ்சி விறுத்தாசலம் திருவீதி யெத்தனை தூரம் உண்டு, அந்த வயணமும் யெழுதிக் கொண்டு வரச் சொல்லிச் சொன்னார். அந்தப் படிக்கி யெழுதிக் கொண்டு வாரேனென்று சொன்ன பிற்பாடு, அனுப்பிவிச்சுக் (கொண்டு) அப்பால் பிடவை பார்க்கிற சாலையே போயி அங்கேயிருந்து வீட்டுக்குப் போனார். அப்பால் நான் பிடவைக் கட்டுப் போடுகிற மட்டுக்கும் யிருந்து நாற்பத் தொன்பது கட்டுப் போட்டான். பிற்பாடு முசே கில்லியார் முதலான சீனயோர்கள் அனுப்பிவிச்சுக் கொண்டு போன பிறகு, நானும் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

### *1755 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 21; பவ வருசம், மாசி மாசம், தேதி 13; சுக்குறவாரம்*[2]

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போறதுக்கு முன்னே

---

[1] கல்குறிச்சி (இன்றைய கள்ளக்குறிச்சி) என்று ஆங்கிலப்பதிப்பில் உள்ளது. அதுவே சரி தமிழ்ப்படியில் எழுதப்பட்டுள்ள பெயர் அபத்தம்.

[2] 1755 பிப்ரவரி 21 நாளையப் பதிவுகளைப் பிரதி செய்தவர் வேண்டுமென்றே நிறையக் குளறுபடி செய்துள்ளார். ஒரு பத்தியில் சில வரிகளை எழுதிவிட்டு, அதன் தொடர்ச்சியை மூன்று பக்கங்கள் அப்பால் வேறோர் இடத்தில் எழுதியுள்ளார். இப்படி மூன்று விடங்களில் செய்துள்ளதால், இந்நாளையப் பதிவினை ஒழுங்குபடுத்திச் சீரமைப்பது மிக்க சிரமமாய்ப் போய்விட்டது. புதுவை மைய அரசு ஆவணக் காப்பகத்தில் உள்ள பிரதியைப் பார்த்தால் இக்குறும்பு தெரியவரும்.

முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போயி, கச்சிராயன்பாளையம், மங்களூர், உலகநெல்லூர் வகையரா கல்லக்குரிச்சி தாலூக்குடனே சேர்ந்ததுகளிலே யிருக்கிற ட்டாணாக்களிலே யிருக்கப்பட்ட வகையிரா மயோர், சமேதார்களும் கூடிக் கொண்டு, தங்களுக்கு ஆறு மாசத்திய சம்பளம் முசே கொதே நாளையிலே குடுக்க வேண்டியதுக்குச் சிறிது பணம் குடுத்து, மொகத்துமா வரயில்லை யென்று (சொல்கிறார்கள் என்று சொன்னேன். அதனால்) தை மாசம் முதல் கொண்டு நம்முடைய கையில் (பிள்ளையின் வசம்) குத்தகை (கீழ்க் குத்தகை) வாங்கிக் கொண்டுப் போன பேரா சாமா ராயனை (Pera Sama Rao) கள்ளக்குறிச்சி (கல் குறிச்சி) தாகல் (பக்கமே) வராமல் (ட்டாணக்காரர்கள்) பண்ணிக் கொண்டு, அந்தப் (பிரதேசத்துக்) குடிகளை யெல்லாம் பிடிச்சுக் கொண்டு வந்து அடிக்குறது, (தானியத்தை அறுவடை பண்ணுகிறது), யிப்படி நானாவித மாயி செய்து கொண்(டார்கள்). யிப்போ யிறைவாசநெல்லூர் கோட்டையிலே யிருந்து கொண்டு கலாபம் பண்ணிக் கொண்டுயிருக்கிற மீர் அப்துல் ரயிமான் யென்கிறவன் ராசவட்டத்தின் பேரிலே அவர்களும் ஒன்றாய் (சேர்ந்து கொண்டு), அப்பால் மீர் சாயபும் அவ்விடத்துக்குப் போயி சமாதானமாயி (ஒப்பந்தம் செய்து கொண்டு) பீரங்கி சுட்டுச் சர்க்கரை பங்கிட்டு யேகமானார்கள் (ஒன்றாகிப் போனார்கள்). இனிமேல் யிவர்களும் அவர்களும் கூடிக்கொண்டு யேகமாயி, திருவீதி சீமை, விழுப்புரம் சீர்மை வகையிரா கொள்ளையிட யோசனை பண்ணிக் கொண்டு வந்துயிருக்கிற சங்கதி முதலானதுகளெல்லாம் யெழுதி வந்த ஓலை சங்கதி பிரான்சு யெழுத்திலே யெழுதி(னேன்.)

விறுத்தாசலத்து அமுல்தாரன் வெங்கிட்ட ராயன் எழுதின காகித (வயணம்:) அவ்விடத்திலே யிருக்கிற கொம்மாந்தாம் அண்டையிலே மயோரா யிருக்கிறவன் கடைக்காரரை யெல்லாம் தனக்கு கடைக்கு நாலு ஆறு ரூபாயி விழுக்காடு குடுக்கச் சொல்லி அடிக்கிறதும் ஒதைக்கிறதும் முதலான சோராவாரி நடத்துகு(றான்). (இப்படி) யெழுதின காகிதத்தையும் பிரான்சுப்படுத்தி அந்தக் காகிதம் ஒன்றும், யிறைவாசநெல்லூர் மீர் அப்துல் ரயிமான் பண்ணுகிற லூட்டி வகையிராக்களும், அவனைத் தொட்டு நம்முடைய தாலூக்குக்கு நாற்பதினாயிரம் ரூபா லுக்குசானும் (ரூபாய் நஷ்டம் வந்தது) யென்று யெழுதிக் குடுத்த பிராது பிரான்சுக் காகித மொன்றும், ஆக மூணு காகிதமும் குடுத்(தேன்); முசே தெரூஷே மதுராந்தகத்திலே யிருந்து கோன்சேலுக்கு அனுப்பின காகிதமும் குடுத்(தேன்). முன் கணக்கு றங்கப் பிள்ளை நாளையிலே கருங்குழி சீமை அமுல் பண்ணின வெங்காசி பண்டிதனை (முசே தெரூஷே) கூட்டி அனுப்பிவிச்சான். அவனும் யிப்போ வந்து சேந்தான் யென்று (சொன்னேன்).

முசபர் கான் மகன் (அப்போ) வந்து, முசபர் கான் (முசபர் கான்) பெண்சாதி போறதுக்கு வழிக்கு (அனுமதிச்) சீட்டு குடுத்ததையும் காண்பிச்(சான்). அந்தக் காகிதத்தை குடுக்கச் சொல்லி வாங்கிப் பார்த்து, அதின் கீழே தஸ்கத்துப் (கையெழுத்துப் போட்டு) பண்ணி, முசபர் கான் பெண்சாதியை மாத்திரம் போகச் சொல்லி யெழுதியிருக்குது யென்று சொன்னதுக்கு, அவர் பெண்சாதி பிறகே அவளுடன் போற மனுஷரும் தட்டுமுட்டு மாத்திரம் போகவேண்டிய தென்று சொன்னேன். அந்தப்படிக்கி முசபர் கான் குமாரன் பக்குர் மியானு (Baquir Miyan) டனேயும் திலாவறு கானு டனேயும் (Dilawar Khan) சொன்னேன்.

அப்பால் சேக்கு யிபறம் (இப்ரகீம்) மகன் வந்து, "நானும் யெங்கள் தாயார் வகையிராக்கள் யெல்லாரையும் அனுப்பிவிக்கச் சொல்லி முசே கொதே பேருக்கு முசே புசி காகித மெழுதி அனுப்பிவிச்சவுடனே, யெங்களை அழைப்பிச்சு போகச் சொல்லி வாசற்படிக்கும் சீட்டெழுதிக் குடுத்தார். நாங்கள் சான்சாமி பண்ணிக் கொண்டு போறதுக்கு யித்தனை நாள் பிடிச்சுது. யின்றைக்கு சாயங்காலம் பயணம் போறோமென்று உத்தாரம் கேட்டு," முசே கொதே சென்னப்பட்டணத்து வாசற்படிக்கு யெழுதிக் குடுத்த சீட்டைக் காண்பிச்சான். அதைப் பார்த்துக் கொண்டு அதின் கீழே கையெழுத்துப் போட்டு அவர்களையும் ஸ்ரீக்காகுளம், வேலூர், ராசமகேந்திரத்துக்குப்[1] போகச் சொல்லி உத்தாரம் குடுத்தார். முசபர் கான் குமாரனும் சேக்கு யிபறாம் வகையிராக்களும் அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்கள். அப்போ கோன்சேல் கூட்டத்தக்கதாக தற்கால சின்ன துரையாகிய முசே கில்லியார், முசே புறுக்கினூது (M. Bourquenoud), முசே பொலோ, முசே திலார்ஷு, முசே தெபோசேத்து வகையிராக்கள் வந்தார்கள். அப்போ மேல் வீட்டின் பேரிலே கொமிசெல் கூட்ட அவர்கள் போன சாடையைப் பார்த்துக் கொண்டு முசே பெடுத்தல்மீயும் யென்னைப் பார்த்து, "கோன்சேல் கூடப் போறோம், நீர் குடுத்த காகிதங்களையும் கொமுசேலுக்குக் (கோன்சேலுக்கு) காண்பிக்குறேன்," யென்று சொல்லிப்போட்டு, தாழ யிருந்தவர் மேல் வீட்டின் பேரிலே போனார்.

நான் யென் காசாக் கச்சேரியாகிய பூந்தோட்ட வீட்டை வந்து அங்கே யிருக்கச்சே, புதுசாய் காவலுத்தியோகத்துக்கு (ஹெட் கான்ஸ்டபில் போன்ற பதவி) வைத்த நல்லப்ப நயினார் யென்கிறவன் வந்து யென்னுடனே சொன்னது : "முசபர் கான் பெண்சாதி மாத்திரமல்லோ சீட்டிலே போறதுக்கு யெழுதியிருக்குது. அந்தம்மாளுடைய பிள்ளைகளிலே மூத்த பிள்ளை யிங்கே யிருக்கிறான்.

[1] இது தவறு. எல்லூரு, ராசமகேந்திரம், ஸ்ரீகாகுளம் என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளதே சரியானது.

கைக்குழந்தைகள் ரெண்டு பிள்ளைகள் கூடப் போகுது. விட்டு விடுகுறதா?" யென்று கேட்டேன். "அவர் (பெடுத்தல்மீ) விட்டு விடச்சொல்லிச் சொன்னாரென்று சொல்லி, அவர் முன்னே தானே வழிக்குச் சீட்டெழுதிக் கொடுத்தேன் யென்று சொல்லி, துரை உத்தாரம் யெப்படியோ அப்படி அப்படி செய்ய வேண்டிய," தென்று சொன்னேன். அந்த மட்டுக்கும் அவன் அனுப்பிவிச்சுக் கொண்டு போனான்.

அப்போ முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே போயிலோ யிவர்கள் மூணு பேரிருந்து கொண்டு, மத்தபேர் கோன்சேல் கலைஞ்சு போனார்களென்றும், உங்களை அழைக்கிறாரென்று சொபுதாறன் ஒருத்தனும் முசே பெடுத்தல்மீ சின்னதுரை யிடத்தில் சின்ன துபாசி ஒருத்தனும் வந்து அழைத்தார்கள். நான் போனவிடத்திலே மேல்வீட்டின் பேரிலே முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே போயிலோ மூணு பேர்களும் கோன்சேல் கூடியிருந்தார்கள். நான் போனவுடனே யெனக்கு நாற்காலி போட்டு கூட உளுக்காரச் சொல்லி முசே தெரூஷே மதுராந்தகத்திலே யிருந்து யெழுதின காகிதத்திலே, "வெங்காசி பண்டிதன் யென்கிறவன், முன் கணக்கு றங்கப் பிள்ளை நாளையிலே, யெளைச்சியப்ப முதலியுடனே கூட கருங்குழி சீமை அமுல் பண்ணினானாம். அவனங்கே தங்கி யிருக்கச்சே மனசுக்கு (அவன் பேரிலே) அலுப்பு (ஐயம்) தோத்திச்சுது. ஒரு வேளை இங்கிறேசுக்காறர் அமுல்தாருடனே கூடிக்கொண்டு வித்தியாசங்களாயி (விஷமமாய்) சொல்லப் போறான் யென்று (அவனை) அவ்விடத்துக்கு அனுப்பிவிச்சோம், என்று யெழுதினான். அந்த வெங்காசி பண்டிதன் என்கிறவன் யெங்கே," யென்று கேட்டார்கள். "முசே தெரூஷே யென் பேருக்கு ஒரு காகிதம் யெழுதி அனுப்பினார். அதிலேயும் நீங்கள் சொன்னபடிக்குத் தானே எழுதினார். முசே தெரூஷே வந்து பெகு சமத்தன், மெத்த கெட்டிக்காரன், யெதிர்க் காரியமும் பலாபலம் அறிந்து அதுக்குத் தக்க கிறிகையாய் நடத்தத் தக்க யோக்கியனென்று யென் புத்திக்கு தோணிச்சுது. ... (வெங்காசி பேரிலே) யென்ன சாடையினாலேயோ அசுப்பாயி தோணின மாத்திரத்திலே உபாயமாய் ஆலம்புரவிக்கு முசே துலிரோம் (M. Duliron) அண்டைக்கு (அவனை) அனுப்பி, அவர் நாலு சிப்பாயிகளைக் கூட்டி (அவனை) யிவ்விடத்துக்கு அனுப்(பினார்). அப்படிச் செய்து போட்டது, அந்த வெங்காசி பண்டிதன் கூட அங்கே யிரு(ந்தவர்கள்) கூட யிவன் புதுச்சேரிக்குப் போறானென்று யின்றைய காலத்தாலே மட்டுக்கும் அறியார்கள். அத்தனை சமத்தாய் நடப்பிச்சான். ஆனபடியினாலே யிங்கிறேசுக்காறர் வஞ்சனை(யை அவன் அறிஞ்சிருக்கிறது மட்டுமில்லாமல், அவன்) அல்லாமல் பின்னை ஒருத்தனால் நம்முடைய கும்பினீர் காரியம் (நிறுவகிக்க முடியாது)," யென்று சொன்(னேன்).

[1]முசே பெடுத்தல்மீக்கி முசே தெரூஷேயினுடைய கெட்டித்தனம் சொன்னது சகிக்கமாட்டாமல், "அவனுக்கு யென்ன தெரியும்? யிந்த வெங்காசி பண்டிதன் பேரிலே (ஏதாவது திட்டமான குற்றத்தைச் சொன்னாலன்றே) அவனைக் காவலிலே வைக்க வேணும்?" யென்று சொன்னார். அதுக்கு நான், "மெயிதான், யிந்த வெங்காசி பண்டிதன் முன்னாலே யிங்கிறேசுக்காறரிடம் யிருந்தான். அப்பால் யிவ்விடத்திலே சேர்ந்து யிருந்தான். யிப்போ யிரண்டு யிடத்திலேயும் யில்லை. ஆகையினால் இந்தச் சந்தி வேளையிலே யிவன் ஒரு வேளை அவர்களுடனே சேர்ந்து தப்பிதங்களை யெல்லாம் சொன்னால் அதனாலே காரியத்தாட்சி வருமே யென்று தூர ஆலோசனை பண்ணி, அங்கே யிருக்கிற பேர் ஆருக்கும் தெரியாத படிக்கி உபாயமாய் அவரை ஆலம்புரவிக்குப் போகச் சொல்லி, அங்கேயிருந்து யிங்கே வந்து சேரத்தக்கதாக பெகு சமத்தாய் (முசே தெரூஷே) அனுப்பிவிச்சார். நாமவனை யென்ன செய்குறோ மென்றும், அவ்விடத்துக் காரியம் பைசலானால் அப்பால் ஊருக்கு அனுப்பி விடுகுறோம் யென்றும்," சொன்னேன். அதுக்கு முசே பொர்லோவும் (போயிலோவும்) முசே கில்லியாரும் றங்கப்பன் சொல்லுகிறது தப்பிதமல்லவே யென்று சொன்னார்கள். அதுக்கு அவர் சம்மதியாயிருந்தார்.

அதின் பேரிலே மீர் சாயபு சேதி யென்ன வென்று கேட்டார். மகாதேவய்யன் மனுஷன் ட்டாணாவிலே யிருந்த பேரையும் சேர்த்துக் கொண்டு சீமை மேலே ரொம்ப சுலுமி சாஸ்தி பண்ணுகிறார்கள் யென்று சொன்னேன். அதுக்கு, "அவரவர்களுக்குச் சம்பளம் குடாததினாலே அவர்களும் கூடிக்கொண்டு விஷமம் பண்ணுகிறார்கள், அது தீர்க்க வேணுமென்று சொல்லி, மீர் சாயபு சேதிக்குச் சென்னப்பட்டணத்துக்குக் காகித மெழுதி, யிப்படி நம்முடைய மனுஷனா யிருந்தவன் மிகாடிச்சு நம்முடைய சீமையிலே சிலாறு (விஷமம்) பண்ணுகிறபடியினாலே, அவனண்டைக்குப் பவுன்சு அனுப்பி அவனைத் தெண்டிக்க வேண்டியிருக்கிறது யென்று எழுதி அனுப்பிவிச்சு, மறு காகிதம் அழைப்பிச்சுக் கொண்டு, அதன் பேரிலே அவனண்டைக்கு பவுன்சு அனுப்ப வேணு" மென்று சொன்னார். அதுக்கு நான், "யிங்கிறேசுக்காறர் யெல்லாம் கள்ளடியாயிருக்கு (நம்பத்தக்கவர் அல்ல). நாம் யிளச்சி நல்ல பேச்சிலே கொண்டு வந்தால் அவர்கள் ஒன்று விட்டு ஒன்று வியாச்சியங்களை யிட்டு யிப்போ போட்டுக் கொண்டு வருகிறார்கள். ஆகையாலே நாமும் அதுக்குத் தக்கனை அடியாயிக் கொண்டு வரவேணும்," யென்று சொன்னேன். அதுக்கு முசே தெரூஷே துடுக்காய் நடத்துகிறாரென்று சொன்னார். அதுக்கு நான் "அவர் அப்படி

---

[1] இவ்வரிகள் விளங்கிக் கொள்ள முடியாமல் குழப்பம் செய்து எழுதப்பட்டுள்ளன.

நடத்துகிறவரல்ல. அவர் அவர்கள் (இங்கிலீசுக்காரர்) போனவிடத்திலே, கூடப் போன கருங்குழி அமுல் முந்தி வெங்கிட்ட ரெட்டியாரை அவர்கள் வாசல்காரர் சந்திரீனோர் (sentries) உள்ளே விடமாட்டோமென்று அங்கியைப் பத்தி யிழுத்து அங்கியைக் கிழிச்சுப் (போட்டார்கள்). அதின் பேரிலே முசே தெரூஷே கோபிச்சுக் கொண்டு, இங்கிறேசுக்காரர் அனுப்பி வந்திருந்த ஒடின கப்பித்தானுக்கு,[1] யிப்படி நடத்தினால் யினிமேல் நாம் பொறுக்கிறதில்லை யென்று கண்டிப்பாய் சொல்லி அனுப்பிவிச்சார். முசே தெரூஷே (பேரில்) குத்தம் (இல்லை)" யென்று சொன்னேன்.

அதின் பேரிலே சீமைப் (குத்தகைப்) பணம் யிது வரையிலே யென்ன (செலுத்தினது), யினிமேல் யெப்போ பணம் செலுத்திவிப்பா யென்று கேட்டார்கள். அதுக்கு நான் சொன்னது, "யிது வரைக்கும் சென்னதுக்கு (செலுத்தினதுக்குக்) கணக்கு யிருக்கவே யிருக்குது. யினி மேல் செலுத்துகிறது மாசி மாசம் 30 தேதி (மார்ச் 30) 1,50,000 ரூபாயிக்கு மேல் செல்லும் (இருக்கும்); அபிறேல் மாசம் 30 யிலும் 1,50,000 ரூபாயிக்கு மேல் செல்லும் (இருக்கும்); அப்பால் நின்றது மாயு மாசம் சூன் மாசம் சூலை மாசம் ஆகொஸ்து மாசம் செப்த்தம்போறு மாசம் யிந்த மாதங்களிலே 30–ந் தேதியிலே நிரவின (மாதா மாதம்) துகைப்படிக்கி சரியாயி செல்லும்," யென்று சொன்னேன். அதுக்கு அவர் யிந்த ரெண்டு மாசமும் லக்ஷத்து அன்பதினாயிரம் ரூபாயிக்கு மேல் ரெண்டு லக்ஷம் ரூபாயி மட்டுக்கும் செலுத்த வேணுமென்று சொன்னார். நான் வஞ்சனை பண்ணுகிறேனா, சேகரமான மட்டுக்கும் செலுத்திவிக்கிறேன் யென்று சொன்னேன். அதுக்கு அவர் செப்த்தோம்பர் மாசம் வரையிலே சரியாயிப் பணம் செல்லுமா (முழுவதும் செலுத்திவிட முடியுமா) வென்று கேட்டார். சரிவரச் செலுத்திப் போடுகிறே னென்று சொல்லி, அதின் பேரிலே," கள்ளக்குறுச்சி[2] தாலுக்கு ரெண்டு லக்ஷம் சீமை; (அதிலே) மீர் சாயபு ட்டாணாக்காரரையும் சேகரிச்சுக் கொண்டு ரொம்ப கலீலு பண்ணிக் கொண்டிருக்கி(றான்); வேட்டவலம் பண்டாரத்தானும் கலீலு பண்ணுகிறான். அப்படி யிருக்குது. யிதல்லாமல் கருங்குழி தாலூக்கிலே நடக்கிற கலீலும் முசே தெரூஷே போயிருக்கிறதும் உங்களுக்கு தெரிஞ்சுயிருக்குதே. வந்தவாசி தாலூக்குலேயும் சிறிது கிராமம் கலீலாயி நடக்கிறது. யிப்படி அவ்விடத்திலே லெக்ஷம் ரூபாய் கிராமம் கலீலாயிருக்கிறது" யென்று சொன்னேன். அதுக்கு முசே பெடுத்தல்மீ, "அப்படி நடவாது. அங்கேயும் முசே தெரூஷே போயிருக்கிறார். மீர் சாயபு சங்கதிக்கும் யெழுதி அனுப்பி, அதுக்கேத்த தண்டனையும் நடத்தி கலீலு யில்லாமல்

---

[1] இவன் பிரெஞ்சுத் தரப்பை விட்டு இங்கிலீசுத் தரப்புக்கு ஓடினவனாய் இருக்கலாம்.

[2] கல்குறிச்சி என்று ஆங்கிலத்தில் உள்ளது.

பண்ணிவிக்குறோம்," யென்று சொன்னார். அதுக்கு நான், "நடக்கிற சங்கதி சொல்லவேணுமே, முன்னுக்கு நீ சொன்னியா வென்று கேழ்ப்பீர்களே, பணத்துடனே சேர்ந்த காரியமாச்சுதே, ஆகையாலே சொன்னேன்," என்று சொன்னேன். "தேவையில்லை, கலீலு யில்லாமல் பண்ணிவிடுகுறோம்," யென்று சொன்னார்கள்.

அதன் பேரிலே கோன்சேலியோர் முசே கில்லியார், முசே பொயிலோ (உடனிருக்க), "கோட்டைக்குள்ளே கண்டவன் யெல்லாம் பல்லக்கு யேறிக் கொண்டு வருகி(றான்). (இனி ஆரார் வரலாம் என்றால்) தமிழர்களுக்குள்ளே கும்பினீர் உத்தியோகம் பார்க்கிறவர்களும், குடுத்தியோர், துலுக்கருக்குள்ளே சந்தா சாயபு மகன், தக்கா சாயபு மகன், அல்லிநக்கி சாயபு யிவர்கள் மூணு பேருக்கும் உத்தரவே அல்லாமல் பின்னை ஒருவரையும் உள்ளேவிடத் தேவையில்லை," யென்று மயோரை அழைத்து உத்தாரம் குடுத்தார். அப்போ நான், "நம்முடைய (தம்பி) குமாரன் அப்பாவுக்குத் தாங்கள் தயவு பண்ணி அறிக்கை குடுத்தீர்களே, அவனுக்கும் கூட உத்தாரம் குடுக்க வேணு," மென்று கேட்டதுக்கு, முசே கில்லியாரும் முசே பொலோவும் சம்மதியில்லாமல் குடுக்கப் போகாதென்று சொன்னார்கள். அதுக்கு முசே பெடுத்தல்மீ யென்னைப் பார்த்து, "யிப்போ யிவர்களுடனே போராட வேண்டாம், யின்னம் யொரு வேளை ஆகட்டும். நான் கேட்டு உத்தாரம் வாங்கித் தருகிறேன்," யென்று சொன்னார். அதின் பேரிலே முசே துப்பிளேயிக்சு நாள் சேதிகளும் முசே கொதே அவர்கள் நாள் சேதிகளும் விஸ்தாரமாயி பேசிக்கொண்டிருந்தோம். யிதுகளெல்லாம் முசே பெடுத்தல்மீ யவர்கள், முசே பொயிலோ, முசே கில்லியார், முசே கொதே அவர்கள் சக்கிறத்தார் (செயலர்) முசே ஷெவரோ, நான் ஆக அஞ்சு பேரும் யிருந்து பேசிக் கொண்டிருந்து, அதின் பேரிலே அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

### *1755 வருசம், பிப்றவரி மாசம், தேதி 22; பவ வருசம், மாசி மாசம், தேதி 14; சனிவாரம்*

இத்தனாள் காலமே முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனவிடத்திலே, முசே பெடுத்தல்மீ யென்னைத் தனியே அழைத்துக் கொண்டு போய் மீர் அப்துல் றயிமான் என்கிறவனும் மீர் சாயபு யென்கிறவனும் ஆர் யென்று கேட்டார். மீர் அப்துல் றயிமான் யென்கிறவ(னின் உண்மையான) பேர் கோமீர் சாயபு (Qamar Sahib) யென்று சொன்னேன். அதுக்கு அவர் மீர் அப்துல் றயிமான் சேதிக்கு யென்ன நடத்தி வைக்க வேண்டியது யென்று கேட்டார். அதுக்கு நான் ட்டாணாவிலே வச்சயிருக்கிற பேர்கள் தங்களுக்கு ஆறுமாதம் சம்பளம் செல்லயில்லை (வரவில்லை) யென்று மீர் சாயபுடனே கூடி, சீமை

யெல்லாம் வெகுவாயிக் கொள்ளை யடிக்கிறார்கள். யிதுக்கு முன்னூறு பேர் சொல்தாதுகளும் யெழு நூறு பேர் பாறுக்காரர்களும் அன்பது பேர் குதிரைக்காரரும், அதுக்குத் தக்க மருந்து குண்டு பீரங்கி முதலான சாமானும் அனுப்பி விச்சால், அங்கே (உள்ள) மங்களூர், காங்குடயாயன் முதலான பாளையக்கா(ரையும்) சேரப் பண்ணி மீர் சாயபுவை அடிச்சால் யெல்லாருக்கும் பயம் தோணிப்போம். அவன் கிட்ட யிருக்கிற பேரும் யிங்கே யிருந்து பவுன்சு பிறப்பட்டால் போதும், நாங்களும் வந்து கூடுகிறோம் யென்று பையகாம் (செய்தி) அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள்," யென்று சொன்னேன். அதுக்கு முசே பெடுதல்தல்மீ அவர்கள் சொன்னது, "யிவன் நம்முடய மனுஷனாயிருந்தவன், யிப்போ சிலாறு பண்ணுகுறான். ஆகையால் அவன் பேரிலே சண்டைக்கு பவுன்சு அனுப்பிவிக்குறோமென்று யிங்கிறேசுக்காறருக்கு யெழுதி அனுப்பிப் போட்டு நாம் யிவன் பேரிலே தண்டு அனுப்பவேணும்; யில்லாவிட்டால் இங்கிறேசுக்காறர் தங்கள் மனுஷன் யென்று சொன்னாலும் சொல்லுவார்கள். நாமெழுதி அனுப்பிச் செய்தால் அவர்கள் தங்கள் மனுஷனென்று சொல்ல ஞாயமில்லை," யென்று சொல்லி, "யெறவாசல்லூருக்கு பவுன்சு அனுப்புகுறதுக்கு வழி நிதானமும், அங்கங்கே போய் யெறங்குகிற தாவும், மார்க்கத்திலேயிருக்கிற கிராமங்களும் யெழுதி யிருக்குதா?" யென்று கேட்டார். "யெழுதி யிருக்கயில்லை, யினி மேல் போய் யெழுதி பிரான்சுப் படுத்திக் கொண்டு வருகிறே" னென்று சொன்னேன். "ஆனால் யிங்கிறேசுக்காரர்களுக்கு நேத்து நீர் எழுதிக் கொண்டு வந்து குடுத்தபடிக்கிக் கடுதாசி யெழுதியிருக்குது. அது நிமித்தியம் நான் கோட்டைக்குப் போய் கோன்சேல் கூடி யின்னம் யெழுத வேணும் நீயும் கோட்டைக்கு வா வென்று சொல்லி ....

### *1755 வருசம், பிப்ரவரி மாசம், தேதி 23; பவ வருசம், மாசி மாசம், தேதி 15; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே வீட்டிலேயிருந்து பிறப்பட்டு முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனவிடத்திலே அவருடனே நேத்து சாயங்காலம் நந்திராசா அனுப்பின சிரிகைப் பையிலே போட்ட காகிதம் முசே கொதே பேருக்கு வந்தது. அதை யிப்போ பிரான்சிலே யெழுதிக் கொண்டு வரப் போறேன் யென்று சொன்னதுக்கு, அதிலே யென்ன எழுதி யிருக்குதென்று கேட்டார்.

(அது வயணம்) "நாம் மயிசூரிலே யிருந்து கொண்டிருக்கச்சே மமுதல்லி கான் தங்களுக்குத் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை குடுக்குறோம் யென்று ஆணைச் சத்தியம் (பண்ணியும்), லிகிதப்படிக்கிக் குத்திப்பண்ணி (எழுதிக் கொடுத்தும், கை போட்டுக்) குடுத்து, தன் காரியம்

அனுகூலமான பிறகு நமக்குச் சொன்ன உடம்படிக்கை தப்பி, நமக்குக் கோடி ரூபா சிலவானது சம்மதி பண்ணுகுறோ மென்று சம்மதி பேசிக்கொண்டிருந்தான். அப்படி யிருக்கையிலே முசே துப்பிளேயிக்சு அவர்கள் கோன்சேல் சம்மதியாயி, பரவசக் காகிதங்களை யெழுதி அனுப்பிவிச்சு உமக்குத் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை நாம் வாங்கி தருகுறோம் யென்று யெழுதி அனுப்பினார். அதன் பேரிலே நாம், பிரான்சுக்காரர் சொன்னால் தப்பத்தக்கதில்லை யென்று நம்பி, மமுதல்லி கான் சொல்லுகுற உடம்படிக்கையையும் தள்ளி, ரெண்டு வருஷ காலம் நம்முடைய சிப்பந்தியும் நடத்திக் கொண்டு, பிரான்சுக்காறருட தளத்துக்கும் சிலவு நடத்திக் கொண்டு வந்தோம். அப்படி யிருக்கையிலே, சீரங்கப்பட்டணத்திலே யிருந்து நம்மை வந்து விடச் சொல்லி யெழுதி வந்தது. அந்த சேதி முசே துப்பிளேயிக்சு அவர்களுக்கு யெழுதி அனுப்பினோம். அதுக்கு அவர், 'நீர் போக வேண்டாம் யின்னம். பத்து நாளையிலே நம்முடைய சீமையிலே யிருந்து யேழெட்டுக் கப்பலும் அதிலே வெகு சனங்களும் வருகுறார்கள்; வந்த உடனே அதுக்குத் தக்கபடி விசேஷமாயி குமுக்கு அனுப்பிவிச்சு திரிச்சிராப்பள்ளியை வாங்கித் தருகுறோம்,' யென்று எழுதி அனுப்பினார். அப்படி யிருக்கையிலே அந்தக் கப்பலோடெ முசே கொதே அவர்கள் யெசமானாயி வந்தார். அவர் வந்து நமக்கு நம்பிக்கையாயிக் காகிதமெழுதினார். உடனே முன்னிருந்த கொம்மாந்தாம் மெயின்வீல் (M. Mainville) என்கிறவரை அழைப்பிச்சுக் கொண்டு முசே மேசென் (M. Maissin) என்கிறவரை அனுப்பினர். அவ்வளவிலே வெகுகாரியம் கெட்டுப்போச்சுது. யிதிலே தங்கள் காரியம் ஆக வேண்டி மூணு மாதம் கெடு பண்ணி சண்டை யில்லாமலிருக்கச் சொல்லி யெழுதி அனுப்பினார்கள். அதுக்கு நாம் சண்டையில்லாத மட்டுக்கும் நம்முடைய சீமைக்குப் போரோ மென்று யெழுதினோம். அதுக்கு முசே கொதே அவர்கள் சீமைக்குப் போக வேண்டாம், சீரங்கத்திலே தானே யிரும், யிந்த மூணு மாசம் கழிச்சு உடனே விசேஷமாயி வந்திருக்கிற தளத்தையும் அனுப்பிவிச்சு, உமக்கு திரிச்சிராப்பள்ளி வாங்கித் தருகிறோம் யென்று எழுதி அனுப்பினார். அதை நம்பி நாமிருந்தோம், யில்லாவிட்டால் நாங்கள் யிருக்கத் தக்கதில்லை. யிப்பால் பதினெட்டு மாதம் சண்டை யில்லை யென்று தீந்து, யிந்த மூணு மாதம் தீந்து யிருந்த போது நம்முடய கையிலே யிருந்த தெக்ஷண ராச்சியமும் நடுமண்டலமும் மமுதல்லி கானும் யிங்கிறேசுக்காறரும் கட்டிக்கொண்டார்கள். அதுக்காகவும் நம்முட சேந்த தலங்களையாகிலும் அனுப்பிவிச்சு, சீமை வாங்கச் சொல்லியாகிலும் உத்தாரம் அனுப்பாமல் போனீர்கள். அதல்லாமல் நபாபு சலாபத்து சங்கு அவர்களும் முசே புசி அவர்களும் கிருஷ்ணா தீரத்துக்கு யிப்பாலே வந்ததும் மயிசூர் மேலே

பேசுக்கஷுப் பணம் நிமித்தியம் வருகிறார்களென்று சேதி வந்தது. நாமானால் தங்களை நம்பி பேசுக்கஷு பணமெல்லாம் தண்டு சிலவிலே சிலவு பண்ணியிருக்குறோம். ஆகையினாலே அவர்களுக்கு நாம் யெங்கேயிருந்து பணக்கு குடுக்கிறது? அல்ல வென்றால், நமக்கு திரிச்சிராப்பள்ளி கில்லா (கோட்டை) வாங்கித் தந்தால் வர்த்தகருக்கு சீட்டு நாட்டு யெழுதிக் குடுத்துக் கடனுடன் வாங்கியாகிலும் பேசுக்கஷு பணம் சம்மதி பண்ணுகுறோம். அல்லவென்றால், மழுதல்லி கான் கிட்ட (நீங்கள் எழுதி) வாங்கி சிலவான பணம் வாங்கித் தந்தா(லும்) குடுக்கிறோம். யிந்த சிலவான பணத்துடனே சேர்ந்த பாரம் கொவற்ண தோர் பேரிலே ஆனபடியினாலே, முசே புசி அவர்கள் நம்முடைய சீமையிலே வந்து கலாபம் பண்ணாதபடிக்கும் சலாபத்து சங்கு அவர்கள் வராதபடிக்கும் யெப்படி யெழுதி அனுப்ப வேணுமோ அந்தப்படிக்கி யெழுதி அனுப்ப வேண்டியதென்று," யிப்படி யெல்லாம் யெழுதி அனுப்பிக்கிறாரென்று சொன்னேன். அதுக்கு நல்லது, காகிதம் பார்த்துக் கொள்ளுவோம். "பாறுக்காரர் கணக்கு வழக்கு யிருக்குதே, யிது நீரும் நாமும் முதல் தேதி வாக்கிலே கூடயிருந்து தீத்துப் போட வேணு," மென்று சொன்னார். "நல்லது, யெப்படிச் சொன்னீர்களோ அப்படி கேழ்க்குறே," னென்று சொன்னேன்.

### *1755 வருசம், பிப்ரவரி மாசம், தேதி 28; பவ வருசம், மாசி மாசம், தேதி 20; சுக்கிறவாரம்*

இத்தை நாள் காலத்தாலே முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே பொயிலோ அழைப்பிச்சு நந்திராசாவுக்கு ஒரு கடுதாசி யெழுதி அனுப்பச் சொல்லி பிரான்சு யெழுத்திலே ஒரு காகிதத்திலே யெழுதிக் குடுத்தார்கள். அப்போ முசே கொதே சக்கிறத்தேர் முசே ஷெவிரோ யென்கிறவன் கூடத் தானே யிருந்தான். அப்போ முசே லெபோம் அண்டைக்குப் போய் அதைத் தெலுங்கிலே யெழுதிவிச்சு, அதின் பேரிலே முசே பெடுத்தல்மீ முத்திரை போட்டுக் குடுத்ததை சரிகைப் பையிலே போட்டு, முசே தெசொசேவுக்கு யெழுதிக் கொடுத்தக் காகிதத்தையும் ஒட்டகைக்காரன் கையிலே குடுத்து அனுப்பிவிச்சோம்.

நந்திராசாவுக்கு யெழுதின காகிதத்திலே யிருந்த வயணம் : முசே தெசொசே எனக்கு யெழுதின காகிதத்திலே "உம்மைத் துறையூரின் பேரிலே பவுன்சு அனுப்பிவிச்சு சண்டை பண்ண வேண்டா மென்று சொல்லக் கேளாமல் பவுன்சு அனுப்பிவிச்சீராம். எங்களுக்குள்ளே ஆயுத மெடுத்துச் சண்டை பண்ணக் கவையில்லை யென்று கராறு பண்ணிக் கொண்டு சமாதானமாயி யிருக்கிற சேதி அறிந்திருந்தும், துறையூரார் நமக்கு பேஷ்கஷு குடுத்து நம்மைச் சேர்ந்திருக்க, யிப்படி நடத்துகிறது ஆச்சரியமா யிருக்குது. ஆனாலும் யிந்தக் காகிதம் கண்ட

பிற்பாடு ஆகிலும் உம்முடைய பவுன்சுவையும் அழைப்பிச்சுக் கொண்டு, நீர் எங்களுடனே சினேகமா யிருப்பீரென்று நம்பிக்கையா யிருக்கிறோம். அப்படி நீர் செய்யாமல் போனால் உமக்குச் சத்துருவாயி நாங்கள் யிருப்போமென்று அறிய வேண்டியது. உம்மை ஆப்த்த சினேகிதக்காரர் யென்று முசே தெசொசே(வுக்கும்) உம்முட கூட அனுகூலமாயிருந்து நாங்கள் பண்ணிக் கொண்ட சமாதானத் தவணையின் பேரிலே திஷ்ட்டி வைத்து அனுகூலமாயி ஒருத்தருக் கொருத்தர் நடந்து கொள்ளச் சொல்லி யெழுதினோம். அந்தப்படிக்கி நடந்து கொள்ள வேண்டிய," தென்று யெழுதியிருந்தது.

அப்பால் முசே பெடுத்தல்மீ திருவீதி கொமாந்தாம் முசே யிவேர் (M. Yyere?) அனுப்பிவிச்சானென்று ஒரு ஓலை குடுத்து படிச்சுப் பார்த்தவிடத்திலே, அதிலே சாத்துக்கடை முராரி ராயன் கொள்ளையிட்டதும், அப்துல் வகாபு கான் மனுஷர் வந்து ஆக்கிறமிச்சுக் கொண்டதும், அப்பால் கடப்பை நபாபு பெத்த பவுன்சு கூட்டிக்கொண்டு கந்தனூர், சாவனூர், பங்காபுரம் பாளையக்காரரையும் கூட்டிக்கொண்டு சிதம்பரம் வாங்க வருகுறார்க ளென்றும், அப்பால் சலாபத்து சங்கு றகோசி பூசலா, பத்தே சிங்குடனே சண்டை போட்ட விடத்திலே மராட்டியர் முறிஞ்சு ஓடிப்போய் விட்டார்கள் யென்றும், அதிலே ரெண்டாயிரம் குதிரையும் பிடிச்சுக் கொண்டு அஞ்சு பீரங்கியும் யெடுப்பிச்சுக் கொண்டு அயிதராபாது சேந்தானென்றும், நானாவும் முசபர் கானும் நாற்பதினாயிரம் குதிரையும் அறுபதினாயிரம் வலியரும் (வலிய காலாட்களுடன்) கற்னாட்டகத்துக்கு வருகுறாரென்றும், நறசிங்க ராயனும் அன்னூறு குதிரையும் அன்னூறு வலியரும் திருப்பதி கட்ட கடப்பை நவாபு, கந்தனூர் நவாபு பேருக்குக் காகிதங்கள் வாங்கிக் கொண்டு வந்து குடுத்து திருப்பதிக்குப் போனானென்றும், முக்கால் வாசிப் பொய்யும், கால் வாசி மெய்யும் கேட்ட சேதியும் யெழுதி வந்த ஓலை மத்தலப்பைப் படிச்சுச் சொன்னதுக்கு, யிந்த ஓலை உன் கையிலே யிருக்கட்டும் யென்று சொன்னார். அந்த ஓலை மேசை அறையிலே[1] வைத்திருக்குது. அவர் கையில் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போனேன்.

மயிசூர் ஸ்தானாபதி வெங்கிட்டநாரணப்பய்யருக்குச் சொல்லி அனுப்பிவிச்சு, அவர் ராயசம் சேஷப்பனை அழைப்பிச்சு, நந்திராசாவுக்குக் காகிதம் யெழுதின சங்கதியும் சொல்லி, துடுக்காய்க் காரியம் நடத்தினால் அதைத் தொட்டு விபரீதமாயி வருமென்று நந்திராசாவுக்குத் தெரிய எழுதி அனுப்பச் சொன்னேன். நான் காகித மெழுது கிறதுக்கு ராயசம் வெங்கய்யர் கும்பகோணம் போனதினாலே தத்காலம் காகிதம் நந்திராசாவுக்கு யெழுதயில்லை.

---

[1] கவயம் என்றும் அவஷி என்றும் பிரதிகளில் உள்ளது.

# மார்ச் 1755

***1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 1; பவ வருசம், மாசி மாசம், தேதி 21; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே யேழு மணிக்குப் பிறப்பட்டு முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போய் கபுறு விசாரித்து வந்தவிடத்திலே கருங்குழி சீமை வகையிரா யிங்கிறேசுக்காறர்களும் நம்முடையவர்களும் தகராறு யிருக்கிற கிராமங்களைப் (பார்த்து) தீர்க்கப் போயிருக்கிற கொம்முசேர் முசே தெரூஷே யென்கிறவன் மதுராந்தகத்திலே யிருந்து வந்து பேசிக் கொண்டிருக்கிறான் யென்று சொன்னார்கள். அதின் பேரிலே என் காசாக் கச்சேரியே வந்து பின்னையும் விசாரித்த விடத்திலே, முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே பொயிலோ, முசே தெரூஷே நாலு பேரும் கோன்சேல் கூடி பனிரெண்டு மணி அடிச்சு அரை மணி மட்டுக்கும் பேசியிருந்ததாய் சேதி கேழ்விப்பட்டு, அந்த மட்டுக்கும் பனிரெண்டு மணி யானபடியினாலே வீட்டுக்குப் போனேன்.

பகலைக்கு மேலாக அஞ்சரை மணிக்கு முசே பெடுத்தல்மீ யென் பேருக்கு முப்பதினாயிரம் ரூபாய் சீமா குத்தகை (வந்திருக்கிற) பணத்தில் குடுக்கச் சொல்லி யெழுதி, சோபுதாரன் கையிலே குடுத்து அனுப்பி பணம் வாங்கி வரச் சொன்னாரென்று ரெசீது கொண்டு வந்து குடுத்தான்; அல்லாமல் நந்திராசா வண்டையிலே யிருந்து ஒட்டகச் சுவார் கொண்டு வந்து குடுத்த காகிதங்கள் போட்ட பைகள் ரெண்டு குடுத்து வரச் சொன்னாரென்று சொன்னான். பணம் யிப்போ சத்தியாயில்லை, மூணு நாலு நாளையிலே பணம் சேகரம் பண்ணிக் கொண்டு வந்து குடுத்து ரெசீதை வாங்கிக் கொள்ளுகிறேன் என்று வந்த சோபுதாரனுக்குச் சொல்லி ரெசீதையும் குடுத்தனுப்பிப் போட்(டேன்). அப்பால் நந்திராசா அனுப்பின ரெண்டு பையையும் பார்க்க, ஒரு பைக் காகிதம் முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே பொயிலோ மூணு பேர் வைத்து மேல் விலாச மெழுதி யிருந்தது. ஒரு பைக் காகிதம் யென் பேருக்கு எழுதி யிருந்தது. முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே பொயிலோ பேருக்கு யெழுதின காகிதம் போட்ட பையை அவிழ்த்(தேன்); அதிலே வினாயகப் பிள்ளை மனுஷன் ராமலிங்கம் பிள்ளை பேரில் வர வேண்டியதாய் கன்னடியப் பேச்சிலே யெழுதின கணக்கு சாப்பிதா ஒன்றுயிருந்தது. அது யென் காகிதத்திலே யிருக்க வேண்டியது, யெப்படி பிசகாய் வந்துதோ அறியவேண்டியது. முசே பெடுத்தல்மீ வகையிராக்கள் பேருக்கு நந்திராசா யெழுதின காகிதத்திலே, "முசே தெசொசேயி கொம்மாந்தா னென்கிறவனை மாத்திப் போட்டு வேறே கொமாந்தானை

அனுப்பச் சொல்லியும், அனுப்பாவிட்டால் நாம் சீரங்கத்திலே யிராமல் போரோமென்று சொன்னதாகக் கேழ்விப்பட்(டேன்). அப்படி நான் யெழுதினதுமில்லை, என் உத்திரவு யில்லாமல் வெங்கட்டநாரணப்பய்யர் சொல்லத் தக்கதுமில்லை. ஆனபடியினாலே (இது) நடந்திராது. ஒரு வேளை (புதிய) கொம்மாந்தாமை அனுப்பியிருந்தால், (அவரை) மறுபடி அழைப்பிச்சுக் கொண்டு, முசே தெசோசெ கொம்மாந்தாமைத் தானே யிவ்விடத்திலே யிருக்கத் தக்கதாக யெழுதி அனுப்ப வேண்டிய" தென்றும், அப்பால் உபசாரமாகவும் யெழுதியிருந்தது. யிதை நாளைய தினம் பிரான்சுப் படுத்திக் கொண்டு போயிக் குடுப்போ மென்று யோசனை பண்ணி வந்தேன். அப்பால் வீடுவிட்டுப் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரி வந்த வுடனே முசே பெடுத்தல்மீ துபாசி ராமன் யென்கிறவன் முசே பெடுத்தல்மீ யினுடைய முப்பதினாயிரம் ரூபா ரெசீதை வந்து பூந்தோட்டக் கச்சேரியிலே மறுபடி கொண்டு வந்து குடுத்து, "சோபுதாரன் கொளறுகிறான். மறுபடி ரெசீதை யேன் குடுத்தனுப்பி விட்டீர்கள்? மூணு நாளு நாளையிலே பணம் ஒத்திக்கை பண்ணிக் (வசூலித்து) குடுத்து, கொஞ்சம் கொஞ்சமாயி குடுத்து அனுப்புங்கோள்; நாளைக்குப் பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் அனுப்பப் பாரும்," என்று வந்து சொன்னான். "நல்லது, என்னண்டைக்கு ஒத்திக்கையான பணத்தை அனுப்புறே," னென்று சொன்னதின் பேரிலே, அனுப்பிவியுங்கோ ளென்று சொல்லிப்போட்டு, முசே பெடுத்தல்மீ கையெழுத்துப் போட்ட முப்பதினாயிரம் ரூபாயி ரெசீதை யென் கையிலே குடுத்துப்போட்டு போகச்சே, நான், "யிது சிப்பாயிகளுக்குக் குடுக்கிற சம்மதியல்லவா; முசே பெடுத்தல்மீ யென்னுடனே (இப்படித்தான்) சொல்லி யிருந்தபடியினாலே, கொஞ்சம் கொஞ்சமாயி அவரவருக்குக் குடுக்கலா," மென்று சொல்லி, ரெசீதை வாங்கிக் கொண்டு போகச் சொன்னேன்.

அவன் போய் விட்ட பிறகு நந்திராசா காகிதம் பிரான்சுப் படுத்தி விப்போமென்றால் நேரமில்லை. ராத்திரி ஆச்சுதே, நாளைய தினம் ஆகுதென்று முசே லெபோம் சொன்னானென்று மதனாந்த பண்டிதன் வந்து சொன்னான். நந்திராசா காகிதத்தை மதனாந்த பண்டிதன் கையில் குடுத்து காலமே யெழுதி வரச் சொன்னேன்.

யென் காகிதத்திலே நந்திராசா மேலே யெழுதப்பட்ட சேதி யெழுதாமல், முசே மேசென் பேரிலே தமக்குப் பணம் வரவேண்டியதாயும், சிறிது நகைகள் வர வேண்டியதாகவும், அதை வாங்கி அனுப்பச் சொல்லியும், (அவ்விஷயம்) தியாகய்யனுக்கும் தெரியு மென்றும் யிது முதலான சேதி யெழுதி யிருந்தது.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : தேவனாம்பட்டணம் கோட்டையிலே சந்தா சாயபைத் தலை வெட்டின போது, ஆங்கிரச

வருசத்திலே (1752), றங்கோ பண்டிதனையும் சொலுதாதுகளுடனே கூடக் கொண்டு வந்து, காவல் வைத்திருந்த(னர்); சொலுதாதுகளை மாத்திரம் மாத்திக் கொண்ட போது றங்கோ பண்டிதனையும் விட்டு விடச் சொல்லி முசே கொதே மேஸ்தர் சாந்தருசு பேருக்கு யெழுதியிருந்ததுக்கு, யித்தனாள் மேஸ்தர் பிக்கட்டு—சென்னபட்டணம் கோவற்ணதோர்—காகிதம் தேவனாம்பட்டணம் டிப்புட்டி கெவர்னர் மேஸ்தர் ஸ்டார்க்கு பேருக்கும், யிவ்விடத்துக்குக் கோன்சே (லுக்கும்) கூட வந்ததாய்ச் சேதி சொன்னார்கள்.

மத்தியானத்துக்கு மேலே றெங்கோ பண்டிதன் மருமகன் வெங்கட்டராயன் யென்கிறவனும் வந்து மேலே யெழுதப்பட்ட சேதி சொன்னான்.

*1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 5; பவ வருசம், மாசி மாசம், தேதி 25; புதவாரம்*

இத்தனாள் காலமே யெனக்கு உடம்பு ஆயாசத்தினாலே நான் வெளியே போகவில்லை. வீட்டிலேயே யிருந்து கொண்டு கும்பினீர் வர்த்தகர் பிடவைக்கட்டுப் போடுகிற விடத்துக்கு அப்பாவுவையும் குருவப்பச் செட்டியையும் கூட்டி அனுப்பி(னேன்).

பிற்பாடு இப்படி யிருக்கையிலே, கஸ்தூரி றெங்கய்யன் துறையூர் வக்கீலும், குலசேகரம் வெங்கட்டநாரணப்பய்யனும், துறையூரிலிருந்து தளவாய் வரதராச ரெட்டியா(ரிடமிருந்து) ஓலை வந்தது யென்று கொண்டு வந்து வாசித்தார்கள். அதிலே யெழுதி யிருந்த வயணம் யென்ன வென்றால், "நாம் ஆதி ஆரம்பம் கும்பினியாருக்கு வெகு பணம் குடுத்து, அவர்கள் ஆசராவிலே (ஆதரவிலே) நாமிருக்கிறோம் யென்று நந்திராசா துவேஷிச்சு, மேற்கே யிருக்கிற கற்னாக்களை (ராணுவத்தை) யெல்லாம் கூட்டுகிறான். யெந்த வேளையிலே மோசம் நடக்குமோ யென்றும் பத்தும் பத்தாயி (உள்ளதை) எழுதினோம். அந்தப்படிக்கே நந்திராசா ராம ரெட்டிக்கும் வரதராச ரெட்டிக்கும் (உதவியாய்) மூவாயிரம் குதிரையும் அய்யாயிரம் பாறுகளும் அய்யாயிரம் கெடி (கோட்டை) ராணுவமும் கூட்டி அனுப்பினார். கொமாந்தானவர்கள் யிதுக்குச் சம்மதிக்கவில்லை. அவர் வார்த்தையைத் தள்ளிப்போட்டுத் தளம் வருகிறதென்று கேழ்விப்பட்டுது. அந்த தளம் 12 தேதி பிறப்பட்டு 13 தேதி நாலு முகத்திலேயும் காண்பிச்சுக் கொண்டு 18 தேதி வரைக்கும் கோரமான சண்டைகள் நடந்து, அவர்களிலேயும் நம்முலேயும் பத்து பேர் விசேஷிச்சுக் காயமாயி, காயங்களுடனே சண்டை நடக்கிறதிலே, வரதா ரெட்டி வஞ்சனையாயி கள்ள வழியிலே பெகு தளத்தைக் கூட்டி வந்து (நம்) ஊரிலே விட்டுவிட்டான். யினி மேல் நிறுவாகமில்லை யென்று தொரையும் நாமும்

குஞ்சு குழந்தைகளுடனே கூட 16 தேதியிலே பிறப்பட்டு அரியலூர் வந்து சேர்ந்தோம். அரமணை, பட்டணம் யெல்லாம் கொள்ளை யிட்டார்கள். பத்து பனிரெண்டு லக்ஷம் வரைக்கும் நந்திராசா கிட்ட அகப்பட்டுப் போச்சுது. (ராஜஸ்ரீ) பிள்ளை யவர்கள் சகலத்துக்கும் யெசமானனாயி அவ்விடத்திலே யிருக்கிற (தினாலே), நம்முட பேரிலே அவர்களுக்கு ரொம்ப பிரீதி யிருக்கிறதினாலே, கும்பினீர் தயவு யிருக்கிறதினாலே, ஸ்ரீ பிள்ளை அவர்களுக்கு யிந்தச் சங்கதி யெல்லாம் அறிவிச்சு ஆதீனம் எப்போதையும் போலே குதிரப் பண்ணி, யெங்க(ளுக்குத்) தெரிவிக்க வச்சு, தங்களை சுவாதீனம் பண்ணிக் கொண்டு, சகல கீர்த்தி பிறதிஷ்டையும் அடையத் தக்கன பாரம் அவர்களது தான். ஆன படியினாலே ராத்திரி பகல் அவர்கள் அண்டையிலே காத்திருந்து யிந்த வேளையிலே சிறுனெத்தர்ாம் பண்ணி (விவரிச்சுச் சொல்லி) சகல கீற்த்திப் பிறதிஷ்டையும் அவர்கள் அடையத் தக்கதாயி தாம் நன்றாய் சொல்ல வேண்டியது. (முன்பு) ஆனை குதிரை (விஷயத்திலே) (அவர் அவற்றைக்) கூட்டி அனுப்பி பிறதிஷ்டை வர வேணுமென்று நடப்பிச்சார்கள். யிந்த வேளைக்கு தெய்வம் அப்படிப் பண்ணினப் படியினாலே நம்முடைய ஸ்ரீரெங்கனாயகர் அவர்களா(ய் ஸ்ரீ பிள்ளை இருந்து) யெல்லாம் அனுகூலம் பண்ணிக் குடுக்கிற போது செவ்வையாயித் தானே நடக்கிறது. யிப்போது காரியம் தப்பி வந்த வேளையானதினாலே அவர்கள் சகாயமாயி இப்போ நாம் குடுத்த ரூபா வாங்கி சேஷாசலம் வசத்திலே குடுத்து அனுப்பிவிச்சால் ரொம்ப உபகாரமா யிருக்கும். யிந்த வேளையிலே சகாய சம்பத்தி (உபகாரமாய்) நடத்திவிக்க வேண்டிய தென்று ராஜஸ்ரீ பிள்ளை அவர்களுக்குச் சொல்லவும்," யென்று யெழுதி வந்தது.

### *1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 6; பவ வருசம், மாசி மாசம், தேதி 26; குருவாரம்*

இத்தனாள் காலமே யெனக்கு சரீரம் ஆயாச மாயிருந்த படியினாலே வெளியே போகாமல் வீட்டிலே யிருந்தேன். அப்படி யிருக்கையிலே கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் வினாயகப் பிள்ளைக்கு அறிக்கை[1] குடுத்தத்துக்கு முசே பெடுத்தல்மீக்குப் பதினாயிரம் ரூபா குடுத்ததாகவும், முசே திலார்சுவுக்கு 120 விராகன் நதீர் யென்றும், முசே தெபொசேத்துக்கு 120 விராகன் நசர் வைச்சதாகவும், முசே கில்லியாருக்கு 25 விராகன் நசர் வைச்சதாகவும், முசே தெபறேனுக்கு 21 விராகன் நசர் வைச்சதாகவும், அவர் போடாமல் போனதாகவும் (அதை வாங்க மறுத்ததாகவும்), முசே பொலோவுக்கு 25

[1] வட்டவடிவிலான உலோகத்தாலான ஒரு குடை போன்றது. அதைப் பிடித்துத் தெருவில் செல்வது ஒரு கௌரவமாகக் கருதப்பட்டது!

விராகன் நசர் வைச்சதாகவும், அதுக்கு அவர் போடாமல் போகச் சொன்னதாகவும் (அவரும் மறுத்து விட்டதாகவும்), வெளியிலே வந்து அவர் துபாசி கையிலே குடுத்துப் போட்டு வந்ததாகவும், அவன் உடனே முசே போயிலோ கையிலே குடுக்கப் போனதாகவும், அந்த விராகனைக் கண்ட வுடனே தன் துபாசியை ரெண்டு ஒதை போட்டு கோபிச்சு விநாயகப் பிள்ளையைக் கூட்டி வரச் சொன்னதாகவும், அவன் உடனே வெளியே ஓடிவந்து வினாயகப் பிள்ளை வசத்திலே வராகனையும் குடுத்து கூட்டிப் போனதாகவும், விநாயகப் பிள்ளையைக் கண்டவுடனே முசே பொயிலோ சொன்ன சேதி, "யிந்தத் திருட்டுக் காசு நாம் வாங்குறோமா? உனக்கு அறிக்கை யாவுதே, குடுத்தியோர் முன்னே கையைக் கட்டி நிற்குற உனக்கு முசெ பெடுத்தல்மீ யென்ன காரியம் என்று அரிக்கை குடுத்தார்? போ," யென்று போகச் சொன்னதாகவும், அதன் பேரிலே முசே மீராவுக்குப் பதினோரு விராகன் நசர் வைச்சதாகவும், அதை அவர் போடாமல் (வாங்காமல்) உனக்கு அரிக்கை யாவுதேது? கூடையும் முறமும் தலை மேலே கவுத்துக் கொள்ளு, அது நன்றாயிருக்கும். கூலி வேலைக்குக் கணக்கு யெழுதுகிற கூலி உனக்கு அரிக்கை[1] யேதென்று, மெத்தவும் கோபம் பண்ணி விராகனைப் போடாமல் போகச் சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் காலத்தாலே சியூர் விதா கொரிய (Sieur Vide Correa) வசம் முசே கொதேயுட சக்கிறத்தார் ஷேவிரே அண்டைக்கு அனுப்பினது கடப்பை நவாபு அப்துல் மசீது கான் அனுப்பின பாரிசி காகிதமும், அதை பிரான்சுப் படுத்தின காகிதமும் ஆக ரெண்டு காகிதம்.

நந்திராசா முசே பெடுத்தல்மீ, முசே கில்லியார், முசே போயிலோ பேருக்கு யெழுதின காகிதத்திலே (கண்டது) : "முசே தெசோசெயை மாத்தி வேறே (ஆள்) அனுப்பச் சொல்லி (தங்களிடம்) வெங்கிட்டநாரணப்பய்யன் சொன்னதின் பேரிலே நீங்கள் வேறே கொம்மாந்தாம் அனுப்பிவிக்கிறதாகச் சேதி கேழ்விப்பட்டோம். நாம் வேறே அனுப்பச்சொல்லி யெழுதினதும் யில்லை, நம்முடைய வெங்கிட்டநாரணப்பய்யனும் தங்களுடனே சொல்லி யிருக்க(மாட்டான்). ஆகையால் (வேறு) ஆரையாகிலும் கொம்மாந்தனாய் அனுப்பியிருந்தால் அவனை அழைப்பிச்சுக் கொண்டு முசே தெசோசெ கொம்மாந்தானைத் தானே யிவ்விடத்திலே யிருக்கச்சொல்லி யெழுதி அனுப்ப வேண்டியது." இப்படி யெழுதி வந்த காகிதம் ஒன்று, அதை பிரான்சுப் படுத்தின காகிதம் ஒன்று, ஆக ரெண்டு காகிதம் வந்ததைக் கும்பினீர் மனுஷர் கையியாடி (பிரித்துப்படித்து) யிருக்கிறார்கள் யென்று (நினைக்கிறேன்).

[1] இந்த அரிக்கை என்ற சொல்லை ஒரே வாக்கியத்தில் அறிக்கை, என்றும் படியெடுத்தவர் எழுதியுள்ளார். பின்பு அறிகை, அரிகை என்றும் எழுதியுள்ளார்.

(அது இல்லாமல்) ஒரு கடுதாசிக் காகித(த்திலே) 41,762 ரூபாய்கள், பணம் அஞ்சுக்குக் கணக்கு வந்தது. அதிலே யெழுதி யிருந்த வயணம்

| | | |
|---|---|---|
| அரும்பாத்தப் (ராமலிங்கப்) பிள்ளை பேரிலே | – | 11,000–00 ரூபாய் |
| சாளிதான முதலி பேரிலே | – | 6,100–00 ரூபாய் |
| யேகாம்பர முதலி பேரிலே | – | 20,000–00 ரூபாய் |
| பாப்பு செட்டி பேரிலே | – | 3,342–05 ரூபாய் 5 பணம் |
| திருவேங்கிடனாத முதலி | – | 720–00 ரூபாய் |

ஆக பேர் வழி அஞ்சு பேர் பேரிலே வரவேண்டியது சக்கறம் (இது ஒரு நாணயம்) யெழுதியிருக்கிற துகை ரூபாய் 41,762–5 பணம்[1]. இது வரவேணு மென்று யெழுதி யிருந்த கடுதாசிக் கணக்கு ஒன்று, அதை பிரான்சுப்படுத்தின கடுதாசி ஒன்று ஆக ரெண்டு; (இவை) முசே ஷெவிரா (வுக்கு அனுப்பப்பட்டன).

நந்திராசா முசே தெசோசெ கொம்மாந்தானுக்கு அனுப்பின காகிதம் (வயணம்) : "(எழுத்து மூலமாக) துறையூரிலே பரமானந்தப் பிள்ளை நாளையிலே பணம் ஈடு பண்ணி (க் கொடுக்கிறோம் என்று சொன்ன) தல்லாமல் யிப்போது உங்களுக்குப் பணம் ஈடு பண்ணு(கிறோம் என்று சொன்னோமா?) துறையூர் (ரிலிருந்து) யெழுதி வந்த தென்று நீர் தகராறு பண்ணுகிற தென்ன? அது கும்பினீரைச் சேர்ந்தது (அல்ல). அவன் நம்முடைய கீழ் (உள்ள) பாளையக்காறன், நமக்கு நாலு வருஷமாயி பகுதி (குத்தகை) குடுக்கிறவன், விவகாரமாயி தீத்துக் கொள்ளுகிறோ" மென்று எழுதி அனுப்பின பூருவோத்திர பூநுவணி (கடிதம்) ஒன்று, அதை பிரான்சுப் படுத்தின காகிதம் ஒன்று, ஆக யேகத்துக்குக் காகிதம் எட்டும் குடுத்து, இத்தனாள் பகலைக்கு மேலாக நாலு மணிக்குக் கோட்டையிலே முசே செவரே (செவிரே) வசம் கொண்டு போய்க் குடுத்து, அஞ்சு மணிக்கு சியூர் விதா கொரிய வந்து சுபுறு சொன்னான்.

அப்பால் நந்திராசா முசே பெடுத்தல்மீக்கு நாளது மாசம் 20 தேதி யெழுதின காகிதத்துக்குப் பதிலுத்தாரம் வந்ததை, மூணு மணிக்கி சட்டைக்காறன் லூசு (Louche) கொண்டு வந்து குடுத்து, பிரான்சு பண்ணி அனுப்பச் சொல்லி முசே பெடுத்தல்மீ சொன்னாரென்று வந்து சொன்னான். அதை நாலு மணிக்கு மதனாந்த பண்டிதன் கையிலே குடுத்து முசே லபோம் அண்டைக்கு அனுப்பிவிச்சு, பிரான்சு படுத்திக்

[1] கூட்டுத்தொகை தவறு.

கொண்டு வரச் சொன்னேன். அதிலே யெழுதியிருந்த வயணம் யென்ன வென்றால், நந்திராசா தான் மமுதல்லிக்குக் குடுத்த பணத்துக்கு வட்டி(க்காக) யெழுதிக் குடுத்த சீமையுடனே சேர்ந்த பாளையக்காறன் துறையூரா னென்றும், அவ(னுக்கும்) கும்பினியாருக்கும் நிமித்தியமில்லை (சம்பந்தமில்லை) யென்றும், அவன் நிமித்தியம் (அதுபற்றி) யெழுதுவானென்றும், தான் அத்து வாயிதா தப்பி (எல்லை மீறி) காவேரிக்கு அக்கரை யேறி இங்கிரேசுக்காறருடனே சண்டை போடயில்லை; (ஆயினும் இங்கிலீசுக்காரரும் மமுதல்லி கானும்) அத்து வாயிதா தப்பி மணப்பாறை பாளையப்பட்டும் கட்டி, (தெற்கே போகிறார்கள்). அது சேதிக்கு உங்களுக்கு யெத்தனை எழுதியும் சும்மாயிருக்கிறதினாலே, தனக்கு ஸ்ரீரங்கத்திலே யிருக்கிறதுக்கு கூடச் சம்மதி தோணயில்லை யென்றும் யெழுதியிருந்தது.

யிந்தக் கடுதாசிகள் வருகிற சங்கதியும், முசே தெசோசெ(யான) கோம்மாந்தானை வாங்கி (திரும்பி வரும்படி) அனுப்புகிற சங்கதியும், அவரவர் வந்து சொல்லுகிற சங்கதியும் பார்த்தால், முசே தெசோசெ கோமாந்தான் ரூபாய் 20,000மும், துபாசியும் மத்த பேரும் ரூபாய் 10,000 மும் கேழ்வியான படிக்கி (லஞ்சமாக) வாங்கிக் கொண்டு உபேக்ஷையாயி, பணத்தாசை யினாலே நந்திராசாவுக்கு இடம் குடுத்ததினாலே அவர் துறையூரையும் வாங்கிக் கொண்டு யிவ்விடத்துக்கு யிப்படி யெல்லாம் யெழுதி அனுப்புகிறார்களென்று நமக்குத் தோத்தப்பட்டுது.

### *1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 7; பவ வருசம், மாசி மாசம், தேதி 27; சுக்கிரவாரம்*

இத்தனாள் வினாயகப் பிள்ளை சகல தட்டு முட்டும் நேத்து ராவுலே தானே சந்தா சாயபு வீட்டுக்கு அனுப்பிவிச்சு அங்கே சமையல் பண்ணி வைக்கச் சொல்லி, அவருக்கும் முசே பெடுத்தல்மீக்கும் விருந்து பண்ணிவிக்க யெத்தனம் பண்ணி, சமையல் பண்ண தெல்லாம் யெடுத்துக் கொண்டு, சந்தா சாயபு குமாரன் ரசா சாயபு, அல்லி நக்கி சாயபு, வினாயகப் பிள்ளை யெல்லாரும் முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போய் விருந்து சாப்பிட்டார்கள். அப்போ பத்தொன்பது பீரங்கி விழுக்காடு ரெண்டு தரம், பதினஞ்சு பீரங்கி விழுக்காடு மூணு தரம் போட்டார்கள். சந்தா சாயபு குமாரனுக்கு ரெண்டு சிப்பம் சகலாத்தும், அஞ்சு கெசம் யேதோப்புதோரும், ரெண்டு சின்னக் கண்ணாடியும் ஒரு துப்பாக்கி சகலாத்து ஒரை (உறை) போட்டுதும் பெகுமானம் குடுத்தார்கள். அதின் பேரிலே நாலு மணிக்கு ஆறு குதிரை கட்டின வண்டியின் பேரிலே முன்னுதாய் வந்து, வலது புறத்திலிலே சாயபு சாதாவும்,[1] யெடது புறத்திலே முசே பெடுத்தல்மீவும், யெதிரே அல்லி நக்கி சாயபும் முசே தெலார்ஷூம்

[1] ரசா சாயபுவை சாயபு சதா (Sahib Zada) என்று பலவிடங்களில் பிள்ளை குறிக்கிறார்.

யிருந்து சுவாரி பிறப்பட்டார்கள். அந்த வண்டிகளுக்குப் பிறகே ரெண்டு குதிரை கட்டின வண்டியிலே ரெண்டு கணக்கர், அதன் பிறகே ஒரு குதிரை கட்டின வண்டியிலே முசே பெடுத்தல்மீ கிட்ட சொந்தமாயிருக்கிற செக்கிறத்தேரும், அதன் பிறகே ஒரு குதிரை கட்டின வண்டியிலே வினாயகப் பிள்ளையும், அவனே சாரதியாகவும், அதன் பிறகே ரெண்டு குதிரை கட்டின வண்டியிலே பேர்விளங்கன் ரெண்டு பேர் வெள்ளைக்காரர்களும், அதன் பிறகே முசே பெடுத்தல்மீ துபாசி ராமு பிள்ளை ஒரு குதிரை மேலேயும், காடுது (guards) குதிரை நாலும் யித்தனை பேரும் சவாரி பிறப்பட்டார்கள். மறுபடி ஏழு மணிக்கி வந்தார்கள்.

பகலைக்கு ரெண்டு மணிக்கி முசே பெடுத்தல்மீ, ஸ்ரீ நந்திராசா பரமானந்தப் பிள்ளைக்குக் கும்பினீர் பணத்துக்காக லெக்ஷம் ரூபாக்கு புல்லுவாரி சென்னப்பய்யன் பேரிலே அவலா பண்ணி (ஜாமீன் போட்டு) யெழுதிக் கொடுத்த கடன் சீட்டு ஒன்று அனுப்பிவிச்சார். அது கன்னடத்திலே யெழுதி யிருந்த படியினாலே, அஞ்சு மணிக்கு கோபால சுவாமியை மயிசூர் வெங்கிட்டநாரணப்பய்யன் வீட்டுக்கு அனுப்பிவிச்சு, அவர் ராயசம் சேஷய்யன் கையிப்பட சீட்டுப்படிக்கித் தெலுங்கிலேயும் தமிழிலேயும் யெழுதிவச்ச வயணம்:

"பவ வருசம், ஆசுவனி, சுத்த சதுர்த்தசிக்கி, அற்பிசி மாசம் 2ஆம் தேதி (அக்டோபர் 15) ஸ்ரீ நந்திராசா அய்யன் அவர்கள் பரமானந்தம் பிள்ளைக்கு யெழுதிக் குடுத்த காகிதக் கிரமம் யெப்படி யென்றால், 'கார்த்திகை, சுத்த பௌர்ணமிக்கு, பவ வருசம் அற்பிசி மாசம் 17 தேதி வரையில் (அக்டோபர் 30) சென்னப்பய்யனுக்கு வுடுகரையும் (ஒரு உடை) முத்திரை மோதிரமும் (seal-ring) அழைப்பிச்சுக் குடுத்தால் (பரமானந்தன் சின்னப்பய்யனிடமிருந்து தொகை பெற்றுக் கொள்ளட்டும்); இந்தக் கெடுவுக்குள் முத்திரை மோதிரமும் வுடுகரையும் அழைப்பிச்சுக் குடாமலிருந்தால் லக்ஷம் ரூபாயும் நாம் குடுக்கிறோம்," யென்று எழுதிக் குடுத்தார்.

அதின் பேரிலே மேற்படி வெங்கிட்டநாரணப்பய்யருடனே, "யிந்த வயணம் ஏது, சென்னப்பய்யன் ஆரெ"ன்று கோபாலசுவாமி கேட்டதுக்கு, வெங்கிட்டநாரணப்பய்யன் சொன்ன வயணம் : "கேதம் புல்லுவாரி சென்னப்பய்யன் என்ற ஒரு கிறகஸ்தன், மயிசூரிலே உத்தியோகத்திலே யிருந்தவன், நந்திராசா வண்டைக்கு வந்து, கோட்டை கட்டளை ராணுவில் (ராணுவத்தை) கபாயித்துப் பண்ணி (பயிற்றுவித்து) எழுபத்தியிரண்டு கெடியிலே (கோட்டையிலே, தளத்திலே) யிருக்கிற ராணுவுக்களையும் விசாரிச்சு, வருஷம் ஒன்றுக்கு லக்ஷம் பொன் அரண்மனைக்குக் குடுக்கிற துண்டு. அந்த உத்தியோகத்துக்கு 'சீமை

கந்தாசார்' யென்று பேர். அந்த உத்தியோகம் தனக்குத் தந்தால் லெக்ஷம் ரூபாய் குடுக்கிறேனென்று சொல்லிப் பேசினான். அதுக்கு பிரான்சுக்காரருக்கும் பணம் குடுக்க வேணும், அவர்களுக்குச் சம்மதி பண்ணினாயானால் உனக்கு அந்த உத்தியோகத்துக்கு வுடுகரையும் முத்திரை மோதிரமும், மயிசூரிலே யிருந்து அழைப்பிச்சுத் தருகுறோமென்று நந்திராசா அவர்கள் சொன்னதுக்கு, அந்த சென்னப்பய்யன் பரமானந்தப் பிள்ளைக்கு சம்மதி பண்ணி, அவர் மத்தியஸ்தமாய் நந்திராசா அவர்கள் பரமானந்தப் பிள்ளை பேருக்கு யிந்தச் சீட்டு (கடன் ரசீது) யெழுதிக் குடுத்தார்கள்," யென்று சொன்னார். ஆனால் யிந்தப் பணம் பரமானந்தப் பிள்ளைக்குச் சென்று யிருக்குமா யென்று கோபாலசுவாமியைக் கேட்டதுக்கு, "சென்று யிருக்கும். பரமானந்தப் பிள்ளையும் நந்திராசா அவர்களுக்கு ரசீது யெழுதிக் குடுத்திருப்பார்," யென்று வெங்கிட்டநாரணப்பய்யன் சொன்னாரென்று யேழு மணிக்கு கோபாலசுவாமி வந்து யென்னுடனே சொன்னான். அதின் பேரிலே நம்முடைய வக்கீல் தியாகய்யனை அழைப்பிச்சு அவருக்குத் தெரியுமா யென்று கேளுமென்று சொன்னேன். அப்போ தியாகய்யனும் வந்தார். அவரை கோபாலசுவாமி கேட்டதுக்கு தியாகய்யன் தெலுங்கிலே சொன்ன சேதியை தெலுங்கு யெழுத்திலே தானே பிறகாலே யெழுதியிருக்கிறது.[1]

முசே பெடுத்தல்மீ, நந்திராசா பரமானந்தப் பிள்ளைக்குக் கன்னடப் பேச்சிலே யெழுதிக் கொடுத்த உடன்படிக்கைச் சீட்டை பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச் சொல்லி நேத்து அனுப்பினார். நேத்து யெழுதி வருகிறதுக்கு சாவகாசமில்லாத படியினாலே, பத்து மணிக்கு அந்த உடன்படிக்கைக் கடுதாசியை பிரான்சுப்படுத்தி வரச் சொல்லி ராமாஞ்சி பண்டிதரையும் கோபாலசுவாமியையும்[2] முசே லபோம் அண்டைக்கு அனுப்பிவிச்சேன்.

அவர்கள் போய் முசே லபோமை[3] யெழுதச் சொன்னவிடத்திலே, முசே லபோமுக்கு கும்பினீர் கணக்கு அலுவலினாலே யிது யெழுதுகிறதுக்குச் சத்து நேரம் தாமசப்பட்டுது. யிப்படி யிருக்கச்சே முசே பெடுத்தல்மீ யிந்தச் சீட்டு பிரான்சுப்படுத்தி வர யில்லையா யென்று ஒரு சோபுதாரன் வந்து, சீக்கிறமத்துக்கு அந்தச் சீட்டை வாங்கி வரச் சொன்னாரென்று சொன்னான். "நல்லது, பிரான்சுப் படுத்தக் கொண்டு

[1] இதனை விளங்கிக் கொள்ள இயலாதவாறு பிரதி அமைந்துள்ளது. பிள்ளைக்குத் தெலுங்கு எழுதவும் பேசவும் வரும் என்பது தெரிகிறது. ஆனால் இத்தெலுங்குச் சேதி நாட்குறிப்பில் இல்லை.

[2] இவ்விருவரும் பிள்ளையின் குமாஸ்தாக்கள்.

[3] பார்சி, கன்னடம், தெலுங்கு, ஆங்கிலம் போன்றவை தெரிந்த மொழி பெயர்ப்பாளர்கள், பிரெஞ்சு மொழியில் எழுதித் தருவதற்காகக் கம்பெனியில் இருந்தனர்.

போயிருக்கிறான். வந்தவுடனே குடுத்து அனுப்பிவிக்கிறேன்," என்று சொல்லி அனுப்பினேன். அவன் போய்ச் சொன்ன விடத்திலே நல்லதென்று சத்து நேரம் சும்மா யிருந்து, மறுபடியும் முசே பெடுத்தல்மீ யின்னம் வரயில்லையா யென்று பின்னை யொரு சோபுதாரனை அனுப்பினார். அவன் வந்து, "துரையானால் ரொம்ப கோபம் பண்ணுகிறார். சீக்கிரமத்துக்கு வாங்கிவரச் சொன்னாரெ"ன்று சொன்னான். உடனே ராமஞ்சி பண்டிதர், கோபால சுவாமிஅண்டைக்கு ரெண்டு சோபுதாரரை அனுப்பி சீக்கிறமத்துக்கு வாங்கி வரச் சொல்லி அனுப்பினவிடத்திலே, பின்னையும் முசே லபோம் எழுதுகிறது (தாமதமாயிற்று). யிதுக்குள்ளே, முசே பெடுத்தல்மீ (இன்னுமொரு சோபுதாரனை) அனுப்பினார். யினி மேல் தாமசம் பண்ணப் போகாதென்று முசே சீர்பேதா கொரியாவை அந்த சீட்டுப்படிக்கு பிரான்சுலே யெழுதச் சொல்லி, நந்திராசா முத்திரை போட்டு யிருந்த அசல் காகிதப்படிக்கிக் கன்னடப் பேச்சிலே யெழுதிக் கொண்டு வரச்சொல்லி அனுப்பி(னேன்). அந்தப்படி யெழுதி விச்சு, அந்தக் கடுதாசி (ஒன்று), அதை பிரான்சுப் படுத்தின காகிதம் (ஒன்று), அசல் கடுதாசி (ஒன்று), ஆக மூணு கடுதாசிகளையும், யிதல்லாமல் முசே பெடுத்தல்மீக்கு நந்திராசா யெழுதி அனுப்பின காகிதத்தை பிரான்சுப் படுத்தின காகிதம் (ஒன்று), அசல் காகிதம் (ஒன்று) ஆக காகிதம் (இரண்டும்), ஆக யிந்த அஞ்சுக் காகிதங்களையும் சீர்பெதா (சியூர் விதா) கொரியா வசத்திலே குடுத்து வந்திருந்த சொபுதாரரையும் கூடக் கூட்டி, "முசே பெடுத்தல்மீ கிட்டக் கொண்டு போய் யென் சலாம் சொல்லிக் குடும்," யென்று சொல்லி அனுப்பினேன். அவர் கொண்டு போய்க் குடுத்து வந்து சேதி சொன்னார்.

பின்னையும் சத்து நேரத்துக் கெல்லாம் முசே பெடுத்தல்மீ சீரங்கத்திலே கொம்மாந்தாமா யிருக்கிற முசே தெசோசெக்குக் கடுதாசி யெழுதிக் கொடுத்தார். கொண்டு போறோம் யென்று சீரங்கத்து தபால்காரன் வந்து சேதி சொல்லி அந்தக் கடுதாசியும் குடுத்தான். நல்லது கொண்டு போங்கோளென்று சொல்லி அனுப்பினேன். பிறகு முசே பெடுத்தல்மீ யிந்தச் சீட்டு நிமித்தியம் மெத்த அவசரம் பண்ணினது யேன் யென்று யோசிக்குமிடத்திலே, நந்திராசா பரமானந்தப் பிள்ளைக்கு யெழுதிக் கொடுத்த உடம்படிக்கைச் சீட்டை முசே தெசோசெக்கு அனுப்புகிற கடுதாசிலே முத்திரை போட்டு அனுப்பினாப் போலே தோணித்து. நந்திராசா பரமானந்தப் பிள்ளைக்கு (எழுதியது) கன்னடத்திலே தானே கீழே யெழுதி யிருக்குது.

(இது மூலத்திலேயே எழுதப்படாமல் விடுபட்டுள்ளது.)

*1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 9; பவ வருசம், மாசி மாசம், தேதி 29; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே அஞ்சு மணிக்கு மேலே மேலுகிரி செட்டி வந்திருந்தான். அவன் யேகதேசமாயி (தனிப்பட்ட முறையில்) வந்து கண்டு சொன்ன சேதி யென்ன யென்றால், ராமய்யப் பிள்ளை (வந்து) சொன்னானாம்: அதிலே தன்னை சாதிக்குப் பிறம்பாய்த் தள்ளினார்கள். அப்போது பிள்ளையவர்கள் தன்னை அபிமானிச்சு சாதியோடு கூடத்தக்க தான நியாயம் பண்ணினார்கள். அப்பால் சோத்துக்கு யில்லாமல் ரொம்ப கஷ்டப்பட்டுக் கொண்டு யிருந்தேன். அப்போது அம்மாளவர்கள்[1] மாட்டு வியாபாரத்துக்கு யென் வழியாய்ப் பணம் காசு குடுத்து, யெனக்கு பங்கு கொடுத்து, அதனாலே நான் சுகப்படத் தக்கதாக நடத்தினார்கள். அப்பால் முசே பெடுத்தல்மீ கிட்ட துபாசி உத்தியோகத்திலே யென்னை வைச்சார்கள். யிப்போதும் யெனக்கு சந்தா சாயபு குமாரன் செமுதாடு (கட்டாரி) வெகுமானம் குடுத்து, நான் வாங்கிக் கொண்டு (துரையைக்) காணப் போனவிடத்திலே, "காசுதாரீபு (குதிரை தேய்க்கும்) பறையன் கூட செமுதாடு கட்டுவான்," என்று யிப்படி யெல்லாம் சொல்லி ஒரு பந்தர் (மச்சிலிபந்தர்) சீரொப்பா குடுத்தார். அதினாலே நான் யிப்படி யெல்லாம் வினாயகப் பிள்ளைக்குப் பண்ணிவிச்சேன். யிப்போது ரசா சாயபு யெனக்கு வெகுமானம் குடுக்கிறார். இப்போவாகிலும் யெனக்கு நல்ல சீரொப்பாவாய்க் குடுத்தால் யெட்டு நாளையிலே யித்தனை காரியங்களையும் (தீத்துப்) போடுகிறெ னென்று சொன்னான். தேவரீர் தயவு பண்ணி நல்ல வெகுமானம் பண்ண வேணுமென்று மேலுகிரி செட்டி சொன்னான். அதுக்கு நாம் மேலுகிரி செட்டியுடனே, "யிப்போ நீ தானே சொன்னியே, நாம் அவனுக்குச் செய்ததும் அவன் நம்முடைய யிடத்திலே (நடந்து கொண்டதும்) உனக்கு அவன் தானே சொன்னான். அவன் யெப்படி நடந்தாலும் நம்முடவன். ஆனால் ஒன்று சொல்லுகுறோம், வினாயகப் பிள்ளை கணக்கனாக முசே துப்பிளேயிக்சு அவர்களிருக்கச்சே (இருந்து) யெல்லாக் காரியமும் (தப்பு வராமல் நிறுவகிச்சார்). அப்படிக் கொத்தவர் கூட பரசுராமப் பிள்ளை வெளியே போய் சந்தா சாயபு கிட்ட பல்லக்கு வாங்கிக் கொண்டு வந்த போது, 'தெத்துக்கு (ஊர் எல்லைக்கு) வெளியே பல்லக்கு யேறுவாயே அல்லாமல், தெத்துக்குள்ளே பல்லக்கு ஏறத் தேவையில்லை,' யென்று சொன்னார். அப்படிக் கொத்த காரியத்திலே, முசே பெடுத்தல்மீ அரிகை வண்டில் கூட குடுத்தது, யெத்தனை வாங்கிக் கொண்டு குடுத்தாரோ என்று பதிலாமைக்கு (குறை சொல்ல) யிடமாயிருக்கும். ஆகையா லிப்போ அவனுக்குக் குடுத்த அறிகையை வாங்கி, தனக்கு தரச்சொல்லி, தான்

---

[1] இது பிள்ளையின் மனைவியாக இருக்க வேண்டும்.

(ராமய்யப் பிள்ளை) அரிகையும் பிடிச்சுக் கொண்டு நம்மண்டைக்கு வந்தால் நாம் நல்ல சீரொப்பாவும் குடுத்து சரப்பளி பதக்கமும் போட்டும் பல்லக்கும் குடுத்து அப்பாவுவையும் கூட்டி, ராமய்யப் பிள்ளை வீட்டுக்கு அனுப்பிவிக்குரோ" மென்று சொல்லி அனுப்பிவிச்சேன். அந்த மேலுகிரி செட்டி பிறப்பட்டுப் போனவன் திரும்ப பனிரெண்டு மணிக்கு வந்து அவன் சொன்ன சேதி, "நான் போயி ராமய்யப் பிள்ளையுடனே சேதி யெல்லாம் சொன்னேன். அதுக்கு ராமய்யப் பிள்ளை, 'அப்படிச் செய்யலாமா? யெட்டு நாளையிலே பண்ணிக் குடுக்குறேன்' (என்றாராம்).

முசே திலார்ஷு, முசே தெபொசேத்து, சந்தா சாயபு கூட்டம், வினாயகப் பிள்ளை (கூட்டம்) யெல்லாரும் போய்க் கூடி முசே பெடுத்தல்மீக்குச் சொன்ன சேதி யென்ன வென்றால் : "உம்மையும் (முசே) திலார்ஷையும் (முசே) தெபொசேத்தையும் உங்கள் மூணு பேரையும் கட்டிக் கப்பலிலே போட்டு, விலங்கு போட்டு விச்சு, சீமைக்கு அனுப்பிவிக்குறேன் யென்று றங்கப்பன் சொல்லிக் கொண்டு யிருக்கிறான். ஆகையாலே, யிதுக்கு முன்னாகத்தானே வினாயகப் பிள்ளைக்கு அரிகை வண்டில் யெல்லாம் குடுக்க வேணும், சீமையும் பிடிங்கிப் போட வேணும் யென்று வந்து சொன்னான். அதன் பேரிலே அவர் யிப்படி நடத்தி விச்சார். ஆகையினாலே யிதெல்லாம் யெட்டு நாளையிலே திருப்பி நடத்தி விச்சுப் போடுகிறேன் (என்றும்), நாளையத் தினம் பிள்ளையவர்களுக்கு யிது வரையிலும் பட்டணத்திலே நடவாத தான அதிசெயமாயி யிருக்கப் பெகுமானமாயி முசே பெடுத்தல்மீ பண்ணயிருக்கிரா," ரென்றும் (ராமய்யப் பிள்ளை) சொன்னான். ஆகையினால் நாளை தேவரீர் வெளியே பிறப்பட வேணு" மென்று சொன்னான். அதுக்கு, "நான் பெகுமானம் நமக்குப் பண்ண வேணும் யென்கிறது தேவையில்லை. நான் காலமே சொன்னபடிக்கு, நீ நம்முடயவனான படியினாலே அவனுக்குக் குடுத்த அரிகையைப் பிடிங்கி நீ பிடிச்சுக் கொண்டு வருகிறது. நாம் உனக்குப் பல்லக்கு தருகுறது யென்று," சொல்லி, யிப்படி பண்ணுமென்று மேலுகிரி செட்டியை முதுகுத் தட்டி உச்சாகம் பண்ணிப் போகச் சொன்னோம்.

இப்பால் சாயங்காலம் யேழு மணிக்கு குண்டூர் வெங்கிடாசல செட்டி வந்து சொன்ன சேதி: "முசே கில்லியார் அண்டைக்கு தான் போனதாகவும், அவர் "றங்கப்பன் முன்னே போலே நம்முடனே பிரீதியாயி சேதிபாதி சொல்லுகிற தில்லை. நம் மண்டைக்கு வருகிறது மில்லை. அதினாலே அவன் பேரிலே கோபம். இப்போ முசே பெடுத்தல்மீ நடத்துகிற காரியங்களாலே (பெடுத்தல்மீ) கசோத்திலே விழவேண்டிவரும். புத்தியில்லாமல் செய்யுறான். கணக்கனுக்கு (அரும்பாத்தைக்கு) யிந்தப் பட்டணம் தோணின நாள் முதல் நடவாத காரியம் யிவன் நடத்தி விச்சான். அவன் கும்பினீர் பணத்தைக்

கொள்ளையிட்டுக் கொடுக்க வந்தால் அதுக் காசைப்பட்டு நடவாத காரியத்தை செய்யலாமா?" யென்று முசே கில்லியார் பின்னையும் விசேஷ மாயி சொன்னதாகவும், முசே பொலோவானால் றங்கப்பன் யேன் வரயில்லை என்று கேட்டார். அதுக்கு அவருக்கு உடம்பு சொஸ்தமில்லை யென்று நான் சொன்னேன். "சொஸ்தமில்லாதது நான் அறிவேன். முசே பெடுத்தல்மீ நடத்துகிற காரியத்தினாலே அவன் வரயில்லை. ஆனாலென்ன? முசே லெறி பிறப்பட்டு பனிரெண்டு நாளாச்சுது. காத்து மட்டாயிருக்கிறதினாலே யின்னம் அஞ்சாறு நாளையிலே வருவார். அவர் வந்த பிறகு சேனே விந்தைகள் நடக்கும். ஆனாலும் சீமைச் சம்மதியிலே ரெண்டு லக்ஷம் ரூபாய் மாத்திரம் முஸ்தீது பண்ணிக் கொண்டு யிருக்கச் சொல்லு. யிதுக்குள்ளே முசே பெடுத்தல்மீ யெவ்வளவாகிலும் கேட்டால் குடுக்கச் சொல்லு," யென்று சொன்னார் யென்று வெங்கிடாசல செட்டி சொன்னார். இது நடந்த சேதி.

*1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 11; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 1; செவ்வாய்வாரம்*

இத்தனாள் அஞ்சு மணிக்கு நந்திராசா கடுதாசி முசே பெடுத்தல்மீக்கு வந்தது. முன் மார்ச்சு மாசம் 6 தேதி வந்த கடுதாசிப் படிக்கி நாளது தேதிக்கு மார்ச்சு மாசம் 11 தேதி கடுதாசி யெழுதி வந்த படியினாலே, அதை பிரான்சுப் படுத்தி முசே பெடுத்தல்மீ கிட்ட அனுப்பிவிச்சேன். இத்தனாள் சலாபத்து சங்கு அண்டையிலே யிருந்து முசே கொதே பேருக்குக் கடுதாசி வந்தது. அதிலே யெழுதியிருந்த வயணம்: "தாங்கள் முசே புசி முகாந்திரமாயி கத்தி முதலான பெகுமதி அனுப்பிவிச்சது வந்து சேர்ந்து மிகுதியும் சந்தோஷமாச்சுது. முசே புசி சீகாகுளம், ராசமகேந்திரம் அந்த பிராந்தியத்துக்குப் போயிருந்து பந்து பஸ்து பண்ணி வந்தார். முசே புசியினுடைய தாரூப்பும் (புகழும்) சினேகமும் உத்திரோத்திரமாயி (மேலும் கூடுதலாகி) நடக்க வேணு," மென்றும் யிது முதலாகிய உபசாரங்களான வார்த்தையாயி யெழுதி யிருந்ததைப் பிரான்சுப் படுத்தி முசே பெடுத்தல்மீ அண்டைக்கு சோபுதாரர் கையில் குடுத்து அனுப்பிவிச்சேன். அந்தப்படிக்கி ஒன்று (பிரதி) எழுதி மேசைப் பலகை கவயத்திலே (டிராயர்) வைச்சுயிருக்கிறது.

*1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 14; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 4; சுக்கிரவாரம்*

இத்தனாள் காலமே நான் வெளியே போகயில்லை. கருங்குழியிலே யிருந்து யிங்கிறேசுக்காறர் வந்தவனும் முசே பெடுத்தல்மீயும் முசே கில்லியார், முசே பொயிலோ யிவர்கள் பனிரெண்டு மணி வரைக்கும் கோன்சேலிலே பேசிக் கொண்டு யிருந்து அப்பால் வீட்டுக்குப் (போனார்கள்).

***1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 11; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 5; சனிவாரம்***

காரைக்காலிலே புதுசாயி நேமிச்ச பாளைக்காரன் பதினாயிரம் ரூபாய் நசர் குடுக்கிறதாய்க் கேழ்க்கப்பட்டுது யென்றும், நாலு மாகாணம், கீழ்வெளி ஆயம் (உட்பட), லெக்ஷத் திருவதினாயிரம் ரூபா(ய்க்குத்) தீந்து வருகிறதாய் அங்கே சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும் தம்பி கந்தப் பிள்ளை யெழுதி அனுப்பினார்.

***1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 16; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 6; ஆதிவாரம்***

பகலைக்கு மேலாக மூணு மணிக்கு சீமைக் கப்பல் வருகிறதைக் கண்டு, முசே லெறி கப்பலென்று முசே பொயிலோ நான் வரயில்லை யென்று யேழெட்டுப் பத்து தரம் ஆளை அனுப்பினது மல்லாமல், குண்டூர் வெங்கிடாசல செட்டியைக் கண்டு காகிதம் யெழுதி வைத்து அனுப்பினதின் பேரிலே, நான் நாலு மணிக்குக் கோட்டைக்குப் போறதுக்குள்ளே தம்பூறு செனரால் (ஒரு வகை முரசு) கோட்டையைச் சுத்தி அடிச்சார்கள். சொலுதாதுகள், சிப்பாயிகள் எல்லாம் வந்து சேரச் சொல்லி முசே பெடுத்தல்மீ அசந்து (மெதுவாய்) நடந்த வாக்கிலே கடற்கரையே போனார். அவர் பிறகே வினாயகனும் ராமனும் முகம் வெளுத்துப் போனார்கள். அப்பால் முசே லெறி வந்த சீமைக் கப்பல் சீமையிலே யிருந்து ஆகொஸ்து மாசம் 8 தேதி பிறப்பட்டு, வழியிலே எங்கும் நில்லாமல் வந்து சேர்ந்தான்.[1] அந்தக் கப்பல் பேர் தியான் (Diane); கப்பல் கப்பித்தான் பேர் முசே ரிசாரி பிலாசிலியோர்[2] யென்று கட்டுமரக்காரன் காகிதம் கொண்டு வந்து குடுத்தான்.

அதைப் பார்த்துக் கொண்ட பிறகு முசே பெடுத்தல்மீக்கும் முசே தெலார்ஷுக்கும் வினாயகனுக்கும் ராமனுக்கும் முகம் மலர்ந்தது.[3] அந்த வேளையிலே நானும் அங்கே போனேன். நான் போய் அக்ஷணத்துக்கு யெல்லாம் முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போறதுக்குப் பிறப்பட்டுக் கொடி பிடிச்சுக் கொண்டு போக, அவரும் முசே திலார்ஷும் பேசிக் கொண்டு போக, அவர் பிறகே வினாயகனும் ராமனும் போக, அதின் பிறகே பல்லக்கும் போக யிப்படி பேசிக்கொண்டு நடந்து தானே வீட்டுக்குப் போனார்கள்.

அதன் பேரிலே கடற்கரை ஓரத்துச் சாவடியிலே (கடற் சுங்கச்

---

[1] முசே லெறி வங்காளத்திலிருந்து வந்தார். சீமையிலே (ஐரோப்பாவிலே) இருந்து அல்ல. இது பிள்ளைக்குத் தெரியும். எழுதியவர்கள் ஏதோ தவறு செய்துள்ளனர்.

[2] ஆங்கிலப் பதிப்பில் இவர் பெயர் M. Recilliar என உள்ளது.

[3] இந்த சீமைக் கப்பலில் லெறி வரவில்லை.

சாவடி) வெள்ளைக்காரர்கள் யெல்லாம் கூடியிருந்த படியினாலே நானும் அங்கே போயி, அவர்களுடனே பேசிக் கொண்டு யிருக்கையிலே, அப்போது அங்கேயிருக்கிற வெள்ளைக்காரப் பெரிய மனுஷர் சொல்லிக் கொண்டது: சதுரக் கொடியும் போடாமல் (கப்பல்) றேவுக்கு வந்ததும், பதினோரு பீரங்கி போட்டார்கள்; முசே லெறியே வந்தாரென்று யிருந்தோம். ஒரு காலத்திலேயும் இந்த மாசத்திலே சீமைக் கப்பல் வந்ததில்லை; யிது வந்தது மெத்தவும் ஆச்சரியமாயி, யிங்கிறேசுக்காறருக்கும் கப்பல் போகுது; யிந்த ரெண்டு கப்பலும் சேந்து வந்த போது யிதிலே ஒரு விசேஷ முண்டு யென்று சொல்லிக் கொண்டு, அவரவர் திரும்பினார்கள். அவர்களுடனே நானும் கோட்டைக் குள்ளே போயிருந்தேன். அப்போ கப்பல் கப்பித்தான் கடுதாசிப் பெட்டி யிறக்குகிற போது கப்பலிலே ஒன்பது பீரங்கி போட்டார்கள். அவர் யிறங்கி, மேல் வீட்டின் பேரிலே வந்தார். அதின் பேரிலே நான் பிறப்பட்டு, சின்னத் தோட்டத்துக்குப் போ(னேன்). அங்கே கச்சேரி பண்ணி, சங்கீதம் கேட்டுக் கொண்டு வேடிக்கை யாயிருந்து, பதினோரு மணிக்கி வீட்டுக்கு வந்தோம். அப்போது கோன்சேலிலே கொண்டு வந்த கடுதாசிப் பெட்டியை அவிழ்த்துப் போட்டு யெட்டு மணி வரைக்கும் காகிதங்களைப் பார்த்து, அதன் பேரிலே கோன்சேலியே ரெல்லாரும் அவரவர் வீட்டுக்குப் போனார்களென்று சேதி கேழ்விப்பட்டுது.

[இவ்விடத்தில் ஒன்றும் விளங்காதபடி பிரதியில் உள்ளது. எனவே ஆங்கிலப் பதிப்பை வைத்து, கீழ்வருமாறு விளங்கிக் கொள்ள முடிகிறது:

“இப்படி யிருக்கச்சே வீரராகவு வந்து சொன்னதாவது: மேலுகிரிச் செட்டி ஒரு நாள் தன்னிடம் வந்து, செஞ்சியாருக்கு ஒரு கடுதாசி எழுதி என் கையிலே கொடுத்து வையும் என்றார்; செட்டி வந்து உம்மைப் பார்த்துப் பேசுவார், அதன் பிறகாலே நீர் போய் முசே பெடுத்தல்மீ யோடு கடுதாசியைக் கொடுத்துப் பேசினால், நீர் விரும்பும் காரியம் எல்லாம் எட்டு நாளையிலே முடிந்து போகும் என்றும் செட்டி சொன்னார்; ஏன் இப்போ தாமதம் செய்கிறீர்கள்? அப்பால் காரியம் வேறு மார்க்கமாய்ப் போய்விடுமே என்றும் கேட்டார். ‘நான் எசமான் (முசே பெடுத்தல்மீ) மனது தெரியாமல் எப்படிப் பேசுவேன்? விஷயம் பேசி நாலு நாள் ஆச்சுதே? எசமான் ஒப்புக் கொள்ளாமல் எதுவும் நடக்காது. பயம் காட்டி எதையும் சாதிக்க முடியாது,’ என்று சொன்னேன். இது மட்டும் தான் இப்போ சொல்ல முடியும், என்றான்.”][1]

அதின் பேரிலே பனிரெண்டு மணி மட்டுக்கும் மேலுகிரி செட்டி

[1] இதெல்லாம் எது பற்றியது என்பது புரியவில்லை. பெடுத்தல்மீ—பிள்ளை உறவு பற்றியதாக இருக்கலாம். அதே சமயம், செஞ்சிக்குக் கடிதம் எழுதும் விஷயமும் புரியவில்லை.

காத்துயிருந்து, அப்பால் யேகதேசத்திலே (நான் தனியாக இருக்கும்போது) யென்னண்டைக்கு வந்து, யென்னுடனே சொன்ன சேதி: "செஞ்சிக்குக் காகிதம் யெழுதி யென் கிட்ட மத்தியஸ்தாமாய் வைக்க, முசே பெடுத்தல்மீ உங்கள் மனதுப் படிக்கி நடத்தி விக்கிகுறேனென்று சொல்ல, அதன் பேரிலே நான் காகிதம் குடுத்து விடப் பேசியிருந்துதே, அது யென்னத்துக்கு தாமசத்திலே வச்சீர்கள்? காரியங்களெல்லாம் விகடிச்சு நடந்து போறாப்போலே யிருக்குதே. ராமய்யப் பிள்ளை தகப்பனார் போராடுகிறதினாலே அல்லவோ யிந்த மட்டுலே யிருக்குது. இப்போவா கிலும் நீங்கள் காகிதம் யெழுதிக் குடுங்கள்" யென்று, கேட்டான். அப்போ யென்னுட மனசிலே ஆச்சரியம் தோணியது யெத்தனை உண்டு? இவன் சொல்லுகிற பேச்சு யெத்தனை உண்டு? சத்தாகிலும் யென்னமோ பயமும் (யோசனையும் இல்லாமல்) நம்முடனே வந்து சொல்லுகிறான். நாம் இவர்கள் யெந்த மட்டுக்கும் ஒடுகிறான் யென்று அறிவோம் யென்று கயறு நீள விட்டதினாலே அல்லவோ, காரியம் தெரிஞ்சு கொள்ள மாட்டாமல், அகமிக்கை தோத்தி ராமய்யப் பிள்ளை யிவனுடனே சொல்லவும், யிவன் வந்து நம்முடனே பேசவும் ஆச்சுது பென்று யோசிச்சு நான் சொன்ன சேதி:

"யென்னடா, பயமுறுத்திப் பேசுகிறாய்? உன் மட்டென்ன, நீ யென்ன? சோத்துக்கு யில்லாமல் பிச்சை யெடுத்துக் கொண்டு சாதிக்கும் தள்ளுப் பட்டு யிருந்த உன்னை சாதியிலேயும் சேரப்பண்ணி, சோத்துக்கும் உண்டு பண்ணி, உன்னை ஒரு மனுஷனாக்கி... உன்னையும் கொண்டு போயி முசே பெடுத்தல்மீ யிடத்திலே சேத்து நடத்தினதெல்லாம் மறந்து போனியா? யிப்போ கையிலே பத்து பணம் சேர்ந்தாப் போலே அறிவு தப்பி யித்தனை காரியமும் வெளியிலே நடத்துகிறதும், யெண்ண மில்லாமல் நமக்குச் சொல்லி அனுப்புகிறதும், இத்தனை யாச்சுதா உனக்கு? நாளை உனக்கு வருகிற வரத்து யென்ன வருமோ அப்போ தெரியவரும். அவனுக்கு நீயானால் பட்டிக்காட்டிலே மொச்சக் கொட்டை வித்துக் கொண்டு திரிஞ்சுவனாய் ... தோத்துகிறதே அல்லாமல், நீ பெரிய மனுஷரிடத்திலே துரைகள் யிடத்திலே ஒருக்காலும் தென்படாத வனாய் (காணுகிறது) ... மரிக்கி துப்பிளேயிக்சு ... பெண்சாதி பேச்சைக் கேட்டு நம்முட பேரிலே பகை பண்ணி, யெத்தனை உண்டோ அத்தனை காரியமும் நடத்தினார். அதுக்கு முன்னே கனகராய முதலியார் சூத்தை நட்டுக் கொண்டார். அவராலே என்ன ஆச்சுது? நம்முடைய தகப்பனாரை முசே பெர்ல்லி (எபேர்) நாளையிலே பத்து நாள் காவலிலே வைச்(சார்கள்). அது நிமித்தியம் நாற்பதினாயிரம் அன்பதினாயிரம் சிலவு பண்ணி சீமை வரைக்கும் பேசி, அங்கேயிருந்து அந்த போர்ல்லியேரை இந்தப் பட்டணத்திலே தானே காவலிலே வைப்பிச்சு, விலங்கு போடுவிச்சு, வீடு வாசல் யெல்லாம் முத்திரிச்சு கும்பினீரிலே சேரப்

பண்ணி, அந்தக் காவலோடே சீமைக்கி அனுப்பி, அவ்விடத்திலேயும் யெந்த தெண்டனை நடக்குமோ அந்த தெண்டனை யெல்லாம் நடக்கத் தக்கதாய்ப் பண்ணிவிச்சவருடைய பிள்ளையாக்கும் நான். அப்படியிருக்க நீ மசகன் (ஒரு கொசுப் பயல்). உன்னுடைய உறுட்டுக்கா நாம் யோசிக்கப் போறோம்? நாளைக்கு நீ தூக்கிலே விழப்போறயே அப்போ தெரியும். ஆனா லென்ன, அவன் நம்முட யெனத்தான், நாம் வச்ச மரம் யென்று நாம் மனம் பொறுத்துக் கொண்டு வந்தால், அது தெரிஞ்சு கொண்டு உணர்ந்து நீ வரவேணுமே அல்லாமல், இப்படி யெல்லாம் நீ நடக்கலாகாது. நாம் யிந்த மட்டுக்கும் மனம் பொறுத்துக் கொண்டிருந்தோம். நீயும் சுங்குவாருடைய உறைமுறையா யிருக்கிறவன். அவனிடத்திலே சேந்து யிருக்கிற மட்டுக்கும் அவனுக்கு புத்தி வரும் படியாய்ச் சொல்லிக் கொண்டு நடந்து கொள்ளுகிறதே அல்லாமல், நீயும் அவன் பாடினபடிக்கெல்லாம் பாடுவாயா? உங்களுக்குப் புத்தி சொன்னோம், போ," யென்று அனுப்பி விட்டோம்.

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே, கோன்சேல் கூடிக் கப்பலிலே வந்த காகிதங்களை யெல்லாம் சோதிச்சு, அவரவர் காகிதம் அவரவருக்குக் குடுக்கத் தக்கதாக அந்த அலுவலிலே யிருந்தார்கள்.[1] நான் மேல்வீட்டின் பேரிலே போயி முசே பெடுத்தல்மீ வகையிராக்கள் கோன்சேலியேர்களைக் கண்டு ஆசாரம் பண்ணிப்போட்டு அவர்கள் கோன்சேலிலே கூடியிருக்கச்சே, நாம் ஏன் யிருக்க வேணு மென்று பிடவை பார்க்கிற சாலையிலே வந்தேன்.

அங்கே யிருக்கச்சே, கோன்சேலிலே அவரவர் காகிதம் அவரவருக்குக் குடுத்து, கோன்சேலுக்கு வந்த காகிதம் பார்த்துக் கொண்டு, யென் பேருக்குச் சீமையிலே யிருந்து யிந்தியா கும்பினீர் காரியத்துக் கெல்லாம் யெசமானாயிருக்கிறவர், யிப்போ ராசாவினுடைய ஸ்தானாபதியாகிய இங்கிறேசுத் தாராவுக்கு போயிருக்கிற முசே திபுவார்[2] யென்கிறவர், யிங்கிறேசுக்காறர் தாவிலே (ஊரிலே) யிருந்து நமக்குக் காகிதம் யெழுதி அனுப்பி விச்சார். அந்தக் காகிதத்தை முசே தெபறேன் நான் முசே கில்லியாருடனே பேசியிருந்து பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருக்கச்சே கொண்டு வந்து குடுத்தார். அப்போ ராமச்சந்திரய்யன் வகையராக்கள் கூடியிருந்தார்கள்.

அப்படி யிருக்கச்சே அந்தக் காகிதத்தைப் பிரிச்சு வாசிச்சுப் பார்த்துக் கொண்ட விடத்திலே, அதிலே முன்னாலே பாதிரி

---

[1] பிரெஞ்சுக் கப்பல்கள் பிரான்சில் உறவினர்கள் எழுதும் கடிதங்களைக் கொண்டு வரும்; இவர்கள் எழுதும் கடிதங்களைக் கொண்டு போகும்.

[2] முசே துவேலோர் (Duvelaer) என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

லபோஸ்த்தமோ (Father Labustement?) வசம் அனுப்பின காகிதம் பார்த்துக் கொண்டால் சகலமும் தெரியவரும் என்று வெகு உபசாரங்களாய், சரிசமானமாய், மரியாதையாய் யெழுதியிருந்தது மல்லாமல், யிவ்வருஷம் யிந்தியாவுக்குப் பதினெட்டு கப்பல் அனுப்பியிருக்கிறோம், அதிலே புதுச்சேரிக்கு யேழு கப்பலும், பங்காளத்துக்கு மூணு கப்பலும், சீனாவுக்கு மூணு கப்பலும், மசுக்கரைக்கு (Mascareigne) நாலு கப்பலும், மயேயிக்கு ஒரு கப்பலும் அனுப்பிவிக்குறோம். யெந்தப்படி கப்பலுக்கு வேண்டிய சரக்கு யெல்லாம் கூட்டிப் போடுவிச்சு அனுப்ப வேணுமோ அந்தக் காரியத்திலே நீர் சாகிறதை யாயிருந்து பார்க்கவும் யென்றும், நாம் உம்முடைய காரியத்திலே யிருக்குறோம் என்றும், நாம் யிப்போ யிங்கிறேசுத் தாராவிலே யிருக்குறோம், பிரான்சாவுக்குப் போகப் போகிறோம், நாம் அங்கே போன உடனே உம்முட காரியங்கள் யெல்லாம் யெப்படி நடக்க வேணுமோ அந்தப்படிக்கித் திட்டம் பண்ணி அனுப்பிவிக்குறோம் என்றும், யிது முதலான சேதியாய் யெழுதியிருந்தது. அதைக் கண்ட உடனே ராமச்சந்திரய்யன் முதலான பேர்கள் யெல்லாரும், "யிந்தப் பட்டணம் தோணி இத்தனை நாளிலே யிப்படி கும்பினீயார் ஆருக்கும் எழுதினதுயில்லை, அப்படியிருக்க உம்முடைய யோகாதிசயத்தினாலே கும்பினீருக் கெல்லாம் திறக்குதேராய் (டைரக்டர்) யிருக்கப்பட்டவர், யிப்போ ராசாவினுடைய காரியங்களுக் கெல்லாம் ஸ்தானாபதியாய் யிங்கிறேசுத் தாராவுக்குப் போயிருக்கிறவர், அப்படிக்கொத்தவர் யித்தனை பரவசங்களாய் உங்களுக்கு யெழுதினது யெங்களுக்கு மெத்தவும் ஆனந்தமாயிருக்கு," தென்று சொல்லி கொண்டார்கள்.

இத்தனாள் கோன்சேலிலே நடந்த சேதி: காரைக்காலைச் சேர்ந்த கிராமங்களுக் கெல்லாம் கூட்டுக் கரைக்கட்டு கட்டாமல் கிடக்கிறது, யினி மேல் வெள்ளம் வந்தால் கட்ட கூடாதே (முடியாதே), சீக்கிறமாய் குத்தகை தீத்துக் குடுத்தால் அவன் தலைப் பொறியாய்ப் பார்த்துக் கொள்ளுவானென்று முசே பொறுஷே (M. Porcher)[1] யெழுதி அனுப்பிவிச்சான். ஆனபடியினாலே யிப்போ தானே தீத்து எழுதி அனுப்ப வேணுமென்று முசே பெடுத்தல்மீ சொன்னதாகவும், அதுக்கு முசே போர்லோ (போயலோ என்பதே சரி) "யெப்படி தீத்து அனுப்புகிறது? முசே கொதே அவர்கள் யிருக்கிற போது, காரைக்காலிலே யிருந்து லக்ஷத்தி யிருபதினாயிரம் (தருகிறோம்) என்று சேதி வந்தது. அதுக்கு உபரியாக யிங்கே கேட்பார்கள். அதின் பேரிலே பங்காளத்திலே யிருந்து முசே லெறி வந்தாப் போலே தீத்துக் கொடுங்கோள் என்று முசே கொதே சொல்லிப் போயிருக்க, முசே லேறி வரும் முன்னே நாம் யெப்படி தீத்துக்

[1] இவர் காரைக்காலின் நிர்வாகத் தலைவர்.

குடுக்கிற," தென்று கேட்டார். அதுக்கு முசே பெடுத்தல்மீ, "முசே லெறி வர எத்தனை நாள் செல்லுமோ தெரியாதே! அது வரைக்கும் பார்த்திருந்தால்... (களை எடுத்தல், கட்டுக் கரை – வரப்பு – கட்டுதல்) ஆகிய செய்து கிராமங்கள் பயிர்ச்சியல் (பயிர்த் தொழில்) நடக்க வேணுமே? அதுக்கெப்படி?" யென்று கேட்டதாகவும், அதின் பேரிலே யெல்லாரும் யோசனை பண்ணி, யின்னம் யெட்டு நாள் பார்க்கலாம், யெட்டு நாளையிலே முசே லெறி வராவிட்டால் யேலத்திலே போட்டு (விடலாம்), யென்று பேசி, காரைக்காலுக்கு யேலத்திலே வாங்குற பேரை வரச் சொல்லி யெழுதிப் போச்சுது யென்று சேதி கேழ்விப்பட்டுது. அந்த மட்டிலே பிறப்பட்டுப் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

அதன் பேரிலே பிறகு பனிரெண்டு மணி அடிக்கிற வேளையிலே முசே பெடுத்தல்மீ அழைக்குறா ரென்று சேவுகன் வந்து அழைச்சான். நான் போனவிடத்திலே, கருங்குழி தாலூக்கு சாந்தப்ப முதலி, அச்சரப்பாக்கம் பார்ப்பதியம் நாரணப்பய்யனுக்கு யெழுதின ஒலையை யென் கையிலே குடுத்து, பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச் சொன்னது மல்லாமல், "முன்னாலே வெங்காசி பண்டிதன் அனுப்பின ஒலையை உன் கையில் குடுத்து பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச் சொன்னோம் யென்று முசே கொதே அவர்கள் கைப்பட யெழுதிவிச்சு யிருக்கிறார். அந்தக் காகிதம் யெங்கே? பிரான்சுப் படுத்தினியா?" யென்று கேட்டார். அதுக்கு நான், "முசே கொதே அவர்கள் யேறிப் போன உடனே அதை பிரான்சுப் படுத்தினதும், அசலும் கொண்டு வந்து குடுத்தேன்," யென்று சொன்னேன். அதுக்கு அவர் "குடுத்தாயி ஞாபகமில்லை" யென்று சொன்னார். அதுக்கு நான் "அன்றைய தினம் உம்முடைய கையிலே குடுத்து, அதுக்குத் (என்) தினசரியிலே யெழுதி யிருக்கும்," யென்று சொன்னதுக்கு, "யெழுதி யிருப்பியோ?" யென்று கேட்டார். யெழுதி யிருப்பே னென்று சொன்னேன். அதுக்கு அவர் "அந்தப்படிக்கி ஒன்று யெழுதிக் கொண்டு வா," யென்று சொன்னார். நல்லது யென்று அனுப்பி விச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்து பிப்றவரி மாசம் 16 தேதி யெழுதி யிருந்த தினசரி தெஸ்தாத்தைப் (துஸ்திரம்) பார்க்க, உடனே அதிலே குடுத்ததாய் எழுதியிருந்தது.[1] அந்தப்படிக்கி ஒன்று யெழுதி, அந்த வெங்காசி பண்டிதன் யெழுதின ஒலைக்கும், பிரான்சுப் படுத்தின காகிதத்துக்கும் சவாது (பிரதியும்) மிருந்தது. அதுக்கும் நகல் யெழுதி விச்சுக் கொண்டு அந்தக் காகிதமும் தினசரிப் படிக்கி (தினசரிப் புத்தகத்திலே) யெழுதி முஸ்தீப்பு பண்ணி அலமாரி அறையிலே வச்சேன்.

இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கி கோட்டைக்குப் போனவிடத்திலே கோன்சேல் கூடாத படியினாலே, வெங்காசி பண்டிதன்

[1] பிள்ளையின் கவனமான செயற்பாட்டினுக்கு இது ஒரு நல்ல சான்று!

(மற்றும்) நாச்சியப்ப முதலி யெழுதின ஓலைச் சவாதையும், பிரான்சுப் படுத்தின காகிதத்தையும் (சாந்தப்பன் கையில் குடுக்காமல்), முசே பெடுத்தல்மீ மத்தியானத்திலே யென் கையிலே குடுத்த கருங்குழி தாலூக்கு ஓலையை பிரான்சுப் படுத்திக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்து, அங்கே யிருந்து ஒன்பது மணி வேளைக்கு வீட்டுக்கு வந்தேன்.

இத்தனாள் பதினோரு மணிக்கு முசே பெடுத்தல்மீ கோன்சேல் கலைஞ்சு வீட்டுக்கு வருகிறபோது, முசே திலார்ஷு கூடவே வந்து, முசே பெடுத்தல்மீயையும் கூடக் கூட்டிக் கொண்டு சந்தா சாயபு வீட்டுக்குப் போனார்கள். அங்கே போன விடத்திலே முசே பெடுத்தல்மீக்கு சீரொப்பாவும், (நுவரத்னம் யிழச்ச) பாஜி பந்தும்,[1] பதக்கமும்,[2] முசே தெலார்ஷுக்கு சீரொப்பாவும் சிரொப்போசும்[3] ரசா சாயபு குடுத்து அவர்களை வீட்டுக்கு அனுப்பி விச்சதாகக் கேழ்விப்பட்டுது.

இத்தனாள் பகலைக்கு மேலாக அஞ்சு மணிக்குப் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே போயிருந்து, மதுராந்தகத்திலே யிருக்கிற முசே தெரூஷே என் பேருக்கு யெழுதின காகிதத்துக்குப் பதில் உத்தாரம் உடனே யெழுதிவிச்சு அனுப்பிவிச்சு, அந்தப் படிக்கி நகல் எழுதி (எனது) பிரான்சு தஸ்தரத்திலே பதிஞ்சு (வச்சேன்).[4]

***1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 19; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 9; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே யேழு மணி வேளைக்கி வீடு விட்டுக் கோட்டைக்குப் பிறப்படுகிறதுக்கு முன்னே, சூரிய உதய வேளைக்கு நம்முடைய வீட்டுக்கு .... (தென் பாரிசத்தில் ஒரு சமையலறை – இந்த வரி கிழிந்து போயிருக்கிறது) கட்டுகிறதுக்கு அஸ்திவாரம் போடவேண்டி, யங்கே போயிருந்து அஸ்திவாரம் (போட்டதைப் பார்வையிட்ட) பிற்பாடு, கோட்டைக்குப் போன விடத்திலே கோட்டையிலே அலமாஞ்சுக்காறர் (ஜெர்மானியர்) புதுக் கொடி மூணு முஸ்தீது பண்ணி, அதைக் கோட்டையிலே சம்ரோக்ஷணம் பண்ணுகிற நிமித்தியம் முசே பெடுத்தல்மீ, கோன்சேலியேர் வகையராக்களுக்கும் சொல்லி, அவர்களுடனே அலமாஞ்சு ஒபிசியால்மார், கப்பித்தான்மார் வகையிராக்களும், முசே

---

[1] இன்றைய bracelet போன்றது.

[2] சங்கிலியில் கோர்த்து கழுத்தில் அணிவது.

[3] சர்பேச் என்பது தொப்பியில் பொருத்துவது.

[4] எல்லா மொழிக் கடிதங்களையும் வெவ்வெறு பதிவேடுகளில் பிள்ளை நகல் எழுதி வைத்திருந்தது வியப்பளிக்கிறது. இவருக்கு நேரம் எப்படிக் கிடைத்ததோ! என்ன கவனம், என்ன முயற்சி!

பிஷேர் (M. Pichard) வகையிராக்களும்... கூடக் கோயிலிலே பூசை கேட்(டனர்). பூசை கேழ்க்கச்சே அலமாஞ்சுக்காற சொலுதாதுகள் வரிசை வைத்து மூணு தரம் துப்பாக்கிகள் சுட்டு. மூணு தரம் பீரங்கி சுட்டு, யிருவத்தோரு வேட்டு விழுக்காடு சுட்டு. அப்பால் வெளியே கோயிலிலே கொடிகளுக்கு சம்ரோக்ஷணை முதலான சடங்குகள் செய்து. வெளியே கொண்டுவந்து கொடியைப் பிடிச்சு அப்பால் வீவ் றுவாய் (மன்னர் வாழ்க என) மூணு தரம் கூப்பிட்டு, பழங் கொடியையும் அங்கே தானே நெருப்பிலே சுட்டுப் போட்டு அப்பால் அவரவர் கலைஞ்சு போனார்கள். (அன்று) மறிக்கு துப்பிளேயிக்சு அவர்கள் பேர்ப் (name-day) பண்டிகையான படியினாலே அவர் யிருந்தால் வெகு சம்பிரமாயி துப்பாக்கிகள், பீரங்கிகள், விருந்துகள், விளக்கு வகையராக்கள். பாண வித்தைகள் சகல வேடிக்கைகளும் நடக்கும். அவர் யில்லாததினாலே அந்த வேடிக்கை ஒன்றும் நடக்கயில்லை.

***1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 21; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 11; சுக்கிறவாரம்***

இத்தனாள் சாயங்காலம் சீரங்கத்திலே யிருந்து வக்கீல் தியாகய்யன் தம்பி யெழுதி அனுப்பின காகிதச் சேதி : நாளது மாதம் 2 தேதி எழுதின காகிதத்திலே மமுதல்லி கானும் இங்கிறேசுக்காறரும் தெற்கே போனவர்கள் மதுரைக் கோட்டையைக் கட்டிக் கொண்டதாகவும், அதிலே யிருந்த முதாமியாவும் (குவறு மந்து மியான்) மத்த நாலு போ்களும் தெற்கே ஓடிப்போயி விட்டதாகவும், யிவர்களும் பின்னாலே துடந்து நடுமண்டலம் சுவசம் பண்ணிக் கொண்டு திருநெல்வேலிக்குப் போயி, அதுவும் சுவசம் பண்ணிக்கொண்டனர்; (அடுத்து) சேதுபதி பேரிலே (படையோடு) வருகிற தாகவும், தஞ்சாவூராரும் தொண்டமானும் கூடப் போறார்களென்றும், யிது யெல்லாம் நந்திராசா கேட்டு, "பதினெட்டு மாசம் சண்டை யில்லாதது நமக்கு மாத்திரமா? நம்மை நம்பியிருந்த சேதுபதி பேரிலேயும் நம்முடை கையிலே யிருந்த மதுரை முதலான ஸ்தலங்களையும் கட்டிக்கொண்டு ராசகாரியம் மமுதல்லி கானும் இங்கிறேசுக்காறரும் நடத்த, நாம் கையினாலே ஆகாத வனாயிருக்கக் காரிய மென்ன?" யென்று வெகு கெஷ்ட்டுரங்களெல்லாம் கொம்மாந்தானுக்கு நந்திராசா சொல்லி அனுப்பிவிச்சதாகவும் யெழுதியிருந்தது.[1]

மூணாந் தேதி அனுப்பின காகிதத்திலே துறையூரில் புதுசாய்ப் பட்டங்கட்டின வரதராச ரெட்டி சம்மதியிலே கும்பினீருக்கு லெக்ஷம்

[1] ஆங்கிலேயப் படை ஹெரான் (Heron) தலைமையில் முகமதலியோடு சேர்ந்து இப்படி தெற்கில் போரிட்டது.

ரூபாயும், யிவ்விடத்துச் சிலவு முப்பதினாயிரம் ரூபாயும், அவ்விடத்துக் கொம்மாந்தாம் சிலவு யிருவத் தையாயிரம் ரூபாயும், ஆக லக்ஷத்தி அறுபதினாயிரம் ரூபாயும் தரச் சொல்லி (நந்திராசாவைக்) கேட்டதுக்கு, நந்திராசா கும்பினீருக்கு லெக்ஷம் ரூபாய் யிது வரைக்கும் சென்று யிருக்கிறது, போகக் குறையும் தருகுறேன் என்றும், சிலவு அறுபதினாயிரம் ரூபாயிக்கு வரதா ரெட்டியை[1] சம்மதி பண்ணிக் கொடுக்கச் சொன்னதாகவும், அவன் யிப்போ சிறிது தருகுறேன் யென்று சொன்னதாகவும் யெழுதி யிருந்தது. மத்தது பட்டங் கட்டின பிறகு தருகுறேன் யென்றும் எழுதி யிருந்தது. 6 தேதி (மார்ச் 16) எழுதி அனுப்பின காகிதத்திலே, கொம்மாந்தாம் முசே தெசொசே தஞ்சாவூர் ராசாவுக்கு, பதினெட்டு மாசம் கெடுவுயிருக்க நீங்கள் சேதுபதி பேரிலே சண்டைக்குப் போகிறது காரியமல்ல யென்றும், போன பவுன்சைத் திரும்பி அழைப்பிச்சுக் கொள்ளச் சொல்லியும் யெழுதி அனுப்பினதாகவும்; தொறையூராருக்கு (ரெட்டிக்கு) பட்டங்கட்டினதுக்கு பெகுமானம் நந்திராசா வாங்கி வச்சிருக்குறார், அதை அனுப்புறதுக்குக் கொம்மாந்தாம் திரிச்சிராப்பள்ளிக் கோட்டைக்கிப் போயிருக்கி(றதினாலே) அவருட சம்மதியில்லை (சம்மதம் பெற முடியவில்லை); ஆகிலும் அவர் வந்து அனுப்ப வேணுமென்று (அதை) வச்சிருக்கிறது யென்றும், யெலவாசனூர் மீர் சாயபு (ஒரு) மனுஷனைத் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையிலே மமுதல்லி கானண்டைக்கு அனுப்பிவிச்சுப் பத்துப் பனிரெண்டு வருஷத்திலே நாற்பதினாயிரம் ரூபா குத்தகை பேசி தீத்து வாங்கினதாகவும், கொம்மாந்தாம் கோட்டைக்குப் போனவிடத்திலே "பதினெட்டு மாசம் சண்டை தேவையில்லை என்று யிருக்க நீங்கள் மமுதல்லி கானையும் கூட்டிக் கொண்டு போயி மதுரையும் கட்டிக் கொண்டு நடுமண்டலம் திருநெல்வேலி யெல்லாம் கட்டி, சேதுபதி பேரிலேயும் சண்டைக்குப் போறதுக்கு என்ன நியாயம் யிருக்கிறது?" என்று பேசினதாகவும், அதுக்கு அவர்கள் யெட்டு நாளையிலே அனுப்பியிருக்கிற பவுன்சை அழைப்பிவிக்குறோமென்று சொல்லி, கொம்மாந்தாம் தெசொசேயை சீரங்கத்துக்கு அனுப்பிப் போட்டு, தெற்கேயிருக்கிற மமுதல்லி கானுடைய பவுன்சுக்கு திருநெல்வேலியை சீக்கிறத்துக்கு சுவசம் பண்ணிக் கொண்டு மனுஷரை வைச்சுப்போட்டு, வரச்சொல்லி யெழுதி அனுப்பினார் களென்றும், தொறையூர் வக்கீல் அப்பாசி (அப்பாஜி) பண்டிதர் துறையூர் காரியமாயி பேசுகிறார், காரியம் கவையில்லை (வெற்றி பெறயில்லை) யென்றும், மமுதல்லி கானும் இங்கிறேசுக்காறரும் ஆற்காட்டுக்குப் போறதாயி சேதி கேழ்க்கப் படுகிற தென்றும், காவேரி தீரம் சீமையிலே நடக்கிற சேதிகளும் யெழுதி யிருந்தது.

---

[1] வரதராச ரெட்டி என்று ஓரிடத்திலும், வரதா ரெட்டி என்று மறு இடத்திலும் எழுதப்பட்டுள்ளது காண்க.

புதுசாயி வந்திருக்கிற துறையூர் வரதராச ரெட்டி நமக்குக் காகிதம் உபசாரமாயி யெழுதி, முன்னிருந்த பேர் ரொம்ப துடுக்காய் சுலு நடத்தினதிலேயும், பேஷுக்கஷு சுவையாயிக் குடுபடாததினாலேயும், கும்பினீர் மனுஷர் ரெண்டு பேர்களை வெட்டிப் போட்டதினாலேயும் நந்திராசா அபிமானிச்சு, துறையூர் வாங்கித் தங்களுக்குக் குடுத்தாரென்றும் நீங்களும் அபிமானிச்சு நடத்த வேணுமென்று யெழுதியிருந்தது.

*1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 24; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 14; சோமவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே பெடுத்தல்மீ வகையரா கோன்சேலியேர்கள் கோன்சேல் கூடியிருந்தார்கள். அப்போ நான் கண்டு ஆசாரம் பண்ணி, பூந்தோட்டக் கச்சேரியே வந்து விட்டேன். அங்கே யிருக்கச்சே ஸ்ரீரங்கத்திலே யிருந்து தியாகய்யன் தம்பி குருமூர்த்தி அய்யன் அனுப்பின கடுதாசி வந்துது. அதிலே யெழுதியிருந்த வயணம் என்ன வென்றால்: "7 தேதி (மார்ச் 17) கடுதாசி யிலே நந்திராசா வரதராச ரெட்டிக்குப் பட்டங்கட்டி விடவேணுமென்று கேட்டதாகவும், அதுக்கு கொம்மாந்தாம் கும்பினீருக்கு லெக்ஷமும் தொரைக்கு முப்பத்தை யாயிரமும் கோன்சேலியேர்களுக்கு இருபத்தை யாயிரம் ரூபாயும் குடுத்தால்[1] சம்மதி," யென்று சொன்னதுக்கு, நந்திராசா யிந்த சேதிக்குப் புதுச்சேரிக்கு யெழுதி அனுப்புவோ மென்றார். அதன் பேரிலே கொம்மாந்தாம் உத்தரவு வந்த பிறகு ஆகட்டும் யென்று சொல்லிப் போட்டு வந்தார். அதன் பேரிலே அய்யம்பெருமாள் பிள்ளையை நந்திராசா துறையூருக்கு அனுப்பினார். நாளையத் தினம் அயிதர் அல்லி கானை அனுப்பி வரதராச ரெட்டி குமாரனுக்குப் பட்டங்கட்டு கிறவர்களா யிருக்கிறார்கள். வரதராச ரெட்டி மனுஷர் கொம்மாந்தாம் அண்டையிலே வந்து பேசின வயணம், புதுச்சேரித் துரைக்கு நசர் ரூபாய் 12,000 வருஷா வருஷம் குடுக்கத்தக்கதாகவும், கோன்சேலியேர்களுக்கு யிவ்வருஷம் மாத்திரம் ரூபாய் 25,000, அவ்விடத்துக் கொம்மாந்தானுக்கு ரூபாய் 15,000 சில்லரை ரூபாயும், தருபாறு (தர்பார்) சிலவு ரூபாயும் (தரவேணு மென்று) அதுக்குத் தக்கதாகப் பேச்சு நடப்பிச்சு யிருக்கிறார்கள்; தொறையூர் வக்கீல் அப்பாசி பண்டிதனுடைய கக்ஷி தலையெடுக்க ஒட்டாமல் பண்ண வேணுமென்றும் சொன்னார்கள். கொம்மாந்தானும் ஒரு வித சம்மதியா யிருக்கிறாப் போலே யிருக்கிறார்."

திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலேயிருந்து அஞ்சு பல்லக்கு

[1] வெள்ளைக்காரக் காலனி ஆதிக்கக்காரர்கள் எப்படி யெல்லாம் இந்திய மன்னர்களையும் பாளையக்காரர்களையும் சுரண்டினர் என்பதற்கு இது ஒரு சான்று.

வெள்ளைக்காரர் (இங்கு) வந்து தீனி தின்று சாயங்காலம் (திருச்சிக்) கோட்டைக்குப் போனார்கள். யிது சேதி யெழுதி யிருந்தது.

8 தேதி (மார்ச் 18) யெழுதின காகிதத்திலே முன்னாலே கொம்மாந்தாம், வெள்ளையன் சேர்வைக்காரன்[1] பேரிலே பவுன்சை அனுப்பினதை அழைப்பிச்சுக் கொள்ளச் சொல்லி தஞ்சாவூர் ராசாவுக்கு யெழுதி அனுப்பின படியினாலேயும், கோட்டையாருக்கு (கோட்டையிலிருந்த மனிதருக்கு) தாக்கீது (அதன்படி அனுப்பினதாலும்) அவர்கள் அனுப்பியிருக்கிற பவுன்சை அழைப்பிச்சுக் கொள்ளத் தக்கதாயிருக்கிறார்கள். துறையூர் சமாசாரத்துடனே கூடினது: யின்னம் (அங்கே) பட்டங்கூடக் கட்டயில்லை. யிதல்லாமல் ராமலிங்கம் பிள்ளை, சவரிராயப் பிள்ளை, கோமுட்டி பாப்பிச் செட்டி யிவர்களும் குருவாரம் நாள் புதுச்சேரி விட்டுப் பிறப்பட்டு வருகுறார்களென்று சொல்லிக் கொள்ளுகிறார்களென்று, யிது முதலானது யெழுதியிருந்தது.

10 தேதிக்கு (மார்ச்சு 20) யெழுதினதிலே துறையூர் வக்கீல் கொம்மாந்தாமண்டைக்கு வந்த விடத்திலே துரைக்கு 35,000 ரூபாய், கோன்சேலியேர் 25,000 ரூபாய், கொம்மாந்தாம் சிலவு 30,000 ரூபாய், ஆக 90,000 ரூபாய் கேட்டதாகவும், அதுக்கு அவர்கள் சம்மதியாததினாலே கொம்மாந்தாம் பழய துறையூர் வக்கீல் அப்பாசி பண்டிதனுக்கு வரச் சொல்லிக் கவில் (தாக்கீது) அனுப்பினதாகவும், அவர் யிந்த மட்டுக்கும் வரயில்லை யென்றும், வரதராச ரெட்டி யிவ்விடத்துக்கு (புதுச்சேரிக்கு) வக்கீல் அனுப்பினதாகவும், அய்யம்பெருமாள் பிள்ளைக்கு பிறதானிக்கம் (பிரதானிப் பொறுப்பு) குடுத்து, குதிரை பொன் வளை சீரொப்பா குடுத்து, பெரிய மனுஷரையும் கூடக் கூட்டி நந்திராசா பட்டங்கட்டச் சொல்லி அனுப்பிவிச்சார் யென்றும், அரியலூருக்கு உபராலாயி (உதவியாக) தஞ்சாவூரார் அனுப்பியிருக்கிற (மனுஷன்) திருமல்வாடியிலே வந்து யிறங்கி யிருக்கிறானென்றும், மந்து மியான் வெள்ளையன் சேர்வைக்காரன் கிட்ட சேர்ந்து போனானென்றும், மந்து மியா (வின்) பெண்டுகள் குஞ்சு குழந்தைகளும் மதுரைக் கோட்டையிலே அகப்பட்டார்கள் (சிறை வைக்கப்பட்டுள்ளார்கள்) யென்றும், யிருபது லக்ஷம் (மந்து மியான்) சாதிக்காரர் வசம் ஆச்சுது (அகப்பட்டது), மூணு லக்ஷம் மமுதல்லி கான் சிலவுக்கு வந்துது யென்றும், யிது முதலான சேதியாயி யெழுதியிருந்தது.[2]

---

[1] இவர் சேதுபதி மன்னரின் தளவாய்.

[2] இந்த மந்துமியான் முதாமியாவாக இருக்கலாம் என்று ஆங்கிலப் பதிப்பாசிரியர் கருதுகிறார். இது தவறு. காரணம், முதாமியா ஏற்கெனவே பிரெஞ்சுக்காரரின் கைதியாக இறந்து போனார் என்பதை முன்பே படித்தோம்.

*1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 25; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 15; மங்கள்வாரம்*

இத்தனாள் காலமே பங்காளத்திலே[1] திறெக்குதேராயிருந்த முசே லெறி துவால் (M. Duval de Leyrit) யென்கிறவன் கப்பலிலே யேழு மணிக்கி வீராம்பட்டணத்துக்கு நேரே (வந்தபோது) கப்பல் நடுக் கம்பத்திலே சதுரக் கொடி பறக்க, கோட்டைக் கொடி மரத்திலே பழய கொடி போட்டிருந்ததை வாங்கிப் போட்டு, புதுக் கொடி போட்டு ஆன பிற்பாடு, யெல்லாரையும் வந்து சேரக் சொல்லி செனரால் தம்பூறு அடிச்ச பிற்பாடு, சொலுதாதுகள், ஒபிசியால்மார்கள் வந்தார்கள். அப்போ நானும் யேழு மணிக்குக் கடற்கரையே போய், வினாயகப் பிள்ளை (மற்றும்) நல்லப்ப நயினாரை[2] அழைப்பிச்சு வாழைமரம், தென்னம் பட்டைகள், கோட்டை வாசல்படி மட்டுக்கும் நடச்சொல்லி ரெண்டு பாரிசமும் நட்டான பிற்பாடு, அகரத்தையிலே (பள்ளம், ஒடை, அகழி) கோரை அறுப்பிச்சு மத்தியே முடியப் போடுவிச்சு, அதின் பேரிலே யிருவது சலவை நெடுமுழம் போடுவிச்சு, முஸ்தீது பண்ணிவிச்சேன். அப்பால் முசே கில்லியார், முசே பொலோ, முசே தெபறேன், முசே குப்பில் (M. Goupil), முசே சோலுமினியாக்கு (M. Solminiac), அலுமாஞ்சு பவுன்சு யெசமான் முசே பிஷோ யிவர்கள் (வந்து), சலங்கின்[3] பேரிலே யேறி எதிரே போய்க் கப்பலின் பேரிலே யேறின உடனே கோட்டையிலே இருபத்தோரு பீரங்கி போட்டான். அப்பால் துறைகளிலே யிருந்த கப்பலுகளிலே யெல்லாம் பீரங்கி போட்டார்கள். முசே லெறி யேறி வருகிற கப்பலிலேயும் பீரங்கிகள் போட்டுக் கொண்டே வந்தார்கள்.

அப்பால் ஒன்பது மணிக்குத் துறைக்கு நேராயி கொண்டு வைத்துப் பிடித்து பதினோரு பீரங்கி போட்டான். கோட்டையிலே பதினோரு பீரங்கி போட்டவுடனே ஒன்பதரை மணிக்கு முசே லெறி அவர்கள் வாங்கு சலங்கிலே யிறங்கினார். அப்போ முசே லெறி அவர்கள் யேறி வந்த கப்பலிலே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். கப்பலுக்குக் கப்பல் அந்தப்படியே போட்டார்கள். அப்போ முசே பெடுத்தல்மீ, முசே திலார்ஷு வகையிராக்களுடனே கடற்கரைக்கு வந்தார்கள். யிதுக்குள்ளே வாங்கு சலங்கும் துறை பிடிச்சது. முசே லெறி அவர்களும் சலங்கு விட்டு யிறங்கினார். அப்போ முசே பெடுத்தல்மீ வகையிராக்கள் கண்டு ஆசாரம் பண்ணி சகல சம்பிரமத்துடனேயும் வரிசையிலே வரச்சே, கடற்கரை வாசற்படி நுழைஞ்சாப் போலே யிருபத் தோரு வேட்டு போட்டார்கள். அந்த மட்டுலே சகலமான பேர்களுடனேயும்

---

[1] சந்திரநாகூர் இங்கு குறிக்கப்பட்டுள்ளது.
[2] இந்தியக் காவலாளிகளின்–போலீஸ்காரர்களின் – தலைவன் நயினார் எனப்பட்டான்.
[3] Chelinga – ஒரு வகைப் படகு.

கோட்டைக்குள்ளே மேல்வீட்டின் பேரிலே போனார்கள்.[1] நானும் கூடத் தானே போனேன். அவ்விடத்திலே கோன்சேல் கூடி அரை நாழிகை மட்டுக்கும் யிருந்து முசே லெறி அவர்களுக்கு உத்தியோகம் குடுக்கிறதுக்கு ராசாவினுட ஒடுதிக் கடுதாசியை எடுத்துக் கொண்டு சகலமான கோன்சேலியேர்களுடனே வரச்சே, யிதுக்குள்ளே கோட்டைக்குள்ளே கோவற்ணமாமுக்கு எதிரே வரிசை வச்சு முஸ்தீதாயிருந்தது. அப்பறம் சகலமான பேரும் வரிசையிலே வந்து அந்தக் கடுதாசியைப் பிரிச்சு சக்கிறத்தார் படிக்க, யெல்லாரும் கேட்டு வீல்லாருவா மூணு தரம் கூப்பிட்டு, யிருபத் தோரு பீரங்கியும் போட்டார்கள். அப்பால் முசே லெறி அவர்கள் மேல்வீட்டுக்குப் போறதுக்குத் திரும்பச்சே நான் கண்டு ஆசாரம் பண்ணி, ரெண்டு எலிமிச்சம் பழம் குடுத்தேன். அவர் சந்தோஷமாய்த் தானே வாங்கிக் கொண்டு ஆசாரம் பண்ணிப் போட்டு மேல்வீட்டின் பேரிலே போனார். நானும் கூடத்தானே போனேன். அவர் அந்த மேல்வீட்டை சுத்திப் பார்த்து நன்றாயிருக்குதென்று சொல்லிக் கொண்டு முசே பெடுத்தல்மீயுடனே பேசிக் கொண்டிருக்கச்சே, முசே பெடுத்தல்மீ தம்முடைய வீட்டிலே சாப்பிடச் சொன்னார். நல்லதென்று அவ்விடம் விட்டுப் பிறப்பட்டு, (துரைக் குரிய) பட்டப் பல்லக்கின் பேரிலே யேறிக் கொண்டு அவர் முன்னே போக, முசே பெடுத்தல்மீ பின்னே போக மேளதாளத்துடனே சம்பிறமமாயி முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனார். அந்த மட்டுக்கும் நான் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்து அங்கே யிருந்து வீட்டுக்கு வந்தேன்.

### *1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 26; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 16; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஏழு மணிக்குக் கோட்டைக்குப் போனவிடத்திலே, சமஸ்தமான பேர்களும் கோட்டை வெள்ளைக்காரரிலே கோன்சேலியேர் வகையிராக்களும் தமிழரிலே கனகராய முதலியார் தம்பி தானப்ப முலியார், புது நல்லப்ப நயினார், சாவடிக் கணக்கப் பிள்ளை, மதனாந்த பண்டிதன் வகையிராக்கள் வந்து காத்துக் கொண்டிருந்தார்கள். அப்பால் அவர் (புது துரை) யெழுந்திருந்து உடுத்திக் கொண்டு வெளியே பிறப்பட்டவுடனே யெல்லாரும் போய் ஆசாரம் பண்ணினார்கள். நானும் ஆசாரம் பண்ணினேன்.

---

[1] இப்புதிய ஆளுநர் முன்பு கவுன்சிலராயும், பின் சென்னையை பிரெஞ்சுக்காரர் பிடித்தபோது அதன் கொம்மாந்தனாகவும் நியமிக்கப்பட்டு, இந்திய உத்தியோகம் பிடிக்காமல் துய்ப்ளேவிடம் கூடத் தெரிவிக்காமல் 1747இல் தாயகம் திரும்பிவிட்ட துவால் தெப்ரமெனில் என்பாரின் இளவல். தெப்ரமெனில் துய்ப்ளேவின் மைத்துனர். லெறி மாயேவில் கொம்மாந்தனாயிருந்த பின் 1747இல் சந்திரநாகூரில் திரெக்தோராகத் தலைமைப் பொறுப்பில் அமர்த்தப்பட்டவர்.

அப்பால் ஒரு பெட்டி பங்களாத்திலே யிருந்து வந்தது. கோணிப் போட்டுத் தைச்சு யிருந்தது. அதுகளெல்லாம் பிரிச்சு பெட்டியைத் திறந்து, காகிதங்கள் தஸ்திரங்கள் வகையிரா யிருந்ததைப் பார்த்துக் கொண்டு, அப்பால் கோன்சேல்காரர்கள், ஒப்பிசியால்மார், கப்பித்தான்மார்கள், கணக்கர் வகையிராக்கள் எல்லாரும் அவரவர் வந்து ஆசாரம் பண்ணிக் கொண்டு போனார்கள். அரண்மனைக்காரர் (அர்மீனியர்கள்) கோசா யெலியாசு (Coja Elias) மருமகன் சுவானீசு (Johannes) வகையிராக்கள் வந்து ஆசாரம் பண்ணிப் போனார்கள். அப்பால் கப்பூசுக் கோயில் பாதிரிகள் அஞ்சாறு பேர்கள் வந்தார்கள். அவர்களும் ஆசாரம் பண்ணினதே யல்லாமல், விசேஷிச்சுப் பேச்சு வார்த்தை நடத்தினவரல்ல. கொச்சிம் சீனாவிலே யிருந்து வந்த பிஷப்பு வந்து கண்டு ஆசாரம் பண்ணிப் போனார். அப்பால் சம்பாவுலு கோயில் சுப்பீரியர் (தலைமைப் பாதிரி) அவர் வந்து கண்டு பேசுகிறதுக்குச் சமயமில்லாமல், அப்பிறம் யிருக்கச்சே யென்னண்டைக்கு வந்து, வெங்கிட்டம்மாள்பேட்டை சதாசிவம் பிள்ளை(க்கு) பணிக்கன்குப்பம் என்று (ஒரு கிராமம் உண்டு), வெங்கிட்டாம்பேட்டை சீமையுடனே சேர்ந்தது. அது கிறிஸ்துவர்கள் யிருக்கிற கிராமம் அதிலே தரங்கம்பாடி தாலுக்கிலே (யிருந்து) பாதிரிகள்[1] வந்து சதாசிவப் பிள்ளை ஆசுராவிலே (ஆதரவிலே) அந்தப் பணிக்கன்குப்பத்திலே வந்து யிருந்து கொண்டு தங்கள் வேதத்தைப் பிறபலம் பண்ணிக் கொண்டு வருகுறார்கள். அங்கே கிறிஸ்துவர்கள் யிருக்கிறவர்கள் எல்லாம் பொல்லாப்பு பண்ணிக் கொண்டு வருகுறார்கள். அந்த கிராமம் (குத்தகை மதிப்பு) யிருபது முப்பது விராகன் இருக்குமோ தெரியாது. அதைக் குத்தகைக்குக் குடுத்தால் அந்தப் பணம் (நமது) கிறிஸ்துவர்கள் குடுத்துவிடுவார்கள். அந்த தூசுக்கு வேதக்காரர்கள்[2] யிருக்கக்கூடாமல் பிறப்பட்டுப் போய்விடுவார்கள் யென்றும், முசே கொதேயைக் கேட்டதுக்கு அவர் சும்மா தானே தாரோம் யென்று சொன்னார். அதிலே அவர் போய் விட்டாரே யென்றும், யிப்படி (புது துரையிடம்) சொல்லி நீர் யிந்த உபகாரம் யெங்களுக்குச் செய்யவேணு மென்றும் யிப்படியாகச் சொன்னதுக்கு, நான் சொன்ன உத்திரம் "முன்பு (இது பற்றி) லூயிப் பிரகாசம் சொன்னதுக்கு, நான் அப்போ உத்தரம் சொல்லியிருந்தேன். யிப்போதும் அவனை யனுப்பினால் அதனுடைய காரியம் யெல்லாம் விசிதமாய்த் தெரிந்து கொண்டு உத்திரம் சொல்லி அனுப்பிவிக்கிறதும் அல்லாமல், அந்த தூசுக்கு வேதம் பிறபலமாகாமல் யெப்படி செய்யப் பார்க்க வேணுமோ அப்படி யெல்லாம் கிறமோனா பார்க்குறே," னென்று அதுக்குத் தக்கதாக உத்தாரம் சொன்னேன்.[3] அப்பால் அவர் போய் (துரையோடு) ரெண்டு பேச்சுப் பேசிப் போட்டுப் போனார்.

---

[1] இந்த டேனிஷ் பாதிரிகள் புராடஸ்டண்ட் பிரிவினர்.
[2] புராடஸ்டண்ட் பாதிரிகள்.
[3] உத்தரம், உத்திரம், உத்தாரம் என்று மூவிதம் எழுதப்பட்டுள்ளது.

அப்பால் முசே பெடுத்தல்மீ யெல்லாத்துக்கும் முசே லெறியுடனே தான் போறதும் பேசுகிறதும் யிப்படியாகப் பேசிக் கொண்டு வந்தான். அப்போ முசே பொயிலோ, முசே லெனுவார்[1] ரெண்டு போர்களும் (துரையோடு) யிருக்கச்சே, கோன்சேல் வீட்டிலே (கூடம்) நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பால் யென்னைப் பார்த்து முசே பொயிலோ, "யிவர் (துரை) உடன் சேர்ந்த காரியம் உம்முடனே சிறிது பேசிக் கொள்ள வேணுமென்று யிருக்குறார்," யென்று சொன்னதுக்கு, "சீர்மைக் குத்தகை வாங்கினதுக்காக யிந்த மார்ச்சு மாசம் 30 தேதியிலே ரெண்டு லக்ஷம் ரூபாய் குடுக்க ஒடம்படிக்கை யாச்சுதே," யென்று முசே லெறி கேட்டதுக்கு, முசே பொயிலோ சொன்னது: "ரெண்டு லக்ஷம் ரூபாயும் செலுத்திப் போடுவான். ஆனால் சீமையிலே யிருந்து வருகுறது நானாவித வராகன்களும் நானாவிதப் பணங்களும்[2] ஆக யெல்லாம் சேரப்பிடிச்சு, விராகனை யெல்லாம் ரூபாயாக்க வேணும். பணங்களை யெங்கெங்கே அனுப்பவேணுமோ அங்கங்கே அனுப்பி, விராகனாக்க வேணும். அந்த விராகனை யிவ்விடத்திலே கொண்டு வந்து ரூபாயாக்க வேணும். சென்னப்பட்டணத்திலே அவர்கள் போடுகுற ரூபாய் மாத்துக் குறைச்சலான படியால் யிவ்விடத்துக்கு ஆகாதானபடியினாலே, சிறிது விராகனும் சிறிது ரூபா(யுமாகச்) செலுத்துகுறோம் யென்று றெங்கப் பிள்ளை சொல்லுகுறான்," யென்று சொன்னதுக்கு, அவரிருந்து கொண்டு, "அவன் குத்தகைப் பண்ணினது ரூபாயாச்சுதே. யிப்போ நாலு லக்ஷம் ரூபாய் பங்காளத்துக்கு (அனுப்ப வேணும்," என்றார்). மூணு லக்ஷம் ரூபாய் (அனுப்பினால் போதும், மீதி) விராகனைப் பெட்டியிலே வைத்து வைத்தால் யிவ்விடத்துச் சிலவுக்குக் குடுக்கலாம் யென்று (நான் சொன்னேன்).

அதுக்கு விராகனைத் தொட்டு மாற்ப்புவிலே (மாற்றினால்) நஷ்டம் வராதா யென்று கேட்டார். "யேன் நஷ்டம் வருது? கும்பினீர் வர்த்தகருடைய கோந்திராத்துக்கு (முன் பணமாக) பொன் விராகனைத் தான் குடுக்க வேண்டியது. ஆனபடியினாலே கோந்திராத்துக்கு (வராகனாகக்) குடுக்கலாமே" (என்று சொன்னேன்.)[3] நல்லது, அப்படியே செய்வோமென்று சொல்லி அப்பால், நானிருந்து, "கொண்டு நாலு லக்ஷம் அனுப்பா விட்டால் மூணரை லக்ஷம் ரூபாய் அனுப்(பலாம்). ரெண்டு லக்ஷத்து அறுபதினாயிரம் ரூபாய் டங்கா சாலையிலே யிருந்து வருதே. நான் லக்ஷம் ரூபா செலுத்துகிறேன். ஆக மூணு லக்ஷத்து அறுபதினாயிரம் ரூபா அனுப்பலாம்," யென்று சொன்னேன். "நல்லது

[1] முன்னாள் ஆளுநர் லெனுவாரின் மகன்.

[2] அன்று பலவித வராகன்களும் பணங்களும் – fanams – புழக்கத்திலிருந்தன.

[3] இவ்விடத்தில் ஆங்கிலப் பதிப்பும் நமது பிரதியும் மாறுபடுகின்றன.

உன் உத்தியோகத்தை நீ நிச்சிந்தையாயிருந்து பார்," என்று சொன்னார். அதுக்கு நான் ஆசாரம் பண்ணி உபசாரம் சொன்னேன்.

யிதிலே, முசே பெடுத்தல்மீ யிப்பறம் (வெளியே) யிருந்தவன் அவ்விடத்திலே (உள்ளே) வந்து யென்னமோ ஒரு காகிதம் எழுதிக் கொண்டு வந்து காண்பிச்ச உடனே, அதைப் பார்த்துக் கொண்டு யிப்பறம் அவருடனே பேசிக் கொண்டு சக்கிறத்தாரு களிருக்கிற யிடத்திலே வந்த உடனே, கனகராய முதலி தம்பி வளத்துக் கொண்ட பிள்ளையாண்டான், சாவடிக் கணக்கப் பிள்ளைகள், மதனாந்த பண்டிதன் வகையரா, அவனைச் சேர்ந்தவர்கள், வினாயகப் பிள்ளை கூட வந்து காண்பிச்சுக் கொண்டு யெலுமிச்சம் பழங்களைக் குடுத்தார்கள். முசே பெடுத்தல்மீ துபாசித்தனம் பண்ணினார். யிவர் சொன்னது மாத்திரமே அல்லாமல், அவர் (துரை) வாயைத் தான் திறந்ததில்லை. முகத்தை தான் பார்ப்பானோ வென்று பார்த்தேன். அதுவும் காணோம். சிரசு ஆட்டம் கூடயில்லாமல் யென்னண்டைக்குப் பேச வந்தார். யென் கிட்ட வந்து, "நீ உன் சீர்மை பூமி முதலானதுகளும் கும்பினீர் காரியங்களும் முசே கொதே நாளையிலே யெப்படி பார்த்துக் கொண்டு வந்தீரோ அப்படி பார்த்துக் கொண்டு வாரு," மென்று சொன்னதுக்கு, முசே பொயிலோ யிருந்து கொண்டு முசே லெறியுடனே, "றங்கப் பிள்ளைக்கு முசே கொதே போய் விட்ட பிற்பாடு நீர் வருகுறதுக்குள்ளே யிவடத்திலே சிறிது வித்தியாசமான காரியங்களாய் நடப்பிச்சார்கள். அதைத் தொட்டு ஒரு காரியத்திலேயும் பிறவேசியாமல் உம்முடைய வரவுக்கு யெதிர்ப் பார்த்துக் கொண்டு யிருந்தான். ஆனபடியினாலே, அவன் மனதுக்கு நம்பிக்கை பிறக்க நீர் சொல்லவேணு மென்று காத்துக் கொண்டிருக்கிறான்," என்று சொன்னார். அதுக்கு முசே லெறி என்னைப் பார்த்து, "நீர் நம்பிக்கையுடனே கும்பினீர் காரியங்களை முசே கொதே நாள் முதல் கொண்டு யின்றைய வரைக்கும் யெப்படிப் பார்த்துக் கொண்டு வந்தீரோ அப்படி சீர்மைகள் பூமிகள் கும்பினீர் சம்மதி யெந்த யெந்த காரியங்களுண்டோ அதுகளெல்லாம் பார்த்துக் கொண்டு வாரும். உம்முடைய மனதிலே யிருக்கிறபடிக்கி ரெண்டு மூணு நாளையிலே நடப்பிச்சுப் போடுறேன். நிச்சிந்தையாய்ப் போயிருக்கலாம்," யென்று சொன்னார். அப்போ ஆசாரம் பண்ணி உம்முடைய ஆக்கினைப்படிக்கி நடந்து கொள்ளுறேன் யென்று சொல்லிக் கொண்டு, யிப்பறம் வந்தேன். அவரும் அப்பிறத்து அறையே போனார். முசே பெடுத்தல்மீ யிந்த சாடையைப் பார்த்து முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்து, சாப்பாட்டுக்கு (அவரிடம்) வரவேணு மென்று சொல்லிப் போட்டு அவன் வீட்டுக்குப் போனான்.

அப்பால் முசே தெபறேன் கோன்சேலின் லிப்ரேசியேம் (துவறு. தெலிபராசியம் – தீர்மானங்கள்) கொண்டு வந்து கையெழுத்து வாங்கிக் கொண்டு போனான். முசே பொலோ அனுப்பிவிச்சுக் கொண்டு போனார். நான் அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு முசே கில்லியார் கோந்துவாரே வந்து அவர் கையிலே நக்ஷத்திரம் முவ்வாயிரம் விராகனும், பறங்கி றெண்டாயிரம் விராகனும்[1] குடுத்து, ஒடுதினாசுக்காரர்களுக்கு (பணம் மாற்றுவோரிடம்) குடுத்து, யென் கணக்கிலே யின்றைய ராசிப் படிக்கி (மதிப்புப் படிக்கி) ரூபாயாகச் செல்லு (வரவு) எழுதிக் குடுக்க வேணுமென்று ... சொல்லிக் கொண்டதுக் கெல்லாம், நல்லதென்று உபசாரமாய்ச் சொல்லி, அப்படியே செய்குறேனென்று வார்த்தைப்பாடு குடுத்துப் போகச் சொன்னார். அவர் கையில் அனுப்பிவிச்சுக் கொண்டு யென் பூந்தோட்டக் கச்சேரியே வந்து, அங்கேயிருந்து வீட்டுக்குப் போனேன்.

*1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 27; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 17; குருவாரம்*

இத்தனாள் காசீம் பெருநாள் (காகப் பெருநாள் – Maundy Thursday ) காலத்தாலே ஏழு மணிக்கி நான் கோட்டைக்குப் போனவிடத்திலே முசே துவால் லெறி யென்கிற கொம்மாந்தாம் செனராலாயிருக்கப் பட்டவர், அவர்கள் பண்டிகையான படியினாலே கோயிலுக்குப் போய் பூசை கேட்டு, ஒன்பது மணிக்கு கோன் சேலியேர்களும் ஒப்பிசியால்மாரும் சுமர்ஷாம்களும்[2] கணக்கப்பிள்ளை அவர்களுடனே கோயிலிலேயிருந்து கோவற்னமாமுக்குப் போகச்சே நானும் போயி ஆசாரம் பண்ணினேன். அவர் ஆசாரம் பண்ணினார். அப்பால் அவர் மேல்வீட்டின் பேரிலே போய் நடுசாலையிலே சமஸ்தமான பேர்களுடனேயும் கூட யிருக்கச்சே மத்த பேர்கள் வந்து ஆசாரம் பண்ணுகிறவர்களுக் கெல்லாம் நன்னாய்ப் பார்த்து ஆசாரம் பண்ணக் கூடக் காணோம். ஒருத்தருடனேயும் பேசுகுறது கூடக் காணோம். ... அவர் வீடு (ஆளுநர் மாளிகை) கட்டி யிருக்கிற வாடிக்கையும் கொஞ்ச நஞ்சம் தளவாளம் (தளவாடம்) சிங்காரித்து யிருக்கிறதையும் பார்த்து சந்தோஷப்பட்டுக் கொண்டே யிருக்கிற சாடையாய்க் கண்டுது. அதெப்படி யென்றால், அதைப் பார்க்குறதே வேலையாயிருந்தாரே யல்லாமல் வேறே பார்வையைக் காணோம். அப்படி அவர் பார்வை யிருக்கச்சே, முசே பெடுத்தல்மீ மாத்திரம் மேல் விழுந்து பேசிக் கொண்டே யிருந்தார். யிவர் யென்ன பேசினாலும் அவர் சிரக்காம்பிதம் (தலையை அசைத்தல்) கூட யில்லாமல், முகத்திலே கூட விலாசம் (முறுவல்) கூடயில்லாமல் யிருக்கிறதைப் பார்த்து, யெனக்குத்

[1] நட்சத்திர வராகன், பறங்கிப்பேட்டை வராகன்.
[2] sous-marchands என்கிற வெள்ளைக்கார வர்த்தகர்.

தானே ஆச்சரியமாயிருந்தது. அப்பால் தென்னண்டையிலே யிருக்கிற வெளியண்ட நடுச்சாலையிலே (வராந்தா) போயி அதை ஆச்சரியமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அங்கே யிருக்கச்சே, முன் யிவ்விடத்திலே யிருந்து பங்காளத்துக்குப் போய், முசே லெறியுடனே பங்காளத்திலே யிருந்து கூட வந்த முசே லெனுவார் யென்குற கோன்சேலியேர் யென்னைப் பார்த்து, வியாபாரமாய் இவ்விடத்திலே ஒன்றும் நடக்கிறதாய்க் காணவில்லை. யிவ்விடம் பெகு பஞ்சை பறந்து போச்சென்று சொன்னான். அதுக்கு, "கலாபம், ஷஷாமம் (பஞ்சம்) ரெண்டும் யிந்த ராச்சியத்திலே பிறவேசிச்சு யிருக்க பஞ்சை (பஞ்சம்) பறந்து போறதுக்குக் கேழ்க்க வேண்டியதென்ன? அப்பாலும், ராச காரியத்திலேயும் விழுந்த படியினாலே வியாபார காரியம் மட்டமாச்சுது. யினி மேல் முசே லெறி துரைத்தனத்துக்கு வந்தபடி யினாலே விஸ்தாரமாய் நடக்கும்," யென்று சொன்னேன். அதன் பேரிலே முசெ லெனுவார் சொன்னது, "பங்காளத்திலே யிருக்கிறபோது முசே லெறியுடனே அடிக்கடி உன்னுடைய சேதிகளும் திராணியும் குணத்தையும் நான் சொல்லி யிருக்கிறேன். அதுவுமல்லாமல் கப்பலின் பேரிலே வரச்சேயும் முசே லெறியுடனே சொல்லி யிருக்கிறேன். அவரும் மனப்பூர்வமாய் உன் காரியத்திலே பிறீதியாய்ச் சொல்லியிருக்கிறார். உன்னிடத்திலே அவருக்குத் தயவு ரொம்ப, உன் காரியங்களெல்லாம் மெத்த நன்றாய் நடத்துவார். யெல்லாத்துக்கும் நானிருக்கிறே," னென்று சொன்னார். அதுக்கு நான் அவனுக்குச் சந்தோஷமும் பிறீதியும் வரும்படியாய் உபசாரமாய்ச் சொன்னேன்.

அதின் பேரிலே முசே பொயிலோ கிட்டவந்து, "உன் சேதியாய் யெப்படிச் சொல்ல வேணுமோ அந்தப்படிக் கெல்லாம் சொல்லி யிருக்கிறேன். நீயானால் தொரைத்தனம் பண்ணுகிறவன் அவ்விடம் வலிய அழைச்சுப் பேசினால் உத்திரம் சொல்லுவோம் என்று இருக்கிறதே அல்லாமல், நீயாய் சர்வ காலமும் அனுசரிச்சு யிருந்து சமயம் பார்த்து காரிய சுரூபங்களை அறிக்கை பண்ணி நடத்துவோம் யென்று சொல்லுகிறதில்லை. யிப்படி யெங்கே யாகிலும் உண்டா? உன்னைப் போலே யிப்படி யிருக்கிற பேரை ஒருத்தரையும் நான் கண்டதில்லை. யெனக்கானால் உன் சேதியைச் சொல்லி வாயெல்லாம் வலியெடுத்துது. முசே கொதே யிருக்கிற போதும் யிப்படி அவரா யழைச்சுப் பேசினால் நீ பேசுகிறதே யல்லாமல், நீயாய் ஒரு சேதி பாதிகளும் சொல்லாமல் போனாய். யிப்படி யிருக்கிறது சங்கதி. நான் சொன்னபடிக்கி அனுசரிச்சு நீயாகத்தானே நடத்த வேண்டிய சேதி பாதிகளும் சொல்லி நடத்திக் கொண்டு வா," யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "அவர் மனது யெனக்கு நன்றாய்த் தெரியாதே, ஆனபடியினாலே, யென்ன

சொன்னால் யென்னமாய்த் தோணுமோ யென்று நான் யோசிச்சுப் பார்க்குறதே அல்லாமல், அவர் மனசு தெரிஞ்சால் நான் அவராய்க் கேழ்க்கட்டுமென்று பாத்துயிருப்பேனா? யென் மனசும் யென் காரியமும் (சுபாவமும்) உமக்குத் தெரியாதா?" யென்று உபசாரமாய் அவர் மனசுக்கு சந்தோஷம் வரும்படியாய் சொன்(னேன்).

முசே பொலோவும் முசே லெனுவாரும் ரெண்டு பேரும் யென்னுடனே பேசுகிறதும் நானவர்களுடனே பேசுகிறதும் முசெ லெறி பார்த்துக் கொண்டே யிருந்து, அதின் பேரிலே யென்னை அழைச்சு, "யிது யேது ஒலைகள்?" யென்று கேட்டார். தெற்கே காரைக்காலிலே யிருந்து வர்த்தகர் முதலாகிய சில்லரை பேர்களுக்குத் தபாலிலே வந்ததென்று சொன்னேன். அவரவர் கிட்ட குடுத்துவிடுமென்று சொன்னார். அதின் பேரிலே அவர் காம்பிராவிலே காகிதமெழுதப் போனார். அதன் பேரிலே முசே பெடுத்தல்மீ (அவரது) காம்பிராவிலே உள்ளே போய்ப் பேசப் போனவிடத்திலே, "நாம் காகிதம் அலுவலிலே யிருக்குறோம். யிப்போ சமயமல்ல," வென்று போகச் சொல்லி விட்டார். அப்பால் முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனார். நானும் மெத்தை விட்டு யிறங்கி முசே கில்லியார் யிருக்கிற சாகையே (இடத்துக்குப்) போனேன். அப்போ முசே கில்லியார் சொன்ன சேதி, "முசே லெறியுடய மனது மெத்த அழுத்தமாதலால் காரியங்களை நடத்துவார். அதிலே பிடிச்சு நடத்துகிற போது சிலாந்தமாய்ப் பிடிங்கிப் (கிழி கிழியென்று கிழித்துப்) போடுவார். அப்படிக் கொத்தவராக்கும். ஆனபடியினாலே நீரும் பதறாமல் எல்லாம் ராசி பார்த்துக் கொண்டு காரிய பாகங்களை நடத்தினாலே உம்முட காரிய மெல்லாம் செயமாய் நன்றாய் நடக்கு," மென்று சொல்லி, அப்பால் "நீர் நம்மண்டைக்கு அய்யாயிரம் விராகன் அனுப்பிவிச்சீரே, அதிலே மூவாயிரம் நக்ஷத்திர விராகனும் ரெண்டாயிரம் பறங்கிப் பேட்டையிது. (அது) யிவ்விடத்திலே சிலவாகிறது பிறயாசம். ஆனாலும் ஆனமட்டுக்கும் சிலவு பண்ணிப்போடுவோமென்று உன் வரவு வைத்து ரூபாய் 16,000 பிறத்தியேகமாய்க் கட்டியிருக்கிறேன்," யென்று சொன்னார்.[1]

அதுக்கு நான் சொன்னது, "உமக்கு யென் பேரிலே யிருக்கிற தெயவு அப்படி. நானும் சிறிது விராகனும் பணமும் சென்னபட்டணம் வரைக்கும் அனுப்பி ரூபாயாக மாத்திக் கொண்டு வரச் சொன்னேன். நான் சும்மாயிருக்கயில்லை," யென்று உபசாரமாய்ச் சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு, பூந்தோட்டக் கச்சேரியே வந்து, பனிரெண்டு மணி அடிச்ச பிறகு வீட்டுக்குப் போய் ஸ்நானம் பண்ணி போசனம்

[1] ஆங்கிலப் பதிப்புக்கு மூலமும் ஒரு பிரதியும் பயன்படுத்தினர். பிரதியில் இத்தொகை 19,000 என இருந்ததாம்.

பண்ணி நித்திரை பண்ணுகிறதிலே, துரை அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைத்தான். உடனே போனவிடத்திலே முசே லெறி, நந்திராசா கடுதாசி வந்ததை யென் கையிலே குடுத்து பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச்சொல்லிக் குடுத்தார். அதை வாங்கிக் கொண்டு சென்னப்பட்டணம் கொவற்ணதோர் மேஸ்தர் பிக்கட்டு முன் 14 தேதி பங்குனிக்கு (மார்ச்சு மாசம் 24) யெழுதி அனுப்பிவிச்ச கடுதாசியை முசே பெடுத்தல்மீ யென் கையிலே குடுத்து, அதை பிரான்சு படுத்தினதும் அசலும் முசே லெறி கையிலே குடுத்தேன். அதை வாங்கிக் கொண்டு அவர் சவாரி போனபடியினாலே, (நான்) கடற்கரைக்குப் போய் பூந்தோட்டக் கச்சேரியே வந்து அங்கே யிருந்து வீட்டுக்கு வந்தேன்.

***1755 வருசம், மார்ச்சு மாசம், தேதி 29; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 19; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே யேழு மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே, முசே லெறி கோவற்ணதோர் முதலான கோன் சேலியேர்கள் மத்துமுள்ள ஒப்பிசியால்மார்களும் கோயிலிலே போயிருந்து புதுத் தண்ணீர் புது நெருப்பு உண்டாக்கி (இது ஒரு விழா) மணி அடிச்ச பிற்பாடு, கோயில் சடங்கு முடிச்சுக் கொண்டு வெளியே பிறப்பட்டு கோவற்ணமா மேலே நடுச்சாலையே போய் கோவற்ணதோர் நின்ற உடனே யெல்லாரும் போய் ஆசாரம் பண்ணினார்கள். நானும் போய் ஆசாரம் பண்ணினேன். அப்போ அவர் முசே பெடுத்தல்மீ, முசே தெபறேன், முசே தெலார்ஷு வகையராக்களுடனே பேசிக் கொண்டு யிருந்தார். அப்போ முசே லெனுவர் என்கிறவரும் நானும் தென்னண்டை நெடுஞ்சாலையிலே வியாபார சம்மதிகளாய்ப் பேசிக்கொண்டிருக்கச்சே முசே லதூசு (M. La Touche) வந்து, “முசே லெறி உடைய அருமகு (ஆர்முஸ் என்ற விடத்து) சாம்பிராணி பதினஞ்சு யிருபது பாரம் யிருக்கிறது. நல்ல உடமை அது. யிவ்விடத்திலே வித்துப் போடப் பார்க்க வேணும்” என்று சொன்னார். அதுக்கு நான், “யிவ்விடத்திலே கலாபத்தினாலே ஆற்காட்டுக்கு மத்தத்து (மற்ற ஊர்களுக்கும்) போறது மட்டாய்ப் போச்சுது. யிப்போ சரக்குப் போக்கு வரத்து யில்லாத படியினாலே யிவ்விடத்திலேயும் வாங்கமாட்டார்கள். ஆனால் மோக்காவுக்கு[1] அனுப்பலாமென்று சொன்னதுக்கு, “வருகிற வருஷத்துக்கு அல்லவோ அனுப்ப வேணும். முசே லெறி உம்முடனே சொல்லி யிவ்விடத்திலே தானே வித்துப் போடப்பாரு,” மென்று சொன்னான். அதுக்கு நான் ஊர்ச்சிதமாய்ச் சொல்லக் கூடாதென்று (இயலாதென்று) யிப்படியாகப் பேசிக் கொண்டிருக்கச்சே, முசே லெறி நடுச்சாலையே யிருந்தவர், யென் பேரைச் சொல்லி, “றங்கப்புலே” யென்று கூப்பிட்டார்.

---

[1] அரேபியாவில் உள்ளது.

நான் கிட்டப்போன உடனே, "முசே திலார்ஷு கருங்குழி தாலூக்கு யிங்கிறேசுக்காறருக்கும் நமக்கும் சண்டையாயி யிருக்கிற சம்மதிக்கி 1754 வருஷம் ஒயித்தோபர் மாசம் 11 தேதி நம்முடைய பிரான்சுக்காரர் வசமாய் கருங்குழி தாலூக்கு முன்னூத்தி அறுபதே சில்லரை கிராமம் யிருந்தது. ஒயித்தோபர் மாசம் 15 தேதி யிங்கிறேசுக்காறர் வந்து அமுல் (நிர்வாகத்தில்) கலாபம் பண்ணி(னார்கள்). இது சம்மதி நேத்திய தினம் கோன்சேலிலே சொன்னபடிக்குத் தானே முசே திலார்ஷு கையிலே யிருந்த கடுதாசியிலே யெழுதி யிருக்குது," யென்று சொன்னார். முசே தெலார்ஷு, "யிங்கிறேசுக்காறர் கலாபம் பண்ணினது அப்போ அமுல் பண்ணின வெங்காசி பண்டித(னும்) எளைச்சியப்ப முதலி(யும்) யெழுதின மூணு ஒலையும் கணக்கு றங்கப் பிள்ளை கையிலே யிருக்குது," யென்று சொன்னார். அப்போ முசே லெறி யென்னைப் பார்த்து, "அந்த ஒலையை நீ அவனைக் கேட்டு வாங்கிக் கொண்டு பிரான்சுப் படுத்திக் கொண்டு வா," யென்று சொன்னார். அதுக்கு நான், "ஆயுதமெடுத்துச் சண்டை பண்ணத் தேவையில்லை யென்று நேமிச்ச நாள் முதல் நொவம்புறு மாசம் வரைக்கும் கருங்குழிப் பாளையத்துக் கோட்டையும் மதுராந்தகம் யென்குற கஸ்ப்பா கிராமும், யிது ரெண்டு தவிர, மத்த கருங்குழி தாலூக்கு சீமையிலே உத்தரமல்லூர், வந்தவாசியிலும் வேட்டவலம் வகையிரா யிடங்களிலேயும் அவர்கள் மனுஷர் ஒரு யிடத்திலே யாகிலும் யிருந்து அமுல் யென்று நடத்தினதில்லை. ஒயித்தோபர் மாசம் 15 தேதி முதல் கருங்குழிப் பாளையத்துக் கோட்டையிலேயும் யிருக்கிற (இங்கிலீசுக்காரருடைய) ட்டாணாக்காரர், சிறிது சிப்பாயிகள், பிறப்பட்டு மாடுகள் ஓட்டுகிறதுமாய் கலாபம் பண்ணிக் கொண்டு வந்ததின் பேரிலே, நம்முடைய அமுல்தாரன் அங்கே யிருக்கிற கொஞ்சம் பவுன்சைக் கொண்டு அவர்கள் கிராமமாகிய மதுராந்தகத்தை சப்த்தி பண்ணிவிட வேணுமென்றும், நம்முட கிராமங்களுக்கு யெல்லாம் கொடிகள் கட்டவேணு மென்றும் யெத்தினம் பண்ணி, சமேதாரருக்கு ஒலைகள் யெழுதினதுண்டு," யென்று சொன்னேன். அதிலே முசே தெலார்ஷு யிருந்து கொண்டு, "அது மெய்தான். ஆகொஸ்து மாசத்திலே பாப்பய்யப் பிள்ளை கையிலே யிருந்ததை யென் (பிள்ளை) மாரிபத்திலே பண்ணச்சே கருங்குழி சீர்மையிலே யெழுபது கிராமம் யிருந்தது; ... அப்புறம் முசே ஹெறி (M. Very) என்கிறவர் சிறிது அலுமாஞ்சு சொலுதாதுகளையும் பிரான்சு சொலுதாதுகளையும் கூட்டிக் கொண்டு மரக்காணத்தின் பேரிலே பிறப்பட்டு, சூணாம்பேடு, மரக்காணம் வகையிரா கருங்குழி தாலூக்கு மேலே பிறப்பட்டுப் போனான். யிங்கிறேசுக்காறர் மனுஷராகிய அங்கங்கே யிருந்த மணியக்காரர், சேவுகர் யெல்லாரும் பிறப்பட்டு ஓடிப் போய்விட்டார்கள்" (என்று சொன்னார்).

# ஏப்ரல் 1755

*1755 வருசம், ஏப்றல் மாசம், தேதி 2; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 23; புதவாரம்*

இந்த நாள் காலமே பழயது சாப்பிடுகிற போது குலசேகரம் வெங்கிட்டநாரணப்பய்யன் வந்து சொன்ன சேதி: தான் நேத்தி ராத்திரி வினாயகப் பிள்ளை வீட்டில் போயிருந்ததாகவும், வினாயகப் பிள்ளை கச்சேரி அமர்த்திக் கொண்டு மனுஷரை அனுப்பிவித்து மயிசூர் வைக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யன், முராரி ராயன் வக்கீல் கிஷ்ணப்பன், பாசி ராயன் வக்கீல் பண்டிதன் கோவிந்தன், நாரோசி (நாரோஜி), பழய நயினார் மத்தும் தனக்குச் சினேகமாயிருக்கிற அவரவரையும் தன் மனுஷராயிருக்கிற பேர்களையும் அழைத்து வரச் சொல்லி ஆள் அனுப்பிப் போட்(டான்; அப்போ) முசே பெடுத்தல்மீ துபாசி ராமன் என்கிறவன் வந்து பேசிக் கொண்டிருக்கையிலே, அழைச்சனுப்பின மேலே எழுதப்பட்ட பேரெல்லாரும் வந்ததாகவும், அதன் பேரிலே எல்லாரும் கூடி உச்சாகங்களாயி, யவர்களுடனே வினாயகப் பிள்ளை, 'தனக்குப் பெரிய துபாசித்தனமும் பாப்பய்யப் பிள்ளைக்குச் சீர்மையும் (கிடைத்தது); முசே பெடுத்தல்மீ இந்தப் படிக்கி பேசித் தீத்து (இருக்கிறார்); நாளைக்குத் துரை வெகுமானம் குடுக்கிறார். ஆகையால் நீங்களெல்லாரும் பேட்டிக்கி வாருங்கோள்; நாளை அன்றைக்கு கும்பினீர் வர்த்தகரையும் மகாநாட்டாரையும் பேட்டி பண்ணிவிக்குறோம்,' யென்று பின்னையும் தன்னுடைய சாமர்த்தியங்களை அனேகமாய்ச் சொல்லி, அதன் பேரிலே அங்கி குடுக்கிறவனுக்கு அங்கி, தலைப்பாகை கொடுக்கிறவனுக்குத் தலைப்பாகை யிதுகளெல்லாம் குடுத்து, துரைக்கு நசர் வைத்துக் குடுக்கிறதுக்கு அவரவருக்கு மொகராக்களும் (மோகர் என்கிற தங்க நாணயம்) ரூபாய்களும் குடுத்து பெரிய துபாசித் தனம் குடுத்தால் பெகுமானம் வேறே, பிறம்பு மாத்திரம் குடுத்தால் அதுக்கு வெகுமானம் வேறே, யிதுவுமல்லாம லிருந்தால் சீரொப்பா மட்டும்; யிவ்வளவும் வேறே வேறே யெடுத்துக்கட்டி எல்லாரையும் ஆறுமணிக்குத் தானே வரச் சொல்லித் திட்டம் பண்ணினான்," யென்று சொன்னான். அதுக்கு நான், "நீர் தானே யிப்போதும் போயி திட்டமாய் விசாரித்துச் சேதி கொண்டு வாரு," மென்று சொன்னேன். அவர் போயி யெல்லாம் விசாரிச்சுக் கொண்டு வந்து சொன்ன சேதி: சகலமான பேரும் வினாயகப் பிள்ளை வீட்டுக்கு வந்ததாகவும், எல்லாரையும் கூட்டிக் கொண்டு மெத்த சந்தோஷத்துடனே கோட்டைக்குப் போனானென்றும் சொன்னார். நல்லதென்று அந்தச் சேதியைக் கேட்டுப் போட்டு நானுங் கோட்டைக்குப் போற போது, முசே பெடுத்தல்மீ வீட்டிலே சகலமான பேரும் யிருந்தார்கள்.

அதைப் பார்த்துக் கொண்டு நான் கோட்டைக்குப் போனேன். நான் போனவுடனே துரை பிறப்பட்டு அவரவரை மெனவுகிற நிமித்தியம், முன்னே கப்புசுக் கோயிலுக்குப் போயி, அப்புறம் மிசியோனேர் – (missionaire) கோயிலுக்குப் போயிக் கோட்டைக்கு வந்து, மேல்வீட்டின் பேரிலே போனார். நானும் போய்க் கண்டு ஆசாரம் பண்ணிப் போட்டு அங்கே யிருக்கிற(போது) வெள்ளைக்காறருடனே துரை பேசிக் கொண்டிந்தார். அப்போ பேசி யிருந்த பேர் முசே தெபறேன், முசே லெனுவார், முசே குப்பி, முசே துபுவா (M. Dubois), முசே புரி (M. Bury) வகையராக்கள்...

அப்போ முசே பெடுத்தல்மீ வந்தார். நான், கும்பினீர் வர்த்த(ர்களை) அழைப்பித்துப் பேட்டி பண்ணிவிக்க வேணுமென்று சொன்னதுக்கு, அவர் சொன்னது, "சாயங்காலம் (நான் துரையோடு) பேசி நாளைக்குப் பேட்டி பண்ணிக்கொள்ளலா மென்று பெடுத்தல்மீ சொன்னார்.[1] நல்லதென்று அவர்களை அனுப்பிவிட்டு யிருக்கிறதிலே வினாயகப் பிள்ளையும் மயிசூர் வைக்கீல், முராரி ராயன் வைக்கீல் முதலாகிய பேரும் வந்தார்கள். அப்போ துரை காம்பிராவிலே போனார். முசே பெடுத்தல்மீயும் கூடப் போயி பேசிக் கொண்டு யிருக்கச்சே, முசே தெபறேனும் முசே லெனுவாரும் கூடயிருந்தார்கள். அப்படி யிருக்கையிலே நான் துரை கிட்டப் போயிருந்தேன். அப்போ முசே பெடுத்தல்மீ துரையுடனே வைக்கீல்களெல்லாம் வந்திருக்கிறார்களென்று சொன்னார்.

அப்போ துரை யென்னைப் பார்த்து, "அவர்களை அழைத்துப் பேட்டி பண்ணி வை," யென்று சொன்னார். அப்போ சீனுவாசராயனை அனுப்பி (அவர்களை) அழைக்கச் சொன்னேன். சீனுவாசராயன் போயி அழைத்தவுடனே, வினாயகப் பிள்ளை போயி நீங்கள் போக வேண்டாமென்று சொன்னான். அப்போ மயிசூர் வைக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யன் தமிழனானபடியினாலே நடக்கிற சேதியைப் பார்த்துக் கொண்டு, வினாயகப் பிள்ளை சொல்லுகிறதிலே சாரமில்லை யென்று தெரிந்து கொண்டு, அவர் அழைக்கிறதிலே போகாமல் யிருக்கப் போகாது யென்று யெழுந்திருந்து வந்தார். அவர் பிறகே முராரி ராயன் வைக்கீலும் பாசி ராயன் வக்கீலும் வந்தார்கள். வந்து மயிசூர் வைக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யனும் கிருஷ்ணராயனும் பதினோரு மோகரா வீதமும், பாசி ராயன் வைக்கீல்[2] ஏழு மோகராவும் துரைக்கு நசர் வைத்துக் கண்டவுடனே, நான் அந்த நசரைக் கையிலே எடுத்துக் கொண்டு மூணு பேரையும் நாற்காலியிலே யிருக்கச் சொன்னேன்.

---

[1] இங்கு ஆங்கிலப் பதிப்போடு நமது தமிழ்ப் பிரதி மாறுபடுகிறது.
[2] பிரதி எழுதியவர்கள் வைக்கீல் என்று பலவிடங்களில் எழுதியுள்ளார்கள்.

அதின் பேரிலே நான் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன். அதன் பிறகு சின்னு முதலியார்[1] போயி துரையுடனே பேசியிருந்து வந்தார். அதன் பேரிலே நான் வீட்டுக்கு வந்த பிற்பாடு கறுப்பு முத்தய்யன் தம்பி வினாயகன் பேரிலே பித்திசாம் யெழுதி, துரை பல்லாக்கும் பேரிலே ஏறிப் போகச்சே கொடுத்ததாகவும், துரை வாசித்துக் கொண்டு வைத்துக் கொண்டதாகவும் சேதி சொன்னான்.

அதன் பிறகு நாலு மணிக்கு முசே ரெனே வந்தான் (M. Reyne). அவனைக் கூட்டிக்கொண்டு (வைத்துக் கொண்டு) முசியே கொதே அவர்கள் போன பிறகு முசியே லெறி[2] அவர்கள் வரந்தனியும் நடந்த சேதிகளெல்லாம் பிரான்சிலே யெழுதி வைத்தேன். அதிலே பின்னையும் ரெண்டொரு சேதி யெழுதவேண்டியிருந்தது. அதையும் யெழுதிவிச்சு, இது வரையிலே என் கையிலே அவரவர்கள் எழுதிக் கொடுத்த பித்திசாமெல்லாம் எடுத்துக் கொண்டு போகவேணும் யென்று பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து முசே றெனே கையிலே எழுதவேண்டிய சேதிகளும் எழுதிவிச்சு,[3] அவனையும் வீட்டுக்கு அனுப்பிப் போட்டு, நானங்கே யிருக்கையிலே, முசே தெபறேன் சேதி சொல்லி அனுப்பினது யென்ன வென்றால், "நாளை நன்றைக்கு (நாளைக்கு மறுநாள்) மகாநாடு (மகாநாட்டார்) சந்திப்பாகிற போது உமக்கும் வெகுமானம் கொடுக்கத் தக்கதாகத் துரையுடனே சொல்லித் திட்டம் பண்ணிவிக்கிறேன். உமக்கு யெப்படி நடத்திவிக்க வேணு," மென்று கேட்டு அனுப்பினதுக்கு, நான் சொல்லி அனுப்பினது, "எனக்கு சகலமான மேன்பாடும் குடுத்தே யிருக்கிறார்கள். ஆனாலும் யினிமேல் எப்படி நடத்த வேணுமென்றால், நான் தமிழருக்கெல்லாம் கொவற்ணதோரா யிருக்கிற படியினாலே எனக்குக் கோட்டை வாசல், கெவுனி வாசல்களிலே தம்பூறு அடிக்கத் தக்கதாக அதுக்கு எந்த விதமாய் நடத்த வேணுமோ அந்த மரியாதை துரைக்கும் உமக்கும் அல்லோ தெரியும். அந்தப்படிக்கி நீர் துரையுடனே யோசனை பண்ணி நடக்கத் தக்கதாய்ப் பண்ணினால்... நான் உம்மை மறக்கத் தக்கதில்லை," யென்று உபசாரமாய்ச் சொல்லி யனுப்பி வைச்சேன்.

[1] கனகராய முதலியாரின் தம்பி தானப்ப முதலியார் சின்ன முதலியார் எனவும் அழைக்கப்பட்டார்.

[2] இது முசே வெறி என்று பிரதியில் தவறாக உள்ளது.

[3] ஆனந்த ரங்கப் பிள்ளையின் இந்த பிரெஞ்சுக் கடிதம் 1755 மார்ச் 29 தேதியிட்டு ஆளுநர் லெரிக்கு ஏப்ரலில் கொடுக்கப்பட்டது. மேலே சொல்லப்பட்ட விவரங்களையே அது தெரிவிக்கிறது. இக்கடிதம் கல்லியோ மொண்ப்ரேன் (Gallios Montbrun) வசம் புதுச்சேரியிலிருந்தது. அது 1916 புயல் மழையில் சேதமுற்றது. எனினும் அதைப் பெற்று ஆங்கிலப் பதிப்புத் தொகுதி 9இல் இணைத்துள்ளது பாராட்டத் தக்கது.

மனதை நானெப்படி அறிந்து சொல்வேன்? முன்னாலே முசியே லெனுவார், முசே தும்மா, முசே துப்பிளேயிக்சு யிவர்களெல்லாம் யெனக்கு மனதுக்கேற்க பரவசங் கொடுத்துப் பேசி வந்த படியினாலே நானும் அவரவர் மனதுவர நடந்துக் கொண்டேன். நானொரு ஆலோசனைக்காரர் (கோல்சேலியேர்) வீட்டுக்குப் போறவனல்ல, ஒருத்தரை அனுசரிக்கிறவனல்ல. துரை யுண்டு நானுண்டு அவ்வளவே, அன்னிலே பின்னை ஒருத்தரை நசர் வைத்து நான் அவர்கள் வீட்டுக்குப் போறதில்லை. யிப்போதும் முசே துப்பிளேயிக்சு பேரிலே சகலமான பேரும் பித்திசாமெழுதி முசே கொதே அவர்களுக்குக் குடுத்தார்கள். இந்த வினாயகனும் பித்திசாமெழுதிக் குடுத்தான். முசே கொதே அவர்களும் என்னை அழைத்து வேண்டியதெல்லாம் கேட்டார்கள். நான் பித்திசாமெழுதிப் போட்டவனுமன்று, சேதி சொன்னவனு ம்ன்று. அந்தச் சேதி கடைசியிலே முசே துப்பிளேயிக்சுக்குப் போனபோது எனக்கென்ன சொல்ல வேணுமோ அந்த சாரஞ் சொல்லிப் போனார். ஆகையாலே நான் துரைத்தனம் பண்ணுகிற பேருக்கு ரொம்ப சரீரப் பிறயாசைப்பட்டு, அவர்கள் மனதுக்கு (திருப்தி) வரும்படிக்கி, பிறயோசனங்கள் வரும்படி பண்ணிக் கொடுத்து எனக்குப் பிறதிஷ்டை மாத்திரம் போதும் யென்று இருக்கிறவன். ஆகையாலே யிப்போவும் நீங்களும் என் மனது சமாதானம் ஆகும்படிக்கி எனக்கேற்பப் பரவசம் தந்து ஒருத்தருடைய பேச்சுக் கேளாமல் நான் சொன்னபடிக்கி நடத்தி வந்தீர்களானால், உங்கள் மனது வரும்படியாய் பிறயாசைப்பட்டு நடந்து கொள்ளுவேன்," யென்று சொன்னேன். அதுக்கவர் சந்தோஷத்துடனே ரொம்ப ஆதரவான வார்த்தைகளெல்லாம் யென்னுடைய மனது பரவசம் தோணத் தக்கதாகச் சொல்லி, சுவாமி மத்தியஸ்தமாக யெப்படிச் சொல்லவேணுமோ அப்படியும் சொல்லி, "யினி மேல் உன்னுடனே சொல்லாமல் உன் அனுமதி அன்னிலே ஒரு காரியமும் நடத்துகிறதில்லை," யென்று கெட்டியாய்ச் சொன்னார். அதின் பேரிலே நான் துரையுடனே சொன்னது : "நீர் மாத்திரம் நான் சொன்னபடிக்கி ஒவ்வொரு யினமாய் அசையும்; நான் அந்த வழியிலே வெகு பிறயோசனமாகும் படியாய் நடத்தி விக்குறேன்," யென்று, யிந்த வூரிலே யிருக்கிற பேர்களுடைய நடத்தைகளும் அவரவர் சம்பாத்தியங்களும் அதுக்கிருக்கிற சாதகங்களும், காரைக்கால் சம்மதிகளும் மச்சிலிபந்தர் சம்மதிகளும் சகலமும் விஸ்தாரமாய் துரைக்கி நன்றாய்த் தெரியும் படியாய்ச் சொல்லி வில்லியநல்லூர், பாகூர் சம்மதியும் காரைக்கால் கிராமங்கள் நாலு மாகாணச் சம்மதியும் சொன்னேன். அதுக்குத் துரையவர்கள், "நாளை உதயத்திலே ஆறரை மணிக்கியெல்லாம் நீ வா. நீயும் நானும் பேசிக் கொண்டு யெது காரியம் யெப்படி நடத்த வேணுமோ அந்தப்படி நடத்துகிறே," னென்று சொல்லி அனுப்பினார்.

அதின் பேரிலே நான் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன். அதன் பிறகு சின்னு முதலியார்[1] போயி துரையுடனே பேசியிருந்து வந்தார். அதன் பேரிலே நான் வீட்டுக்கு வந்த பிறபாடு கறுப்பு முத்தய்யன் தம்பி வினாயகன் பேரிலே பித்திசாம் யெழுதி துரை பல்லாக்குப் பேரிலே ஏறிப் போகச்சே கொடுத்ததாகவும், துரை வாசித்துக் கொண்டு வைத்துக் கொண்டதாகவும் சேதி சொன்னான்.

அதன் பிறகு நாலு மணிக்கு முசே ரெனே வந்தான் (M. Reyne). அவனைக் கூட்டிக்கொண்டு (வைத்துக் கொண்டு) முசியே கொதே அவர்கள் போன பிறகு முசியே லெறி[2] அவர்கள் வரந்தனியடம் நடந்த சேதிகளெல்லாம் பிரான்சிலே யெழுதி வைத்தேன். அதிலே பின்னையும் ரெண்டொரு சேதி யெழுதவேண்டியிருந்தது. அதையும் யெழுதிவிச்சு, இது வரையிலே என் கையிலே அவரவர்கள் எழுதிக் கொடுத்த பித்திசாமெல்லாம் எடுத்துக் கொண்டு போகவேணும் யென்று பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து முசே றெனே கையிலே எழுதவேண்டிய சேதிகளும் எழுதிவிச்சு.[3] அவனையும் வீட்டுக்கு அனுப்பிப் போட்டு, நானங்கே யிருக்கையிலே, முசே தெபறேன் சேதி சொல்லி அனுப்பினது யென்ன வென்றால், "நாளை நன்றைக்கு (நாளைக்கு மறுநாள்) மகாநாடு (மகாநாட்டார்) சந்திப்பாகிற போது உமக்கும் வெகுமானம் கொடுக்கத் தக்கதாகத் துரையுடனே சொல்லித் திட்டம் பண்ணிவிக்கிறேன். உமக்கு யெப்படி நடத்திவிக்க வேணு," மென்று கேட்டு அனுப்பினதுக்கு, நான் சொல்லி அனுப்பினது, "எனக்கு சகலமான மேன்பாடும் குடுத்தே யிருக்கிறார்கள். ஆனாலும் யினிமேல் எப்படி நடத்த வேணுமென்றால், நான் தமிழருக்கெல்லாம் கொவற்ணதோரா யிருக்கிற படியினாலே எனக்குக் கோட்டை வாசல், கெவுனி வாசல்களிலே தம்பூறு அடிக்கத் தக்கதாக அதுக்கு எந்த விதமாய் நடத்த வேணுமோ அந்த மரியாதை துரைக்கும் உமக்கும் அல்லோ தெரியும். அந்தப்படிக்கி நீர் துரையுடனே யோசனை பண்ணி நடக்கத் தக்கதாய்ப் பண்ணினால்... நான் உம்மை மறக்கத் தக்கதில்லை," யென்று உபசாரமாய்ச் சொல்லி யனுப்பி வைச்சேன்.

---

[1] கனகராய முதலியாரின் தம்பி தானப்ப முதலியார் சின்ன முதலியார் எனவும் அழைக்கப்பட்டார்.

[2] இது முசே வெறி என்று பிரதியில் தவறாக உள்ளது.

[3] ஆனந்த ரங்கப் பிள்ளையின் இந்த பிரெஞ்சுக் கடிதம் 1755 மார்ச் 29 தேதியிட்டு ஆளுநர் லெரிக்கு ஏப்ரலில் கொடுக்கப்பட்டது. மேலே சொல்லப்பட்ட விவரங்களையே அது தெரிவிக்கிறது. இக்கடிதம் கல்லியோ மொண்ப்ரேன் (Gallios Montbrun) வசம் புதுச்சேரியிலிருந்தது. அது 1916 புயல் மழையில் சேதமுற்றது. எனினும் அதைப் பெற்று ஆங்கிலப் பதிப்புத் தொகுதி 9இல் இணைத்துள்ளது பாராட்டத் தக்கது.

***1755 வருசம், அப்றில் மாசம், தேதி 3; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 24; குருவாரம்***

முசே தெப்றேனுக்கு நேத்து ராத்திரி நான் சொல்லி அனுப்பினதுக்கு மறு சேதி அவர் சொல்லி அனுப்பினது : "துரையவர்களிடத்திலே தீனிக்கு வந்த விடத்திலே தாமும் முசே பொலோவும் பிறஸ்தாபம் பேசிக் கொண்டு வந்த விடத்திலே யெப்போதும் துரைத்தனத்துக்கு வந்தவர்கள் குடுத்தியேருக்கு (Courtier) கும்பினீர் வர்த்தகர் பேட்டியின் போது வெகுமதி பண்ணுவார்கள். நாளை கும்பினீர் வர்த்தகர் பேட்டிக்கி வருகிறார்களே அப்போ நீங்களும் வெகுமதி குடுத்தியேருக்குப் பண்ணவேணு மென்று சொன்னோம். அதுக்குத் துரை யென்ன பண்ண வேணும் யென்று கேட்டார். அதுக்கு நாங்கள் சொன்னது துறாயி, சிறப்பேசு (Turra, Sarpech), சறப்பள்ளி, பதக்கம், சிகப்பு முதல் ரகம் சகலாத்திலே நாலு சிப்பமும், கெசம் முப்பது வராகன் விலையாயிருக்கிற சீர்மை யெக்தோப்புதோர் (பொன் வேய்ந்த துணி) சுருட்டியிலே பதினெட்டு கெசமும் குடுத்து, பதினஞ்சு பீரங்கியும் போடுகிற தென்று சொன்னோம். அப்படியே நாளைக்குச் செய்கிறோம் யென்று சொன்னார். நீர் சொல்லி யனுப்பினதை[1] முன்னே நாங்கள் அறிஞ்சு யிருந்தால் அதுக்கு யோசனை பண்ணலாம் (அதை ஆலோசனை பண்ணியிருப்போம்). நாங்களறியோமே! இனி மேலந்தப் பேச்சு சொல்லக் கூடாது (சொல்ல முடியாமல் போச்சுது)," என்று நேத்து ராத்திரியே சொல்லி அனுப்பிவிச்சு, யித்த நாள் காலமே கோட்டைக்கு வந்து அவர்கள் யிதுகளெல்லாம் முஸ்தீது பணணிக் கொண்டிருந்தார்கள்.

அப்படி யிருக்கையிலே நானும் கும்பினீர் வர்த்தகரையும் புது நயினாரையும் புகையிலைக் கிடங்கு பாப்புராயனையும் கூட்டிக் கொண்டு எல்லாரும் ஏழு மணிக்கிக் கோட்டைக்கு வந்து எட்டு மணிக்கி துரையவர்களைப் பேட்டி பண்ணி விச்சோம். பேட்டி பண்ணிவிச்ச வயணம்: கும்பினீர் வர்த்தகர் நூறு விராகனுக்குப் பிடவையும், இற நூத்திருவது விராகனுக்கு ஒரு வச்சிர மோதிரமும் வைத்துக் கண்டார்கள். நம்முடைய அப்பாவு சீமா நிமித்தியம் யிறநூறு விராகன் நசர் வைத்துக் கண்டான். சலது வெங்கிடாசல செட்டி அன்பது விராகனும் ஒரு பட்டு சுருட்டியும் வைத்துக் கண்டான். பாப்புராயன் அன்பது விராகன் வைத்துக்கண்டான். நயினார் சீனா மடிப்பு ஒரு பட்டு மடிப்பு வைத்துக் கண்டான். யிப்படி யெல்லாரும் கொடுத்துக் கண்டவுடனே துரையவர்கள் தம்முடைய கையினாலே எனக்குச் சறப்பளியும் பதக்கமும் கழுத்திலே போட்டு, துராயுங்கட்டி, சிறுப்பேசும் கட்டி, முதல் தரம் நாலு சிப்பம்

[1] இது தம்பூறு அடித்தல் பற்றியதாக இருக்க வேண்டும்.

சகலாத்தும் குடுத்து, யெக்தோப்புதோர் பதினெட்டு கிசமும் குடுத்து பதினஞ்சு பீரங்கியும் போடச்சொல்லி, மத்தப் பேர்களுக்கெல்லாம் பன்னீர் பாக்கு வெத்தலை குடுத்து, சகலமான பேரும் றங்கப்பன் கீழே, அவர் ஆணை ஆக்கினையிலே உள்பட்டு நடந்து கொள்கிறது யென்று சொல்லி அனுப்பிவிச்சார். யெல்லாரையும் கூட்டிக் கொண்டு அந்த வெகுமானத்துடனே நான் வீட்டுக்கு மேளதாளஞ் சகல சம்பிறமத்துடனேயும் வந்து எல்லாருக்கும் பாக்கு வெத்திலை கொடுத்து, அவர்(கள்) கையிலே அனுப்பிவிச்சுக் கொண்டு யிருக்கையிலே, துரையவர்கள் அழைக்கிறார்களென்று நாலு பேர் சோபுதாரரும் ஒரு சேர்வைக்காரனும் வந்தார்கள்.

உடனே பிறப்பட்டுப் பல்லக்கும் பேரிலே யேறிக் கொண்டு கோட்டைக்குப் போயி துரையவர்களைக் கண்ட விடத்திலே துரையவர்கள் சொன்ன சேதி: கருங்குழிப் பாளையத்திலிருந்து ஒயித்தோபர் மாசம் 3 தேதி ஒலை வந்தது. (அதை) பிரான்சுப் படுத்தி நான் முசே பெடுத்தல்மீக்கி நடந்த சேதிகளெல்லாம் யெழுதி வைத்து யிருந்ததும், துரை கையிலே குடுத்திருந்தோமே அந்த வயணங்களை(யும்) யென்னை சவிஸ்தாரமாய் தெரியச் சொல்லச் சொல்லிக் கேட்டார். அதுக்கு நானப்போ கணக்கு றங்கப்ப முதலி அமுலானதினாலே அவரைக் கேழ்க்க வேணும், அவருக்கு நன்றாய்த் தெரிந்திருக்கும் யென்று சொல்லி, அவரைத் தாகலா பண்ணிவிட்டோம் (வரச் சொன்னோம்). அப்போ அவர் சாயங்காலம் வந்து சொல்லுகுறேனென்று சொன்னார்.

அதன் பேரிலே துரையவர்கள் என்னை அழைத்துக் கொண்டு யேக தேசத்திலே (தனியிடத்தில்) அப்பாலே போயி வில்லியநெல்லூர், பாகூர் சேதி யென்ன, காரைக்கால் சேதி யென்ன வென்று கேட்டார். அதுக்கு நான், "முசே கொதே அவர்கள் முசே பொலோ நிமித்தியம் யிந்த யிரண்டு சம்மதியும் வெங்கிடாசல செட்டி முகாந்திரமாய் நடத்தி வைக்கச் சொல்லி யெழுதி யிருந்தார்கள். அந்தப்படிக்கி வில்லியநெல்லூரும் பாகூரும் யிருபதினாயிரம் விராகனும், காரைக்கால் நாலு மாகாணமும் ரூபா எண்பதினாயிரமுமாகப் பேசியிருந்தோம். அப்போது காரைக்காலிலே யிருந்த நாலு மாகாணமும் சின்னு முதலியார் குத்தகையாயிருக்கிற திருமலைராயன் பட்டணமும் கீழ்வெளியும் சுங்கமும் யிவ்வளவும் காரைக்காலிலே யிருக்கிற பேர் லக்ஷத் திருபதினாயிரம் ரூபாயாய்க் கேழ்க்கிறார்கள் யென்று முசே பொறுஷே (M. Porcher) எழுதியனுப்பினான். அதுக்கு வெங்கிடாசல செட்டி லக்ஷத்தி முப்பது மட்டுக்கும் பேசியிருந்தான். யிப்படி யிருக்கையிலே முசே கொதே அவர்கள் சீர்மைக்குப் பயணம் போனார்கள். யிப்பால் முசே திலார்ஷும் முசியே பொருஷேத்தும் (அல்ல, தெபொசேத் – du Bausset)

யோசனைபண்ணி, முசேயே துப்பிளேயிக்சு சாகீர் உள்பட றங்கப்ப முதலி வசமாயிருக்கிறது. ஆகையினாலே வில்லியநெல்லூர், பாகூர் தாலூக்கா பின்னை ஒருத்தர் கையிலே கொடுப்பிக்கப் போகாது, வினாயகப் பிள்ளை வசமாய்க் கொடுப்பிக்க வேணும் யென்று முசியே பெடுத்தல்மீயுடனே பேசி வில்லியநெல்லூரும் பாகூரும் யிருபத்தி மூவாயிரம் விராகனாப் பேசினார்கள். அப்போ முசெ பெடுத்தல்மீயும் சம்மதித்து கோன்சேலிலே பேசினார்கள். அப்போது முசே கில்லியாரும் முசே பொலோவும் முசெ தெபறேனும் (அதற்கு மறுப்பு தெரிவித்து), முசே கொதே அவர்கள் போன போது வில்லியநெல்லூர், பாகூர், காரைக்கால் யிந்த சம்மதி வெங்கிடாசல செட்டி முகாந்திரமாய்ப் பேசிப்போட்டுப் போனார். இது கோவற்ணதோராயிருக்கிற முசியே வெறி (தவறு, லெறி என்றிருக்க வேண்டும்) வந்தல்லோ தீத்துக் கொடுக்க வேணும், அதுக்கு நாம் யெப்படி தீத்துக் குடுக்கிற தென்று பேசினார்கள். ஆனால் முசியே வெறி (லெரி) அவர்கள் வரட்டும் என்று நாலு நாள் போட்டு விச்சு, அதின் பேரிலே திரும்பவும் கோன்சேலிலே முசே பெடுத்தல்மீ யிந்தப் பிறஸ்தாபம் நடத்தி, யேலம் போடுவோமென்று பேசினார்கள். அப்படி யிருக்கையிலே நீங்கள் வந்தீர்கள். நீங்களும் வந்து யேலம் தானே போடச் சொன்னீர்கள்." ஆகையினாலே முசே கொதே அவர்கள் சொல்லிப் போட்டுப் போன சேதி யிப்படி யென்று முசியே லெறி அவர்கள் மனது வரும்படியாய்ச் சிறிது சம்மதிகளும் சொன்னோம்.

அதின் பேரிலே அவர் மெத்த ஆலோசனையாயி, "யிப்படி யிருக்கிற காரியம் நீயேன் என்னுடனே சொல்லாமல் போனாய்?" யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "நான் உம்முடைய மனது அறியேன். அதினாலே நான் சொல்லவில்லை. யென்னுடைய பகுறுதி (வாடிக்கை) வந்து துரைத்தனம் பண்ணுகிறவர் மனசு யெப்படியோ அப்படி அவர் மனது வர நடந்து கொண்டு போறதே யல்லாமல், பின்னை யொருத்தரை நான் யெண்ணி நடத்துகிறதில்லை," யென்று சொன்னேன். அதுக்குத் துரை சொன்னது, "யேலம் போட்டு விட்டோமே, அரும்பாத்தை இருபத்தீராயிரத்தி நூறாய் கேட்டானே (22,100), யிருபத்தி மூவாயிரத்துக்கு மேல் எவ்வளவாகிலும் வைச்சல்லோ தீற்கவேணும். அப்படித் தீத்தாலும் ஏலத்தில் அல்லவோ போட்டுயிருக்கிறது. அதுக்கு காரைக்காலும் வெங்கிடாசல செட்டி பேரும் யென்னத்துக்கு? அது கூட யெல்லாம் உன் பேருக்குத் தானே எழுதி வைத்துப் போட்டு (விடலாம்)," யென்று சொன்னார். அதுக்கு நான், "முசியே கொதே அவர்கள் முசே பொலோ (சிபாரிசின்படி) சொன்னதினாலே வெங்கிடாசல செட்டி பேரைச் சொல்லி விச்சேன். இப்பால் நீங்களெப்படிச் சொல்லுகிறீர்களோ அப்படிக் கேழ்க்கிறேன்," யென்று சொன்னேன். அதுக்கு, "உன் பேரை வைக்க வேணும். ஏலத்திலே போட்டு விட்டோமே யெப்படி?" யென்கிற தாய்ச்

சொல்லி சக்கிறத்தேரைக் கூப்பிட்டார். அவர் வந்தார். அவருடனே ரெண்டொரு நாழிகை நேரம் யோசனை பண்ணி தீனிக்குப் போனார். அப்புறம் அவரை அனுப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

***1755 வருசம், அபிறேல் மாசம், தேதி 4; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 25; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலமே யேழு மணிக்கு கோட்டைக்குப் போயி துரை அவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அவர் யேகதேசத்திலே யிருந்து கொண்டு சேதிகளென்ன யென்று கேட்டார். அப்போது யென் கையிலே யிருந்த கறுப்பு முத்தையனை வினாயகப் பிள்ளை காவல் பண்ணினவுடனே அவனெழுதிக் கொடுத்த பித்திசாம் ஒன்று, அவனை (முசே கொதே) கண்டிப்பு பண்ணுகிறபோது அவன் சித்தப்பன் பங்காரு என்கிறவன் யெழுதிக் கொடுத்த பெத்திசாம் ஒன்று; அதிலே முசியே கொதே அவர்கள் இந்தக் காரியம் றங்கப்பன் நன்றாய் விசாரித்து வந்து சொல்லச் சொல்லி கையெழுத்துப் போட்டு என்னண்டைக்கு அனுப்பினதும், கறுப்பு முத்தைய்யனும் பரசுராமப் பிள்ளையும் யெழுதிக் கொடுத்த பித்திசாம் ஒன்று; ஆக மூணு பித்திசாமும் துரை கையிலே கொடுத்து, யிப்படி "முசியே கொதே அவர்கள் யென்னை விசாரிக்கச் சொல்லி யென் வசமாய் (எனது காவலில்) கறுப்பு முத்தய்யனை ஒப்புவிச்சு யிருந்தார். நானும் அந்தப்படிக் கெல்லாம் விசாரித்துக் கொண்டுயிருக்கையிலே முசியே கொதே பயணமாய்ப் போனார். அதின் பிறகு வினாயகப் பிள்ளை நம்முடைய வீட்டிலே யிருந்த முத்தய்யனை யென்னையும் கேளாமல் சேவுகரை அனுப்பிக் கோட்டைக்குக் கூட்டிக் கொண்டு வரச் சொன்னான். அந்தச் சேதி நான் அறிந்து முசே பெடுத்தல்மீயும், முசியே பொலோவும் வகையராக்களிருக்கிறதிலே அவர்கள் கிட்டப் போய் வினாயகப் பிள்ளை நடத்தின சேதியைச் சொன்னேன். அதுக்கு முசே பெடுத்தல்மீ, வினாயகப் பிள்ளையை அழைப்பிச்சார். வீட்டிலே யிருந்தாலும் ரங்கப்பனுக்கு அழைப்பிக்க அதிகாரமுண்டு. அப்படியிருக்க நீ யவனுக்குச் சொல்லாமல் அவன் வீட்டிலே யிருக்கிறவனை நீ சேவுகரை அனுப்பி எப்படிக் கூட்டி வரச் சொல்லுவாய்? உன்னைக் கட்டி வைத்து அன்பது அடி அடிக்கிறேன்," என்று சொன்னார்.

சொன்னதே அடித்ததுக்குச் சரியென்று அவருக்கு ஆசாரம் பண்ணிக் கொண்டு வந்து விட்டேன். அதன் பிறகு இரண்டு நாள் பொறுத்து, முசே பெடுத்தல்மீ தானே கறுப்பு முத்தய்யனைப் பிடித்து வரச் சொல்லிக் கசோத்திலே போட்டு வைத்தார். இன்னம் கசோத்திலே தானே கிடக்கிறான். நேத்தெல்லாம் அவனைச் சோத்துக்குக் கூட

விடவில்லை. இந்த வினாயகன் கும்பினீர் உடமையை சறுவாங்கமும் கொள்ளையிட்டுத் திருடி, அவரவருக்கு வாய் பூசி, யிவன் நடத்தின காரியங்கள் மெத்த வுண்டு. இதல்லாமல், முசியே துய்ப்பிளேக்சு அவர்கள் பயணம் (போன) போது, தான் லட்சத்திப் பதினாயிரம் ரூபா மட்டுக்கும் கொடுத்தேன் யென்று முசே கொதே அவர்கள் கையிலே பித்திசாமும் எழுதிக் கொண்டு வந்து குடுத்தான். இப்படிக் கொத்தவன் இவன் பேச்சைக் கேட்டு முசே பெடுத்தல்மீ கறுப்பு முத்தய்யனைக் கசோத்திலே போட்டு சோத்துக்குக் கூட விடாமல் போட்டிருக்கிறாரென்று சொன்னதுக்கு, துரை வெகு கோபம் பண்ணி, "யிவனாரிவன் முசே பெடுத்தல்மீ? யிவனா ரிவனுக்கு என்ன காரியம்? வினாயகன் யெழுபது பேர் கணக்குப் பிள்ளைகளிலே யிவனொருத்தன். இவனுக்குப் பல்லக்காவது யேது, அரிகையாவது யேது? இவனுக்குக் கொடுத்தவன் ஆர்? இவன் காவல் பண்ணவும் அடிக்கவும் அத்தனைக்கு அதிகாரங் கொடுத்தவன் ஆர்?" யென்றும், மெத்தவும் அவர்கள் பேரிலே உத்தாரம் சொன்னார்.

அதின் பேரிலே, நான் காரைக்கால் சேதிகளும் பந்தர் (மசூலிப் பட்டணம்) சேதிகளும் உள்ளூர் சேதிகளும் விஸ்தாரமாய் எப்படி எப்படிச் சொல்ல வேணுமோ அப்படி யெல்லாம் சொல்லி, அதின் பேரிலே துரையைப் பார்த்து, "நானொரு சேதி சொல்லுகிறேன். காரியங்களானால் வெகு காரியங்களிருக்கிறது. நீங்கள் மனது வைத்து ஆருக்கும் யிடங் கொடாமல் கண்டிப்பு மேலே, நான் சொன்னபடிக்கிக் கேட்டு நடத்தினால் உமக்கும் வெகு பிறயோசனமாகும், கும்பினீருக்கும் வெகு பணம் கூடிவரும். உமக்கும் கும்பினீரிலே வெகு கீற்த்தி வரும்," யென்று சொன்னேன்.

அதுக்குத் துரை சொன்னது :- "அந்தப்படியே நான் நடத்துகிறேன். வில்லியநெல்லூரும் பாகூரும் காரைக்காலும் உன் பேருக்குத் தருகிறேன்," என்று சொல்லி, "நீயும் நானும் சாவகாசமா யிருந்து கொண்டு நடக்க வேண்டியதுகளுக்கு யெல்லாம் நன்றாய் யோசனை பண்ணிக் கொண்டு அந்தப் படியே நடத்துகிறேன்," யென்று சொன்னார். யிதிலே மகாநாட்டார் வந்தார்கள். அதன் பேரிலே அவர்களை யெல்லாம் பேட்டி பண்ணி வைத்து, அவர்களுக்குப் பன்னீர் பாக்கு வெத்திலை கொடுத்து, அவர்கள் கோயில் நிமித்தியம் பித்திசாம் யெழுதிக் கொண்டு வந்தார்கள். செட்டிகள் ஒரு பித்திசாம் யெழுதிக் கொண்டு வந்தார்கள். அந்த ரெண்டையும் துரை கையிலே கொடுத்து உபசாரமாய்ச் சொல்ல வேண்டிய பேச்சைச் சொல்லி, மகாநாட்டாரை அப்பாவு பிறகே கூட்டி வீட்டுக்கு

அனுப்பிப்போட்டு, நானிங்கே யிருக்கையிலே முசே பெடுத்தல்மீ ஒரு பித்திசாம் கையிலே கொண்டு வந்து துரை அண்டைக்குப் போய் பேசிக் கொண்டிருந்தான். அப்படி யிருக்கையிலே, முசியே தெபறேன் யென்னைக் கண்டு சொன்ன சேதி யென்ன யென்றால் : "தன் பேருக்கு முசியே பெருத்தல்மீ வில்லியநெல்லூர் பாகூர் யேலம் யேன் போடவில்லை யென்று யெழுதி யனுப்பினார். நான் அந்தக் காகிதங்களைக் கையில் பிடித்துக் கொண்டு முசியே லெறி அவர்கள் கிட்டப்போயி, "யிப்போ முசியே பெடுத்தல்மீ யெழுதி அனுப்பி விச்சார், அதுக்கு நானென்ன யெழுதி யனுப்புகிற" தென்று கேட்டேன். அதுக்கு அவர் நீர் ஒன்றும் யெழுதி யனுப்ப வேண்டாம் யென்று சொன்னார். அதின் பேரிலே நான் சொன்னது, "முசியே பெடுத்தல்மீ யென்னைக் கண்டு, காகிதம் அனுப்பினேனே, மறு காகிதம் யேன் யெழுதி அனுப்பயில்லை என்று கேட்டால், அதுக்கு நான் யென்ன சொல்லுவே" னென்று கேட்டேன். அதுக்கு "நீ யார்; நீ கேழ்க்கிறதேது? என்று ... சொல்லென்று சொன்னார்," யென்று முசே தெபறேன் யென்னுடனே சொன்னார். அதின் பேரிலே நான் என்னுடனே துரை சொன்னது(ம்) முசியே தெபறேன் சொன்னது(ம்) பார்த்தால் துரை மனது ஒரு வழியாய்த் தானே யிருக்குதென்று யென் மனதுக்கு தோணப்பட்டுது. அதன் பேரிலே நான் துரையை அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து வீட்டுக்கு வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் பூந்தோட்டக் கச்சேரியே வந்த விடத்திலே, யெட்டு மணிக்கு, பேர் விளங்கன் வெள்ளைக்காறன் ரெண்டு பேர் வந்து அண்ணாசுவாமிக்கு யென்று அத்தர் வைக்கிற பெட்டி ஒன்று கொண்டு வந்து கொடுத்து, அவர்கள் சொன்ன சேதியென்ன வென்றால்: மத்தியானம் முசியே பெடுத்தல்மீ துரை கையிலே ஒரு பித்திசாம் உன் வழியிலே (கையிலே இருக்கிற) ஏதோ ஒரு கிராம(த்துக்கு) இருபத்தய்யாயிரம் விராகன் (தருவதாக) எழுதிக் கொண்டு வந்து கொடுத்தார். அதுக்கு முசே லெறி முகங் கொடுத்துப் பேசவில்லை. அதினாலே முசே பெடுத்தல்மீ முகத்தை வாடப் பண்ணிக்கொண்டு போனா," னென்று சொன்னார்கள். வினாயகப் பிள்ளை நேத்து இரவெல்லாம் பித்திசாம் எழுதுகிறதுக்கு அலைஞ்சு கொண்டிருந்து எழுதி வைத்து, காலமே முசியே தெலார்ஷு கோந்துவாரிலே யிருக்கச்சே அவர் கிட்டக் கொடுத்துத் திருத்தி, சரவண முதலி கையிலே கொடுத்து, முசே பெடுத்தல்மீ அண்டைக்கு அனுப்பிவிச்சதாய்ச் சேதி மத்தியானம் கேட்டோம். வில்லியநெல்லூர் சீர்மை பாகூர் சீர்மை இருவத்தய்யாயிரம் ஆக யெழுதிக் கொடுத்தானென்று யோசனை பண்ணிக் கொண்டேன். இது நடந்த சேதி.

***1755 வருசம், அப்றில் மாசம், தேதி 6; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 27; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போயி துரையவர்களைக் கண்ட யிடத்திலே, மோகறு பண்ணி (முத்திரை செய்து) யாச்சுதா வென்று கேட்டார். யின்னம் மூணு நாள் செல்லும், ஆச்சு தென்று சொன்னேன். அதின் பேரிலே உத்தரமல்லூரிலிருந்து (உத்தரமேரூர்) அமுல்தாரன் பேரிலே அங்கே யிருக்கிற வெள்ளைக்காறன் ஆல்லாதியாய் (ஒரு புகார்) யெழுதி யனுப்பினார். அது யென்ன வென்று கேட்டார். அதுக்கு நான் வெள்ளைக்காறர் பத்துப் பணம் ஆசைப்பட்டு, அவரவரைத் தாங்கள் சேர்த்துக் கொண்டு அமுல்தாரனுக்குக் காரியம் கட்டாமல் அங்கேயுங் கல்லல் பண்ணி, யிங்கேயும் யெழுதி அனுப்பிவிக்கிறார்கள். முன் முசே துப்பிளேயிக்கு நாளையிலேயும் யிப்படி நடந்துது.

அதின் பேரிலே, "நீங்கள் சீர்மை வழி, அமுல்தாறன் வழி, போகத் தேவையில்லை. கோட்டையுண்டு, ராணுவுண்டு[1], நீங்களுண்டு, அதுகளைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள்ளுகிறதே யல்லாமல் சீர்மை வழி அமுல்தாரன் வழி போகத் தேவையில்லை; வேண்டிய தட்டு முட்டு அமுல்தாறரைக்[2] கேட்டு வாங்கி கொள்ளுகிற," தென்று (கொம்மாந்தானுக்கு) எழுதியனுப்பினார். அப்படியே முசியே கொதே அவர்களும் யெழுதித் திட்டம் பண்ணி அனுப்பினாரென்று சொன்னேன்.

அதன் பேரிலே, "பறங்கிப்பேட்டை வந்து பந்தரா (கடற்கரைப் பட்டணமா)ச்சுதே. அதிலே யிப்படி நடப்பானேன்," யென்று கேட்டார். அதுக்கு நான், "அவ்விடத்திலே வர்த்தகரிருந்து கொண்டு (கம்பெனிக்குப்) பணங்காசு அசலாகிறது (ரொக்கமாகக் கொடுக்க ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்). ஒருத்தருக்கொருத்தர் வழக்கு வந்தால் (பண்டமாய்க்) சவுதாய் குடுக்கிறது (க்கு ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்). அப்படி யிருக்கையிலே அவரவரைச் சேர்த்துக் கொண்டு, வெள்ளைக்காறர் பேசினால் (வம்பு செய்தால்) பணம் எப்படி கும்பினீருக்குச் சேரும். நானானால் சீர்மை யெல்லாம் (கீழ்க்) குத்தகையாய் (கொடுத்திருக்கி) றேனென்று சொன்னேன்.[3] அதன் பேரிலே அந்தந்தக் கடுதாசிகளில் தானே வெள்ளைக்காறர் நடந்து கொள்ள வேண்டிய சேதிகளை வயணமாக யெழுதி முசியே ஷெவறே கையிலே குடுத்து நாலு கடுதாசிகளிலேயும் (அதைச் சேர்த்து) யெழுதி யனுப்பச் சொன்னார்.

---

[1] ராணுவு – ராணுவம்

[2] அமுல்தாரன், அமுல்தாறன் எனப் பலவிடங்களில் பிரதியிலே உள்ளது.

[3] மொத்த குத்தகைதாரர் பிள்ளை. அவர் கிராமம் கிராமமாக மற்றவருக்குக் கீழ்க் குத்தகை விட்டார்.

அப்படி யிருக்கையிலே, நேத்து மத்தியானத்திலே கணக்கு றங்கப்ப முதலியாரை அழைப்பிச்சு துரை பேட்டிக்கி வில்லியநெல்லூர், பாகூர் வழுதாவூர் யிந்த மூணு சீர்மைக் குடிகளையும் பேட்டிக்கு அழைத்துக் கொண்டு வாரும் யென்று சொன்னேன். அதுக்கு அவர் யிந்த வருஷத்திலே துரைகள் பேட்டி யென்றும் பண்டிகை பேட்டி யென்றும் நாலஞ்சு பேட்டியாச்சுதே, இப்பவும் பேட்டி யென்றால் யெப்படி யென்று கேட்டார்.[2] அப்போ யெனக்குக் கோபம் வந்து, "நான் சொல்லுகிறதிலே நீயா யெதுத்துக் கேழ்க்கிறது? உன்னுதா சீர்மை? நீ யந்தச் சீர்மைக்குக் காபந்தா? நீ யொரு கணக்கன். நான் சொல்லுகிறபடிக்கி கேழ்க்கிறதா? உன்னிச்சையா? யிப்போவும் நாளை உதயத்துக்குக் கெல்லாம் எல்லாரையும் கூட்டிக்கொண்டு பேட்டிக்கு வா," யென்று சொன்னேன். அதுக்குப் பணம் வேணுமே, பணமில்லை யென்று சொன்னான். அதுக்கு சீர்மைப் பணம் எங்கே யென்று கேட்டேன்.

சீர்மைப் பணம் வந்ததெல்லாம் நேத்து செலுத்திப் போட்டேன் யென்று சொன்னான். கடன் வாங்கிக் கொண்டு வா யென்று சொன்னேன். முசே துப்பிளேயிக்சு அவர்கள் சாகீர் வழுதாவூருக்கு யெப்படி யென்று கேட்டான். அதுக்கு நான், "முசியே திலார்ஷுடனே சொல்லு. அவரெப்படிச் சொல்(கிறாரோ) அப்படி கேள்," என்று சொன்னேன்.

நல்லதென்று பிறப்பட்டுப் போயி, ஒரு நாழிகை பொறுத்து வந்து முசே திலார்ஷைப் போயிக் கேட்டேன், அவரும் உத்தரவு குடுத்தாரென்று சொன்னான். நல்லதாச்சுது, நாளை உதயத்துக் கெல்லாம் எல்லாரையுங் கூட்டிக் கொண்டு வரச் (சொன்னேன்).

அந்தப்படிக்கி யெல்லாரையும் சேகரித்துக் கொண்டு றங்கப்ப முதலியார் வந்திருக்கிறார், கோட்டை வாசலுக்கு உத்தாரம் வேணுமென்று (சேவுகன் ஒருவன்) வந்து கேட்டான். நல்லதென்று கவுனி வாசலுக்கு உத்தாரம் வாங்கிக் கொடுத்து அனுப்பினோம். அதின் பேரிலே, வில்லிய நெல்லூரார், பாகூரார், வழுதாவூரார் சகலமான பே(ரையும்) கூட்டிக் கொண்டு, மேளதாளத்துடனே பேட்டிக்கு வந்தார்கள். அவர்களை துரை பேட்டி பண்ணி வைத்த விடத்திலே, வில்லியநெல்லூரார், பாகூரார் முன் பின் அத்துபடி நூறு அசரபியும் (மோகர் என்ற நாணயம்), வழுதாவூரார் நூறு அசராபியும் ஆக யிறநூறு ஆசராயி வைத்துக் கண்டார்கள். அரியாங்குப்பத்தார் பதினோரு விராகன் கொண்டு வந்து நசர் வைத்துக்

[1] ஒவ்வொரு பேட்டியின் போதும் நசர் வசூலித்தனர் வெள்ளையர். இதற்கெல்லாம் துபாசி ஏற்பாடு செய்தார்.

கண்டார்கள். அதின் பேரிலே யெல்லாருக்கும் பன்னீர், பாக்கு, வெத்திலை[1] கொடுப்பித்து அவர்களை அனுப்பிவிக்கிற போது அவர்கள் சொன்ன சேதி : அஞ்சு வருஷமாய் பிரான்சுக் கொடியின் கீழே குடித்தனம் பண்ணுகிறோம். வாரம் (வரிசை?) யெல்லாம் யிது வரைக்கும் தாழ்ச்சியில்லாமல் நடந்து கொண்டு வந்துது. யினிமேலும் அப்படியே தேவரீர் தயவு பண்ணி நடத்த வேணும் யென்று கேட்டார்கள். அப்படியே நடத்தி வைக்கிறோம் யென்று உத்தாரஞ் சொல்லி அனுப்பி விச்சார்கள்.[2]

அதன் பேரிலே அவர்கள் போன பிறகு, துரையவர்கள் நீ யேதாகிலும் காகிதங்கள் கொண்டு வந்தீயா வென்று கேட்டார். வேண்டிய காகிதங்களிருக்குது, நீங்கள் ஒவ்வொரு காரியமாய் நடத்தினால் வேண்டிய காகிதங்கள் தருகிறேன் யென்று சொன்னேன். அவர் காம்பிராவிலே போனார். அதின் பேரிலே வினாயகப் பிள்ளை காகிதம் கொண்டு உள்ளே போயி கொடுத்து பேசிக் கொண்டிருந்தான். சவரிராயனும் ராமலிங்கப் பிள்ளையும் வெளியிலே வந்திருந்தார்கள். இவர்களும் வந்திருக்கிற போதே சீரங்கத்துக்கு யிவர்களை அனுப்பி வைக்கிற நிமித்தியம் (வினாயகப் பிள்ளை) காகிதம் கொடுத்தானென்று யோசித்துக் கொண்டேன். அந்த மட்டிலே துரையை அனுப்பிவிச்சுக் கொண்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

துரையவர்கள் என்னைக் காகிதங் கேட்டது பார்த்தால், முன் 25 தேதிக்கு, அப்றீல் மாசம் 4 தேதி, நான் முசியே பெடுத்தல்மீ நாளையிலே நடந்ததுகளுக் கெல்லாம் காகிதம் யெழுதிக் கொண்டு வருகுறேனென்று சொல்லி யிருந்தேன். அதை நினைத்திருந்து அவர் கேட்டார் (என்பது) அப்போ எனக்குத் தோணாமல் போச்சுது.

### *1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 7; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 28; சோமவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே துரை பிறப்பட்டு கோட்டை மேலே போயி நாலு புறமுஞ் சுத்திப் பார்த்து கோந்துவார் கிடங்கு, சாராயக் கிடங்கு, சகலாத்துக் கிடங்கு, பிடவைக் கிடங்கு, துப்பாக்கிக் கிடங்கு, மத்தும் சில்லரைக் கிடங்குகளெல்லாம் சுத்திப் பார்த்து பிடவை பார்க்கிற சாலையிலே வந்து வாசாப்பு (நாடக?)

---

[1] அப்படிப் பெருந்தொகை, நகைகள், விலையுயர்ந்த பிற பொருட்களை நசர் அல்லது வெகுமதியாக வெள்ளையர் பறித்துக் கொண்டு, திருப்பிக் கொடுத்ததோ வெற்றிலை, பாக்கு, பன்னீர்.

[2] இதுவரை பிரதியில் பதினோரு பக்கங்கள் எளிதில் படிக்க இயலாத அளவுக்கு மக்கிப் பழுப்படைந்துள்ளன.

மேடையைப் பார்த்து நகைத்துக் கொண்டு, மேல்வீட்டின் பேரிலே போயி, அங்கே யிருந்து என்னை அழைப்பிச்சு நான் போனவிடத்திலே, யென்னுடனே நந்திராசா சேதி யென்ன, சீர்மை சேதிகளென்ன, பாப்பய்யப் பிள்ளை சேதிகள் யென்ன வென்று கேட்டார். அதுக்கு நான் "நந்திராசா பேரிலே நமக்கு யிருபத்தி ரெண்டு லட்சம் ரூபா பாக்கி வரவேணும்; முராரி ராயனுக்கு பத்துப் பனிரெண்டு லட்சம் குடுக்க வேணும்; நந்திராசா குடுத்தால் உங்களுக்குத் தருகுரோமென்று முசியே கொதே அவர்கள் முராரிராயனுக்குச் சொல்லி யிருக்கிறார். சலாபத்து சங்குவானால் மூணு கோடி நாலு கோடி வரவேணுமென்று கடப்பையார் கந்தனூரார், ஆதிவெண்ணையார் யிவர்கள் கையிலே நாலு லட்சம் அஞ்சு லட்சம் யிப்படி வாங்கி, அதைத் தண்டு சிலவு பண்ணிக் கொண்டு, டங்காவோடே (பறைகள்) கூட மயிசூரின் பேரிலே போனார். நந்திராசாவானால் நமக்கு ரொம்ப பணந் தரவேண்டியிருக்குது. மயிசூர் ராசாவானால் தங்களுக்கு சம்மதி அன்னிலே நந்திராசா யிவ்விடத்துக்கு வந்து நாலு கோடி மட்டுக்கும் சிலவழிச்சுப் போட்டா னென்று, அவர்களுக்கும் நந்திராசாவுக்கும் சமாதானம் போதாது. நந்திராசாவானால் எழுதுகிற காகிதங்களிலே யெல்லாம் நமக்குத் தரவேண்டிய பாக்கியை விட்டு விட்டு, நம்முடைய பேரிலே நேரம் சுமத்தி யெழுதிக் கொண்டு வருகுறா," னென்று சொன்னேன். அதுக்குத் துரை, எல்லாக் காரியமும் நந்திராசா யிவ்விடத்துக்கு வந்(ததும்) தீரும் யென்று சொன்னார்.

அதின் பேரிலே நான், "முசே கொதே யவர்கள் கலாபந் தீருகிறதிலே தானே (முதலில்) மனதை வைத்து, அற்பிசி மாசம் (அக்டோபர்) முதலிலே அவரவர் கையிலே யிருந்த சீர்மை அவரவருது யென்று தீத்தார். முசே துப்பிளேயிக்சு ஆற்காடு நம்முது, யிங்கிலீசுக்காறர் பலவந்தமாய்க் கட்டி யிருக்கிறார்கள், சீர்மையிலே யிருந்து பவுன்சு வருகிறது, அந்தப் பவுன்சு வந்தவுடனே ஆற்காடு கூடக் கட்டுகிறேனென்று யிருந்தார். அப்போ யிவ்விடத்துப் பெலனெல்லாம் (குருப்புகள்) அவுறங்கா பாத்திலே சிறிதும் மச்சிலிபந்தரிலே சிறிதும் திரிச்சிராப்பள்ளி மேலே சிறிதும் போயிருந்தபடியினாலே இங்கே பலன் யில்லை யென்று சமயம் பார்த்து இங்கிறேசுக்காரர் வெகு தூரம் வந்து கட்டினார்கள். அந்த வேளையிலே முசே கொதே வந்தவர், பிடிச்சுப் பேசி பேர் பாதி சீர்மை (எங்களது என்று) பிடிச்சுப் போயிருக்கலாம். அப்போ பிடியாததினாலே வெகு சீர்மை இங்கிறேசுக்காறர் கையிலே நின்று போச்சுது. நம்முடைய கையிலே யெல்லாம் சுத்திலே கொஞ்சம் சீர்மை நின்றது. அப்படியிருந்தும் முசே கொதே அவர்கள் பிடிச்சு நடத்தாத படியினாலேயும், முசே பெடுத்தல்மீயும் பிடிச்சுப் போடாததினாலேயும், இங்கிலீசுக்காறர் இந்த வுடன்படிக்கை பேசிக் கொண்ட பிறகு, யிங்கே நம்முடைய சீர்மையிலே யிரண்டு லக்ஷம் சீர்மை தங்களுது யென்று

துடர்ந்து கொண்டு யிருக்கிறார்கள். யிதுவுமல்லாமல் மதுரை நடுமண்டலம் திருநெல்வேலி யிதிலே பதினாறு லக்ஷம் ரூபா சீர்மை யிப்போ போயி கட்டினார்கள். யிப்படி யிருக்கிறது சீர்மைப் பருவம் (விவகாரம்)," யென்று சொன்னேன்.

அதற்கு, முசியே கொதே யோசனை பண்ணாமல் போனார், நல்லது ஆகட்டும், யென்று சொல்லி, பாப்பய்யப் பிள்ளை சேதி யென்ன வென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது: "முசே கொதே ஆவணி மாசம் 2 தேதி (ஆகஸ்ட் 14) பாப்பய்யப் பிள்ளையைக் காவல் பண்ணி வீடுவாசல் எல்லாம் முத்திரை போட்டு, மனுஷர்களை யெல்லாம் காவலிலே வைத்தார்கள். அதிலே மெத்த அதிர் பிறந்தது. உடனே அந்த சூட்டோடே தானே கணக்கு வழக்குக் கொண்டு வரச் சொல்லிப் பிடிச்சு நடத்தி(யிருந்தால்) ரொம்ப அறுவாகும். அப்படி நடத்தாமல் முசே துப்பிளேயிக்சுக்கு பெருக்குறதோரா யிருக்கிற முசே தெலார்ஷு வசமாய் சீர்மையும் விட்டு, கணக்கும் பார்க்கச் சொல்லி அவர் விட்டபடியினாலே, அவர் மனுஷர் மக்களைச் சாடை மாடையாய் விட்டு, வீடு வாசல்களெல்லாம் முத்திரை விட்டுவிட்டு, அவனையுஞ் சுலுவாய்த் தானே வைத்துக் கணக்குப் பார்க்கிறாப் போலே பேர் வைத்து, யிப்படிப் பண்ணிப் போட்டபடியினாலே, நானாவிதமாயி அவரவருக்குத் தைரியங்கள் பிறந்து, காரியம் சப்பிலே விழுந்(தது); முசியே துப்பிளேயிக்சு நாளையிலே பாப்பய்யப் பிள்ளை பேரிலே எட்டு லக்ஷமும், அவன் மனுஷர் பேரிலே நாலு லக்ஷமும் ஆக பனிரெண்டு லக்ஷத்துக்குக் கணக்கெழுதிக் குடுத்தான். அதை அவர் விசாரியாமல் போனார். யிப்போவானால் அவன் (தான்) முசியே துப்பிளேயிக்சு கைப்பட விசுத்திக் கட்டிக் கொண்டு (பணம் செலுத்துவதிலிருந்து விடுதலை பெற்றுக் கொண்டதாகச் சொல்லிக் கொண்டு இருக்கிறான்)." அதுக்கு, அந்த விசுத்தி யிருக்கட்டும்; அவனுக்கு யெவ்வளவு ஆஸ்தியுண்டென்று கேட்டார். அதுக்கு நான், "நாலஞ்சு லக்ஷம் ரூபாய்க்கு ஆஸ்தியுண்டு. அதுவும் வெளியிலே பத்திரம் பண்ணியிருக்கிறான். அது அறிவே," னென்று சொன்னேன். அதுக்கு நான், "அபந்தரை பண்ணிப் (கெடுத்துப்) போட்டார்களே, யினி மேல் பிடிச்சு நடத்தினால் ரொம்ப பிறயாசைப் படவேணும். முன்னேயானால் அத்தனை பிறயாசையிராது. அவன் மனுஷன் சாமராய னென்கிறவன், ராணுவக் கணக்கு சம்மதியிலே முப்பதினாயிரம் ரூபாயிக்குத் திருட்டுக் கணக்கு யெழுதி (இருக்கிறான்). அந்தச் சேதியைப் பாப்பய்யப் பிள்ளை மனுஷன் மகாதேவய்யன் என்கிறவன் நம்முடனே சொன்னான். நானதை முசே கொதே அவர்களுக்குச் சொன்னேன். அவர் பிடிச்சுப் பேசி அதை யென்னை விசாரிக்கச் சொன்னார். நான் அவனைக் காவலிலே வைத்துக் கேட்டவிடத்திலே, அவன் பாலி செட்டி முகாந்திரமாய்ப் பதினாயிரம் ரூபாய் தருகுறேன் யென்று பேசினான். (இப்படித்) தீத்துவிச்சேன்.

"அப்படி யிருக்கையிலே முசே கொதே அவர்கள் சீமைக்குப் போன பிறகு முசே பெடுத்தல்மீயும் அவர்கிட்ட யிருக்கிற துபாசி ராமனும் மகாதேவய்ய(னையும் பாப்பய்யப் பிள்ளையையும்) யேகமாக்கி (ஒன்று கூட்டி), அவர்கள் பிறகே (கீழே) பவுன்சும் கூடக் கூட்டி யெலவானசூருக்கு அனுப்பினார்கள். முசெ கொதே முசே துப்பிளேயிக்சு நாளையிலே இருந்த பாராக்காரர் (guards), சமேதார்கள் யிந்த வகையெல்லாம் தாம் விசாரியாமல், மயோர் வசம் சிறிது நாள் (அப்பொறுப்பை ஒப்படைத்தார்). அப்போ நாரோஜி (Naroji), மத்தப்பேர் தாங்களும் சிறிது பணம் (சேர்த்து), மயோருக்கும் சிறிது பணம் வாங்கிக் கொடுத்து, முசே பெடுதல்தல்மீக்கும், அவர் கிட்ட யிருக்கிற துபாசி ராமனுக்கும் சிறிது குடுத்து யிப்படி பண்ணிக் கொண்டிருந்தார்கள். அதின் பேரிலே முசியே கொதே யென்னை விசாரிக்கச் சொன்னார். அப்போ நான் விசாரிக்கிற போது அல்லிகான் (Ali khan)[1] முதலான பேரெல்லாம் வந்து ஒரு மாதத்துச் சம்பளம் அன்பத்து நாலாயிரம் ரூபாய் குடுத்து விடுகுறோம், எங்கள் சம்பளம் வாங்கித் தரவேணும் யென்று என்னுடனே பேசினார்கள். அப்படியிருக்கையிலே, முசே கொதே சீமைக்குப் போன பிறகு, முசியே பெடுத்தல்மீ, சாமாராயன், மகாதேவய்யன் பிறகே பவுன்சு கூட்டி அனுப்புகிறபோது ஒரு மாதத்துச் சம்பளம் முசியே பெடுத்தல்மீக்கும், அரை மாசத்துச் சம்பளம் அவர் துபாசி ராமனுக்கும் (எனப்) பேசிக் கொண்டு யெல்லாரும் தண்டு போனார்கள். நாங்கள் மாத்திரம் யிங்கே யிருந்து யென்ன (பயன்?) என்று அல்லி கான் முதலான பேர் என்னுடனே சொல்லிப் போட்டு அவர்களும் போனர்கள்," யென்று யிந்த சம்மதி களெல்லாம் யெழுதி வைத்திருந்தேன்.

அந்தக் கடுதாசிகளைத் துரை (லெறி) கையிலே கொடுத்து யிப்படி "பெரிய மனுஷன் பேரிலே யெழுதிக் கொடுத்தான் யென்று நீர் யோசனை பண்ணத் தேவையில்லை. இதுகளெல்லாம் நீங்கள் வந்தவுடனே உங்களுக்குச் சொல்லி யிந்தப் பிரயோசனங்களெல்லாம் உங்களைச் சேர்ந்ததென்று ஆனபடியினாலே, உங்களுடனே சொன்னேன்," யென்று சொன்னேன். அதுக்கு துரை சொன்னது, "நேத்து சாயங்காலம் முசே பெடுத்தல்மீ வந்து ராணுவு வகையிலே சிறிது பணம் பேசியிருக்கிறார்க," ளென்று சொன்னார். அதுக்கு நான், "நான் எழுதுகிற சேதி அறிஞ்சு அவர் முன்னுதாய் மெலுக்குவைப் பட்டு (முந்திக் கொண்டு) வந்து சொன்னாரெ,"ன்று சொல்லி(ய பின்), யாசப்ப (யாச்சம) நாயக்கன் பார்சியிலே அனுப்பின கடுதாசி பிரான்சுப் படுத்தினதைக் குடுத்தேன். இதுக்கு மறு சேதி யெப்போ யெழுதுகிறது யென்று கேட்டார். இப்போ அனுப்பத் தேவையில்லை, அனுப்புகிற வேளை பார்த்துச் சொல்லுகுறேன்

[1] இவனும் ஒரு மாயே சமேதார்.

யென்று சொன்(னேன்); பழஞ் செஞ்சியார் பேட்டிக்கு ஆனை கொண்டு வருகுறார்க ளென்று சொன்னேன். ஆனை யென்னத்துக்கு, பணமாய்த் தானே குடார்களா யென்று கேட்டார். நல்லது, பேசிச் சொல்லுகிறேன், யென்று சொன்னேன். முசே துப்பிளேயிக்சு எத்தனை ஆனை கட்டி யிருந்தா ரென்று கேட்டார். அதுக்குப் "பனிரெண்டானை கட்டி மூணு யானை சிலவழித்துப் (விற்றுப்) போட்டார், ஒன்பது யானையிருந்தது. அவருக்கு வழுதாவூர் லக்ஷம் வராகனுக்கும் மச்சிலிபந்தருடய சாகீரும் யிருந்த படியினாலே, அவர் (தான்) பாதுஷா மன்சுபேதாரன் யென்று யெண்பிச்சுக் கொண்டு, வேண்டிய சிலவெல்லாம் பண்ணிக் கொண்டிருந்தார். நீங்களும் அந்த யிடத்திலே வந்தபடியினாலே பாதுஷா, மன்சுபேதாரன் என்கிறதுக்குத் தப்பில்லை. சாகீர் மாத்திரம் வேணும்," யென்று சொன்னேன். அதுக்கு நகைச்சுத் தலையை அசைச்சார்.

அப்படி யிருக்கையிலே முசியே தெபறேன் வந்தார். அவர் வந்தவுடனே சத்து யிப்புறம் வந்தேன். அவர் பேசியிருந்து போற (போது) யெல்லாரும் வில்லியநெல்லூர், பாகூர் யேலம் போடுறதுக்குக் காத்திருக்கிறார்களென்று சொன்னேன். அதுக்கு அவர் "துரை மனதின் படிக்கி (அது) உனக்கே அனுகூல மாச்சுது" யென்று சொல்லிப் போட்டுப் போனார்.

அதின் பிறகு, திரும்பவும் துரை யென்னை அழைத்து பாப்பய்யப்பிள்ளை சேதி யென்ன வென்று கேட்டார். "யென்ன யிருக்குது, காரியம் பிகு தப்பிப் போச்சுது. யினி மேல் யெடுத்துக்கட்டி பயமுண்டாக்கி, க்ணக்கோடே பிரயாசப்பட்டுப் பணம் சேகரிக்க வேணு," மென்று சொன்னேன். யிப்படி யிருக்கையிலே முசே பொயலோ வந்தார். அவர் வந்தாரென்று யிப்பாலே வந்தேன். அவர் பேசிக் கொண்டு போறதிலே என்னண்டைக்கு வந்து சொன்ன சேதி யென்ன வென்றால், "பாப்பய்யப் பிள்ளை காரியம் மெத்தக் கொஞ்சமாய்ப் பேசிப் போட்டாய், யென்ன புஷ்ட்டியாய் யேன் பேசவில்லை," யென்று கேட்டார். அதுக்கு நான், "துரை மனது எனக்கு யெப்படித் தெரியும். நான் உசந்து சொன்னால் நிறுவாகமாகத் தேவையில்லையா?" வென்று சொன்னேன். அதுக்கவர் யிப்படிக் குறைத்துச் சொல்லுவார்களா என்று சொல்லிப் போட்டுப் போனார். அதின் பேரிலே நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு வருகிற போது முசே பெடுத்தல்மீ வந்தார். நான் வீட்டுக்கு வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் சதுரங்கப்பட்டணத்திலே யிருந்து செங்கழுனீர்ப்பட்டு (மகாராஜ ராஜஸ்ரீ சேஷாத்திரிப் பிள்ளை[1] அவர்கள், உதிச்சு மூணு நாழிகைக் கெல்லாம் நம்முடைய அக்கிராரத்திலே வந்திருந்து, தியாச்சியம் போன பிறகு வளவுக்கு (நம் வீட்டுக்கு)

[1] நம் பிள்ளையின் மாமனார்.

வந்தார்கள். நாமும் குண்டு போட்டவுடனே வீட்டுக்கு வந்து கண்டோம். அவர் போயி வந்த சேதிகளெல்லாம் சொன்னார். அதின் பேரிலே, சித்திரை மாசம் பிறக்குதே, சீக்கிரமாய் கலியாண காரியத்துக்குப் பெண்கள் பிள்ளைகள் நிலவரம் பண்ண வேணுமென்று சொன்னோம். அதுக்கு அவர், "நானானால் அங்கே யெல்லாம் விசாரித்தேன். யென் மனதுக்கு யேற்ற பெண் அகப்படவில்லை. நாளைக்கு மகாராஜ ராஜஸ்ரீ திருமலைராயப் பிள்ளை அவர்களும் வருகு(றார்), நாளைக்கெல்லாம் திட்டம் பண்ணுவோம்," மென்று சொன்னார். அப்படி யினி மேல் தாமதம் பண்ணப்படாது, சீக்கிற மத்துக்கு நிலவரம் பண்ண வேணுமென்று சொல்லிப் போட்டுக் கச்சேரியே வந்தோம்.

### *1755 வருசம், அப்றில் மாசம், தேதி 8; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 29; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே முசே கில்லியாரைக் கண்டு ஆசாரம் பண்ணிக் கொண்டு யிருக்கச்சே, அவர் சொன்ன சேதி: "யிந்தக் கெடுவுக்கு நம்முடைய வசத்திலே ரூபாயும் வராகனும் செலுத்தி யிருக்குது. முசே பெடுத்தல்மீ கிட்ட நீ செலுத்தினதுக்கு ரெசீது குடுத்திருக்கிறாரே. அந்த ரசீதைக் கொண்டு வாரும். அதையும் பார்த்துக் கொண்டு எல்லாத்துக்கும் ஒரே ரசீது தருகுறேன்," என்று சொன்னார்.[1] உடனே ரசீது யெடுத்து வரச் சொல்லி ஆளை அனுப்பிப் போட்டு மேல் வீட்டின் பேரிலே துரையைக் காண்பித்துக் கொண்டிருக்கையிலே, முசியே குப்பியை (குப்பில்) திருச்சிராப்பள்ளிக்கு அனுப்பி வைக்கிற நிமித்தியம் எல்லாரும் கோன்சேல் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். நானிப்பாலே யிருந்தேன். அப்படியிருக்கையிலே முசியே குப்பி பயணமாயி அனுப்பிக் கொண்டு யிப்பாலே வருகிறவர், யென்னைக் கண்டு, "நானானால் திருச்சிராப்பள்ளிக்குப் போறேன். துபாசி முன் பரமானந்தப் பிள்ளை யிருந்தாப் போலே பேர் விளங்கன் ஒருத்தனை அனுப்புவிக்குறார்கள். ராமலிங்கப் பிள்ளையும் கூட வருகிறான். உனக்கு அவ்விடத்திலே ஆகவேண்டிய காரிய மென்னமோ அது என்னுடனே சொன்னால் நல்ல மனதுடனே ஆகப் பண்ணி அனுப்பிவிக்குறே," னென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "நீர் போறது நல்ல காரியமே ஆச்சுது. இந்தப் பவழக்காரச் சம்மதியும் துறையூர் சம்மதியும் வயணமாகச் சொல்லி, நீர் ஸ்ரீரங்கத்துக்குப் போனவுடனே நந்திராசாவுக்குக் கெட்டியாய்ச் சொல்லி இந்த விரண்டு காரியமும் அனுகூலம் பண்ணி வைக்(க வேண்டும்)," என்று சொன்னேன். அப்படியே பண்ணி வை(க்கிறேன்) யென்று சொல்லிப் போட்டார்[1]. "எனக்கு ஞாபகம் யிருக்கிறாப்போல நான் போனவுடனே பிறகு காகிதம் யெழுதியனுப்பு," மென்று சொல்லிப் போட்டுப் போனார்.

---

[1] இங்கு மிகவும் தவறாகப் பிரதியில் எழுதப்பட்டுள்ளது.

[2] கில்லியார் கம்பெனியின் கணக்கு அதிகாரி.

அதன் பேரிலே முசியே லெனுவாருடனே பேசிக் கொண்டு யிருக்கையிலே, அவர் துரை மனதும் யினி மேல் நடக்கப் போற சங்கதிகளும் பேசிக் கொண்டிருந்தார். இதிலே முசியே பெடுத்தல்மீ யெழுதிக் கொடுத்த ரசீது வந்தது. அதையுங் கொண்டு முசியே கில்லியார் கிட்டப் போனேன். (கணக்கன்) முசியே கில்லியார் அந்த ரசீதைப் பார்த்து முசே புறுக்கினூது (M. Bourquenoud), முசே கறுவாலி (M. Carvalho), இவர்கள் கூடயிருக்கையிலே சொன்ன சேதி, "அவர் யெழுதுகிற திட்டமாய் யெழுதவில்லை. நானதை யெல்லாம் திட்டப் படுத்திக் கொண்டு நாளைய தினம் யேகத்துக்கு ரசீது தருகுறே" னென்று சொன்னார். முசே கில்லியார் கிட்ட நான் யிப்போ செலுத்தினது பறங்கிப் பேட்டை சலாமணி (செலாவணி), நக்ஷத்திரம், புதுச்சேரி (விராகன்) உள்பட விராகன் 19,800; (அதாவது) சராசரி விராகன் 100க்கு ரூபா 365 ஆக்க் கூடின ரூபா 72,270. யிதுவும், ரொக்கம் செலுத்தினது ரூபாய் 1,10,000, முசியே பெடுத்தல்மீ வசம் செலுத்தினது ரூபா 30,000, ஆக ரூபா 2,10,270, இரண்டு லக்ஷத்தி பதினாயிரத்து யிருநூத்தி யெழுபது.[1] யிதுவும் சிப்பாயிகளுக்குச் சீர்மை வழிகளிலே (வருமானத்தில்) தனகா பண்ணின (சம்பளம் தந்த) வகைகளிலே சிப்பாயிகள் பைத்தாகி செல்லு ரூபாய் 25,682. ஆக ரூபாய், 2,37,982[2]. இதுக்கு ஒரே ரசீதாய்த் தர வேணுமென்று முசியே கில்லியாரைக் கேட்டோம். அதுக்கு அவர் யிவ்விடத்திலே செலுத்தின ரூபாய் 2,12,270க்கு ஒரே ரசீதாய் நாளைக்குத் தருகுறேன். சிப்பாயிகளுக்குச் சென்ற 25,682க்கு ஒடுதினாசு வந்தவுடனே அதைக் கட்டிக் கொண்டு ரசீது தருகுறேனென்று சொல்லி அனுப்பினார்.

அதின் பேரிலே வெளியே[4] வந்திருக்கையிலே, முசியே தெபொஷேத்து கண்டு, "நான் உடம்பு சுவஸ்தமில்லாமல் கிடந்தேனே, ஆராகிலும் அனுப்பி விசாரியாமல் போனா," யென்று கேட்டார். அதுக்கு நான் "மூணு தரம் உம்மை விசாரிக்க வேணுமென்று உம்முடைய வீட்டுக்கு வாசலிலே வந்து யிறங்கி விசாரிக்கிற போது, சமயமல்ல வென்று மூணு தரஞ் சொல்லி விட்டார்கள். நான் விசாரியாமலிருக்கவில்லை. உமக்குக் கபுறு சொல்லாமல் போனால் நான் செய்யலாவதென்ன?" வென்று சொன்னேன்.

அவர் போன பிறகு முசே மீரா வந்து, "யெனக்கு ஒரு கிராமமாகிலும் குடாமல் போனீர்," யென்று சொன்னார். "எல்லாக் கிராமமும் உம்முதுதான். நான் வேறேயா?" வென்று கேட்டேன். அதன் பேரிலே அவர் சொன்ன சேதி, "துரை மெத்த அமுந்தவர்.[3] அவருடனே

[1] மொத்த ரூபாய் 2,12,270 என இருக்க வேண்டும். ஆங்கிலப் பதிப்பில் விவரங்கள் சிறிது மாறுபடுகின்றன.

[2] இங்கும் மொத்த ரூபாய் 2,37,952 ஆகிறது.

[3] வேளையிலே என்று நமது ஆவணக் காப்பகப் பிரதியிலே இருக்கிறது. இப்படி ஏராளமான தவறுகள்.

[4] 'அமுத்தமானவர், வாய் திறக்க மாட்டார்'.

சொல்லுகிற பேச்செல்லாம் கேட்டு, லேஞ்சைப் பல்லிலே கடித்துக் கொண்டிருந்தாலும் சும்மா வாய் மூடிக் கொண்டிருந்தாலும், அந்தக் காரியம் நடக்கத் தக்கது யில்லை யென்றெண்ணிக் கொள். அவர் வாய் திறந்து சொன்னாரானால் அதை சிலாசாசனமாய் யெண்ணிக் கொள். அவர் சொன்ன காரியம் பத்து நாள் யேறத் தாழ்த்தி நடத்திப் போடுவார். அல்லாமல் விடத்தக்கது யில்லை," யென்று சொன்னார். அதுக்கு நான், "நேத்து மத்தியானம் முசியே பொலோவும் யிப்படியே நீர் சொன்னபடியே சொன்னார். அது சரி. நான் பார்சா (பாதுஷாவின்) மன்சுபேதார். எனக்கு மூவாயிரம் குதிரைக்கும் அண்ணாசாமிக்கு ஆயிரத் தன்னூறு குதிரைக்கும், ஆக நாலா யிரத் தன்னூறு குதிரைக்கு நான் பார்சா மன்சுபேதாரன். உங்கள் தெயவினாலேயும் (இதெல்லாம் எனக்கு வந்தது என்பதை மறவேன்). யல்லாமல், சிறிதும் பிறயோசனார்த்தமா யிருக்கவில்லை (சுயலாபம் கருதி நான் வேலை செய்யவில்லை. மானம் யெவ்வளவு) அதுயில்லாதே போனால் என்ன காரியம்?" யென்று சொன்னேன். அதுக்கு முசியே மீரா சொன்னது, "நாங்கள் துரையுடனே ஒரு கணக்கனுக்கு (வினாயகப் பிள்ளைக்கு) அரிகை யேது? பல்லக் கேது? நீரும் ரெட்டை அரிகை போட்டுக் கொண்டு பிறப்பட்டால் அவனும் அரிகை போட்டுக் கொண்டு வருகிறதா? அரிகையும்[1] பல்லக்கும் தள்ளிப்போட வேணும். வெளியிலே பல்லக்கு யேறிக் கொண்டு திரிஞ்சாலும், யிவ்விடங்களிலே வராத படிக்கிப் பண்ணவேணும். அரிகை தள்ளியே போடவேணுமென்று சொல்லியிருக்கிறோம். அவரப்படியே செய்வாரென்று" சொல்லி, "பவழக்காரர் காரைக்காலிலே பணஞ் செலுத்தினது வரயில்லை. யிங்கேயும் முசே கொற்னேத்து கிட்ட கணக்குத் தீத்துக் கொள்ளவில்லை. முசே கொற்னேத்தானால் அடிக்கடி கேழ்க்கிறா," ரென்று சொன்னார். அதுக்கு நான் யெல்லாம் தீத்துப்போடுவான், தடை யென்ன வென்று சொன்னேன். பனிரெண்டு மணி அடிச்சது, அதின் பேரிலே வீட்டுக்கு வந்தேன்.

### *1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 9; பவ வருசம், பங்குனி மாசம், தேதி 30; புதவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போயி துரையவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணிக்கொண்டு யிருக்கிறதிலே, துரையவர்கள் காம்பிராவிலே யிருந்து கொண்டு அழைக்கச் சொன்னார். நானுடனே காம்பிராவிலே போனேன். அங்கே போனவிடத்திலே துரையவர்கள் சொன்ன சேதி யென்ன வென்றால், நந்திராசா காகிதம் அனுப்பினார்.

---

[1] இப்பத்தியில் 'அருகை' என்றே நம் பிரதியில் உள்ளது.

அந்தச் சேதி யென்ன வென்று கேட்டார். அதுக்கு நான், நந்திராசா ஆதியிலே வந்ததும், சந்தா சாயபு விழுந்து போன பிறகு மமுதல்லி கானுக்கும் நந்திராசாவுக்கும் பிகாடிச்சதும் (தகராறு ஏற்பட்டதும்), அதின் பேரிலே முசியே துப்பிளேயிக்சு அவர்கள் சினேகமானதும், நந்திராசா பேரிலே இருபது லக்ஷம் ரூபா நமக்கு வரவேண்டியதுஞ் சொன்னேன். அதுக் கெப்படி யென்று கேட்டார். அதுக்கு நாம் அவரை நெருங்கினால் பணம் வரும், யில்லாவிட்டால் வராதென்று சொன்(னேன்). அதுக்கு அவனுக்கு ஒன்று மில்லையாமே யென்று சொன்னார்.

அதுக்கு நான், நந்திராசாவுக்கும் மயிசூரில் யிருக்கிற துரைக்கும் (எசமானனுக்கும்) மிருக்கிற சமாசாரமும் (உறவும்), அங்கே யிருக்கிற பேர் மனோபாவமும், யிங்கே யிருக்கிற நந்திராசாவை நெருக்கினால் பணம் வருகிற வழியும் சகலமும் விஸ்தாரமாய்ச் சொன்னேன். அதன் பேரிலே அந்தக் காகிதத்தை யென் கையிலே கொடுத்து பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச்சொன்னார். அதன் பேரிலே வில்லியநெல்லூர் சேதி யென்ன வென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "வெங்கிடாசல செட்டி வந்திருக்கிறார். வினாயகப் பிள்ளை விராகன் 23,000 ஆக வல்லவோ கேட்டான்? 24,000 விராகன் யிசாரா கும்பினீருக்குக் குடுக்கிறது. உங்கள் ஆதீனத்துக்கு யிருபதினாயிரம் ரூபா கொடுக்கிறது. இது யுவ வருசம் ஆடி மாசம் (ஜூலை 1755) குத்தகை. அது வரைக்கும் சஞ்சாய," மென்றும்[1] சொன்னோம். நல்லது அப்படியே ஆகட்டும் யென்று சொன்னார். உடனே வெங்கிடாசல செட்டியை அழைத்து, முன்னாலே கும்பினீர் வர்த்தகர் கொண்டு வந்து நசர் வைத்துக் கொண்ட இருநூத்திருபது விராகன், வச்சிர மோதிரம் அதை வாங்கி வெங்கிடாசல செட்டி கையிலே குடுத்து, நசர் வைக்கச் சொல்லிப் பேட்டி பண்ணி விச்சேன். உடனே செக்கிறத்தாரை அழைத்து வில்லியநெல்லூரும் பாகூரும் வருஷம் ஒன்றுக்கு 24,000 மாக ஆடி மாசம் முதல் குத்தகை கோந்திரத்திலே யெழுதிக் கொண்டு வரச் சொல்லி உத்தாரங் குடுத்துப் போகச் சொன்னார். நானும் வெங்கிடாசல செட்டியை வெளியே யிருக்கச் சொன்னேன்.

அதின் பேரிலே (முசே) திலார்ஷுக்கு யெவ்வளவுக்கு உண்டென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "முன்னாலே முசே திலார்ஷு யிருந்ததும், நாசற் சங்கு செத்தவுடனே முசே துப்பிளேயிக்சு முசே திலார்ஷை முகனைப் படுத்தினதும் (ஆதரித்ததும்), அதில் அவர் சம்பாதித்ததும், யிப்பால் முசே கொதே அவர்கள் வந்த பிறகு அஞ்சு மாசத்திலே அவர் சம்பாதிச்சதும் யிப்பால், முசே பெடுத்தல்மீ விசாரிப்பிலே சம்பாதிச்சதும் யெல்லாம் பத்து லக்ஷம் ரூபாய்க்கு உண்டு," யென்று

[1] 'சம்பள ஆள் ஒருவனைப் போட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.'

சொன்னேன். முசே பெடுத்தல்மீக்கு யென்ன வுண்டென்று கேட்டார். "யிவரும் சென்னப்பட்டணத்திலே சம்பாதிச்சது, யிப்பால் காரைக்காலிலே சம்பாதிச்சது, முசே கொதே அவர்கள் போன பிறகு சிப்பாயிகள் வழியிலேயும் வினாயகப் பிள்ளை வழியிலேயும், மகாதேவய்யன் சாமாராயன் வழியிலேயும் ஆக சம்பாதிச்சது மூணு நாலு லக்ஷம் ரூபாய்க்கு உண்டு," யென்று சொன்னேன். முசியே துப்பிளேயிக்சுக்கு யெவ்வளவு உண்டென்று கேட்டார். "அதுக்கு மட்டு யேது? தெக்கான் சுபைக்கி அதிபதியாயிருக்கிற நாசறு சங்கு செத்து, அவன் சம்பத்து யெல்லாம் யிவருதாச்சுது. (அதில் ஒரு) கெம்பு, வச்சிரம், பச்சை முத்து (கூட இங்குள்ள அரசர்களும் பிரபுக்களும் வாங்க முடியாது)," யென்று சொன்னேன். முசியே புசிக்கு யெவ்வளவு உண்டென்று கேட்டார். "அவர் ரெண்டாம் சலாபத்து சங்கா யிருக்கிறார். அவர் யிவ்விடத்துக்கு ஆசை விட்டுவிட்டார். அவர் கையிலே கோடிக்குச் சரியாயிருக்கும்," யென்று சொன்னேன். மத்தப்படி வெள்ளைக்காரரிலே சம்பாதிச்ச பேர் ஆரென்று கேட்டார். அதுக்கு நான், "ஒபிசியால்மார் ஒவ்வொருத்தர் லெக்ஷாந்திரம் சம்பாதிச்சார்கள். (அது) அவர்கள் யிவ்விடத்திலே சம்பாதித்ததல்ல, வெளியிலே போனவிடத்திலே சம்பாதித்தது," யென்று சொன்னேன். அதன் பேரிலே யிந்தப் பட்டணத்துக்குள்ளே யிருக்கப்பட்ட தமிழரிலே திரவியஸ்தர்களார் யென்று கேட்டார். அதுக்கு, "முசே துப்பிளேயிக்சு பணம் வாங்கிறதிலே மெத்த சமர்த்தர். அவருடைய சாமர்த்தியம் ஆருக்கும் யில்லை. இங்கே பட்டணத்திலே யிருக்கிற பேர் கிட்ட (இருக்கிறதை) யெல்லாம் நன்றா யுறிஞ்சுப் போட்டார். இங்கே (இப்போ) ஆருக்கென்ன யிருக்குது?" யென்று சொன்னேன்.[1]

அதின் பேரிலே காரைக்கால் சேதி யென்ன வென்று கேட்டார். அங்கே யிருக்கிற பேர் சம்பாத்தியமும் அவரவர் கிட்டப் பணம் சேர்ந்த வகையும் சொன்னேன். அதன் பேரிலே பரமானந்தப் பிள்ளை சேதி யென்ன வென்று கேட்டார். அவன் சேதியும் ராமலிங்கப் பிள்ளை சேதியும் சொன்னேன். மச்சிலிபந்தர் சேதி யென்ன வென்று கேட்டார். அதுக்கு மச்சிலிபந்தரிலே மந்தால ரெட்டி யிருக்கிறதும் அவன் சம்பாத்தியமும் சொன்னேன்.

இப்படி யிருக்கையிலே வில்லியநெல்லூர், பாகூர் கோந்திராத்(து) யெழுதி செக்கிறத்தார் கொண்டு வந்து துரை ஒப்பம் வாங்கி, முசே போஷேத்துக்கு (தெ போசேத்துக்கு) உடம்பு அவஸ்த (சுவஸ்த) மில்லாததினாலே அவர் தவிர மத்தப் பேர் கையெழுத் தெல்லாம் வாங்கினார். இப்படி நாங்கள் பேசிக் கொண்டிருக்கையிலே முசியே

[1] இது வெள்ளையர்கள் கீழை நாடுகளிலே அடித்த கொள்ளைகளுக்கு ஒரு சான்று. படிப்பதற்கு மிகவும் சுவாரசியமானது.

பெடுத்தல்மீ வந்தாரென்று சொன்னார்கள். அங்கேயே (அவர்) யிருக்கட்டு மென்று (துரை) சொல்லிவிட்டார். அவர் வெளியிலே தானே யிருந்து விட்டார். துரை ஒரு வார்த்தைப் பேசுகிறது கடினமென்று யெல்லாரும் சொல்லுகிறதாமே, யித்தனாள் அவர் என்னுடனே பேசினது ஆயிரம் வார்த்தையுண்டு. நான் நாலாயிரம் வார்த்தையுண்டு பேசினேன். இதிலே பதினொன்றரை மணி ஆச்சுது. அதின் பேரிலே துரையும் நானும் வெளியே வந்தோம். வெளியில் வந்து துரை கீழே (வந்து), முசே கொதே அவர்களுக்கு அனுப்பிவிக்கிறதற்குக் கட்டுப்போடுகிற பிடவையை வந்து பார்த்தார். மாதிரிப்பாக்கம் நாலு முழம் அகலம், 32 முழம் நீளம் பிடவையைப் பார்த்து, பங்காளத்திலே யிதிலேயும் மீசுரமாய்ப் (நன்றாய்ப்) பிடவைகள் யிருக்கும் யென்று சொல்லிப் போட்டு, முசியே துப்பிளேயிக்சு அவர்கள் அறுபதினாயிரம் ரூபா சிலவழித்துச் சீர்மையிலே யிருந்து அழைப்பித்த மணியைப்[1] போய்ப் பார்த்து, அதன் பேரிலே மேல் வீட்டின் பேரிலே போனார். நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

### *1755 வருசம், அவ்றில் மாசம், தேதி 10; பவ வருசம், சித்திரை மாசம், தேதி 1; குருவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் துரையவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணிக் கொண்டு யிருக்கையிலே, துரையவர்கள் தானே என்னை அழைத்துக் கொண்டு யேகதேசத்திலே காம்பிராவிலே போனார். அங்கே யிருந்து கொண்டு சேதி யென்ன வென்று கேட்டார். யெல்லாம் நல்லதென்று சொல்லி, துரை பேருக்குப் பண்ணி வந்த மொகறைக் (முத்திரையை) கையிலே குடுத்(தேன்).[2] அதை வாங்கிப் பார்த்து சந்தோஷப்பட்டார். அதன் பேரிலே நந்திராசா கடுதாசி பிரான்சுப் படுத்தினதையும் வினாயகப் பிள்ளை சம்மதிக்கு பிரான்சிலே எழுதியிருந்ததையும் கொடுத்தேன். அதைப் பார்த்துக் கொண்டு வினாயகப் பிள்ளை கடன் பட்டுப் போனானென்று சொல்லுகிறார்களே யென்று சொன்னார். அதுக்கு, "யென்னய்யா கடன்? அது சில்லரையா பதினாயிரம் யிருபதினாயிரம் யிருக்கும். அவன் சம்பாத்தியம் நாலு லக்ஷம் அஞ்சு லக்ஷத்துக்குண்டு. யிதிலே முசியே துப்பிளேயிக்சு ரெண்டு லக்ஷ மட்டுக்கும் சுத்தினார். அதுக்கு முசியே கொதே அவர்கள் கிட்ட பித்திசாம் யெழுதிப் போட்டான். யிப்போதும் முசே பெடுத்தல்மீ வீட்டுச் சிலவு, முசே திலார்ஷு வீட்டுச் சிலவு யிதுகளெல்லாம் அவன் நடத்திக் கொண்டு வருகிறான். இவன் ரெண்டு விராகன் சம்பளக்காறன்.

---

[1] தனது புதிய மாளிகைக்காக இதை வாங்கியிருந்தார்.

[2] ஒவ்வொரு ஆளுநருக்கும் இப்படி ஒரு முத்திரை உண்டு. பார்சியில் அதில் அவர் பெயரும் பதவியும் பொறிக்கப்பட்டது.

யித்தனைப் பணம் எங்கே யிருந்து வந்தது? வியாபாரம் பண்ணினானா? குத்தகை பண்ணினானா? எல்லாம் திருட்டிலே யல்லோ சம்பாதித்தான். இப்போதும் அவன் உத்தியோகத்துக்கு வருஷத்திலே லக்ஷம் ரூபாய் குடுக்கிறோமென்று பேசுகிறார்கள். அவன் தாயாதி முன் உத்தியோகத்திலே யிருந்தவன் பரசுராமப் பிள்ளை வந்திருக்கிறான். இப்போ அன்பதினாயிரம் ரூபாய் தருகுறான். அவனவன் கையில் மூன்று லக்ஷம் ரூபாய் வரவு பண்ணித் தருகிறேனென்று சொல்லுகிறான்," என்று சொல்லி, பரசுராமப் பிள்ளையை அழைப்பித்துப் பேட்டி பண்ணிவிச்சேன். அன்னூறு விராகன் குடுத்து பேட்டி கண்டு, தன்னுட அகிகத் (வரலாறு) தெல்லாம் சொல்லிக் கொண்டான். அதுக்குத் துரை தலையை அசைத்து பன்னீர் பாக்கு வெத்திலை கொடுத்து வெளியிலே யிருக்கச் சொன்னார்.[1]

அதன் பேரிலே துரை பாப்பய்யப் பிள்ளை சேதியென்ன வென்று கேட்டார். அவன் முன் பிட்சைக்காரனாயிருந்ததும், அவனை மதாம் துப்பிளேயிக்சு ஆளப் பண்ணினதும், அதனாலே காரியங்களெல்லாம் கெட்டுப் போனதும், காரியங்களைக் கெடுத்து அவன் சம்பாதித்ததும், அவன் மனுஷர் சம்பாதிச்சதும் சகலமுஞ் சொன்னேன். அதுக்குத் துரை "ஊரிலே பாதி பேரை அல்லவோ கிடங்கிலே போடவேணும். அது ஆவலாதி (இது நன்றா யிருக்காதே)," யென்று சொன்னார். "அது ஆவலாதி யேது? இரண்டு பேரைச் சுருக்குப் பண்ணினால் மத்ததெல்லாம் விலியே (வலிய) வந்து பேசுவார்க," ளென்று சொன்னதுக்கு, கும்பனீர் காரியமும் பார்க்க வேணும், தனது காரியமும் பார்க்க வேணும், கும்பினீர் காரியம் பாராமல் தனது காரியம் மாத்திரம் பார்க்கப்படாது யென்று சொன்னார். அதுக்கு, "முன்னுதாய்க் கும்பினீர் காரியமே பெரியதாய்ப் பார்க்க வேணும், தனது காரியத்துக்குக் கென்ன? நடக்க வேண்டியது நடக்கவே நடக்குது. யிப்போவும் ராமலிங்க னென்கிறவனுக்குப் பல்லாக்கும் குடுத்து வினாயகன் சீரங்கத்துக்கு அனுப்பியிருக்கிறான். (அவனுக்கு) அவன் காரியமும் பரமானந்தன் காரியமும் யிப்போ முன்னுதாய்த் தீரவேணும். ஆகையினாலே அவனை யிப்போ அழைப்பிக்கவேணு," மென்று சொன்னேன்.

நல்லது, அப்படியே அழைப்பிப்போ மென்று சொல்லி, நந்திராசாவுக்கு யெப்படி மறு சேதி யெழுதுகிற தென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "நாம் வந்ததுக்கு சந்தோஷப்பட்டு நீர் யெழுதி யனுப்பிவித்த காகிதம் பார்த்துக் கொண்டு சந்தோஷமாச்சுது. முசே கொதே அவர்கள் முன்னாலே உம்முட பேரிலே யெத்தனை பிறீதியாய் நடத்திவிச்சாரோ, அதிலும் அதிசெயமாய் நாமும் பிறீதியாய் நடத்துவோம். தம்முட பேரிலே பாக்கி வர வேண்டியதுக்கு யெப்படி எனப்

[1] பதவிகளை விலை பேசும் வழக்கம் என்றுமே இருந்தது போலும்.

பார்க்கவேணுமோ, அப்படிக்கு அந்தக் காரியத்திலே மனது வைத்துப் பார்க்க வேணு," மென்று எழுதியனுப்பிக்க வேண்டிய தென்று சொன்னேன். இந்தப்படிக்கி பிரான்சிலே யெழுதிக் கொண்டு வா யென்று சொல்லி, யிவரை நெருக்கினால் பணம் வருமா யென்று கேட்டார். "அதுக்குத் தடை யென்ன யிருக்கு தென்றும், சலாபத்து சங்கு வருகுரான், ஆடி மாசம் (ஜூலை 13) முதற் கொண்டு நமக்கு வெகு காரியம் யெல்லாம் அனுகூலமாய், யின்னம் வெகு ராச்சியங்கள் வருமென்று சோசியாள் சொல்லுகிறார்கள். நம்முடைய கையிலே யிருந்த மதுரை, திருநெல்வேலி, நடுமண்டலம் யிதுகளெல்லாம் யிப்போ இங்கிறேசுக்காறரும் மமுதல்லியும் போயி கட்டினார்கள். நாமிப்படி யிருக்கிறதல்ல. அதுக்கேத்த யெத்தனங்கள் பண்ண வேணும்," யென்று சொன்னேன். அதுக்கு, "நீர் சொல்லுகிற தெல்லாம் நிசந்தான். அதுகளுக்கெல்லாம் ஆவலாதியுமில்லாமல் (புகாரில்லாமல்) இருக்க வேணும், நியாயமாய்க் காணவும் வேணும், வழியாய்க் காரியம் நடத்தவும் வேணும். அதுக்கெப்படி யுண்டோ அந்தப்படி யோசனை பண்ணிச் சொல்லு. அப்படியே நடத்துவோம். முசியே துப்பிளேயிக்கு சோசியத்தை நிலவரமா யெண்ணினாரா?" வென்று கேட்டார். முன்னிட்டிலே சோசிய மேது யென்று தள்ளிக் கொண்டிருந்தார். கப்பலும் பிடிபட்டு, சென்னப்பட்டணமும் வந்து, யிங்கிறேசுக்காறரும் ஓடிப் போயி, அன்வர்திகானைக் கொன்று, நாசறு சங்குவையும் கொன்று, ராச்சியங்களெல்லாம் கைக்குள்ளே வந்ததும், வெகு திரவியம் வந்ததும் இதுகளெல்லாம் முன்னாலே ரெண்டு காரியம் சரியாய்ப் பலித்தவுடனே, சோசியத்தை நம்பியே யெல்லாவற்றையும் பண்ணினார்," யென்று சொன்னேன். (அந்த சோசிடம்) ஆர் சொன்னார்களென்று கேட்டார். மலையாள சோசியாள் சொன்னார்கள், அவர்கள் சொல்லுகிறது தப்புகிறதில்லை யென்று சொன்னேன். யிப்போ யென்ன சொல்லுகிறார்களென்று கேட்டார். இப்போது மப்படியே ரொம்ப யோகம் வருகிறதாய்ச் சொல்லுகிறார்கள் யென்று சொன்னேன். அவருக்கு சோசியத்திலே கொஞ்சம் மனது வந்தாப் போலே காணப்படுகிறது. யிப்படி யின்றைக்குப் பின்னையு மனேகஞ் சேதிகள் யெல்லாம் நாங்களிரண்டு பேரும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அவர் கேழ்க்கிற வழியும் அவர் மனோபாவமும் பார்த்தால் வெகு காரியத்தை யெல்லாம் மனதிலே ஒட்டியிருக்கிறாரென்று கண்டுது.

அதன் பேரிலே பழய நயினார் காரியம் (தனக்கு அப்பொறுப்பை மீண்டும் கொடுத்தால்) முசியே தெபறேன் வந்து, நாலாயிரம் ரூபாய் குடுக்கிறோமென்று சொல்லுகிறா னென்று வந்து சொன்னான். அதை (ஒரு) வெள்ளைக்காரர் அறியக் காரண மென்ன வென்று கேட்டார். அதுக்கு நான், "நீங்கள் வருகிறதுக்கு முன்னே பேசியிருப்பான். அந்தப்

பேச்சாக்கும் யிப்போ வந்து பேசினதாயிருக்கு." மென்று சொன்னேன். அப்படி வெள்ளைக்காரர் அறிய நடக்கலாகாது. அப்பால் நயினார் சேதியாய் ரொம்பச் சொல்லி சமாதானப்படுத்திப் பேசினேன்.

அதின் பேரிலே நந்திராசா கையிலே இப்போ கொம்மாந்தாமாய் சீரங்கத்திலே யிருக்கிற முசே தெசொசே யென்கிறவன் (ஒரு கடுதாசி வாங்கி அனுப்பியிருந்தான்) "முன்னாலே (முசே) மேசென் (காலத்தில்) பரமானந்தப் பிள்ளை யிருந்த போது அவர்களுக்குப் பத்துப் பணம் கொடுத்ததுண்டு; யிப்போ யிருக்கிற கொம்மாந்தானுக்கு நான் ஒரு காசு கொடுத்ததில்லை யென்று நந்திராசா (எழுதியிருந்தான். அதை) பிரான்சுப்படுத்திய கடுதாசும் அசலும், கருங்குழிப்பாளையத்தி லிருந்து வந்த ரெண்டு ஓலையும் பிரான்சுப் படுத்தினதும் அசலும் கையிலே குடுத்தேன். அதை வாங்கிக் கொண்டு நந்திராசா சேதி யென்ன வென்று கேட்டார். "நந்திராசாவுக்கு யிவடத்துக்கு ஆசையில்லை. அவன் கையிலே யிருந்த சீர்மை மதுரை திருநெல்வேலி நடுமண்டலம் இங்கிரேசுக்காறரும் மமுதல்லி கானும் கட்டிக் கொண்டார்கள். அந்தச் சேதி முசே கொதே அவர்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சான். யிப்பால் முசியே பெடுத்தல்மீக்கும் யெழுதி யனுப்பிவிச்சான். யிங்கே அதுக்கு கேழ்வியில்லாமல் போச்சுது. பதினெட்டு மாசம் சண்டை தேவையில்லை யென்று தீந்தது. அதினாலே அவன் சீரங்கத்திலே நிற்கத் தக்கதில்லை, அப்பால் போய் விடுவான்," யென்று சொன்னேன். அதுக்கு, முசியே கொதே யெல்லாக் காரியத்தையும் சடுப்பண்ணிப் (அவசரத்தில் செய்து) போட்டார் அல்லாமல், காரியமா யோசித்து பண்ணாமல் போனார் யென்று துரை சொன்னார். அதன் பேரிலே சீரங்கத்திலே அரும்பாத்தை உத்தியோகம் குடுத்தால் வருஷத்திலே லக்ஷம் ரூபாய் தருகுறோ மென்று சொல்லுகிறார்களென்றும் சொன்னேன்.

அதுக்கு, அந்த உத்தியோகம் வினாயகனுதாச்சுதே. அது எப்படி யென்று கேட்டார். அதுக்கு, "அவனார்? அரும்பாத்தை கோட்டையிலே கூலிக் கணக்கு யெழுதுகிறவன். இவனுக்கு யிது வெல்லாம் அக்கரை யென்ன?" வென்று சொன்னேன். ஆனால் யோசனை பண்ணிக் கொள்ளுவோமென்று சொன்னார். அந்த மட்டுக்கும் அனுப்பி விச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

***1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 11; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 2; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போன விடத்திலே துரை பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்தார். கண்டு ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். இத்தனாள் கட்டு விழுந்தது, யேனம்

பிடவை **32.** அப்போ வெள்ளைக்காரர் அவரவர் வந்து பேசிக் கொண்டிருந்தார்கள். ஆருக்கும் மறுபேச்சு சொல்லாமல் வாயை மூடிக்கொண்டிருந்து, என்னையும் அழைத்துக் கொண்டு மேல் வீட்டின் பேரிலே போயி நந்திராசா ஓடிப் போனான் யென்று யெழுதிவந்த காகிதத்தை யென் கையிலே கொடுத்து, "பார்த்தியா, அவன் ஓடிப்போய் விட்டா," னென்று சொன்னார். அதுக்கு நான், "நேத்தய தினம் நான் உம்முடனே சொல்ல வில்லையா? அவனுக்கு யிவடத்துக்கு ஆசையும் நின்றது (நம்பிக்கை போனது). மயிசூர் (காரர்களும்) மூணு கோடி திரவியத்தைச் சிலவு பண்ணி, காரியத்தையும் கெடுத்துப் போட்டாயே யென்று அடிக்கடி யெழுதி அனுப்புகிறபடியினாலே, அவ்விடத்தாசையும் அவனுக்கில்லை. ஆப்பாலும் யிப்போ நாசறு சங்கு தம்பி சலாபத்து சங்கு சீர்மையிலே வந்திருந்து மயிசூரின் பேரிலே ராசகாரியம் நடத்துகிற படியினாலே, அவன் சலாபத்து சங்கு அண்டையிலே போயி அவனுக்கு விசேஷமாயி திரவியம் கொடுக்கிறோமென்று பேசி, அவன் வழியிலே திரிச்சிராப்பள்ளி வாங்க வேணுமென்று யோசனை பண்ணிப் போனான்," யென்று சொன்னேன்.

அதுக்கு நாமும் யிங்கிறேசுக்காறரும் கூடிச் சண்டை போட்டால் சலாபத்து சங்கு யென்ன செய்வா னென்று கேட்டார். அதுக்கு நான், "நீங்கள் யெப்படி சண்டை போடுவீர்கள்? முன்னாலே கோடியே முப்பது லெக்ஷம் தனக்கு வரவேணு மென்று முசே துப்பிளேயிக்சு யிருக்கிறபோது (அவன்) எழுதி அனுப்பிக் கொண்டிருந்தான். அப்பால் முசே கொதே அவர்களுக்கும் பின்னையும் உபரியாய்ப் பணம் வர வேணுமென்று யெழுதி அனுப்பிக் கொண்டிருந்தான். யிப்போவும் அந்தப் பணங்களெல்லாம் வாங்கவேணுமென்று மராட்டியர் குதிரையிலே யிருவத்தையாயிரம் குதிரையும், சொந்தத்திலே யிருவதினாயிரம் குதிரையும், ஆக நாற்பத்தையாயிரம் குதிரையும், வெகு பாராக்காறரும், துப்பாக்கிகளும் பீரங்கிகளும் சகல சாமான்களுடனே பசியோடே வருகிறான். அவன் வந்தால் கில்லேதார், பாளையக்காரர் யெல்லாரும் அவனோடே கூடுவார்கள். யிங்கிறேசுக்காறர்களும் மமுதல்லி கானும் சகல சீர்மையுங் கட்டிக் கொண்டு அனுப்பிவிக்கிறார்கள். இந்தக் குண்டு சுத்திலே நாலு கிராமம் நம்முடைய கையிலே யிருக்கிறது. அவன் தான் சீர்மையை உங்கள் வசத்திலே அல்லவோ விட்டேன், நீங்கள் அல்லவா பணத்துக்கு உத்திரவாதி, யென் பணத்தைத் தாருங்கள் யென்று கேட்டால், நாம் மமுதல்லி கானைக் காட்டி, அவ(னோடு) கூட யெல்லாச் சீர்மையுங் கட்டிக் கொண்டு அனுபவிக்கிற இங்கிறேசுக்காறரைக் கூட அடிக்கத் தக்கதாயிப் பண்ண வேணுமே (யல்லாமல்), இதல்லாம் யிங்கிறேசுக்காறருடனே கூடி அவனோடே சண்டை பண்ண நியாய மென்ன?" வென்று கேட்டேன்.

அதுக்கு "யிப்படி யெல்லாம் யிருக்குது, யிதுக ளெல்லாம் விசாரித்து யோசனை பண்ணி நடத்தாமல் முசியே கொதே யென்ன (யென்னவோ) நடத்திப் போட்டார். நாமறியாமல் வந்தோ மென்று," சொன்னார். அதுக்கு நான், "முசியே கொதே கொம்மாந்தாம் செனராலாய் வந்தார். அவருக்குப் பொறுப்பு யேது? முன்னாலே முசியே துப்பிளேயிக்சு பொறுப்பாய் இந்தப் பட்டணத்துக்கு யிருந்தவராவது .... பொறுப்பாய்ப் பார்த்து நடத்தினார். ஆனாலும் அவர் முசியே லெனுவாரைப் போலே அல்ல. முசே லெனுவார் ஒரு காரியங்களை யெடுப்பார், யெடுத்தபடிக்கிக் கட்டி முடிப்பார். முசே துப்பிளேயிக்சு முசே லெனுவாரைப் போலே யெடுப்பு மாத்திரம் காரிய மெடுப்பார். முச்சூடும் முடிக்க அறியார். ஆனாலும் பொறுப்பு உள்ளவரானதினாலே, அப்போ யிருந்தக் காலங்களும் யித்தனை யெல்லாம் நடக்கத் தக்கதாயி யிருந்தபடியினாலே, ஒரு வேளை ஒசறுகிறதும் அப்பால் தாழ்வு வருகிறதும் (உண்டு). அந்த வேளையிலே தாழ்ந்தது. யிப்போ யிந்தப் பட்டணத்துக்கு நீர் பொறுப்பாளியானதினாலே முன்னும் பின்னும் பார்த்து யோசித்து யெப்படி உண்டோ அப்படிக் காரியம் பார்க்க வேணு," மென்று சொன்னேன்.

இதுக்குள்ளே முசே தெபறேன் வந்தார். அவர் பேசட்டு மென்று நானிப்பாலே வந்திருந்தேன். யிப்படி யிருக்கையிலே ஒன்பது மணி அடிச்சது. முசியே தெபறேன் பேசிக் கொண்டு போனார். உடனே யென்னை அழைக்கச் சொல்லி நானுள்ளே போனேன். என்னைப் பார்த்து, "யிப்பால் நந்திராசா போயிவிட்டானே, முசியே தெசொசே கும்மாந்தானுக்குக் காகிதமெழுத வேணுமே, நமக்கு வர வேண்டிய பணத்துக்கும் மோசம் வந்துதே. அது என்ன வென்று யெழுத வேணு," மென்று கேட்டார். கண்டிப்பாய் யெழுத வேணுமென்று சொன்னேன். அவனென்ன செய்வான், நந்திராசா மோசம் பண்ணிப் போய்விட்டான் யென்று சொன்னார். "யிப்படி யெங்கேயாகிலும் சொல்லுவார்களா? யிவரை என்னத்துக்கு அங்கே வைச்சது? அன்பதினாயிரம் அறுபதினாயிரம் சம்பாதிச்சுக் கொண்டு, அவன் கையிலே யிவருக்கு ஒன்றுங் குடுத்ததில்லை யென்று காகிதம் வாங்கி அனுப்பிப் போட்டு, யிப்போ அவன் போய்விட்டா னென்று யெழுதினா னென்றால், 'நீரென்னத்துக்கு அங்கே யிருந்தது? உம்மை யென்னத்துக்கு அங்கே வைச்சது? நீ நந்திராசாவுக்கு உத்திரவாதி,' யென்று எழுதத் தேவையில்லையா,' வென்று கேட்(டேன்). அதுக்கு "அவன் கிட்ட குதிரை ராணுவு யிருக்க, யிவன் யென்ன செய்வான்?" என்று கேட்டார். "நன்றாயிருக்கிறது! கையிலே செமுதாட்டை (வாளை) உருவிக் கொண்டு அவன் வயத்திலே வைத்து நில்லு யென்று சொன்னால், அவன் குதிரை ராணுவு யென்ன செய்யும்?" யென்று கேட்டேன். அதுக்கு நகைத்து, "நீ சொல்லுகிறது வுள்ள சேதி. நமக்கானால் வெகு பணம் வரவேணும். முசியே

தெசொசேக்கிக் கண்டிப்பாய்த்தானே யெழுதுகிறேன்," யென்று சொன்னார்.

அதின் பேரிலே துறையூர் வைக்கீல் கஸ்தூரி றங்கய்யனையும் கூட்டிப்போய் நானூறு விராகன் நசர் வைச்சுப் பேட்டி பண்ணிவிச்சு, துறையூரார் முன்னிருந்த பேர்கள் (பாளையங்காரர்கள்) பிரான்சுக்காறத் துரைகள் மனது வர நடந்து கொண்டதும், யிப்போ நந்திராசா அதுக்கு வதை பண்ணி (தடை கிளர்த்தி) இவ்விடத்துக்கு ஒன்றும் பிற யோசனமில்லாமல், தனக்குப் பிறயோசனமாகத் தக்கதாக பேசிக்கொண்டு, யிவர்களைத் துரத்தி விட்டு வேறே பட்டம் கட்டினதும், யிவர்கள் வந்து அரியலூரிலே யிருக்கிறதும், பட்டணம் கொள்ளையிட்டதிலே நந்திராசாவுக்கு வந்த ஆதாயமும் சகலமுஞ் சொன்னேன். அதின் பேரிலே துரை சொன்னது, "நந்திராசா அப்படி நடத்தினார் அல்லவா? யினி மேல் நாமும் அதுக்கேத்தபடி நடத்தி விப்போம், ஆகட்டும்," யென்று சொன்னார். அதன் பேரிலே கஸ்தூரி றங்கய்யனை வெளியே யிருக்கச் சொல்லி, துரையுடனே, "நீங்களானால் இந்தப் பட்டணத்துக்குப் பொறுப்பு (வகிக்க) வந்தீர்கள். காரியங்களானால் நானாவிதமாய் அவரவர் (தாம் நினைத்தது போலே) நடத்தினதினாலே யெல்லாரும் மிஞ்சி அபந்தரையாய்ப் (தலைகீழாய்ப்) போயிருக்குது. இதெல்லாம் நீர் யோசனை பண்ணி காரியத்தை யெல்லாம் வழியோடே கொண்டு வந்து நடத்தினீர்களானால் கீற்த்தியும் வரும், பிறயோசனமும் கும்பினீருக்கு முண்டு," யென்று சொன்னேன். அதுக்கு துரை எல்லாக் காரியமும் திறந்து கேட்டபடியினாலே, மனது சலிச்சு, யெப்படி யிது நடக்குமென்று சொன்னார்.

அதுக்கு, "நீங்கள் சலிக்கத் தேவையில்லை." முன்னாலே கப்பலை யிங்கிலீசுக்காரர் வந்து பிடித்தபோது சென்னப்பட்டணம் பிடிச்சது முதல் கொண்டு யின்றைய வரைக்கும் நடக்கிற சேதிகளெல்லாம் சோசியாள் சொன்னதும் சொல்லி, "அவர்கள் சொல்லுகிறது தப்பத் தக்கதில்லை; யினி மேல் நேத்து சித்திரை மாசம் முதல் தேதி முதல் இந்த வருஷத்திலே சலாபத்து சங்கு யிவடத்துக்கு வரவும் போறான். இங்கிலீசுக்காரர் கையிலே யிருக்கிற சீர்மை யெல்லாம் பிடுங்குற நிமித்தியம் முன்னுதாய் நம்முடைய சீர்மையை விடச்சொல்லி, அதன் பேரிலே அவர்கள் சீமையும் பிடுங்கி, நமக்கான பேரை நேமித்து, நம்முடைய பவுன்சும் யிருக்கப் பிலன்(வலுப்) பண்ணி, அப்படி யெல்லாம் நடத்தப் போறான். அதினாலே உங்களுக்கு ரொம்ப ஆதாயம் வரப்போகுது," யென்று சொன்னதுக்கு, "நீ சோசியத்தை நிசமா யெண்ணிச் சொல்லுகிறாயே, சலாபத்து சங்கு திருப்பிப் போனாலோ?" என்று கேட்டார். "அவனெப்படி திருப்பிப் போவான்? மே மாசம் மேற்கே யெல்லாம் மழைக் காலமானதினாலே

கிஷ்ணா நதியிலே தண்ணி வந்து விடும். அதன் பேரிலே அவனுக்குப் போகக் கூடாது (முடியாது). கார்த்திகை பிறந்து அப்பால் போகவேணும். ஆகையாலே மயிசூருக்குப் போயி, அவ்விடத்துச் சம்மதியம் தீத்து, அங்கே வருகிறதை வரப் பண்ணிக் கொண்டு, திரிச்சிராப்பள்ளி தஞ்சாவூர் இரண்டு சம்மதியும் தீத்து, அங்கே வருகிறதை வரப்பண்ணிக் கொண்டு, ஆற்காட்டுக்கு வந்து இவ்விடத்துக் காரியமெல்லாம் செவ்வைப்படுத்திக் கொண்டு அப்பால் கார்த்திகை பிறந்து போகப் (போறான்). யிப்போ தானே அப்துல் (வகாபு) கானுக்கு திமிரி முதலான கில்லைகள் (கோட்டைகள்) காலி பண்ணச் சொல்லி எழுதி யனுப்பிவிச்சான். அவன் உடனே அந்த சேதிக்கி மமுதல்லி கானுக்கு யெழுதினான். ஆகையாலே நடக்கப் போற சேதி யிப்படி யிருக்கிறபடியினாலே சாஸ்திரந் தப்பாது," யென்று சாஸ்திரப் பிரசங்கமே திரளாய்ச் சொன்னேன். அதன் பேரிலே அவரும் சம்மதிச்சு காரியமாய்த்தானே உத்தரவு கொடுத்தார்.

அதன் பேரிலே ராச காரியங்களா யிருக்கிற பெரிய காரியங்களையும், அவற்றில் அவர் கண்டிப்பாய் நடந்து கொள்கிற காரணங்களையும் விளக்கிப் பேசினார்.[1] யிப்படி யிருக்கையிலே, கொம்மாந்தாம் முசே தெசொசே மோசம் போனான், நந்திராசா கையிலே ஒன்றும் வாங்க மாட்டாமல் போனான் யென்று சொன்னார். அதுக்கு நான், "அவர் மோசம் போகயில்லை; உங்களை மோசம் பண்ணி நந்திராசா கையிலே தான் ஒன்றும் பிரயோசனப்படயில்லை (வாங்கவில்லை) என்று கடுதாசி வாங்கி அனுப்பினார். இவர் மாதம் ஒன்றுக்கு அய்யாயிரம் ரூபா வீதம் நந்திராசா கையிலே சீட்டு (ரசீது எழுதி) வாங்கி(க் கொண்டார்). அதை, தன் சிலவுக்கு நந்திராசா குடுத்தான் யென்று (அவன் கைப்பட) யெழுதி (வாங்கி உங்களுக்கு அனுப்பினார்). நன்றாய் விசாரித்தால் அப்போ அவர் மோசம் போனதும் உங்களை மோசம் பண்ணுகிற நிமித்தியம் யெழுதினதும் தெரியும்," யென்று சொன்னேன். அதுவும் உள்ளது தான் யென்று சொன்னார்.

முந்தாம் நாள் பாகூர் வில்லியநல்லூர் சம்மதி செக்கிறத்தாருடனே (துரை) சொல்லி கோந்திராத்திலே யெழுதி, குத்தகை ஒப்பந்தமும் வாங்கச் சொன்(னார்). இத்தனாள் நொத்தேருடனே சொல்லி அவர் கைப்பட குத்தகைக் காகிதம் யெழுதி, துரை கையெழுத்துப் போட்டு கோன்சேலியேர் கையெழுத்தும் போட்டார்கள். குண்டூர் வெங்கிடாசல செட்டி கையெழுத்து மாத்திரம் அதிலே போடவேணும். அப்பால் பனிரெண்டு மணி வரைக்கும் பேசிக்கொண்டு அனுப்பிக் கொண்டு வெளியே வந்தேன்.

---

[1] கையெழுத்துப் பிரதியில் இவ்வரிகள் விளங்கிக் கொள்ள முடியாமல் உள்ளன. ஆங்கிலப் பதிப்பை வைத்து இவை எழுதப்பட்டுள்ளன.

யெடுப்பிச்சுக் கொண்டு வா," யென்று சொன்னார். நானு மித்தனை மன்னாட்டாய்ச் (மறுபடி மறுபடி) சொல்லுகிறதிலே, யெனக் கென்ன வென்று நல்ல தென்று சொன்னேன். அதின் பேரிலே கும்பினீர் வர்த்தகர் (பேரிலே) பதினாயிரம் வராகனுக்கும், பவழக் காட்டு (பழவேற்காடு) லேஞ்சுக்கு ஆராயிரம் வராக(னுக்கும்), செம்மரத்துக்கு ஆராயிரம் வராக(னுக்கும்) துரை கையிலே மூணு தினுசு வாங்கி வீட்டிலே கொண்டு வந்து, குண்டூர் வெங்கிடாசல செட்டி கையிலே கொடுத்தோம்.

### *1755 வருசம், அப்ரீல் மாசம், தேதி 16; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 7; புதவாரம்*

வெங்கிட்டாம்பேட்டையிலே யிருந்து மெச்சியப் பிள்ளையும் அவருடைய ஸ்திரீயும் பரிசெனங்கள் யிருபது முப்பது பேர்களுடனே சதா–சிவப் பிள்ளை குமாரன் சிதம்பரனாதப் பிள்ளைக்குப் பெண் கேழ்க்கிற நிமித்தியம் தேங்காய், பழம், சர்க்கரை, மஞ்சள், பாக்கு, வெத்திலை, யேலம், கிராம்பு, சாதிக்காய், மூணு பிடவை, மூணு றவிக்கை, யிவ்வளவும் வெள்ளித் தட்டுலே அமித்திக் கொண்டு, பிராமண ஸ்திரீகள் சுமங்கிலியா யிருக்கிற பேர்கள் கிட்ட குடுத்து யெடுப்பித்துக் கொண்டு, பகலிருபது நாழிகைக்கு சிங்க லக்கினத்திலே வளவுக்கு (வீட்டுக்கு) வந்தார்கள்.[1] ஸ்ரீ திருமலைப் பிள்ளை அவர்களும் ஸ்ரீ நாச்சியப் பிள்ளை அவர்களும் நம்முடைய கோபாலசுவாமியும் வீரராகுவும் கூடயிருந்து வந்த பேருக்கு உபசாரங்கள் பண்ணி, கூட வந்த பிராமணாளுக்கும் அவர்களுக்கும் சந்தனம் பாக்கு வெத்திலை குடுப்பித்து, மேல்வீட்டின் பேரிலே யிருக்கச் சொல்லி அனுப்பினார்கள். நானித்தனை நாழிகை நித்திரை யினின்று யெழுந்திருந்து, உடனே நடந்த சேதி விசாரித்துக் கொண்டு அதன் பேரிலே சாயங்காலம் பிறப்பட்டு, கொண்டால் (கண்டால்–Kandal) குருவப்பச் செட்டி குமாரன் கலியாணத்துக்குக் கால் நாட்டுகிற படியினாலே அதுக்குப் போயிருந்து, அதின் பேரிலே சின்ன தோட்டத்துக்குப் போயி முசியே ரேனு (டனும்) (M. Reyne) கோபாலசுவாமியுடனேயும் பேசியிருந்து போட்டு சாமத்துக்கு வீட்டுக்கு வந்தேன்.

### *1755 வருசம், அப்ரீல் மாசம், தேதி 17; யுவ வருசம், . சித்திரை மாசம், தேதி 8; குருவாரம்*

இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கி சந்தா சாயபு குமாரன் ரசா சாயபுக்கு முசே திலார்சு பேட்டி பண்ணிவிப்பிச்சு, யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அந்தக் கபுறு கேட்டோம். பன்னீர் பாக்கு வெத்திலை

---

[1] "மகாராஜ ராஜஸ்ரீ சேஷாத்திரிப் பிள்ளை அவர்களும்" என்பது விடுபட்டுள்ளது. மேலும் ஆங்கிலப் பதிப்பில் நாச்சனப் பிள்ளை என்றுள்ளது.

மாத்திரம் கொடுத்ததே யல்லாமல் வெகுமானங் கொடுக்கயில்லை. இத்தனாள் காலமே ஸ்ரீ[1] சேஷாத்திரிப் பிள்ளை அவர்களையும் ஸ்ரீ திருமலைப் பிள்ளை அவர்களையும் எம்பெருமாள் பிள்ளையும் வீராராகுவும் கோபாலசுவாமியையும் விசயப் பிள்ளையும் பஞ்சாங்கம் பிள்ளையும், குட்டியும், தெலுங்கு சுப்பய்யனும் யிவர்களெல்லாரும், மெச்சியப் பிள்ளையும் அவருடனே கூட வந்திருக்கிற பிறாமணாளையும் வைத்துக் கொண்டு பொருத்தங்கள் பார்க்கச் சொல்லிப் போட்டுக் கோட்டைக்கு (வந்தேன்).[2]

துரையைக் கண்டு ஆசாரம் பண்ணின விடத்திலே, சீரங்கத் திலேயிருந்து தியாகய்யன் தம்பி காகிதம் வந்த(து. அதிலே) கொம்மாந்தாம் முசியே தெசொசே நந்திராசா கையிலே யிருவதினாயிரம் ரூபா (ரொக்கமும்) யிருபதினாயிரம் (மதிப்புள்ள) முத்துச் சரமும் சிறிது நகைகளும் வாங்கிக் கொண்டு, (போக) விட்டு விட்டதாகச் சேதி கேழ்க்கப்பட்டு தென்று யெழுதியிருந்தது. அதை அறிஞ்சு கொண்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

அதன் பேரிலே கோபாலசுவாமி வந்து சொன்ன சேதி: பொருத்தம் பார்த்தோம், காரைக்கால் கந்தப்பிள்ளை நக்ஷத்திரத்துக்கும் பொன்னாச்சி நக்ஷத்திரத்துக்கும் பொருந்தி யிருக்குது யென்றும், வெங்கிட்டாம்பேட்டை சிதம்பரனாதப் பிள்ளை நக்ஷத்திரத்துக்கும் நன்னாச்சி நக்ஷத்திரத்துக்கும் பொருந்தியிருக்கிறதென்றும், குழந்தை நக்ஷத்திரத்துக்கும் (என்) அம்மான் வீராராகவப் பிள்ளை குமாரர் சாமிக்கும் பொருத்தமில்லை, அவர் தம்பி அப்பாவுக்குப் பொருந்துகிற தென்றும் சொன்னார். வைப்பூர் சுப்பா சோசியரும் வந்திருந்தார். யிவாள் மூணு பேர் சாதகங்களும் பலாபலன் பார்க்கச் சொன்னோம். அவர்களும் பார்த்து பிலனாகத் தானே (திருப்தியாகச்) சொன்னார்கள்.

### *1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 19; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 10; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஏழு மணிக்கு முசியே லெறி செனாலண்டைக்குப் போனவிடத்திலே, நேத்து முசியே கொதே பேருக்கு சலாபத்து சங்கு ஆனை வர்த்தகன் உசேன் கான் மாவுத்தன் கையிலனுப்பின காகிதத்தை, நசரும் வைத்துக் கொடுக்க, அந்தக் காகிதத்தை பிரான்சு படுத்திக் கொண்டு வரச் சொல்லி யென் கையிலே கொடுக்க, அதை நான் திராண்சுலீது பண்ணி யித்தனாள் மேல் வீட்டின் வடவண்டை கிழக்கு மேற்கு நெடுஞ்சாலையிலே முசியே லெறி, முசியே

---

[1] மகாராஜ ராஜஸ்ரீ என்றே ஆங்கிலப் பதிப்பில் எங்கும் உள்ளது.

[2] பிரதியில் இப்படித்தான் வாக்கிய அமைப்பு உள்ளது. இதிலுள்ள பல பெயர்கள் ஆங்கிலப் பதிப்பில் இல்லை.

கில்லியார், முசியே தெபறேன், முசியே கொற்னேத்து, முசியே லெனுவார் வகையராக்கள் யிருக்கச்சே நான் போயாசாரம் பண்ணினேன். அவரென்னைப் பார்த்து அதிசெயம் ஏதாகிலு முண்டாவென்று கேழ்க்க, சலாபத்து சங்கு மயிசூரார் சீமையெல்லாம் கொள்ளை வல்லிடி பண்ணி அஞ்சு கோடி ரூபாய் கேழ்க்கிறானென்று சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும், அவர்கள் நாங்கள் வெகு லுகுசான் (நஷ்டப்) பட்டுப் போனோம், பணம் கொடுக்க யிடமில்லை யென்று சொல்லிக் கொண்டிருக்கிறார்க ளென்றும், யினி மேல் யென்னமாய்த் தீருமோ அது தெரியா தென்றும், நந்திராசா சீரங்கம் விட்டுப் போனவன் நாமக்கல்லுக் கோட்டையிலே யிருக்கிறானென்று சொல்லிக் கொள்ளுகிறார்களென்றும் சொல்லி, முசியே கொதே பேருக்கு சலாபத்து சங்கு அனுப்பின பசினுசு[1] காகிதமும் பிரான்சுப் படுத்தின காகிதமும் கூட குடுக்க, அதை (அவர்) வாங்கிக் கொண்டு பிரான்சிலே எழுதினதைப் பார்க்க, அதிலே பாப்பய்யப் பிள்ளை பேரிலே உசேன் கானுக்குக் கடன் யிருவத்தய்யாயிரம் வராகனும், (பாப்பய்யப் பிள்ளை) மனுஷன் அங்கப்பிள்ளை பேரிலே இருபத்தொன்பதினாயிரம் ரூபாயும், அசனுதின் கான் பேரிலே யேழாயிரம் விராகனும் வரவேணுமாம்; அதுக்குக் கடன் சீட்டுக் குடுத்திருக்குதாம். அந்த விராகனைப் பாப்பய்யப் பிள்ளை வகையிராக்கள் கையிலே வாங்கி உசேன் கான் மருமகன் சோகருதின் கான் (சுகூருதீன் கான்) கையில் கொடுத்து, பீமராசா சாவுக்காருக்குக் குடுப்பிக்கவும் (என்று எழுதியிருந்தது). கடன் வாங்கினவன் குடுத்தாலல்லோ அவனும் தான் பட்ட கடன் காரனுக்குக் குடுப்பான்; அவனைக் கடன்காரர் சக்குத்திப் (நெருக்கடி) பண்ணுகிற படியினாலே தயவுபண்ணி உடமைக்காரருக்கு உடமையை வாங்கிக் கொடுக்க வேணுமென்றும் யெழுதி யிருந்ததை துரை படித்துப் பார்த்து, அப்பால் முசியே தெபறேன், முசியே கில்லியார் வகையிராக்களுக்குப் படித்துக் காண்பித்து, இவன் லக்ஷத் தன்பதினாயிரம் ரூபா குடுக்க வேண்டியிருக்க, இப்படி அனேகங் கடன் அவரவருக்குக் கொடுக்க வேண்டியிருக்க, யிதை யெல்லாம் விட்டு விட்டு பாப்பய்யப் பிள்ளைக்கு முசியே துப்பிளேயிக்சு 1754 வருசம் ஆனி (ஜூலை) மாசம் வரைக்கும் சீர்மை சம்மதி முதலான சகல சம்மதியும் குடுத்துத் தீத்துப் போட்டான் யென்றும், பாரிக்கத்து (விடுதலைச் சீட்டு) எழுதிக் குடுத்திருக்கிறாரென்றும், விட்டு விடச் சொல்லி முசியே பெடுத்தல்மீ பேசுகிறான் யென்றும், பின்னையும் அனேகம் பேச்சுக்கள் அந்தக் கும்பலிலே பேசிக் கொண்டிருந்தார்கள். அதுக்கு முசியே கொற்னேத்து வகையிராக்கள் யிவன் பணம் பத்துப் பனிரெண்டு லக்ஷம் ரூபா சென்னப்பட்டணம் வகையிரா யிடங்களிலே ஒளிச்சு வைத்திருக்கிறான் என்று அவரவர் சொன்னது மல்லாமல், அவன் பண்ணின

[1] பார்சி காகிகதம் என்பது பசினுசு காகிதம் என்று பலவிடங்களிலே எழுதப்பட்டுள்ளது.

அனியாயங்களை யெல்லாம் .... விஸ்தாரமாய்ப் பேசியிருந்து, அப்பால் இறங்கி கோந்துவாரே துரை வகையராக்கள் போனார்கள். அப்பால் நான் பிடவை பார்க்கிற சாலையிலே போயி அங்கே யிருக்கிற வருடனே பேசியிருந்து, அப்பால் முசியே கொற்னேத்து பவழப் பெட்டி நிறுத்துகிற (எடை போடுகிற) யிடத்துக்கு அழைப்பிக்க, அங்கே போய் முசியே கொற்னேத்து, முசியே மீராவுடனே பேசி யிருந்து, அங்கே யிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்குப் பதினொன்றரை மணிக்கு வந்தேன்.

*1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 21; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 12; சோமவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போகவேணும் யென்று அங்கி போட்டுக் கொண்டு வெளியே பிறப்பட்டுக் கொண்டிருக்கச்சே, சரீரம் சத்து ஆயாசம் கண்டு நித்திரை வருகிறாப் போலே யிருந்தது. நல்லது யென்று அங்கியை வாங்கிப் போட்டு நித்திரை பண்ணப் போனேன்.

பனிரெண்டு மணி வரைக்கும் நித்திரை பண்ணி எழுந்திருந்து ஸ்னானம் பண்ணி சாப்பிட்டுக் கொண்டிருக்கிறதிலே தியாகய்யன் தம்பி ஸ்ரீரங்கத்திலே யிருந்து எட்டாம் தேதி எழுதின காகிதத்தைக் கொண்டு வந்து படித்தான். அதிலே யெழுதி யிருந்த வயணம் என்ன வென்றால், சீரங்கத்துக்கு முசியே குப்பியும் ராமலிங்கப் பிள்ளையும் வந்து சேர்ந்ததாகவும், கொம்மாந்தாம் முசியே தெசொசேயும் முசியே குப்பியும் யேகோபவிச்சுப் போனார்கள் (ஒன்று சேர்ந்துள்ளனர்) என்றும், அந்தச் சேதி ராமலிங்கப் பிள்ளை அறிஞ்சு முசியே மேசெனை அனுப்பினால் நல்லதென்று இவ்விடத்துக் கெழுதினதாகவும், அந்த ஓலை முசியே குப்பி, முசியே தெசொசே கையில் அகப்பட்டதாகவும், அதை வைத்துக் கொண்டு ராமலிங்கனையும் அவனண்டையிலே யிருக்கிற அருணாசல மென்கிற பிள்ளையாண்டானையும் அழைத்து வரச் சொல்லி நன்றாயடித்து கிடங்கிலே அடைத்துப் போட்டார்கள் யென்றும், நந்திராசா நாமக்கல்லுக் கோட்டையிலே யிருக்கிறவர், தம்முடைய கிட்டயிருக்கிறவர்கள், உத்தியோகஸ்தர்கள் கையிலே எல்லாம் அவரவர் உத்தியோகத்துக்குத் தக்கனையாயி பதினாயிரம் அய்யாயிரம் வாங்கி தண்டுச் சிலவு பண்ணிக் கொண்டிருக்கிறார் யென்றும் எழுதியிருந்தது. (மேலும்) ஸ்ரீரங்கப்பட்டணத்திலே தளவாய் தேவராச உடையார் செத்துப் போன பிறகு கற்த்தா (தலைமைப்) பிறதானி (பதவியை) வெங்கிடபதி அய்யனுக்குக் குடாமல் மேன் விசாரிப்பாய் விசாரிக்கச் சொல்லி (மேற்பார்வை மட்டும் பார்க்கச் சொல்லியுள்ளார்கள்); ரெண்டு பேர் வெள்ளித் தடிக்காரரை[1] சீக்கிறத்துக்கு நந்திராசாவை டகோட்டாய்

[1] வெள்ளித்தடி பிடித்த இரு உயர் காவலர்.

(விரைவாகப் பிடித்து) வரச்சொல்லி அனுப்பிவிச்சதாகவும், அந்த ரெண்டு பேர் வெள்ளித் தடிக்காரர் வந்தவுடனே நந்திராசா பயணப்பட்டு ட்டாக்கொட்டாக்காய் (உடனடியாய்) ஸ்ரீரங்கப்பட்டணத்துக்குப் போற தாயும், யிந்தப்படிக்கி கேழ்விப்பட்டோம் யென்று யெழுதியிருந்தது.[1]

### *1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 22; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 13; செவ்வாய்வாரம்*

இத்தனாள் சாயங்காலம் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், நாளைய தினம் துரை பண்டிகையான படியினாலே அதுக்கு முசியே திலார்சு வழியாய் சந்தா சாயபு மகன் ரசா சாயபு துரைக்கு வெகுமதிகளைக் கொண்டு வருகிறதாகவும், துரை அவனுக்குக் கொடுக்கிறதுக்கு யேழாயிரம் ரூபாய்க்குத் தீனிகளெடுத்து[2] வைக்கச் சொன்னதாகவும் கேழ்வியாச்சுது.

### *1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 23; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 14; புதவாரம்*

இத்தனாள் காலமே துரை பண்டிகை யானபடியினாலே கோட்டைக்குப் போய் துரைக்குப் பூச்செண்டு குடுத்து காண்பிச்சுக் கொண்டேன். வெள்ளைக்காறர், கோன்சேலியேர்கள், (அவர்கள் தம்) அம்மாமார்கள் வகையிராக்கள் வந்திருந்தார்கள். துரை கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்த பிற்பாடு, சந்தா சாயபு மகன் ரசா சாயபு வந்தான். துரை அவர்கள் படி வரைக்கும் எதிராகப் போய்க் கூட்டி வந்தார். அப்போது அவன் கொண்டு வந்த பெகுமான வயணம்:

பலகை (?) வயிரம் பதிச்சது, கெம்பு(க் கல்) மத்தியே புதைச்ச பதக்கம் 1க்கு, விராகன் 150; பலகை வயிரம் பதிச்ச பாசுபந்து சோடு 2க்கு 250 விராகன்; பொன்னாலே பண்ணின பல்லக்கு குப்பி சோடு 1; பொன் பன்னீர் சொம்பு 1; பானதான தட்டு 1; பெட்டி 1; ஆக பொன் நகை 25 விராகன் 400; குதிரை 1க்கு விராகன் 200; சீரொப்பா 1க்கு விராகன் 100; ஆக (மொத்த மதிப்பு) விராகன் 1400.

யிமாம் சாயபு மகன் சீரொப்பா 2– ரூபாய் 250 (மதிப்புள்ளது)– வைத்துக் கண்டான். கும்பினீர் வர்த்தகர் (ஏழு பேர் தலா) விராகன் 21 ஆக (மொத்தம்) விராகன் 147; சலது வெங்கிடாசல செட்டி விராகன் 21, கன்னபுரம் திருப்பள்ளி செட்டி விராகன் 11, மதனாந்த பண்டிதன்

---

[1] நீண்ட ஒரே வாசகம் பதிப்பாசிரியரால் பிரித்து எழுதப்பட்டுள்ளது.

[2] தீனிகள் (உணவு வகைகள்) என்று ஆங்கிலப் பதிப்பிலும் உள்ளது. இது தினிசுகள் என்று இருக்க வேண்டும்.

ரூபாய் 5, பாப்பய்யப் பிள்ளை வக்கீல் சீனிவாச ராயன் (ஒரு) துலுக்கப் பய்யல் முகாந்திரமாய் வாழைப்பழத்தாறு 2, பிலாப்பழம் 2, பப்புளிமாசு 10 – இந்தப்படிக்கி அவரவர் வைச்சுப் பேட்டி கண்டார்கள். [1]அதில் சந்தா சாயபு மகனுக்குத் துரை குடுத்த பெகுமான வயணம்: சகலாத்து சிப்பம் 30க்கு ரூபாய் 3000; சீனத்து (துணி) சுருட்டி 14க்கு ரூபாய் 448; கெடியாரம் 2க்கு ரூபாய் 400; பொன்சரிகை நூல் மார்க்கு 7க்கு ரூபாய் 250; மொகமல் சுருள் 3க்கு – மூனு வரண பேதகம் – கெசம் 60க்கு, ரூபாய் 960; பின்னையும், சீனா சுருட்டி 1க்கு ரூபாய், 60; திஷ்ட்டி கோயில்[2] 2க்கு ரூபாய் 100; சூருகத்தி 4; கத்திரி 4; வில்லைக் கண்ணாடி 6; ஆகுதுங்கேரி (ஹங்கேரி) சீசா கூடை 2; பொன் சின்ன சிமிள் 1; மூக்குத்தூள் சிமிள் 4; துரை யேழாயிரம் ரூபா யென்று கணக்கு யெழுதிக் காண்பிச்சது. அது அய்யாயிரத் தன்னூறு ரூபா கோட்டை விலைப்படிக்கி யென்று கிருஷ்ணப்பன் சொன்னான். இந்தப்படிக்கி வெகுமானம் பண்ணி இருபத்தோரு வேட்டு பீறங்கியும் போட்டு உபசரணை வார்த்தைகள் சொல்லி அனுப்பிவிட்டார்கள். (அவர்கள்) போன பிறகு நான் சத்து நேரம் யிருந்து, அப்பிறம் வீட்டுக்குப் போனேன்.

### *1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 24; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 15; குருவாரம்*

இத்தனாள் காலமே ராமாஞ்சி பண்டிதரையும் சுவாமி அய்யங்காரையும் கூட்டி முசியே தெருஷே அண்டைக்கு (M. du Rocher) அனுப்பிவிச்சு, கருங்குழி சாலவாக்கம் ரெண்டிலும் யிங்கிலீசுக்காறர் வரு முன்னே நம்முடையவாள் போயி கட்டி பணம் அறுவிட்டதுக்கு (குத்தகை வசூல்) குடிகள் அத்தாட்சிக் காகிதங்கள் பிரான்சுப் படுத்தி யிருந்ததைக் குடுத்துப்போட்டு வரச் சொல்லி அனுப்பிவிச்சோம். அந்தப்படிக்கி முசே தெறுஷே[3] கிட்ட ராமாஞ்சி பண்டிதரும் சுவாமி அய்யங்காரும் கொண்டு போய்க் கொடுத்தார்கள். அதைப் பார்த்துக் கொண்டு முசியே தெறுஷே சொன்ன சேதி : "மதுராந்தகம் முன்னாலே அமுல் பண்ணின கோதண்டராமய்யன் நம்முடைய கீழே யிருந்தான். அவனிப்போ இங்கிலீசுக்காறருடனே போய்க் கூடி யிருக்கிறான். அவன் நம்முடைய கிட்டயிருக்கிற நாளையிலே அந்தக் கிராமத்திலே அறுவானத்துக்கு (வசூலானதுக்கு) சிறிது பேர் கையெழுத்து வரவேணும். அதுக் கெழுதி அனுப்பி சீக்கிறத்துக்கு அழைப்பிக்க வேணுமென்று கருங்குழி சாலவாக்கம் இதிலே நம்முடையவாள் அறுவிட்டதுக்குக்

---

[1] தெளிவு கருதி, வாசகம் சிறிது மாற்றம் செய்யப்பட்டுள்ளது.
[2] இது டெலஸ்கோப். திருஷ்டிக் குழாய் என்று எழுதப்பட்டிருக்கக் கூடும்.
[3] துருஷே, தெருஷே, தெறுஷே என்று மூவிதமாக எழுதப்பட்டுள்ளது.

கணக்கும் அழைப்பிக்க வேணு" மென்று சொன்னார். அந்தச் சேதி நமக்கு வந்து சொன்னார்கள். உடனே அப்போ அமுல் பண்ணின ரங்கப்ப முதலியார் மனுஷன் வெங்காசி பண்டிதரை அழைப்பிச்சுச் சொல்லி சீக்கிறத்துக்கு யெழுதி அனுப்பிவிச்சு அறுவானதுக்குக் கணக்கும் மதுராந்தகத்திலே யிருக்கப்பட்ட நாலு பேர் குடிகள் கையெழுத்தும் அழைப்பிக்கச் சொல்லி ராமாஞ்சி பண்டிதருக்குச் சொல்லி அனுப்பி விச்சோம்.

அதின் பிறகு துரையவர்கள் நேத்து ராவெல்லாம் (நடனம் வாண வேடிக்கை காரணமாக) நித்திரை யில்லாமல், விடிஞ்சு நித்திரை போறதினாலே நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்து தேத் தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கையிலே ஒன்பது மணிக்குத் துரை யெழுந்திருந்தாரென்று கபுறு வந்தது. உடனே பிறப்பட்டு துரை யண்டைக்குப் போனேன். போன விடத்திலே இரண்டு தரம் மூணு தரம் சமயம் பார்த்த விடத்திலே பேட்டிக்கு சங்கதிப் படாமல் போச்சுது. யிப்படி யிருக்கையிலே முசியே பெடுத்தல்மீ வந்து அவரும் துரையும் பனிரெண்டு மணி வரைக்கும் பேசிக் கொண்டிருந்தார்கள். நானுமது வரைக்கும் பார்த்திருந்து அதன் பேரிலே வீட்டுக்கு வந்தேன்.

வீட்டிலே வந்திருக்கையிலே சோபுதாரன் வந்து துரை அவர்கள் ரெண்டரை மணிக்கு வரச் சொன்னாரென்று சொன்னான். நல்லதென்று சொல்லி அனுப்பிப் போட்டு யிருக்கையிலே, முன்னாலே பிறசோத்பத்தி வருசம் ஆவணி மாசம் 15 தேதி (1751 ஆகஸ்ட் 27) நம்முடைய ஆசராவிலே (நம் வீட்டுக்கு வந்து) அனுப்பிவிச்சுக் கொண்டு காசிக்குப் போனவன், வலங்கிமான் சுப்பய்யன் காவடியும் கொண்டு தட்டுகளிலே கெங்கா சலக் குப்பியும் பிறசாதங்களும் வைத்துக் கொண்டு வந்து கண்டான். உடனே ஸ்தானத்துக்குப் (ஸ்னானத்துக்கு) போய் கெங்கா சல அபிஷேகம் பண்ணிக் கொண்டு போசனம் பண்ணினவுடனே பிறப்பட்டுக் கோட்டைக்கிப் போய் துரையவர்களைக் கண்டவுடனே கிராமச் சேதிகளாயி நாலத்து யிரெண்டு சேதி பேசி, அதின் பிறகு துறையூர் சேதி யென்ன வென்று கேட்டார்.

அதுக்கு நான் சொன்னது : (துறையூர் பாளையக்காரர்களில்) பழயவர்களுக்குப் புதுசாய் வந்தவர்களுக்கும் சண்டை வாரதாய் யிருக்கு தென்று சொன்னேன். அதுக்குத் துரை சொன்னது புதுசாய் வந்திருக்கிறவனை நாமெப்படி தள்ளுகிறது யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "ஒருத்தன் வெகு காலமாயிருந்து அனுபவமாயிருக்கிறவன் வீட்டைப் புதுசாய் வந்தவன் கட்டிக் கொண்டு போறதா? அந்த சமஸ்தானத்துக்கு எழுபத்து ரெண்டு பாளையக்காரர் யிருக்கிறது, அதிலே யிவனொருத்தன் மாத்திரம் நம்மைச் சேர்ந்து

நமக்குப் பணம் காசு கொடுத்துக் கொண்டு நாம் சொன்னபடியும் கேட்டுக் கொண்டு நம்முடைய பிலத்திலே யிருந்தான். அப்படி யிருந்தவனை நந்திராசா பகைச்சு சமையம் பார்த்து அவனை யெடுத்துப் போட்டு புதுசாய் வைத்தான். அப்படி யிருக்க நாம் புதுசாய் வைத்தவனைத் தள்ளி, நம்மைச் சேர்ந்தவனை (அவன்) பழயவனாகவு மிருக்க, வைக்கப் போகாதா," வென்று கேட்டேன். அதுக்கு துரை சொன்னது : "நாமப்படி செய்வதால் நந்திராசா தகராறு யெழுதி அனுப்புவானே, அதுக்கு யெப்படி," யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "நந்திராசா எல்லாத்துக்கும் தகராறு யெழுதுவார். நாம் விட்டு விடுகிறதா? யிப்போ தரவேண்டியது வெகுவாயிருக்க அதுக்கு யெத்தனை தகராறுகளை யெழுதி யனுப்புகிறார். சலாபத்து சங்குக்கும் முசியே புசிக்கும் காகிதமெழுதி பேசுக்கஷு பண மெல்லாம் நம்முடைய தண்டுக்கே கருசுப்பண்ணினோ (செலவு பண்ணியாகிவிட்டது) மென்று (நாம் எழுத வேண்டுமென்றும்); நம்மாலே தமக்கு ஒரு காரியமுமாக வில்லை யென்றும், யெப்போதும் மத்துப்படிக்கி பேசுக்கஷு உள்ளது வாங்கிக் கொள்ளுகிறது, அதிகம் வாங்கியிருந்தால் திரும்பக் குடுத்து விடச் சொல்லி சலாபத்து சங்குக்கும் முசியே புசிக்கும் எழுதியனுப்பச் சொல்லியும் இப்படி யெல்லாம் அவன் யெழுதி அனுப்புகிறானே அதுக்கெப்படி," யென்று கேட்டேன்.

அதுக்குப், "பழயவர்கள் தஞ்சாவூர் பிலன் (துணை) கூட்டிக் கொண்டு சண்டைக்குப் போறதென்ன, தஞ்சாவூரார் நமக்குப் பகைக்காரர்களாச்சுதே," யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "தஞ்சாவூர் பிலன் கூடாமல் அவன் யென்ன செய்வான்? அந்த மண்ணுக்குப் பிறந்தவன் அந்த மண் நிமித்தியம் செத்து தீருவான். அவன் முன்னும் நம்முடைய பிலத்திலே யிருந்தவன்; இப்போ நீங்கள் நம்பிக்கை கொடுத்ததினாலே நூறு விராகன் நசர் வைச்சான். லெக்ஷம் ரூபாய்க்குச் சீட்டு யெழுதிக் கொடுத்தான். எப்போதும் பேசுக்கஷு முப்பதினாயிரம் குடுக்கி(றான்). அப்படி யில்லாமல் யிதுக்கு முன்னும் லக்ஷக் கணக்கிலே குடுத்தான். யிப்போவும் பட்டணமுஞ் சீர்மையும் கொள்ளையும் குடுத்தான். தஞ்சாவூர் தண்டாகிலும் கூட்டிக்கொண்டு போய் விழுந்து கட்டுவானே யல்லாமல் அவன் மண்ணை விடுவானா?" வென்று கேட்டேன். அதுக்கு துரையவர்கள், "நாம் நம்பிக்கை (உறுதிமொழி ஏதாவது) சொன்னோமா," யென்று கேட்டார். "நீங்கள் நம்பிக்கை குடுக்கவில்லையா? முதலாவது சுவாமி, இரண்டாவது நீங்கள், இப்படி யிருக்கிற நீங்கள் தானே மறதியாய் சொன்னால் நானதுக்கு யென்ன சொல்ல வேணு?" மென்று சொன்னேன். அதுக்குப், "புதுசாய் வந்திருக்கிறவன் ஸ்தானாபதி யிந்த வூரிலே வந்து யிருக்கிறானே, அவன் உன்னைக் கண்டதுண்டா?" யென்று கேட்டார். "அவன் யென்னைக் கண்டதில்லை. அவன் வந்திருக்கிற சேதி நான் அறிவேன். அவனானால்

முசியே பெடுத்தல்மீ, யவர் துபாசி ராமன், வினாயகப் பிள்ளை, முசியே திலார்ஷு, மதனாந்த பண்டிதன் அவர்களண்டையிலே போயிருந்து கொண்டு யிருக்கிறா," னென்று சொன்னேன். "நல்லது, சீரங்கத்திலே யிருந்து காகிதங்கள் வந்திருக்குதே அதைப் பார்த்து (மற்றது) எல்லாஞ் சொல்லுகிறே," னென்று சொன்னார்.

அதின் பேரிலே விருத்தாசலத்திலிருந்து சேதி வந்தது. அதிலே யெழுதி வந்த சேதி யென்ன வென்றால், உடையார் (உடையார் பாளையத்தார்) குமுக்கு (படை) அனுப்பி, ராசேந்திரப் பட்டணம், கோணமங்கலம் மாகாணம் ரெண்டும் விருத்தாசலத்தார் சப்த்தி பண்ணியிரு(க்கிறார்கள்); தோறணத்தையும்[1] அறுத்துப்போட்டு, கிராமங்களையும் கொள்ளை யிட்டுக் கொண்டு, குடிகளைப் பிடித்துக் கொண்டு உடையார்பாளையத்துக்குக் கொண்டு போய் விட்டதாய் சேதி வந்ததென்று சொன்னேன். அதுக்குத் துரை கொம்மாந்தானுக்கு யெழுதியனுப்பி உடையார்பாளையத்தின் பேரிலே (படை) அனுப்பிவிச்சு, ராசகாரியம் நடத்த வேணும், யில்லாவிட்டால், அவன் அடங்கிறதில்லை," யென்று சொன்னார். அதுக்கு, "பேஷுக்கஷு பணத்துக்கு நான் காகிதமும் மனுஷரும் அனுப்பிச்சிருக்கிறேன். நாலு நாளையிலே சேதி வரும். அதுக்கு மேல் அப்படியே குமுக்கு அனுப்பி நடத்தி வைக்கலாம்," என்று சொன்னேன்.

அதின் பேரிலே, வெங்கட்டாம்பேட்டை சீர்மையிலே பணிக்கன் குப்பத்திலே நம்முடைய பாதிரிகள் கோவிலிருக்குது. அதிலே தரங்கம்பாடி மதக்காரர் வந்து விஷமம் பண்ணுகிறார்களாம். அதுக்கு யெழுதி யனுப்பிவிச்சு, அவர்களை நிராகரிச்சு விடச் சொல்லிச் சொன்னார். நல்லதென்று சொன்னேன். மங்காத்தூர் குடியான(வர்கள்) ஒடிப் போனார்களென்று கொம்மாந்தா மெழுதி யனுப்பிவிச்சா னென்று சொன்னார். விசாரித்துச் சொல்லுகிறேனென்று சொன்னேன். அந்த மட்டிலே அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தேன். ஆறு மணிக்கு முசியே தெசொசே கொம்மாந்தாம் வந்து ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்து போனார்.

***1755 வருசம், அப்றில் மாசம், தேதி 25; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 16; சுக்கிரவாரம்***

இத்தானாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே துரையைக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அவர் துறையூர் சேதி யென்ன வென்று கேட்டார். "நேத்து யெல்லாச் சேதியுஞ் சொன்னேன். அவர்களுக்கு

[1] தம்முடைய கட்டுப்பாட்டில் ஒரு ஊர் இருந்தது என்பதை அறிவிப்பதற்காக அன்று வெள்ளையர்கள் தோரணம் கட்டினர்.

நம்பிக்கை குடுத்தபடிக்கி நடத்த வேண்டிய," தென்று சொன்னேன். அதுக்கு, அவர்கள் சொன்ன பணம் வருமா யென்று கேட்டார். வராமலென்ன, நம்முடைய கீழ்ப்பாளையக்காறன், (நம்) கைக்குள்ளே யிருக்கிறவன் நமக்குப் பணம் தருகிறதுக்கு யோசனை யென்ன வென்று சொன்னேன். நான் சொன்னதிலே மனது தேறாமல் பின்னையும் பணம் வருமா வென்று அதைரியமாய்த் தானே சொன்னார். அதிலே அனேகம் பேச்சுகளெல்லாம் நடந்தது. அதின் பேரிலே, "நீர் அதைரியப்படத் தேவையில்லை. நான் அதுக்கெல்லாம் பத்திரம் பண்ணி யிருக்கிறேன். பதினஞ்சு நாள் ஒரு கெடுவு, முப்பதாம் நாள் ஒரு கெடுவு, நாற்பதாம் நாள் ஒரு கெடுவு, இப்படி மூணு கெடுவாகப் பேசியிருக்கிறேன். தப்பிதம் வராது. அப்படியே தப்பிதம் வந்தால் உம்முடைய தண்டை அனுப்பி அவன் பாளையத்தை வேர் பிடுங்கலாய்ப் பிடுங்கி உங்களுக்கெழுதிக் கொடுத்த பணம் வரவழிச்சுத் தருகிறேன். யோசனை பண்ணத் தேவையில்லை," யென்று சொன்னேன். அதுக்குத் துறையூரான் தஞ்சாவூர் பிலனும் அரியலூர் பிலனும் கூட்டிக் கொண்டல்லவோ யிருக்கிறா னென்று சொன்னார். அதுக்கு, "பாளையக்காரர் சம்மதி யெல்லாம் அப்படித்தான். ஒருத்தனுக்கு மோசம் வந்தால் அவன் தன்னிடத்திலே போய் சேரத் தக்கதாய் நாலு பாளையக்காரரும் பிலன் பண்ணுவார்கள். அதுதானே காரியம்," யென்றும் சொன்னேன். ஆனால், முசியே குப்பி நம்முடைய ஒடுதி அன்னிலே தஞ்சாவூராருக்கும் அரியலூராருக்கும் காகிதமெழுதி அனுப்பி விச்சானென்று சொன்னார். அதுக்கு நான், "அவன் பேரிலே குத்தமென்ன? முசியே துப்பிளேயிக்சு யிருக்கிறபோதும் முசியே கொதே யிருக்கிற போதும் இப்படி யெவனாகிலும் ஒடுதி தப்பி நடத்தினால் அதுக்கேத்தபடி உடனே வெகு கண்டிப்புகள் நடக்கும். அப்படி நீர் நடத்தாததினால் அவனப்படிச் செய்தா," னென்று சொன்னேன். அதுக்கு ஒன்றுஞ் சொல்லாமல் சும்மாயிருந்து, நந்திராசா கடுதாசி ஒன்றும் யிமாம் சாயபு கடுதாசி இரண்டும் ஆக மூணு கடுதாசியும் யென் கையிலே கொடுத்து பிரான்சு படுத்திக் கொண்டு வரச் சொன்னார்.

"திருவதி[1] கொம்மாந்தாம் பாரிசத்திலே யிருந்த வெள்ளைக்காரர் ஓடிப்போய் வாலிகொண்டாபுரத்திலே சேர்ந்திருக்கிறார்களாம். வாலிகொண்டாபுரத்துக்குக் காகிதம் அனுப்பவேணு," மென்று சொன்னார். அதுக்கு வாலிகொண்டாபுரத்திலே யிருக்கிறவன் பேர் சொல்லி அந்தப்படிக்கிக் காகித மெழுதி அனுப்பிவிச்சேன்.

நந்திராசா முசியே தெசொசேவுக்குக் காகித மெழுதி யனுப்பினதை பிரான்சுப் படுத்திக் கொண்டு போய்க் கொடுத்தேன். யெனக்கு நந்திராசா

[1] திருவதி, திருவீதி என்று இரு விதமாய் எழுதியிருப்பதைக் காண்க.

அனுப்பின காகிதத்துக்கு நக்கல் தெலுங்கிலே யதின் கீழே யெழுதியிருக்குது. மயிசூர் தளவாய் விழுந்து போனதாய் முன்னாலே சேதி கேட்டோம். அது பொய்யென்றும் தளவா(யாக) தேவராச உடையாரே யிருந்து கொண்டிருக்கிற தாகவும் கேழ்வியாச்சுது.

வென்னில நாராயணப்ப நாயக்கன் குமாரன் யிளையவன், கலியாண நிமித்தியமாய் நாகப்பட்டணத்துக்குப் போற நிமித்தியமாய் சென்னப்பட்டணத்திலே யிருந்து போறவன், (நம்) வளவுக்கு வந்தான். அவனுக்குப் போசனம் பண்ணிவிச்சு, சீரொப்பாவுங் குடுத்து கூட வந்த பேருக்கு இரெண்டு சகலாத்துப் போர்வையும் கொடுத்து, இரண்டு பேருக்கு வெள்ளிப் (சரிகைப்) பாகையும் ஒருத்தனுக்கு எழுத்துப் (சித்திரம் வரைந்த) பாகையுங் குடுத்தனுப்பிவிச்சோம்.

சறுவாதிகாரம்[1] நந்திராசா அவர்கள் யெழுதின காகிதத்து நக்கல்—

"ஸ்ரீமத் சகல குண சம்பன்னரான மித்திரசன மனோரஞ்சிதரான வசீரத்ராய விஜய ஆனந்த றெங்கராயர்[2] அவர்களுக்கு தமது சினேகிதத்துக்கும் பிறதி காரியத்துக்கும் அனுப்பின வினையாரதம் (கடிதம்):

[3]வசீரத் பதவியின் ஆபரணமாகப் பிரகாசிப்பவரும், நற்குணங்கள் அனைத்தும் நிறைந்தவரும், சினேகிதர்களுக்கு அமுதம் போன்றவருமான மகாராஜ ராஜஸ்ரீ ஆனந்த ரங்க ராயர் அவர்களுக்கு எல்லாவற்றிலும் அவரது நட்பை நாடுவதற்கென எழுதப்படும் கடிதம்.

"வைசாக சுத்த திருதிகை வரைக்கும் (இன்று வரைக்கும்) நாம் க்ஷேமத்திலே யிருக்கிறோம். தங்களுடைய பரிணமா அதிசெயங்களுக்கு யெழுதி யனுப்பும் படியாய்ச் செய்யவேண்டியது. இப்பவுஞ் சகல விபரங்களுக்கும் முன்னே எழுதி யிருக்கிறபடியால் தெரிந்திருக்குமே! நாங்க ளெங்கள் தேசத்தை விட்டு வந்து நாலு வருஷமாச்சுது. அப்போ துவக்கி பிறன்சுக்காறர்களோடு சினேகம் பண்ணி மூணு வருஷமாச்சுது. இந்த மூணு வருஷமாய் அதிகமாய்ப் பணங்காசு சிலவு செய்து கொண்டு உட்கார்ந்து யிருந்து, அப்போதைக்கும் எவ்வளவாகிலும் ஒரு காரியமும் கூடி வராமலிருந்தாப் போலே, அப்போதைக்கும் முன் குவர்ணதோர் அவர்கள் தாமே விசாரித்து எங்கள் மனோபீஷ்ட்ட சகல காரியங்களும் சாயும்படியாய்ச் செய்து குடுப்பீர்களென்று திரிகரணத்திலும் விசுவாசித்து பிறன்சுக்காரர்களிடத்திலே யிருந்தபடியால், முசியே புசி அவர்கள் நபாபு

[1] மைசூரில் தளவாய்க்கு அடுத்த பதவி சர்வாதிகாரி; அதற்கடுத்தது பிரதானி.
[2] நமது பிள்ளையின் முழுப்பெயர் விஜய ஆனந்தரங்கர் என்பது இதன் மூலம் தெரிகிறது.
[3] இக்கடிதத்தின் இப் பத்தி வடமொழி நிறைந்துள்ளது. எனவே அம்மொழி யறிந்த ஆங்கில மொழி பெயர்ப்பாளர்களால் தரப்பட்டுள்ளவாறு இங்கே எழுதப்பட்டுள்ளது.

சலபத்து சங்கு அவர்களுடைய பாளையத்தோடு கூட வந்து எங்கள் சீர்மையோடு சேர்ந்த கொத்தளங்கள் அனேகங்கள் பேரிலே அபரிமிதமாய் பீரங்கி குண்டுகள் நடத்தி கோட்டையையுஞ் சுவாதீனம் பண்ணிக் கொண்டார்கள். பிறஞ்சிகளுக்கும் எங்களுக்கும் சினேகமாயி, நாங்கள் பிரெஞ்சுக்காறர்களிடத்திலே யிருக்கிறபடியால் இந்தப் பிறகாரம் எங்களுடைய சீர்மையின் பேரிலே காரியம் நடத்துகிறது உத்தமம் அல்லவே. எங்களுக்கு சினேகிதர்களா யிருக்கப்பட்ட பிறஞ்சுக் காறர்களுக்கு ஆனவர்களே, அவர்களுடைய தண்டிலே அலுவல் பார்த்துக் கொண்டு வருகிறவர்களே, அந்த ராணுவத்திலே யிருந்தவர்களே ... இப்பேர்க் கொத்த மோசம் செய்தவர் ஆனார்கள். இந்த மேரையாய் (வகையாய்) நடந்தபடியால் இனி மேலும் யிந்தப்படி நடக்கு மென்றெண்ணி எங்கள் துரைகள் (எசமானர்கள்) இந்த நீரூபத்தைக் கண்ட அந்தச் சணமே தானே பிறப்பட்டு வருகுறதென்று உத்திரவு தந்தபடியால், நாங்க ளெங்களுடைய ஸ்தலத்துக்குப் போயிருக்கிறோம். இனி மேல் பராசிகளுடையவும் (பிரெஞ்சுக்காரருடையவும்) எங்களுடையவும் சினேகமும் சூரிய சந்திரா ளிருக்கிற வரைக்கும் நடத்தி வரவேண்டியதற்கு, நடுவே அத்துப் போகும்படியாய் நடத்தும் முசே புசி அவர்களுக்கும் முசே லெறி அவர்கள் கொவற்ணதோர் பேரால் யெந்தப் பிறகாரம் எழுதி யனுப்ப வேணுமோ அந்த மேரைக்கு எழுதியனுப்பத் தக்க சங்கதிகளுக்கு விஸ்தரிச்சு எழுதியனுப்ப வேண்டியது என்ன யிருக்கிறது? இந்த விபரங்களை யெல்லாம் வெங்கிட்டநாராயணய்யர் சொல்ல அந்தக் கறணைக்கு(?) உள்ளாக்கிக் கொண்டு, வெங்கிட்டநாராயண அய்யர் சொல்லுஞ் சொற்களை எங்களுடைய முகவசனம் யென்று தெரிந்து (கொள்ளவும்). எங்கள் சீர்மைக்கு ராசீகம் (தொந்திரவு) அதிகமாய் வந்திருக்கிறபடியால் நாங்கள் யெங்கள் சீர்மைக்குப் பிறப்பட்டுப் போகிற தேயல்லாமல், இல்லாவிட்டால் போகவேண்டியதில்லை. சீரங்கம் சம்புகேசுவரம் கோட்டைகள் சாதாரணமா (னவை யல்ல). ஒண்ணு சுத்துக்கோட்டை (ஒரு மதிலைக் கொண்டது); ஏழு சுத்துக்கோட்டை திரிச்சிராப்பள்ளிக் கோட்டை; ஒரு றேங்கலா குண்டு நடத்துகிற தூரத்திலிருந்து இந்த ஸ்தலங்கள் சுவாதீனமாகிற வரைக்கும் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை பராசிகள் (பிரெஞ்சுக்காரர்) வசம் வந்திருக்கிற தென்று அறிந்து, இந்த ஸ்தலங்கள் (மற்றும்) உபய காவேரி தீரம் சீர்மை முதலாய் பராசிகளுடைய அலால் செய்து (கையிலே ஒப்புவித்து) பிறப்பட்டு வந்துவிட்டோம். இங்கிலீசுக்காறரும் மகம்மதல்லி கானைச் சேர்ந்தவர்களும் வெகு அப்பிறமாணி (நம்பத்தகாதவர்கள்) களானபடி யினாலே பராசிகளுக்கும் இங்கீலீசுக்கறர்களுக்கும் கரரராய் (உடன்படிக்கை ஏற்பட்டிருந்த) போதைக்கு இருக்கத்தக்க சாக்கிறதையிலிருக்கும் படியாய் சீரங்கத்திலிருக்கும் கும்மாந்தாமவர்களுக்குக் கொவற்ணதோர்

அவர்களெழுதி யனுப்பி, மகம்மதல்லி கானைச் சேர்ந்த வர்களால் எத்தனைப் பிறயத்தனங்கள் (விரோத முயற்சிகளும்) நடவாம லிருக்கும் படியாய், நபாபு சலாபத்து சங்கு அவர்களுக்குத் தெரியப்படுத்தும் படியாய் முசியே புசி அவர்களுக்கு குவர்ணர் அவர்கள் எழுதியனுப்பும் சகல அமிசைகளிலும் (கடிதம், விளக்கம்) பறாசிகளுடைய சினேகமும் எங்கள் சினேகமும் சாறோதாரமாய் (வளரும் வகையில்) நடத்திவரும் படி செய்விக்க வேண்டியது. உபயத்திராளுடைய காரியம் செய்கைகள் கூடிவரும் படியாய் நடத்துகிற படியால் பராசிகளுடைய சினேகம் ஒருமை நடந்து வருமே யல்லாமல் வேறல்லவே! இந்த விபரங்களை அந்தக் கரணைக் குள்ளாக்கி க்ஷேமாதி செயங்களுக்கு எழுதி அனுப்பும் படியாய்ச் செய்யவேண்டியது."[1]

### *1755 வருசம், அப்றீல் மாசம், தேதி 26; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 17; சனிவாரம்*

இத்தனாள் காலமே யேழரை மணிக்குக் கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவற்ணதோரா யிருக்கிறவர் மேல் வீட்டின் பேரிலே முசியே பொலோ, முசியே லெனுவார், முசியே தெவோ பின்னையும் ஒபிசியால்மார் வகையராக்கள் பேசிக் கொண்டிருக்கச்சே, நான் போய் ஆசாரம் பண்ணி, நேத்திய தினம் நந்திராசா காகிதமும் இமாம் சாயபு மகன் காயிதமும் மருமகன் காயிதமும் குடுத்து திரான்சிலிட்டுப் பண்ணிக் கொண்டு வரச் சொன்னதை திரான்சிலிட்டுப் பண்ணிவிச்சு. அந்தப் பிறன்சுக் காகிதங்களும் அவரவர்களும் அனுப்பிவிச்ச பசினுசி (பார்சி) காகிதங்களும் குடுத்தவுடனே படித்துப் பார்த்துக் கொண்டு, "நந்திராசாவுக்குப் பதில் காகித மெழுத வேணும், அதுக்கு நீரும் நாமும் யோசனை பண்ணிக் கொண்டு எழுதுவோம். ஆனால் முசியே புசி மயிசூர் வந்து சேர்ந்து கெடி ஸ்தலம் (கோட்டை) ஒன்று வாங்கிக் கொண்டு சீரங்கப்பட்டணம் கோட்டைக்கு ரெண்டரை நாழிகை[2] மூணு நாழிகை வழியிலே சலாபத்து சங்கு பவுன்சும் சலாபத்து சங்குடனே கூட யிறங்கியிருக்கி(றார்). முசியே புசி யிந்த மட்டுக்கும் ஒரு காகிதமாகிலும் அனுப்பவில்லை. நானானால் கடப்பை கந்தனூர் பாரிசமாயிருக்கிராரென்று ஒரு சோடா அனுப்பிவிச்சேன். அப்பால் மயிசூர் சேர்ந்தானென்று சமாசாரங் கேட்டு சீரங்கத்தின் பேரிலே நந்திராசாவுக்குக் கூட ஒரு காகிதம் யெழுதி, சலாபத்து சங்குக்குக் கூடக் காகித மெழுதி யனுப்பி விச்சோம். யின்ன மொரு சோடா அனுப்பவேணு," மென்று சொன்னார். அப்படித்தான் செய்ய வேண்டியதென்று சொன்னேன்.

---

[1] இப்பத்தியின் தமிழ்வாசகத்தை நான் மாற்ற முனையவில்லை.

[2] நாழிகை என்பது 24 நிமிடங்கள்.

ஆனால் நந்திராசாவுக்கு நாம் யெழுத வேண்டிய வயண மெப்படி யென்று கேட்டார். உங்களுக்குத் தெரியாதது எனக்குத் தெரியுமா வென்று சொன்னேன். ஆகிலும் முன் பின் யிவ்விடத்திலே யிந்தக் காரியங்களிலே யிருந்து வழக்கமல்லவா, ஆன படியினாலே சொல்லென்று சொன்னதின் பேரிலே நான் சொன்னது :

"நந்திராசா யெழுதின காகிதத்திலே திருச்சிராப்பள்ளி ஸ்தலத்துக்கு வந்து நாலு வருஷமாச்சுது யென்றும், உங்களைச் சேர்ந்து மூணு வருஷமாய் கோடிக்கணக்காய்ச் சிலவு பண்ணிக் கொண்டு யிருந்தவிடத்திலே முசியே (புசியும்) சலாபத்து சங்கும் வந்து யெங்கள் கெடிஸ்தலங்களும் வாங்கிக் கொண்டது மல்லாமல், கோட்டைக்கு ரெண்டு மூணு நாழிகை வழியிலே யிறங்கிக் கொண்டு சண்டை பண்ணுகிற படியினாலே, முசியே புசி தானே அரோலிலே (முன் அணியில்) யிருந்து கொண்டு நடப்பிக்கிற படியினாலே, 'அங்கே நீர் யிருந்தாலென்ன நடக்குமோ தெரியாது. சீக்கிரமாய் வாரு,' மென்று யெசமான் ... எழுதினபடியினாலே, சீரங்கம் ஏழு கோட்டையுள்ள ஸ்தலம், செம்புகேசுவரம் அஞ்சு கோட்டையுள்ள ஸ்தலம்; பிலனும் உண்டான யிடம் ரெண்டு ஸ்தலமும் நம்முடய வசத்திலே யிருக்கச்சே திரிச்சிராப்பள்ளிக் கோட்டையிலே யிருக்கிற மமுதல்லி கானைத் தொட்டு ஆக வேண்டிய தென்ன வென்றும், மமுதல்லி கானைச் சந்திக்கலா மென்று யிருந்த விடத்திலே, உங்கள் முசியே புசி தானே சலாபத்து சங்குவையும் அழைத்துக் கொண்டு வந்து ஒரு கெடிஸ்தலமும் வாங்கிக் கொண்டு கோட்டையின் பேரிலே வந்து யிறங்கி சண்டை போடுகிற படியினாலே, யென்ன நடக்குமோ யென்று (என் எசமான்)ழ வரச் சொல்லி யெழுதியனுப்பின படியினாலே, யென் மனதுக்கும் அவ விசுவாசமாய்த் தோத்தி சீரங்கம் செம்புகேசுவரம் என்னப்பட்ட ரெண்டு கெடிஸ்தலமும் உபய காவேரி தீரமான (இரு நதிகளுக்கும் இடைப்பட்ட) சீர்மைகளும் மைத்த சீர்மைகளும் உங்கள் சறுதார் வசம் பண்ணிப் போட்டு நாம் மயிசூருக்குப் போனோம். யிப்போவும் நீங்கள் முசியே புசிக்கு எழுதி அனுப்பிவிச்சாலும் சாலாபாது (வழக்கமாத) நடக்கிற பேஷ்கஷுப்படிக்கு வாங்கிக் கொள்ளச் சொல்லி எழுதியனுப்ப வேணும் யென்று யெழுதி(னார்). நாம் யெழுத வேண்டியது, "முசியே புசியும், அவருடனே கூடயிருக்கிற வெள்ளைக்காறர் பவுன்சும் அவருடைய சம்பளம் வாங்கிக் கொண்டு அவராதீனமா யிருக்கிற படியினாலே யெங்களுக்குக் கவையில்லை (தலையிட அதிகாரமில்லை). சலாபத்து சங்குவினுடைய உத்தாரப்படிக்கி (அவர்கள்) நடந்து கொள்ளுகிறவர்களே யல்லாமல் மத்தப்படி அல்ல. ஆகிலும் யெங்களைச் சேர்ந்தவர்க ளென்கிறதைத் தொட்டுத்தான் உங்கள் கோட்டையுஞ் சீர்மையும் இந்த மட்டுக்கும் வைத்துப் பார்த்ததே யல்லாமல், யில்லாவிட்டால் உங்களுக்கு (அவை)

நிற்கத் தக்கதில்லை (போயிருக்கும்) யென்றும், .... யான் மட்டுக்கும் உங்களுக்குச் சகாயமாய் காரியத்திலே தெரியச் சொல்லச் சொல்லி முசியே புசிக்கு முன்னுமெழுதி அனுப்பிவிச்சோம், இன்னம் யெழுதியனுப்பி விப்போமென்றும், எங்களுக்குக் கொடுக்க வேண்டிய பணம் சலுதியா யனுப்பிவிக்க'ச் சொல்லியும் எழுதலாம் போலே தோத்துது" (என்று சொன்னேன்). "யிப்படி யெழுதியனுப்பினால் இங்கிலீசுக்காறருக்கும் மமுதல்லி கானுக்கும் சலாபத்து சங்கு வண்டையிலே யிருக்கிற முசியே புசியும் பவுன்சும் சலாபத்து சங்கு(வின்) சம்பளக்காரராய்ப் போனார்களென்று தோத்தும். அவர்களெழுதினாலும் நாம் எழுதப் போற உத்திரமும் அப்படியே எழுதலாம். எல்லாத்துக்கும் யிது விசைத்தானென்று தோத்துது," யென்று மேலும் சொன்னதுக்கு, யிது மெய்தான், இதென்ன அபத்தமா யென்று சொன்னார். யிதின் பேரிலே யோசனை பண்ணிக் கொண்டு யெழுதுவோ மென்று சொன்னார்.

அப்பால் "துறையூரார் பழய (பாளையக்காரர்) பாப்பு ரெட்டி வகையராக்கள், அரியலூரிலே வந்திருக்கிறவர்களை, மறுபடி வைக்கிற (தைப்) பார்க்கிலும், புதுசாயிருக்கிறவனை (புதிய பாளையக்காரரை) (அங்கீகரித்து) அவன் கொடுக்கிறோமென்ற லட்சம் ரூபாயும் பேஷ்க்கஷு முப்பத்தையாயிரம் ரூபாயும் வாங்கிக் கொள்ளுகிறதே உகத்தமாய்க் காணுதே யல்லாமல், யிவனை வாங்கிப் போட்டு அவனை வைத்ததே யுண்டானால் இதிலே சலாபத்து சங்கு அந்தண்டைக்கு வருவான் (நந்திராசாவும் சச்சரவு உருவாக்குவான்)[1], அதினாலேயும் அவர்களுக்குச் சீர்மை கட்டி வரமாட்டாது. நமக்கும் பணம் செல்லமாட்டாது. அப்பிறம் பணம் செல்லாமல் போனால் அவர்களை யென்ன செய்யலாம்? நீர் உத்திரவாதம் பண்ணுவீரா?" யென்று கேட்டார். "நான் பேசுகிற மட்டுக்கும் வமுவுதலையாய் (இதில் சம்பந்தப்பட்டிருப்பதால்) விடத்தக்கதில்லை (சும்மா இருந்து விடமாட்டேன்). அதுக்கெல்லாம் பத்திரம் பண்ணிக் கொண்டுதானுங்களுடனே பேசினேனென்று, உறுதியாய் பணத்துக்கு நீங்கள் சந்தேகப்படத் தேவையில்லை," யென்று சொல்லி, அப்பாலும், "நீங்களவர்களுடனே பேசுகிறீர்களே, அந்தப் பணம் உங்களுக்குச் செல்லமாட்டாது (வராது), யிது செல்லும் (வரும்)" யென்று சொன்னதுக்கு, "அவர்கள் பணத்துக்கு நந்திராசா யிருக்கிறான் குடுக்கிறதுக்கு. இந்தப் (பழைய பாளையக்காரன்) பணம் வராவிட்டால் ஆரைக் கேழ்க்கிறது?" யென்று சொல்லிப் போட்டு சும்மாயிருந்தார். அப்பால் நானும் அவராபிப்பிராயமாம் (இப்படி) யிருக்கச்சே, "நாமேன் ரெட்டிக்க வேணும் (இதில் இவ்வளவு முனைய வேண்டும்), நம்முடைய மனதின் படியே வராத காரியம் ஆக்கீருக்குக் கெட்டுப் போமென்று சாதக லக்ஷணம் தெரிஞ்சு யிருக்கிறது; பிரபுவுக்கும் (துரைக்கும்) பிராப்த்தி கால மிருக்கவேணும்," (என்று மேலும் பேசாமல் இருந்து விட்டேன்)."

---

[1] இது பிரதியில் விடுபட்டுள்ளது.

# மே 1755

***1755 வருசம், மாயு மாசம், தேதி 3; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 24; சனிவாரம்***

முந்தாம் நாள் மத்தியானத்துக்கு மேல் வேலூரிலிருந்து சமாச்சாரம் வந்ததிலே, மயிசூரின் பேரிலே சலாபத்து சங்கு போய் கோட்டைக்கு நாலு மூணு நாழிகை வழியிலே யிறங்கி சண்டை போடுகிற படியினாலே மயிசூருக்கும் சலாபத்து சங்கு பவுன்சுக்கும் நல்ல சண்டை (யாயிற்று); முசியே புசி மிஞ்சி சோவார்ப்பேட்டை வாங்கிக் கொண்டு நிலைத்துக் கொண்டு பிலத்து நின்றபடி யினாலே சண்டையிலே உபயத்திரவர் பவுன்சிலே சனங்கள் விஸ்தாரமாய்ச் சேதம் வந்தும், சலாபத்து சங்கு பவுன்சிலே ராசா சந்திரசேனன் குமாரன் ராமச்சந்திரன் யென்கிற மராட்டிய மன்சுபேதார் வகையராக்கள் விழுந்துப் போயும் மயிசூருக்கு நிறுவாகமில்லாமல் (வெற்றி கிட்டாமல்), முசே புசிக்கு ... பத்து லட்சம் ரூபாயும், சலாபத்து சங்குவுக்கு ஒரு கோடி ரூபாயும் பின்னையும் தறுபாறு கற்ச்சின் பேரிலே (செலவுக்காக மேலும் ஒரு தொகையும் தர மயிசூரார் தர ஒப்புக் கொண்டனர்). மயிசூர் சம்மதி தீந்தது. யிப்பால் சலாபத்து சங்கு கோலார் முன் வாயிலே வந்து விழுந்து யிறங்கவும், சானவாசு (ஷா நவாஸ்) கான் வகையராக்களும் சிறிது பவுன்சும் ஆற்காட்டுக்கு வந்து பந்துபஸ்த்து பண்ணி ... பணத்துக்கு மதகப்படுத்திக் கொண்டனர் (ஏற்பாடு செய்தனர்). (சலாபத்து சங்கு) பவுன்சு ஆற்காட்டின் பேரிலே வருகிறதா யிருக்கு தென்று மமுதல்லி கானுக்குத் தாது சந்தோஷமாயிருக்க (யெழுதி), சீரொப்பாவையும் அனுப்பி சீர்மையும் பந்துபஸ்து பண்ணிக் கொண்டு நீரும் வந்து காண்பித்துக் கொண்டு, உம்முடைய சீர்மையைத் தீத்துக் கொண்டு போகவும் யென்று எழுதியனுப்பி (னார்கள்). ஆற்காட்டிலே வேலூரிலே (இருந்து குடிகள்) வலசை வாங்குறார்களென்றும் (வெளியேறுகிறார்கள் என்றும்), அப்துல் வகாபு கான் குஞ்சு குழந்தைகளையும் சென்னப்பட்டணத்துக்கு அனுப்ப யோசனை யாயிருக்கிறதாயும் சேதி வந்தது யென்று (சொன்னேன்). அப்பால் தனியே மண்டபத்திலே கீழண்டைத் தாவார பத்தியில் வைத்துக் கொண்டு பின்னையுஞ் சிறிது சேதிகள் லோகாபிரமமாய் பேசிக் கொண்டிருந்தேன்.

நம்முடைய அக்கிரகாரத்துக்கு முசியே லெறி புதுசாய் துரைத் தனத்துக்கு வந்த (பின்) வருகிற படியினாலே வாழைப் பழம், பிலாப் பழம், கொய்யாப் பழம், பொம்பலமாசுப் பழம், புஷ்ப்பங்கள், சர்க்கரைகள், கற்கண்டு, பாக்கு வெத்திலை பன்னீருடனே கொண்டு போய் குடுத்து

அப்பாவு நூறு விராகனும் அய்யாசாமி நூறு வராகனும் ... நசர் வைக்கச் சொல்லி ஆசாரம் பண்ணச் சொன்னவுடனே, அவர்கள் ஆசாரம் பண்ணினார்கள். அப்போ முசியே தெவோ, முசியே தெபறேன் வந்தார்கள். அப்போ வராகனையும் வாங்கிக் கொண்டு, அய்யாசாமியைப் பார்த்து இவன் றெங்கப்பன் முகமாயிருக்கிறான் என்று சொல்ல, முசியே தெபறேன் யிருந்து கொண்டு முசியே கொதே அரும்பாத்தைப் பிள்ளைச் சாவடிக்கு மேல்ப்படி தம்பி செஞ்சியிலிருந்து வரச்சே யெதிர் கொண்டு போய் அழைக்கப் போன போது, அப்போ (மூத்த) பிள்ளையும் யிந்த யிளைய பிள்ளையும் வந்தபோது, இரெண்டு பேர்களும் ஆசாரம் பண்ணினார்கள். அவர் மடியின் பேரிலே வைத்துக் கொண்டு, கிட்ட நாற்காலியைப் போட்டு உளுக்காரச் சொல்லி, யிவர்களிரெண்டு பேரும் பேசிக் கொண்டபோது, இவன் சொன்ன சுறுக்கு உத்திரங்களுக்கு ரொம்பவும் சந்தோஷப் பட்டார்கள். நாற்பது வயதுள்ளவன் (கூட) மரியாதை அறிஞ்சு உத்தாரங் கொடுக்க மாட்டான் (இப்படிப் பேச மாட்டான்). இவன் சொன்ன உத்தாரத்துக்கு முன்னே அப்படி உத்தாரஞ் சொன்னானென்று அப்போ நடந்த பேச்சை அரை நாழிகை நேரம் பேசினார்கள்.

காலத்தாலே பூசை (மாஸ் பூசை) கேழ்க்கச்சே மூணு தரஞ் சுட்டார்கள். இருபத்தொன்று விழுக்காடு அதிர் வெடி சுட்டார்கள்.

[1]அப்பால் பகலைக்குச் சாப்பிட்டு சாராயம் குடிக்கச்சே சும்மா சுட்ட வண்ணமாயிருந்தார்கள். சந்தா சாயபு மகன் நாலு மணிக்கு அல்லி நக்கீ யுடனே கூட வந்தான். அப்போ யிருபத்தோரு வெடி சுட்டார்கள். அப்பால் சாயங்காலம் மேட்டின் பேரிலே பாணவித்தை சுட்டதை யேழு மணிக்குப் போய்ப் பார்த்து எட்டு மணிக்கு சாப்பிட உளுக்கார்ந்து சாப்பிட்டு பத்தரை மணி பதினோரு மணிக்கு துரை முதலான பேர்கள் ஊருக்கு வந்தார்கள். நாங்கள் ராத்திரி சாவடியிலே யிருந்தோம்.

இத்தனாள் மூணாஞ் சாமத்துக்குச் சீர்மையிலிருந்து ஒரு கப்பல் புதுச்சேரித் துறை பிடிச்சு பீரங்கி சுட்டான். கோட்டையிலேயும் சுட்டான். பிளாம் (flamme என்ற ஒரு கொடி) நடுக் கம்பத்திலே போட்டு யிருக்கிற படியினாலே சீர்மைக் கப்ப லென்று எல்லாரும் நிதானித்தார்கள்.

### *1755 வருசம், மாயு மாசம், தேதி 8; யுவ வருசம், சித்திரை மாசம், தேதி 29; குருவாரம்*

அப்பால் ராயப்பராசா யென்கிறவனும் ஒரு வர்த்தகனும் செஞ்சிக்கு வந்தார்கள்; அவர்களொருத்தருக் கொருத்தர் மோசம் பண்ணினதாய்ச்

---

[1] மாஸ் பூசை கேட்டது காலையில் புதுச்சேரியில். பகல் விருந்து சாப்பிட்டது திருவேங்கிடப் பிள்ளை அங்கிரகாரத்தில்.

சொல்லிக் கொண்டதின் பேரிலே அந்த வர்த்தகனையும் ராயப்பராசாவையும் செஞ்சியிலே யிருக்கிற கொம்மாந்தாம் காவலிலே வைத்தான் (என்று சொல்லி), ராயப்பராசா யென்கிறவன் யாரென்று (துரை) கேட்டார். அதுக்கு நான், முன் கார்வெட்டி ராசா பாளையத்துக்குத் தானே சுவான் (சொந்தக்காரன்) யென்று யிவடத்துக்கு வந்து துரையுடனே சொல்லிக் கொண்டு, அந்த யிடத்தை வாங்கிக் குடுத்தால் சிறிது திரவியம் கொடுக்கிறேனென்று சொன்(னானே அவன்தான் என்று சொன்னேன்). (அப்போதிருந்த) துரை என்னை அழைப்பிச்சு, "அவனார், அந்த கார் வெட்டிராசா பாளையத்துக்குச் சுவான் தானா" வென்று கேட்டார். நானவ்விடத்துக்கு யெழுதியனுப்பின விடத்திலே, யிவன் அவ்விடத்திலே யிருக்கிற சுவானா யிருந்தவன் கிட்ட குலாமாய் (பணியாளாய்) இருந்தவன், யிவனுக்கு தினம் பத்து போட்டுலு (பாட்டில்) சாராயம் போராது. யிப்படி அங்கங்கே சொல்லிக் காவலிலே கிடந்து விலங்கும் போட்டுக் கிடந்தது. அப்படிக் கொத்தவனாக்கும் (இவன்) யென்று அவ்வடத்திலே யிருந்து யெழுதி வந்தது (என்று சொன்னேன்).

அந்தச் சேதியைத் துரையுடனே சொன்னவிடத்திலே, யிவனைக் காவல் பண்ணியிருந்ததும் அப்பிறமிவனுக்கு பெகுமானம் பண்ணி ஆனையுங் கொடுத்து பவுன்சுங் கூட்டி அனுப்பினது யிது முதலான சேதிகளாய் அந்த ராயப்பராசாவுடைய பிரஸ்தாபஞ் சொன்னதின் பேரிலே, அவர் கொம்மாந்தாம் அனுப்பின காகிதத்தை யெடுத்துப் பார்த்தார். அதிலே நான் சொன்னபடிக்கு எழுதியிருந்தது யென்று நகைச்சுச் சொன்னார். யிப்பறமவனை அங்கே தானே அடித்துவிட்டு விடச் சொல்லி யெழுதி அனுப்புவோமா யென்று சொன்னார். அதுக்கு, "அப்படிச் செய்வார்களா? இவ்விடத்துக்கு அழைப்பிச்சு நீங்கள் முகதாவிலே (நேரிலே) தாக்கீத்து (தண்டனை) பண்ணிவிட்டு விடவேணு," மென்று சொன்னேன். நல்லதென்று யிவ்வடத்துக்கு அனுப்பச் சொல்லி அவ்விடத்திலே யிருக்கிற கொம்மாந்தானுக்கு யெழுதினார்.

அதின் பேரிலே பாசி ராயன் முசே கொதே பேருக்கு யெழுதியனுப்பின காகிதத்தை யென் கையிலே குடுத்து பிரான்சு படுத்திக் கொண்டு வரச் சொன்னார். நல்ல தென்று வாங்கிக் கொண்டு அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

***1755 வருசம், மாயு மாசம், தேதி 11; யுவ வருசம், வைகாசி மாசம், தேதி 1; ஆதிவாரம்***

இத்தனாள், காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப் போய் மேல்வீட்டின் பேரிலே வந்தவுடனே கோன்சேலியேர்கள், ஒபிசியால்மார்கள், கணக்கர், கப்பல்க்காரர், வகையராக்கள் கண்டு ஆசாரம்

பண்ணினார்கள். அப்போ நானும் கும்பினீர் வர்த்தகர் வகையராக்களுடனே போய்க் கண்டு ஆசாரம் பண்ணினேன். அப்போ துரை தனித்து யிருக்கச்சே, நேத்து என் கையிலே குடுத்திருந்த துறையூர் புதுசாய் கட்டிக் கொண்ட வரதா ரெட்டி முசியே குப்பி பேருக்கு மகராஷ்டிரத்திலே[1] யெழுதியனுப்பின காகிதமும் வாலிகொண்டாபுரம் உசேன்சாயபு மகன் முதபர் கான் பார்சிலே யெழுதியனுப்பின கடுதாசியும், யிந்த ரெண்டு கடுதாசியும் திரான்சிலிட்டுப் பண்ணின கடுதாசியும், பசுனுசு (பார்சி) கடுதாசியும் துரை கையிலே குடுத்தேன். அதை அவர் படித்துப் பார்த்துக் கொண்டு, நல்லது தானென்று சொல்லி, அப்பால், "உடையார்பாளையத்தான் நமக்குப் பேஷ்க்கஷுப் பணம் குடுக்க வேண்டியதுக்கு வக்கீலை அனுப்பி சால்சபாவு (பேச்சு) நடப்பிச்சேன். அதுக்கவன் சத்துத் தரவாய் (ஒழுங்கான பதில்) ஒன்றும் நடத்தவில்லை. ஆகையாலே அவனுக்குப் பயம் தோணத் தக்கதாய் யிவ்வடத்திலே யிருந்து சிறிது பிலன் அனுப்பினால், அதன் பேரிலே அவன் பயந்து பணம் குடுப்பான்; அதன் பேரிலே நம்முடைய திருவுத்தோ (கண்டிப்பு) யென்கிறது யெல்லாருக்கும் தோணும்). அவனும் எல்லாக் காரியத்துக்கும் உள்ப்பட்டு நடந்து கொள்ளுவான் யென்று நீ சொல்லியிருந்தியே, அவனிப்போ நம்முடைய சீமையாகிய விறுத்தாசலம் வகையரா சீர்மைகளிலே கொள்ளை யிட்டதின் பேரிலே நம்முடைய கொம்மாந்தாம் கொஞ்ச பிலனை அனுப்பிவிச்சு அவர்கள் கிராமத்திலே சிறிது எருது மாடுகளை ஒட்டிக் கொண்டு, அவர்கள் மனுஷர் பத்து பேர் தலையாரிகளையும் பிடித்துக் காவலிலே வைத்திருக்குதென்று எழுதியனுப்பி வித்தான். அந்த மனுஷரை இவ்விடத்துக்கு அனுப்பச் சொல்லி யெழுதுவோமா அல்லது அங்கே தானே இருக்கட்டுமா?" என்று கேட்டார். அதுக்கு நான் அவர்களை யிங்கேதானே அழைப்பிக்க வேணும் உடையாருக்கிந்த காரியத்துக்குத் தாக்கீதுக் காகித மெழுதினால் தாவளை (தேவலை) போல் தோத்துது யென்று சொன்னதுக்கு; "நல்லது யிந்த தடவை மாத்திரம் நீ யெழுதி யனுப்பு, அதுக்கவன் சத்துத் தரவாய் யெழுதினால் ஆச்சுது, யில்லாவிட்டால் அதின் பேரிலே நாமெழுதி யனுப்பிவிப்போம்," யென்று சொன்னார். நல்லது, நானப்படியே யெழுதி அனுப்பி வைக்கிறேனென்று சொன்னேன்.

***1755 வருசம், மாயு மாசம், தேதி 13; யுவ வருசம், வையாசி மாசம், தேதி 3; மங்களவாரம்***

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்குக் கோட்டைக்குப் போய் முசியே லெறி கொவற்ணதோரவர்களை வடவண்டை நெடுஞ்சாலையிலே உலாத்திக் கொண்டிருக்கச்சே, மோன்சியே[2] மொர்சேன்

[1] துறையூர் ரெட்டி மராட்டியில் கடிதம் எழுதியதைப் பார்க்க.
[2] இதுவே முசே, முசியே என்ற கொச்சையின் முழு வடிவம்.

(M. Maracin) யென்கிற ஒபிசியால் கூட உலாத்திக் கொண்டிருக்கச்சே நான் முசியே லெறி கையில் நேத்து ராத்திரி முராரி ராயன் அனுப்பின மகாராஷ்டிரக் காயிதமும் திரான்சிலிட்டுப் பண்ணின பிறன்சுக் காகிதமும், கொடுத்தேன். அதைப் பார்த்துக் கொண்டவுடனே மேல் வீட்டின் பேரிலே வடவண்டை பாரிச மாயிருந்த படைக்கால் (?) கூடத்தை செவிர் (சுவர்) வைத்து வீடாய் (அறையாய்) கட்டச் சொன்னபடிக்கிக் கட்டுகிற யிடத்திலே வந்து பார்த்துக் கொண்டிருக்கச்சே நான் கிட்ட நின்றேன். முசியே தெறுஷே (M. du Rocher) யென்கிறவன் வந்து பேசிக் கொண்டிருந்து போனான்.

அப்பால் முசியே லெறி அவர் காம்பிராவிலே போனவுடனே நான் கும்பினீர் வர்தகருடனே பேசியிருக்கச்சே துரை அழைக்கிறாரென்று சோபுதாரன்[1] வந்து யாதி பண்ணப் (நினைவூட்டப்) போனவிடத்திலே, முராரி ராயன் அனுப்பின காகிதத்தைப் படித்துப் பார்த்து, யென்னைப் பார்த்து, "பணப் பேச்சுக்கு பெகு கண்டிப்பிலே யெழுதினான். யென்ன?" வென்று கேட்டார். அவன் பணத்தளவிலே தகப்பனைக் கூட தாயைக் கூட மூக்கிலே தும்பைச் சார் வார்த்து வாங்கிப் போடுகிறவன். அன்னியருக்குக் கண்டிப்பா யெழுதிய தாச்சரியமாய் யெண்ணத் தேவையில்லை," யென்று சொன்னதுக்கு, அவன் அப்படி லோபியா வென்று கேட்டார். அதுக்கு "நான் அவன் ஒரு பணத் தளவிலே கூடப் பிறந்த தம்பியாகிலும் குடுக்கத் தக்கதில்லை. அவரவருக்குச் சம்பளம் யென்னமோ அது மாத்திரமேயல்லாமல், அங்கங்கே கொள்ளையிட்டுக் கொண்டு வந்ததைக் கூட யெடுத்துப் போட்டுக் கொள்ளு வா," னென்று அவனுடைய லோபித்துவ குணத்தை விஸ்தாரமாய்ச் சொன்னதுக்கு, துரை அப்படியா வென்று மெத்தவும் ஆச்சரியப்பட்டார்: அதுக்கு, "அவன் எழுதின காகிதத்துக்குள்ளே ஊரை முத்திகை (முற்றுகை) போட்டுப் பணம் வாங்குவேனென்று யெழுதினான், பாத்தியா?" வென்று சொன்னார். அதுக்கு நான், "அவனுடைய சுவபாவம், பணத்தளவிலே கண்டிப்பாய் யெழுதுகிறதுக்குப் பின் வாங்கிறவனல்ல," வென்று சொன்னேன். அதின் பேரிலே அவன் முன்னாலே யிவ்வடத்துக்கு வந்ததும் நாளது வரைக்கும் அவனுடைய சுபாவ குணத்தைக் கேழ்க்க, நான் விஸ்தாரமாய்ச் சொன்னேன். "அவனெழுதின காகிதத்துக்குள்ளே தனக்குப் பத்துப் பனிரெண்டு லக்ஷம் வரவேணு மென்று சொல்லி யெழுதினானே, முன்னாலே முசியே துப்பிளேயிக்சு நாளையிலே யிப்படி யெழுதினதுக்கு, அவர் யெல்லாத்துக்கும் காவு (கணக்கு, சான்று) தேடி மூணு நாலு லக்ஷம் குடுக்க வேணுமென்கிறதாயும், அதை நந்திராசா கையிலே

[1] சேவுகரில் முதல் நிலைச் சேவுகன் சோபுதாரன் எனப் பட்டான். அவன் வெள்ளிப் பூண்போட்ட தடியைத் தரித்திருப்பான்.

வாங்கிக் கொள்ளச் சொல்லியும், முசியே கொதே அவர்களும் முசியே துப்பிளேயிக்சும் செப்த்தம்பர் மாசத்திலே யெழுதின காகிதத்துக்குள்ளே யெழுதி அனுப்பி விச்சார்கள். அதுக்கவன், முசியே கொதேயுக்கு "நீரெப்படித் தீத்து எழுதுகிறீரோ அந்தப்படி யெனக்குச் சம்மதி," யென்று யெழுதி யனுப்பினான். அதுக்கு யிவர், "நியாயமானபடி தீற்கிறதுக்கு யிந்த பூருவோத்திரம் நானறியாததினாலே நான் (தீர்ப்பதற்கில்லை)," யென்றெழுதி அனுப்பினார். இப்படி உத்தரம், பிறதியுத்தரம் கடுதாசிகள் நடந்து கொண்டிருக்கச்சே முசே துப்பிளேயிக்சு பயணமாய்ப் போய்விட்டாரென்று இது முதலான சேதிகளாய் அவருக்கு விசிதப் படச் சொன்னதுக்கு, "அவர் யிதுக்குப் பதிலுத்தரவுக் கடுதாசி எழுதத் தேவையில்லையா?" வென்று சொன்னார். நான், "இப்போ இதுக்குப் பதிலுத்தரவு யெழுதுகிறதுக்கு சரூரல்ல (அவசரமில்லை), யின்னம் பார்த்துக் கொள்ளுவோ," மென்று சொன்னேன். நல்லதென்று சொல்லி, "முசியே புசி சலாபத்து சங்கு தண்டிலே யிருந்து ஒரு சேதியாகிலும் யெழுதாமல் போனது யெனக்கு மெத்த ஆச்சரிய மாயிருக்கு," தென்று சொன்னார்.[1]

[1] அடுத்த 20 நாள் பதிவுகள் கிடைக்காமல் போயுள்ளன.

## ஜுன் 1755

*1755 வருசம், சூன் மாசம், தேதி 4; யுவ வருசம், வைகாசி மாசம், தேதி 25; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்கு கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி, முசியே பெடுத்தல்மீ, முசே பொலோ வகையராக்களிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். அப்போ துரை கிட்ட வந்து என்ன சமாச்சார மென்று கேட்டார். எல்லாம் நல்ல சமாச்சாரந்தா னென்று சொன்னவுடனே, மீர் குலாம் உசேன்[1] வீட்டு முற்திசா (Murtaza) சாயபு (வந்து), முன் 1746–ம் ஆண்டு லக்ஷம் ரூபாய் கொடுத்த சீட்டு சம்மதியைச் சொல்லி, நொத்தோர் கைப்பட சவ்வாது சீட்டெழுதியிருந்ததைக் காண்பிச்சான். காண்பித்தவுடனே அதை நன்றாய் நாலு தரம் படித்துப் பார்த்தார். அப்பால் மீர் குலாம் உசேன் கான் சாயபு பேருக்கு முசியே தும்மா சீர்மை யிலிருந்து அனுப்பின காகிதமொன்று குடுத்ததையும் படித்துப் பார்த்து, மறுபடி ரெண்டையும் குடுத்துவிட்டு என்னைப் பார்த்து, லக்ஷம் ரூபாய்க்கு வட்டி பார்த்தால் லக்ஷம் கூடிப்போ மென்று சொன்னதுக்கு, "இதுக்குத் தொண்ணூத்து நாலாயிரம் ரூபாய் பத்திக் கொண்டார்கள். பாக்கி ஆராயிரம் ரூபாயும், வட்டியிலே முப்பதினாயிரத்தி சில்வானமும் ஆக முப்பத்தாறாயிரம் சில்வானம் ரூபா குடுக்க வேண்டியதாய் முசியே புறக்கினூது (M. Bourquenoud) கையெழுத்துப்பட கணக்கொன்று யெழுதி யென் கையிலே முசியே துப்பிளேயிக்சு குடுத்து (இருக்கிறார்). மீர் ஷம் அல்லி கானுக்கு(ம்) (Mir Aazam Ali Khan)[2] மீர் குலாம் உசேன் உடம்பிறந்தாள் பிள்ளைக்கும் பங்கு பாகங்கள் தீரவேண்டியதான படியினாலே, மீர் குலாம் உசேன் உடம்பிறந்தாள் பிள்ளைகள் பணம் கேழ்க்கச்சே அப்போ யிந்தக் காயிதத்தைக் குடுத்து அந்தப் பணத்தைக் கும்பினீரிலே யிருந்து வாங்கி மீர் ஷம் அல்லி கான் அறியக் குடுப்பியும்; அவர் (மீர் ஷம் அல்லி) வார்சு ஆனபடியினாலே அவர் தழைஞ்சால் (தடை சொன்னால்) பணம் பொது கட்டி, வியாச்சியம் தீந்தப் பிற்பாடு குடுக்கச் செய்யுமென்று சொன்னார். அந்தச் சம்மதி யிப்போ தானே சொல்லிவிக்கிறேனென்று

[1] மீர் குலாம் உசேன் திருநெல்வேலி சீமையைச் சேர்ந்தவர். துய்மா காலத்தில் அவர் பிரெஞ்சுக் கம்பெனிக்கு ஒரு லட்சம் கடன் தந்திருந்தார். மீர் குலாம் இறந்த போது தன் உடன் பிறந்தாள் பிள்ளைகளுக்கு அப்பணத்தில் எஞ்சியிருந்ததை, வட்டியோடு, குடுக்கச் சொல்லி எழுதியிருந்தார். மீதிப் பணம் பற்றிய விவரங்கள் அடுத்த சில பக்கங்களில் உள்ளன.

[2] இந்த மீர் ஆசம் அலி கான் தான் மீரு குலாம் உசேனின் வாரிசு எனத் தெரிகிறது. அவர் புதுச்சேரியில் குடியிருந்தார்.

சொன்(னேன்). முசியே புறுக்கினூது ... "லீவுரு கையெழுத்துப் போட்டுக் குடுத்த கணக்கு உன் கையிலே யிருக்கிறதைக் கொண்டு வந்தால் பாத்துத் தாறேன்" னென்று (துரை சொன்னார்). யிவர்களிருவரையும் சேரப் பிடித்து ஒருத்தரையும் நோகப் பண்ணாமல் நம்முடைய காரியமும் சேகரம் பண்ணிக் கொண்டு போகலா மென்று வயணஞ் சொல்லி வைத்தேன். நல்லது அப்படி செய்வோமென்று சொன்னவுடனே, நாளைக்கு யிவர்கள் சீரொப்பாவும் குதிரையும் கொண்டு தங்கள் பேட்டிக்கு வாறோமென்று சொல்லுகிறார்களென்று சொன்னதுக்கு, வரச் சொல்லென்று சொன்னார். அந்தப்படிக்கி முற்திசா சாயபுடனே சொன்னதுக்கு பீரங்கிபோடச் செய்ய வேணு மென்று சொன்னார். அதுக் கவருடனே சொன்னதுக்கு, எத்தனை பீரங்கி போடவேணுமென்று கேட்டார். ஏழு பீரங்கி போடவேணு மென்று சொன்னதுக்கு, அப்படித்தான் செய்ய வேணுமென்று சொன்னார். மீர் ஷம் அல்லி கானுக்கு மிப்படித் தான் செய்ய வேணுமென்று சொன்னேன்.

நல்லதென்று (அவர்) சொன்னவுடனே, "நீங்கள் நான் சொல்லுகிறதைக் கேட்டுக் கொண்டு அப்பிறம் சுவல்ப்பத்திலே (வேறுவிதமாய்) நடத்திப் போடுகிறீர். ஆனபடியினாலே, காரியம் பார்க்கிறவர்களுக்கு நஷ்ட்ட மென்றும், உம்முடைய தாசத்துக்கு (உதவிக்குக்) குறைச்சலும், உமக்கு வருகிற ஆதாயம் போறது மாயிருக்கிறதே யல்லாமல் வேறே விதமாய்க் காணவில்லை. சந்தா சாயபு மகன் அன்பதினாயிரம் ரூபாய் சம்மதிக்கு யென்னுடனே நீர் சொன்ன பேச்சு வேறே, நீர் நடத்திப் போட்ட பேச்சு வேறே; யிமாம் சாயபு மருமக(னுக்கு) டங்கா சாலை (வருவாயில் வழக்கமாகச் சேரவேண்டிய தொகை பற்றிய) ருசுமுப்(?) பேச்சுக்கு அரைவாசி குடாமல் (இருக்கத்) தக்கதில்லை யென்று யென்னுடனே சொல்லி, முன்னூறு ரூபா (மட்டுமே) சீரொப்பாவிலே கொடுத்து விட்டீர். மூவாயிரத்து தொள்ளாயிரம் ரூபாயாச்சே, ரெண்டாயிரம் ரூபா வாரதைப் போக்கடிச்சுப் போட்டீர். சந்தா சாயபு மகனுக்கு மாதம் நாலாயிரத்துச் சில்வானம் ரூபா ஆகுது. அரை வாசி குறைஞ்சால் அவனுக்குக் குடுக்கத் தக்கதில்லை யென்று சொல்லிப் போட்டு, யெந்த சாடையிலே விட்டு விட்டீரோ தெரியவில்லை," யென்று பின்னையுஞ் சொல்ல வேண்டிய பேச்செல்லாஞ் சொல்லிப் போட்டு வந்து பிடவை பார்க்கிற சாலையிலே வந்(தேன்).

முசியே தெபறேன் அழைத்து, கோன்சேல் பரேசியோமிலே (தீர்மானத்திலே) காரைக்காலைச் சேந்த பத்து கிராமமும் நாலாயிர விராகனாக அஞ்சு வருஷத்துக்கு நாளை சூலை மாசம் முதல் குத்தகை வாங்கினதை எழுதினதிலே கையெழுத்துப் போடச் (சொன்னார்). அங்கே

போய் கையெழுத்துப் போட்டுப் அப்பாலவர் கையிலனுப்பி விச்சுக் கொண்டு வரச்சே, யென் கையெழுத்துப் போட்டு ஒரு கொப்பி (Copy) அனுப்பிவிக்கிறேன் யென்று சொன்னான். நல்ல தென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால், மயிசூரின் பேரிலே வந்து யிறங்கி யிருந்த சலாபத்து சங்கு தண்டிலே யிருந்து முசியே லாசும் முசே திப்பிளாவும் (M. Duplan?) பிறப்பட்டு வந்தார்கள். முசே புசிக்கும் முசே லாசுக்கும் சேராமல் (ஒற்றுமை இல்லாமல்) வந்து விட்டதாகவும், முசே திப்பிளாவை மச்சிலிபந்தருக்கு அனுப்பப் போறார்க ளென்றும் சேதி கேழ்விப்பட்டது.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 5; யுவ வருசம், வையாசி மாசம், தேதி 26; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோவற்ணதோர ண்டைக்குப் போய் யெட்டு மணிக்கு ஆசாரம் பண்ணின போது, முசே பொலோ, முசியே கில்லியார், முசியே தெபறேன் வகையராக்கள் கோன்சேலியேர் அனைவரும் ஒபிசியால்மார்கள், கப்பித்தான்மார்கள் கூட பெகு கூட்ட நாட்டமாயிருந்தார்கள். யென்னை அப்பாலே (துரை) காம்பிராவிலே அழைத்துப் போ(னார்). முசியே ஷெவிரோவும் கிட்டயிருக்கச்சே, செஞ்சி கொம்மாந்தாம் பிராது யெழுதினான் நாராயண சாஸ்திரி பேரிலே யென்று ஒரு காகித மெல்லாம் படிச்சார். அதுக்கெல்லாம், அவர்கள் நடப்பிக்குற அனியாயத்தினாலேயும், பத்துப் பணம் பிறயோசனத்தைத் தொட்டும் அமுல்தாரன் பேரிலே பிரா தெழுதுகிறார்க ளென்று சொன்(னேன்); ஆறு சொல்தாதுகள் ஓடிப்போனால் சேவுகரை அனுப்பிப் பிடித்துவரச் சொல்லி (கொம்மாந்தாம்) சொன்னால், "எனக்கென்ன கவை? போ" வென்று (அமுல்தாரன்) சொன்னானாம். "யினி மேலிப்படி நடப்பிச்சால் பிடித்து வந்து கட்டி அடிப்பேனென்று (கொம்மாந்தான்) சொன்னாராம்." "அப்படி அவர்கள் பேச்சைக் கேட்டு நடத்துகிறதானால் யென்னாலே சீர்மையிலே பணம் அறுவு பண்ணப் போகாது. குடியானவர்களையும் மத்தப் பேரையும் சவுக்கும் கையுமா யிருந்தாலாங்காட்டும் பணம் வராது. அப்படிப்பட்ட யிடத்திலே அமுல்தாரனுக்குத் தாக்கலாக வொட்டாமல் கொம்மாந்தாங்கள் தங்கள் தங்கள் பிறயோசனத்தைக் குறித்து நடத்துகிற காரியத்துக்கு நீங்கள் கொம்மாந்தாங்களைக் கண்டியாமலும் அவர்களெழுதுகிறது மெய்(என்றும்) யெண்ணினீர்களேயானால், பணம் அறுவாக மாட்டாது," யென்று சொல்லிப் போட்டுப் பின்னையு மிது வரைக்கும் நடந்ததும் முன் நடந்ததும் சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன்.

*1755 வருசம், சூன் மாசம், தேதி 7; யுவ வருசம், வையாசி மாசம், தேதி 28; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்குக் கோட்டைக்குப் போன விடத்திலே முசியே லெறி வெளிச்சாலையிலே ஒபிசியால்மார் சிறிது பேர், கோன்சேலியேர் வகையராக்களுடனே யெப்போதும் வாடிக்கைப் படிக்கி நிற்கச்சே போய் ஆசாரம் பண்ணினேன். மீர் குலாம் உசேன் கானுடைய உடம்பிறந்தாள் பிள்ளைகள் பேட்டிக்கு யெப்போ வாரார்கள் யென்று கேட்டார். இதோ வந்திருக்கிறார்கள். ஏழு பீரங்கி போடச் சொல்லி உத்தாரம் பீரங்கி மேஸ்திரிக்குக் குடுக்க வேணும் யென்று கேட்டதுக்கு அப்போ முசியே கற்பந்தேயிரை (M. Carpentier) அழைத்து உத்தாரங் குடுத்தார். அப்பால் முசியே ஷெவிரோவும் அவரும் சிறிது காகிதங்கள் பார்த்துக் கொண்டு யிருந்தார்கள். அது பார்த்தான பிறகு மீர் குலாம் உசேன் உடம்பிறந்தான் பிள்ளை கடைசி பிள்ளையாண்டானும் அவன் மச்சான் மிறுதிசா (முர்த்திசா) சாயபும் ஒரு மாத்தாபி (அதிக விலையுள்ள) சீரொப்பா—நூத்தன்பது ரூபா (மதிப்பு)— கொண்டு வந்து வைத்துக் கண்டு ஆசாரம் பண்ணிக் கொண்டவுடனே ஆலிங்கனமாச்சுது. ஆலிங்கனமாயி ஊளுக்காரச்சே யேழு பீறங்கி போட்டார்கள். அப்பால் குசலப்பிற சினையாய் ஒருத்தருக் கொருத்தர் உபசாரமாய்ச் சொல்லிக் கொண்ட பிறகு, லக்ஷம் ரூபா மீர் குலாம் உசேன் கும்பினீருக்கு கடன் குடுத்ததும், அதுக்கு அறுபத்தி நாலாயிரம் ரூபா முசியே துப்பிளேயிக்சு எடுத்துக் கொண்டதும், முப்பதினாயிரம் ரூபா மீர் ஷாமுக்குக் குடுத்ததும் ஆக தொண்ணூத்தி நாலாயிரம் ரூபா போக பாக்கி நின்றது முதலிலே ஆராயிரம் ரூபாய். யிதுக்கு வட்டி முப்பதினாயிரத்தி நானூத்தி தொண்ணூத்தி மூணு ரூபாயும் ரெண்டு பணமும் காசு யிருபத்தேழும் கூடினது. யேகத்துக்கு முப்பத்தாராயிரத்தி நானூத்தி தொண்ணூத்தி மூணு ரூபாயும் ரெண்டு பணமும் யிருபத்தேழு காசும் குடுக்க வேண்டிதென்று முசியே புறுக்கினூது கையெழுத்துப்பட கணக்கெழுதி யென் கையிலே கொடுத்திருந்த சம்மதி முதலான பேச்சு களெல்லாம் அவர் முசியே லெறியுடனே சொல்ல, "அந்தக் கணக்கு உன் கையிலே யிருக்குதென்று சொன்னியே எங்கே?" யென்று கேட்டதுக்கு, யென் கையிலிருந்து குடுத்தேன். அதைப் படித்துப் பார்த்து, "யிதிலே யிருக்கிற பாக்கிப் பணம் உங்களுக்கு நாம் குடுக்கிறோம், முசியே துப்பிளேயிக்சு பணமும் வரு," மென்று உபசாரமான வார்த்தையாய் புஷ்ட்டியாய்த் தானே சொன்னார். மத்தப் பேச்செல்லாம் நாளை முறுத்திசா சாயபு வந்து சொல்லுவா னென்று சொல்லி அனுப்பி விச்சுக் கொண்டு பன்னீர் பாக்கு வெத்திலை கொடுக்க வாங்கிக் கொண்டு போனார்கள்.

அப்பால் துறையூர் பழைய பாளையக்காரன் பாப்பு ரெட்டி காகிதம்

அவரது வக்கீல் கஸ்தூரி ரங்கப்பன் கொண்டு வந்து கொடுத்து பதினோரு விராகன் நசர் வைச்சான். அந்தக் காகிதத்தைப் படிக்கச் சொன்னார். படிச்ச விடத்திலே அதிலே, "முசியே குப்பி சீரங்கம் கொம்மாந்தாமுக்கு யெங்கள் பேரிலே தயவாய் மத்தத்து (உதவி) பண்ணி வைக்கச் சொல்லி யெழுதி யிருந்ததை அவர் சொல்லி யனுப்பிவிச்சார். அந்தப் பிறதியைத் (பதிலை) தானே தங்கள் பலமா யெண்ணிக் கொண்டு எங்கள் சத்துருவை செயிச்சு யெங்கள் கோட்டையாகிய துறையூரை யெப்போதும் போலே கட்டிக் கொண்டோம். முன் உங்களுக்குச் சொன்னது நடப்பிச்சுக் கொள்ளுகிறோம். இந்தச் சமஸ்தானமும் நாங்களும் உங்கள் கிறய விக்கிறையத்துக்கு உதவுமென்று யெண்ணிக் கொண்டு யெங்கள் பேரிலே தயவுபண்ணி நடப்பிக்க வேணும். மத்த சமாசாரம் எங்கள் வைக்கீல் கஸ்தூரி ரங்கய்யன்[1] சொல்லுவார். அந்தப்படி தயவு பண்ணி நடப்பிக்க வேணும்," யென்று எழுதியிருந்த மத்தலப்பை படிச்சுச் சொன்னதின் பேரிலே, முசியே லெறி வெகு சந்தோஷத்துடனே, "நாம் மத்தத்து (உதவி) பண்ணா(ததால்) யெதிராளி (கோட்டையைக்) கட்டிக் கொண்டு போனான். யினி முன் நமக்கு துறையூர் கோட்டையை வாங்கிக் கொடுத்தால் லக்ஷம் ரூபாய் குடுக்கிறோமென்று கஸ்தூரி ரங்கய்யன் பேசி யெழுதிக் கொடுத்திருக்கிறானே, அது வருமென்று பெகு புஷ்ட்டியாய் உங்களுக்கு மத்தத்து பண்ணச் சொல்லி முசியே மேசெனையும் பவுன்சையும் அனுப்பிவிச்சோம். மழையைத் தொட்டு அட்டியாய்ப் போச்சுது. முசியே குப்பிக்கும் யெழுதி அனுப்பினோம். யினி மேல் உங்களுக்கு சகல மத்தத்து பண்ணச் சொல்லி எழுதி யனுப்பிவிக்குறோம். நீங்கள் கும்பினீர் பணம் முதலிட வேணும். நாமும் அந்தப்படிக்கிக் காகிதமெழுதி அனுப்புகிறோம். நீரும் உம்முடைய யெசமானுக்கு எழுதியனுப்பு," யென்று சொல்லி, கஸ்தூரி றங்கய்யனுக்கு நித்தம் படி குடுக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப் படிக்கி வினாயகனுக்குச் சொல்லி யனுப்பிப் போட்டு நான் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

(மறுபடியும் இங்கே வருடமும் தேதியும் எழுதப்பட்டுள்ளது.)

இத்தனாள் உபய காவேரி தீரம் முசியே பிளாக்கூரும் (M. Flacourt) பாலி செட்டியுமாக நாலு லக்ஷத்து யெண்பதி னாயிரம் ரூபாயாகக் குத்தகை தீத்துக் கோன்சேல் திபரேசியோமுலே (தீர்மானாத்திலே) கையெழுத்துப் போட்டார்கள்.

இத்தனாள் பகலைக்கு மேலாக நாலு மணிக்கு முசியே லெறி

[1] ரங்கப்பன் என்றே ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. தமிழ்ப்பிரதி எழுதியோர் தான் இருவகையாக எழுதியுள்ளார்.

கொவற்ணதோர் அழைப்பிச்சு முசே, "மேசெனை அரியலூர், உடையார்பாளையம் பாளையக்காரர் நம்முடைய பேச்சிலே யில்லாமலிருக்கிறதுக்கு, அவர்களைப் போய் சத்தே பயப்படுத்தி அடக்கச் சொல்லி எழுதி யனுப்பினதுக்கு, முசியே குப்பியிருந்து கொண்டு, (உடையார்பாளையம்) மமுதல்லிகானைச் சேர்ந்தது யென்று யெழுதினான். உடையார்பாளையம் நம்மு தென்று நீர் சொன்னீரே, யென்ன," வென்று கேட்டார். "உடையார்பாளையம் பாளையக்காறன் வந்து செஞ்சியைச் சேர்ந்த பாளையக்காறனாங்காட்டும். செஞ்சி பாளையக்காற னானபடியினாலே செஞ்சிக் கோட்டை நம்முடைய வசமானபடியினாலே நம்மைச் சேர்ந்த பாளையக்காற னென்று நாம் பணம் கேட்டு வாரதும், அவர்கள் குடுக்குறோமென்று சொல்லுகிறதும், ஒரு வேளை நம்முடைய மனுஷர் கடிஞ்சு கேட்டால் மமுதல்லி கான் மனுஷர் வந்து போராடுகிறார்கள், அவர்களைத் துரத்தி விடுங்கோ ளென்று சொல்லுகிறதும், அவர்கள் (இங்கிலீசுக்காரர்) கேட்டால், நான் செஞ்சி பாளையக்காரனான படியினாலே புதுச்சேரியார் வந்து பணத்துக்குப் போராடுகிறார்கள், அவர்களைக் கேழ்க்க வேண்டா மென்று செய்யுங்கள் யென்றும், யிந்தப் படிக்கி மூணு வருஷமே சந்தா சாயபு செத்தது முதற் கொண்டு, ஒருத்தருக்குங் குடாமல் தந்தனைப் (துந்திரம்) பண்ணிக் கொண்டு திரிகிற படியினாலே, அவர்களுக்கும் பணஞ் சேர்ந்து புஷ்ட்டியாயிருந்து கொண்டு காலத்தைப் போக்கடித்துப் போட்டார்கள். மூணரை மாச(மாய்) நான் வைக்கீல் வெங்கிட்டராயன் என்கிறவனை அனுப்பிவிச்சு ரொம்ப பணத்துக்குச் சக்குத்திப் (ஏற்பாடு) பண்ணினேன்.

"யிதல்லாமல் புவனகிரி தாலூக்கு, கூவத்தூர் தாலூக்கு, பதினேழாயிரம் ரூபாய் வர வேணும். அது நிமித்தியமும் யிது நிமித்தியமும் ரெண்டும் துடர்ந்து கொண்டே வருகிறதைப் பிடித்து அவர்கள் இங்கிரேசுக்காறருக்கு யெழுதி யனுப்பிவிச்சு, யவர்கள் மனுஷனி ரெண்டு பேர் மங்கபதி யென்று ஒரு பாப்பானையும் பின்னை ஒருத்தனையும் அழைப்பித்து, (உமக்கு) கொஞ்ச நஞ்சம் கொடுக்கிறோம், மமுதல்லி கான் சன்னது வாங்கிக் கொடுக்கிறீர்களா வென்று கேட்(டார்கள்). அவர்களும் வந்ததை வரப் (பண்ணி) ... நல்லதென்று சம்மதித்ததாகவும், அவர்கள் மனுஷர் வந்து யிருக்கிறதாகவும், பேச்சு வார்த்தையிலே துகை யிணங்காம லிருக்கிறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது," யென்றும் யிது முதலான சேதி யெல்லாம் சவிஸ்தாரமாய்ச் சொ(ன்னேன்). "இந்த வக்கீலைப் போய் முசியே மேசெனுக்கு யிந்த வயணமெல்லாம் சொல்லச் சொல்லி யெழுதி அனுப்பு, நானும் முசியே மேசெனுக்கு எழுதியனுப்புகிறேன்," யென்று சொன்னார். அந்த மட்டுக்கும் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

வந்தவுடனே மறுபடி துரை சேவுகன் வந்து அழைக்கப்

போனவுடனே, முன் சொன்ன வயணமாம் படியே சொல்லச் சொல்லி, முசியே மேசெனுக்குக் காகித மெழுதி, அதிலே மூணு வருஷத்துப் பேஷுக்கஷு, தறுபாறு காசு உள்பட வருசம் ஒன்றுக்கு அன்பதினாயிரம் ரூபா வரவேணும்; யிதல்லாமல் புவனகிரி காலூக்கு பற்கணா சம்பந்தம் பதினேழாயிரம் ரூபா வரவேணும்; இந்த ரெண்டு சம்மதியும் வாங்கச் சொல்லியும், யிதுக்கு ரங்கப் பிள்ளை வைக்கீல் வெங்கிட்டராய னென்கிறவன் உடையார்பாளையத்திலே யிருக்கிறான், அவன் வந்து நடந்த பூருவோத்திரஞ் சொல்லுவான். அந்தப்படிக்கு நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லி யெழுதி அந்தக் காகிதத்தை ஒட்டகக்காரன் கையில் அனுப்பிவிச்சு, யென்னையும் வெங்கிட்டராயனுக்குக் காகித மெழுதி அனுப்பிவிக்கச் சொன்னார். நல்லது யென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வந்து காகிதம் யெழுதி அனுப்பிவிச்சோம்.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 8; யுவ வருசம், வையாசி மாசம், தேதி 29; ஆதிவாரம்*

இத்தனாள் பாசி ராயன் வைக்கீல் சவுதாய் நிமித்தியம் துரையைக் காண்கிறதுக்குச் சீரொப்பாவும் கொண்டு வந்து வைத்துயிருக்கிறான். யின்னம் பேட்டி ஆகயில்லை. கடப்பை யிலிருந்து அப்துல் (வகாபு) கானுடைய பெகுமானமும் சீரொப்பாவுங் கொண்டு வந்து யிருக்கிறார்களென்று எனக்கு அறுக்காறு வந்து சொன்னான். அதைத் துரையுடனே சொன்னதுக்கு சீக்கிறமத்துக்கு வரச் சொல்லி எழுதியனுப்பச் சொன்னபடிக்கு, அவர்கள் வைக்கீலுக்குக் காகித மெழுதி அனுப்பிவிச்சோம்.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 12; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 2; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே கொச்சிம் சீனத்திலே யிருந்து வந்திருக்கிற பிஷப்பு நம்முடைய வீட்டுக் கெதிரே யிருக்கிற பாதிரி கோவிலிலே யிருக்கிற படியினாலே, பாக்கு வெத்திலை பழவகை புஷ்பங்கள் வகையராவுடனே (சென்று), சிரஞ்சீவிகள் பொன்னாச்சி, நன்னாச்சி, குழந்தை[1] வகையராக்களின் கலியாண முகூர்த்தங்களைச் சொல்லி மேளதாளம் நவபோத்து சங்கீதம் (முதலான) தவனியிலே சத்தம்) உங்கள் நித்திரை முதலானதுகளுக்கு வருத்தமாயிருக்கு மென்கிறதினாலே, யென் பேரிலே யிருக்கிற பிறீதி பட்சத்தினாலே மனம் பொறுக்க வேணுமென்று உபசாரஞ் சொன்னதுக்கு, யெங்கள் பெண்கள் கலியாணத்துக்கு நாங்கள் சந்தோஷப் படுகிறதுக்கு அனுமானம் யென்ன

[1] முதலிருவரும் நம் பிள்ளையின் பெண்கள். குழந்தை அவரது தம்பி மகள்.

யிருக்குதென்று மெத்தவும் உபசாரமாய்ச் சொல்லி, வாசற்படி மட்டுக்கும் வந்து அனுப்பிவிச்சுப் போனார்கள். நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு, கோட்டைக்கு வந்து, முசியே லெறி கோவற்ணதோரைக் கண்டு ஆசாரம் பண்ணி, பாசி ராயன் பெகுமானமும் காகிதமும் முறுத்த சல்லி கான், அவன் தமையன் ரசா அலி கான் வெகுமானமும் காகிதமும் வந்திருக்கு தென்று சொன்னதுக்கு, நாளை காலத்தாலே ஆகுதென்று (சொன்னார்). "ரவை செல்லா தறுணதான் (Tarnatannes - ஒரு வகை துணி) அறுபது கட்டு மட்டுக்கும் கும்பினீருக்கு வேணும். காரைக்கால் வர்த்தகரல்லோ செய்யுகிறது. ஆனபடியினாலே அவர்களையாகிலும் கண்டு பேசி கூடி வரப்பாரும். யில்லாவிட்டால் யிவ்வடத்து வர்த்தகருக்காகிலும் பேசி யெனக்குக் கூடி வரச்செய்யும்," யென்று சொன்னார்.

நல்லதென்று சொல்லி, கலியாணப் பேச்சு (எடுத்து), எனக்கு நடக்கிற மரியாதை யுடனே (நீங்களும்), நீர் வருகிறபோது கோன்சேலியோர்க(ளும்) கூட வருகிறது வாடிக்கை யென்றும், இது முதலான சேதிகளைச் சொல்லி, பின்னையும் மாப்பிள்ளைமார்களுக்கு சீரொப்பா வெகுமானங் கொடுத்து பதிமூணு பீரங்கியும் போடுகிற வாடிக்கையென்றும் சொ(ன்னேன்). முசே தெவோவை (யும் கூட) வைத்துக் கொண்டு, ... (துரை) உனக் கெப்படி சம்மதியோ அப்படி நடப்பிக்கறோமென்று சொன்னார். அந்த மட்டுக்கும் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

***1755 வருசம், சூன் மாசம், தேதி 13; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 3; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலத்தாலே பாசி ராயன் வெகுமானம் (எடுத்து வருவதற்காக) முசியே ஷெவிரோ(வும்) முசியே லெறி(யின்) சொந்த சக்கிரத்தார் பேர் விளங்கனும், நானும் துரை கையில் அனுப்பிவிச்சுக் கொண்டு, கோவற்ணதோர் பல்லக்கு, நீசான், சோபுதார் வகையிரா, மேளதாள சங்கீதம், தேவடியாக்கள், நயினார், யீட்டிக்கழி வகையிராக்கள் சகல சம்பிறமத்துடனே பிறப்பட்டு தொபென் (M. Tobin) வாசலாலே போய் வில்லியநெல்லூர் வாசற்படி கடந்து, புளியந்தோப்பில் நரசிங்க ராவு குமாஸ்தா, பாசி ராவு தரப்பிலே யிருந்து வந்தவன், பேர் விளங்கன், அங்கே யிருக்கிறவனைப் போய்க் காண, அவனெதிரே (வந்து) வெகு உபசாரங்கள் பண்ணி, சீரொப்பா, மொழுகுச் சீலையிலே தைச்சிருந்த மூட்டையுங் காகிதத்தையுங் குடுத்தான். அதைப் பல்லக்கிலே அப்படி மூட்டைப் படிக்குத் தானே வைத்துக் கொண்டு மேளதாளத்துடனே கோட்டைக்குக் கொண்டு வந்து துரை முன்பாக வைத்துக் காண்பிச்(சோம். அப்பால்) இருபத்தோரு விராகன் நசர் வைத்துக் காணச்சே பதினஞ்சு வேட்டு பீரங்கி போட்டார்கள். அதின் பிறகு

ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு ஒருத்தருக் கொருத்தர் குசலப் பிறசனையாச்சு. அதின் பேரிலே துரையவர்கள் பாசி ராயன் வைக்கீலை நீர் விடுதிக்கிப் போய் ஆசுதாவா யிரும், எல்லாம் நாளை பேசிக் கொள்ளுவோம் யென்று அனுப்பி (விச்சார்). முறுதசா கான் வெகுமானம் ஒரு குதிரையும் சீரொப்பாவுங் கொண்டு வந்து அவர்கள் வைக்கீல் வைத்துக் கண்டான். அதுவும் ஆலிங்கனமாயி பதினோரு வேட்டுப் பீரங்கிப் போட்டார்கள். அதின் பிறகு மகம்மதாக்கல் (முகம்மது தவக்கல்) ஒரு சரிகை சீரொப்பாவை வைத்துக் கொண்டு, தன்னுடைய உத்தியோக காரியத்துக்கு ஒரு பித்திசா மெழுதிக் கொண்டு வந்து குடுத்தான். அதை துரை படித்துப் பார்த்து, நல்லது அப்படித்தானே ஆகட்டுமென்று சொல்லி அனுப்பி, அவர்கள் போன பிறகு, நானு மனுப்பிவிச்சுக் கொண்டு, பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து அங்கே யிருந்து வீட்டுக்குப் போனேன்.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 15; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 5; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், குண்டூர் பாலி செட்டியும் முசியே பிளாக்கூரும் இருவரும் சீரங்கம் உபய காவேரி தீரம் வகையரா நாலு லக்ஷத்து யெண்பதி னாயிரம் ரூபாய் குத்தகையும், துரை வகையரா சிலவு லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் நசரும் (கொடுப்பதாக) ஒப்புக் கொண்டார்கள் யென்று முன்னாலே தினசரியிலே யெழுதியிருந்தோம். இத்தனாள் குண்டூர் பாலி செட்டிக்கு துரை நாலு கெசம் சகலாத்து பெகுமானம் பண்ணுகிறதுக்கு முன்னே, துரைக்கு ஆயிரம் விராகன் நசர் வைத்து, அதன் பிறகு வெகுமானம் வாங்கிக் கொண்டு சீரங்கம் உபய காவேரி தீரம் குத்தகையும் ஒப்புக் கொண்டு வந்தானென்று சேதி கேட்டோம்.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 16; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 6; சோமவாரம்*

இத்தனாள் காலமே முசியே லெறி கோவற்ணதோர் அவர்கள் என்னை அழைப்பிக்க வேணுமென்று யிருக்கச்சே, யின்றைக்கு துரை வகையிராக்களைக் கலியாணத்துக்கு அழைக்க வேணுமென்று பிறப்படச்சே, சேவுகன் வந்து துரை அழைக்கிறாரென்று அழைக்கப் போனவிடத்திலே, துரை, "சீரங்கம் உபய காவேரி தீரம் சீர்மை குண்டூர் பாலி செட்டிக்கும் முசியே பிளாக்கூருக்கும் குத்தகை தீத்துக் குடுத்துவிட்டோம். ஆனபடியினாலே சூரப்ப முதலி வகையிராக்கள் சீரங்கத்துக்குப் பயணமாய்ப் போறார்கள். அவர்கள் உன்னுடனே யாதாமொரு காரியம் வந்து சொல்லிக் கொண்டால் அனுகூலமாய்த் தானே காரியம் சேகரம் பண்ணிக் குடுத்தனுப்பு," யென்று சொன்னார். நல்லது, அப்படித்தானே நடத்துகிறேனென்று சொன்னேன்.

அதின் பிறகு துரை கொச்சிம் சீனா ராசாவுக்குக் காகித மெழுதி அனுப்ப வேணுமே யென்று கேட்டதுக்கு, "முன் பின் எழுதின வாடிக்கையில்லை. ஆனால் பார்சியிலே யெழுதுகிறதுக்கு சாபிதா வுண்டு. அதைப் பார்த்து வந்து சொல்லுகிறே," னென்று சொன்னதுக்கு, நல்லதென்று சொன்னார். அதன் பிறகு தோங்குசலாம் (ஜங்க் சிலான்) ராசாவுக்குக் காயிதம் யெழுதுகிறதுக்கு பிரான்சிலே யெழுதி (பார்சி படுத்தி) யனுப்பச் சொன்னார். அந்தப்படிக்கி, அந்தக் காகிதத்தை வாங்கிக் கொண்டு, நல்லதென்று சொல்லி அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்து கொச்சிம் சீனா ராசாவுக்கு முன் பின் எழுதின துண்டா வென்று பார்சி சாபிதாவைப் பார்த்த விடத்திலே, அதிலே யில்லை யென்று உடனே துரைக்குச் சொல்லி அனுப்பிப் போட்டு, மதனாந்த பண்டிதரை அழைப்பித்து தோங்குசலாம் ராசாவுக்கு பார்சிலே யெழுதச் சொல்லி, பிரான்சிலே துரை யெழுதிக் கொடுத்த காகிதத்தைக் குடுத்துப் போட்டு, நாம் கலியாண அலுவலிலே யிருந்தோம்.

இத்தனாள் மத்தியானம் பதினோரு மணிக்குக் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், குண்டூர் பாலி செட்டி சீரங்கம் உபய காவேரி தீரம் குத்தகை வாங்கின படியினாலே, அவ்விடத்துக்குப் பல்லக்கு யேறிக் கொண்டு போறதுக்கு துரைக்கு ஆயிரம் விராகன் நசர் வைத்து உத்தாரங் கேட்டதாகவும், நல்லது யென்று உத்தாரங் குடுத்ததாகவும், பல்லக்கு யேறிக் கொண்டு வீட்டுக்குப் போறதுக்குத் தமுக்குக்காறர், ஈட்டிக்காறர், கழிக்காறர்களை அழைத்தாப் போலேயும், அதுக்கவர்கள் கோமுட்டிக்கு நாங்கள் வருகிற தில்லை யென்று சொன்னதாகவும், அதின் பேரிலே குண்டூர் பாலி செட்டி சும்மா பிறப்பட்டு சின்னதுரை வீட்டுக்குப் போய் வீட்டுக்குப் போனானென்றும் சேதி கேழ்விப்பட்டோம். இது என் மனதுக் கேற்ப அவர்களுக்கு இரண்டு மாதம் நடந்தால் மெத்த அருமை, அப்பால் கஸ்தி அனுபவிப்பார்கள் யென்று தோணியிருக்கிறது. இதுவுமல்லாமல் முன்னாலே சுப்பா சோசியர் யுவ வருசம் (1755–56) குண்டூராருக்குக் கஷ்ட்ட காலம் பிடிக்கு மென்று சொல்லி யிருந்ததுக்கு, யிது ஏஷிய மென்கிறது தப்பிதமில்லை. யின்னம் யிரெண்டு மாதத்துக்குள்ளே குண்டூராருக்கு யிக்கட்டு வந்து பிடித்து மெத்தவும் கஸ்தி அனுபவிப்பார்களென்று சோசியம் சொன்னதுக்குத் தப்பித மில்லை யென்றறிய வேண்டியது.

இத்தனாள் அஞ்சு மணிக்கு துரையைப் பந்தலுக்கு அழைத்துக் கொண்டு வர வேணுமென்று, அப்பாவு, அண்ணாசாமி முதலான பேரை சிங்காரித்து ஒரு ஆனையின் பேரிலே வெள்ளி அம்பாரியும் ஒரு ஆனையின் பேரிலே மொகமல் (வெல்வெட்) அம்பாரியும் முஸ்தீது பண்ணி ஈட்டிக்கழி, பைறக்கு (கொடி) வகையரா சம்பிறமத்துடனே (அனுப்பினேன்).

முசியே லெறி கொவற்ணதோரவர்களைப் போய் அழைக்க, அவர் பட்டப் (கவர்னருக்குரிய) பல்லக்கிலே யேறிக் கொண்டவுடனே, வெள்ளைப் பாவாடை, மகில் பிச்சம் (மயில் விசிறி) முதலான உபசரணை உடனே முசியே பெடுத்தல்மீ வகையிரா கோன்சேலியேர்களுடனே ஆறு மணிக்குப் பந்தலுக்கு வந்து உளுக்காா்ந்தவுடனே, நாற்பத்தெட்டு பீரங்கிப் போட்டார்கள். அதன் பிறகு பந்தல் முதலானதுகளெல்லாம் பார்த்து முசே பெடுத்தல்மீ வகையிராக்கள் யிருக்கச்சே, துரை தமிழர் யித்தனை சம்பிறமமாய்க் கலியாணம் பண்ணுவார்களென்கிறது நான் அறியே னென்று சொன்னதுக்கு, முசியே கில்லியார் யிதென்ன சம்பிரமம், முன்னாலே அவருடைய மூத்த குமாரத்திக்குக் கலியாணம் பண்ணின சம்பிறமத்திலே நூத்திலே ஒரு பங்கு யில்லை யென்று சொன்(னார்). அப்படியா வென்று (துரை) மெத்தவும் ஆச்சரியப்பட்டார். (இதை) முசியே கில்லியார் யென்னுடனே சொன்னார்.

அதன் பிறகு பத்து மணி வரைக்கும் கேளிக்கை பார்த்து, அதின் பேரிலே சாப்பிடச்சே நம்முடைய பெயர் சொல்லி சாந்தே (சாராயம்?) குடிக்கச்சே, விசைக்கு நாற்பத்தெட்டு பீரங்கி விழுக்காடு யெட்டு விசை போட்டு பனிரெண்டு மணி வரைக்கும் யிருந்தார்கள். ஒருக்காலும் யிப்படி நடந்ததில்லை. அப்படி வெகு சம்பிறமமாய் (நடந்தது). நான் போகத் தேவையில்லையா (போகட்டுமா?) வென்று (துரை) சொன்னதின் பேரிலே, அவர் போக வேணுமென்று பயணம் பிறப்படச்சே, யெல்லாருக்கும் பூ ஆரம் போட்டு, துரையவர்களுக்கு அன்னூறு விராகனிலே ஒரு யிங்கிலீசு (வச்சிர) மோதிரங் கொடுத்தேன். முசியே பெடுத்தல்மீக்கு நூறு விராகனிலே ஒரு மோதிரமும், மத்தக் கோன்சேலியேர், ஒபிசியால்மார் வகையராக்களுக்கு அவரவர் தாரதம்மியப்படிக்கி ஒருபட்டு சுருட்டி விழுக்காடு குடுத்தது. அதன் பிறகு அனுப்பிவிச்சு வந்த சம்பிறமத்துடனே போற போதும் அப்படியே முஸ்தீது பண்ணி அனுப்பி, நானும் கூட புகையிலைக் கிடங்கு மட்டுக்கும் போனேன். அதிலே துரை யென்னைப் பார்த்து, நீ யேன் வருகிறாய், நீ கலியாண சம்பிறமத்திலே யிரு யென்று சொல்லியனுப்பிப் போட்டு சகல சம்பிறமத்துடனேக்குப் போனார். நான் கலியாண சம்பிறமத்திலே யிருந்தேன்.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 17; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 7; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் காலமே கலியாண சம்பிறமத்தைத் தொட்டு வெளியே போகயில்லை. முசியே கில்லியாரும் அவர் பெண்சாதியும் பந்தல் பார்க்கிறதுக்கு வந்த விடத்திலே, அவர் சொன்ன சேதி யென்ன வென்றால், யின்றைக்கு நான் துரையோட கூட யிருந்து சாப்பிட்டேன். முசியே லெறி உம்மை ஒரு மந்திரி போலே பார்க்கிறாரே யல்லாமல்

வேறேயில்லை யென்று சொல்லி, முசியே லெறி உம்மை மெத்தவும் சவுத்தியம் பண்ணி (புகழ்ந்து) ரங்கப்பனுடைய மனசும் தாராளமும் ஒருத்தருக்கும் வராது. யிப்படி யிருந்தபடியினாலே தான் முசியே துப்பிளேயிக்சும் முசியே கொதேயும் தயவு பண்ணி நடப்பிச்சார்கள். யில்லாவிட்டால் நடப்பிப்பார்களா வென்று சொல்லி, மதாம் துப்பிளேயிக்சு நாளையிலே கொஞ்ச நான் அப்படி (நடவாமல் போனது) யென்று மெத்தவும் ஸ்துதி பண்ணினாரென்று முசியே கில்லியா ரென்னுடனே சொன்னது. நம்மை ஸ்துதி பண்ணினது நாம் தானே சொல்லிக் கொள்ளலாகாதே யென்று சூக்ஷமமாயி யெழுதி விச்சோம்.

இத்தனாள் சூரிய உதையமான யேழு மணிக்கு கற்கடக லக்கினத்திலே நம்முடைய அப்பாவு கலியாணத்துக்கு ஸ்தம்ப பிறதிஷ்டை பண்ணி சகலமான பேருக்கும் பன்னீர் பாக்கு வெத்திலை குடுத்து, அவரவர்களை அனுப்பிவிச்சுக் கலியாண சம்பிறமத்திலே யிருந்தோம். இதுவுமல்லாமல் மாப்பிள்ளைகள் பிறப்படச்சேயும் விருந்துக்குப் போகச் சேயும் மறுபடி வரச்சேயும் பெகுமானம் பண்ணச்சேயும் பதினஞ்சு வேட்டு பீறங்கி விழுக்காடு போட்டார்கள்.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 19; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 9; குருவாரம்*

இத்தனாள் காலமே யேழு மணிக்கு துரை அழைக்கப் போனவிடத்திலே, ஒரு சொலுதாது ஓடிப் போனானென்று அவனைத் தூக்கிப் போடுகிறதுக்குக் கோன்சேல் துருப்பு (council of war) கூடியிருந்து கலைஞ்சவுடனே நான் போயி கண்டேன். உடனே துரையவர்கள் நந்திராசாவுக்குக் காகித மெழுத வேணும், முசியே குப்பியானால் பழய பாப்பு ரெட்டி நம்முடைய அடக்கிலே யிருக்கிறவன் பேரிலே, புதுசாயிருந்த வரதா ரெட்டிக்குப் பிலனாய் நந்திராசா அயிதர் நாயக்கனையும்[1] சிறிது குதிரைக்காறரையும் அனுப்பிவிச்சாரென்று யெழுதி அனுப்பினான். ஆனபடியினாலே நந்திராசாவுக்கு, "இப்படி நீர் சீரங்கம் விட்டுப் போற போது நமக்கு யெழுதின காகிதப்படிக்கி, உங்கள் பேரிலே தயவாயி நடப்பித்துக் கொள்ளச் சொல்லி யெழுதியனுப்பினோம். அப்படி உங்களுக்குப் பரிகாரம் பண்ணியிருக்க, நீர் பழய பாப்பு ரெட்டி பேரிலே அயிதர் நயக்கனை சினேகம் விருத்தம் வருகிறதுக்கு அனுப்பலாமா?

[1] இவன் தான் பின்னர் மைசூரில் ஆட்சியைக் கைப்பற்றி அயிதர் அலி என்று பட்டம் புனைந்தவன்.

யிப்போதும் அயிதர் நயக்கனுக்குத் தாக்கீது சீரங்கத்திலே யிருக்கிற கொம்மாந்தாம் சொன்னபடி நடந்து கொள்ளச் சொல்லி யெழுதி யனுப்பும்" யென்று யிது முதலான சேதிகளாய் பிரான்சிலே யெழுதிக் குடுத்தபடிக்கி திரான்சிலிட்டுத் தெலுங்கிலே யெழுதி யனுப்பி விட்டோம்.

### *1755 வருசம், சூன் மாசம், தேதி 29; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 19; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவற்ணதோர், கோன்சேலியோர், சீர்மைக் கப்பல் கப்பித் தான்மார், ஒபிசியால்மார் வகையிராக்கள் யெல்லாரும் கோவிலுக்குப் போய் பூசை (கேட்டு) வந்து யிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். நந்திராசா வைக்கீலை அழைப்பியு மென்று சொன்னார். அவர் வந்தவுடனே சொல்லி, நந்திராசாவுக்கு யெழுதச் சொன்ன காகித வயணம் யென்ன வென்றால் (அது): "நந்திராசா காகித மெழுதி யனுப்பினபடிக்கி முசியே புசிக்கும் சலாபத்து சங்குவுக்கும் காயிதங்களெழுதி (அனுப்பினோம்; அதில்) மயிசூரார் வந்து பிரான்சுக்காறருடைய கொடியைச் சேர்ந்தவர்களான படியினாலே அவர்கள் பேரிலே சக்குத்தி சண்டை வகையரா சுலுமு பண்ணாமல் முன் பின் நடந்த படிக்கி (நடக்க வேணும்); பேஷ்கஷு உண்டானது கூட சலக்கரணையாய் (பழைய படியே) வாங்கிக் கொண்டு போகச் சொல்லி யெழுதி(னோம்); யிந்தக் காகிதம் போறதுக்கு முன்னமே (அவர்கள்) சண்டை குடுத்து, கோட்டையை வாங்க யெத்தனம் பண்ணி(னார்கள்); கோட்டையை வாங்குகிற சமையத்திலே யிந்தக் காயிதம் போய்ச் சேர்ந்து பார்த்துக் கொண்டவுடனே அதையெல்லாம் மொக்கூப்பு பண்ணி (நிறுத்தி), (முன்பு வாங்கிய) பேஷ்கஷு (மட்டும்) குடுக்கச் சொல்லிக் கேட்டதுக்கு (மயிசூரார்) அதுக்குக்கூட குடுக்க நிறுவாகமில்லை யென்று (சொல்லி விட்டார்கள். அதன்பின்) நூதனமாய் பிரான்சுக்காறர் (அரச) பட்டத்தைப் பிள்ளை (ஒருவனுக்கு) கட் (டினார்கள்). அந்தப் பட்டத்துப் பிள்ளையைக் கொண்டு வந்து, பட்டாபிஷேகம் பண்ணிவிச்சு,[1] யிது பிரான்சுக்காறருடைய பட்டமென்று சொல்லி பண்ணவேண்டிய சடங்குகள் பண்ணி(னோம்). முசே புசிக்கு (நாம்) யெழுதினதின் பேரிலே (அவர்) முசியே சலாபத் சங்குவுக்கு (இதையெல்லாம்) தெரியப்படச் சொல்லி, அன்பத்தி ரெண்டு லக்ஷமாய்த் தீத்து அந்தப் பணமும் நிகளத்திலே (நீண்ட காலத் தவணையிலே) வாங்கிக் கொள்ளத் தக்கதாக சலக்கறணை (சலுகை) பண்ணிக்

---

[1] இந்த முக்கிய நிகழ்வுகளை விவரிக்கும் பிள்ளையின் பதிவுகள் கொண்ட ஏடுகள் தொலைந்து விட்டன.

கொடுத்(தோம். அப்பால் முசே புசி) சலாபத்து சங்கு வினுடைய பவுன்சையும் அழைப்பிச்சுக் கொண்டு அயிதராபாத்துக்குப் போய்விட்டார். யிப்படி யெல்லாம் உங்களுக்கு சகாய சம்பத்து பண்ணியிருக்க, நீங்களும் எங்களடைக்கலத்திலே யிருக்க, துறையூர் பாப்பு ரெட்டியை முசியே துப்பிளேயிக்சு, முசே கொதே அவர்கள் ஆதரிச்சுப் பண்ணியிருக்க, அந்த பாப்பு ரெட்டியை வாங்கிப் போட்டு வரதா ரெட்டிக்குக் கட்டிக் கொடுத்தீர்கள். அதன் பிறகு பாப்பு ரெட்டி தானே பிலன் பண்ணிக்கொண்டு, திரும்பவும் கட்டிக் கொண்டு, (நாங்களும்) உங்களுடைய அடைக்கலத்திலே யிருக்கிறோமென்று யெழுதி அனுப்பினான். நாங்களும் (இப்படி அவன்) யெங்கள் கொடியின் கீழே யிருக்கச்சே நந்திராசா சிறிது பிலன் அனுப்பிவிச்சு, அவ்விடத்திலே சுலுமு சாஸ்தி பண்ணி வருகிறதாகச் சேதி அடிக்கடி எழுதி வருகிறது. அப்படி யெழுதி வரப் பண்ணிக்கொள்ளலாமா? நாமும் முன்னாலே யெழுதி அனுப்பிவிச்சோம். நீரும் நந்திராசாவுக்கு யெழுதியனுப்பி அந்த வழி போகத் தேவையில்லை. யிந்த மட்டுக்கும் சுலுமி பண்ணின சேதமும் (சேதத்துக்கு ஈடும் குடுத்துவிடச் சொல்லி எழுதவும்). சேர்ந்தமங்கலம் ராமி ரெட்டி பேருக்கும் ஒரு காகித மெழுதி அனுப்பும். அந்தப்படிக்கி நடந்தாலாச்சு. யில்லாவிட்டால் யென்னமாய் வந்து சம்பவிக்குமோ தெரியாது," யென்று சொன்னார். நல்லது யெழுதி யனுப்பிவிக்கிறேன் யென்று மயிசூர் வெங்கிட்டநாரணப்பய்யன் அனுப்பி விச்சுக் கொண்டு (போனார்). நான் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தேன்.

***1755 வருசம், சூன் மாசம், தேதி 30; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 20; சோமவாரம்***

இத்தனாள் காலமே யேழரை மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே யின்றைக்கு யேனத்துப் பிடவை பார்த்த படியினாலே துரை பிடவை பார்க்கிற சாலையிலே போயிருந்தார். அப்போ நான் போயி ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அதின் பிறகு கடப்பை அப்துல் நபி கானுடைய பெகுமானம் வந்திருக்கிறதைக் கொண்டு வரவேணுமென்று சொன்னதுக்கு, நல்லது யெடுப்பிச்சுக் கொண்டு வா யென்று சொல்லி, எத்தனை பீரங்கிப் போடவேணு மென்று கேட்டார். பதிமூணு பீரங்கிப் போடவேணு மென்று சொன்னேன்.

அதன் பேரிலே கோவற்ணதோர் பட்டத்துப் பல்லக்கும் நீசான், நயினார், யீட்டிக் கழிக்காறர், மேளதாளம் வகையிராவுடனே கடப்பை அப்துல் நபி கானுடய வைக்கீல் அருணாசல செட்டி வீட்டிலே யிறங்கி யிருக்கச்சே போயி, அவருடைய பெகுமானம் அறுநூறு ரூபா[1] பெத்த

[1] 500 ரூபாய் என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

மகதாபி (விலை உயர்ந்த) சீரொப்பா வொன்றும், ஒரு குதிரையும் யெடுப்பிச்சுக் கொண்டு, மேளதாளத்துடனே கொண்டு வந்து, துரை முன்னே வைத்து பதினோரு விராகன் நசர் வைத்துக் கண்டார். அப்போ பதின்மூன்று பீரங்கி போட்டார்கள். அப்போ அயிதர் கான் வைக்கீல் பாலாசி பண்டிதன் யேழு ரூபா நசர் வைத்துக் கண்டார். அதன் பிறகு அவர்கள், "முன்னாலே முசியே துப்பிளேயிக்சு நாளையிலே சினேகத்துக்கு விருத்தம் பண்ணிக் கொண்டு வந்தார்கள். அதன் பிறகு முசியே கொதே வந்தார். அவர் சினேகம் பரிபாலனம் பண்ண வேணு மென்று யிருக்கச்சே சீர்மைக்குப் போயிவிட்டார். அந்த யிடத்துக்குத் தாங்கள் வந்தாப் போலே ஆச்சுது. எப்படி சினேகம் பிறெவிருத்தியாய் நடக்க வேணுமோ அந்தப் படிக்கி நடப்பித்துக் கொள்ள வேணு," மென்று சொன்னார்கள்.

நல்லது, அப்படியே ஆகட்டு மென்று சொல்லி, நீங்கள் ஆசு தாவாய்ப் போயிருங்கள். யெல்லாத்துக்கும் சாவகாசமாய்ப் பேசிக் கொள்ளுவோம் யென்று சொல்லி, அவர்களை அனுப்பிப் போட்டு, அதன் பிறகு காரைக்கால் கும்பினீர் வர்த்தகர் முத்தியப் பிள்ளை யென்கிறவர் பறங்கி(ப் பேட்டை) நூறு விராகன் நசர் வைத்துக் கண்டு, கும்பினீர் வர்த்தகம் லொகுசானாயப் (மந்தமாய்ப்) போகுது. அது பிறபலிச்சு நடக்கத் தக்கதாகப் பண்ண வேணுமென்று சொன்னதுக்கு, நல்லது அப்படித்தானே நடப்பிக்குறோ மென்று புஷ்ட்டியாய்ச் சொல்லி, நாளை வாருங்கோ ளென்று சொல்லி அனுப்பினார்.

# ஜுலை 1755

*1755 வருசம், சூலை மாசம், தேதி 4; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 24; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலமே யேழரை மணிக்கு கோட்டைக்குப் போயிருந்த விடத்திலே துரையைக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அப்போ கடப்பை அப்துல் நபி கான் அனுப்பின காகிதமும், தலங்கம்பாடியிலே யிருக்கிற (அவனது) வைக்கீல் அயிதர் கான் காகிதமும், யிந்த ரெண்டு காகிதத்தையும் பிரான்சுப் படுத்தினதும் கொண்டு போய்க் குடுத்ததைப் பார்த்துக் கொண்டு, சிதம்பரம் யிவர்களுக்கு யெப்படி விடுகிறதென்று கேட்டார். அதுக்கெல்லாம் வேறே கம்பகம் (வழி) உண்டு, சொல்லுகிறேன் என்று சொன்னேன். அதுக்கு யின்றைய தினம் கோன்சேல் கூடப் போறோம், பேசக் கூடாது, நாளைக் காகட்டும் என்றும் சொன்னார்.

*1755 வருசம், சூலை மாசம், தேதி 5; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 25; சனிவாரம்*

இத்தனாள் காலமே யேழரை மணிக்கு கோட்டைக்குப் போயிருந்தவிடத்திலே துரையைக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்போ தஞ்சாவூர் மனோசியப்பா வெகுமானம் வந்த தினிசுகள் என்னவென்றால், சேடிதார் சாமவார் –2, சேடிதார் தோடினி[1] – 1, மத்தில் பாகை – 1, கிமிகாப்பு – 1, படகா – 1, ஆக உருப்படி 6–க்குக் கிறயம் ரூபா 270. கடுதாசும் கொண்டு வந்து கொடுத்தார்கள். அப்போ அவர்கள் மெத்தவும் உபசரணை சொல்லி, “நீங்கள் சீர்மை யிலிருந்து வந்தீர்கள், சினேகம் புரோவிருத்தியாய் நடக்கத் தக்கதாய்ப் பண்ண வேணு” மென்று சொன்னார்கள். நல்லது அப்படியே ஆகுதென்று சொல்லி, வந்த பேருக்குக் கும்பினீரிலே படி கொடுக்கச் சொல்லி உத்திரவு குடுத்தார். அதின் பிறகு சவா பாசி ராயன் குருக்கள் தெக்ஷணமூர்த்தி சாஸ்திரியாரின் தம்பியும் சேஷா ராயரும் துரை பேட்டிக்குக் கொண்டுவந்த வெகுமான நகை வயணம் : மகதாபி சாமேவார்–1, சடிதார் ஒமணி–1, சுனார்தானா – கெங்காசி மணி பாகை – 1, பா(ஜு)பந்து–1, படகா–1, ஆக நகை அஞ்சுக்குக் கிறையம் ரூபா 250. இப்படி வைத்துப் பேட்டி கண்டார்கள். அப்போ, “பாசி ராயனுக்கும் உங்களுக்கும் சினேக மிருக்கவே யிருக்குது. ஆனால் நாங்கள் வந்து

[1] கட்டனி என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

கண்டதுக்கு யினி மேல் சினேகம் உத்திரோத்தமாய் நடக்கத் தக்கதாக நடப்பித்துக் கொண்டு வரவேணு," மென்று சொல்லி, "சேஷா ராயன் திரிச்சிராப்பள்ளி சீர்மையிலே ஒரு கிராமம் தர்மத்துக்கு விட்டிருந்தார். அது நடந்து வருகிறது. நாங்கள் யென்றும் தாங்க ளென்றும் பேதகம் யில்லாததினாலே சொன்னோம். அவர் இயாதொரு காரியம் வந்து சொல்லிக் கொண்டால் அப்படி செய்து கொடுக்க வேணும். நாங்களும் ஊருக்குப் போறோம். பாசி ராயனுக்குச் சொல்ல வேண்டியதும் சொன்னால், அந்தப் படிக்குச் சொல்லி சினேகம் நடக்கத் தக்கதாகப் பண்ணி வைக்கிறோ," மென்று சொன்னார்கள். அதுக்குத் துரை, "மெய்தான், அந்தப்படி நடக்கவே நடக்கும். நீங்கள் வந்த காரியம் அனுகூலமாகு," மென்று பதில் உத்திரமும் புஷ்ட்டியாய்ச் சொல்லி, இவர்களுக்குக் கும்பினீரிலே படி குடுக்கச் சொல்லி உத்தரவு குடுத்தார். அந்த மட்டிலே அனுப்பி விச்சுக் கொண்டு பூந்தோட்டக்கச் சேரிக்கு[1] வந்தேன்.

### *1755 வருசம், சூலை மாசம், தேதி 7; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 27; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே பாசி ராயன் வைக்கீலாய் நரசிங்க ராயன் குமாஸ்தா கோவிந்த ராவு தனக்கு நரசிங்க ராயன் அனுப்பின காகிதத்திலே சாவனூர்–பங்காபுரம் கில்லேதார் (மற்றும்) சுபேதாரன் (ஆன) அப்துல் மசீது கான் மச்சினன் கோட்டையிலே யிருந்தாப் போலேயும், அவனுடனே முசவர் (முசபர்) கான் சினேகமாயிருந்தாப் பேலே யிருந்து அவனை ... கட்டிப்போட்டு, கில்லாவைக் கட்டிக் கொண்டதா யெழுதி வந்துதென்று காகிதத்தைப் படித்துக் காண்பித்தான்.

### *1755 வருசம், சூலை மாசம், தேதி 8; யுவ வருசம், ஆனி மாசம், தேதி 28; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே திருவதியிலே யிருக்கிற கொம்மாந்தம் ராத்திரியிலே பறையர் வீட்டிலே போறதும், பெண்டுகளைக் கெடுக்கிறதும், அமுல்தாரன் கேட்டா லவனை அடிக்கிறதும் முதலான சோராவாரிகள்[2] நடக்கிறதும், விறுத்தாசலம் சீர்மையிலே செல்லக்கனகராயப் பிள்ளை குமாரன் மூத்தவன் திட்டக்குடியிலே யிருந்து யெங்களுக்கு அனுகூல மாயிருந்து கொண்டு வந்தவனுக்கும் அவன் தம்பிக்கும் பிகாடிச்சு (விரோதம் ஏற்பட), அவன் தம்பி மமுதல்லி கானண்டைக்குப் போய்

[1] காசாக் கச்சேரி என்று பிள்ளை எழுதுவதை விட்டு விட்டார் என்பதைக் காண்க.
[2] ஜோராவாரி என்ற பார்சி சொல்லுக்குக் கொள்ளை என்பது பொருள்.

குமுக்குக் கூட்டிக் கொண்டு வந்து சண்டை போடுகிறான். அந்த திட்டக் குடி, யிருபதினாயிரம் முப்பதினாயிரம் ரூபா யெடுக்கிறது, அதை மமுதல்லி கான் கட்டிக் கொண்டு போறதாயிருக்கு(து); கொம்மாந்தாமுக்குச் சொல்லி கும்மக்கு கூட்டி சண்டை போட்டு அவனைத் துரத்தி விடச்சொன்னால், அதுக்கு உம்முடைய உத்திரவு வேணுமென்றும் அன்னூறு ரூபாய் குடுக்கச் சொல்லிக் கேழ்க்கிறா னென்றும் யிது முதலான சேதி யெல்லாம் விஸ்தாரமாய் சொன்னேன்.

இப்பால் சலாபத்து சங்கு சமாசார மென்ன வென்று கேட்டார். சலாபத்து சங்கு முசியே புசி வகையிராக்கள் பவுன்சுடனே கூட கிஷ்ணை நதி அண்டை போகச்சே முழுப் பிறவாகமாயி வந்த படியினாலே, முசியே புசி, சலாபத்து சங்கு வகையரா பெரிய மனுஷர்கள் ஆனையின் பேரிலே யேறி அக்கரைப் பட்டார்கள். மத்தப் பவுன்சு புட்டியின்[1] பேரிலே தாண்டச்சே, ரெண்டு புட்டி முழுகிப் போச்சுது யென்று வேலூருக்கு யெழுதி வந்தது யென்றும், யிந்த மட்டுக்கும் இரண்டாயிர சனம் மட்டுக்கும் சேதமாயிப் போச்சுது[2] யென்றும் யெழுதி வந்தது யென்றும், கோல்க்கொண்டை போய்ச் சேர்ந்து யிருப்பார்க ளென்றும் சொன்னேன். முசியே புசி, கிஷ்ணை நதி தாண்டினது நீர் சொன்னபடிக்கித் தான், யெழுதின (அளவுக்கு அவ்வளவு) மனுஷர் சேத மெழுத வில்லை யென்று (துரை) சொன்னார். எனக்கு வேலூரிலே யிருந்து யெழுதி வந்த சேதியிலே தெரியவந்த தென்று சொன்னேன்.

அப்பால், சாவனூர் பங்காபுரம் கில்லேதாரன் அப்துல் மசீது கானுடைய அண்ணன் மகன் கில்லேதாரனாயிருந்தான். அப்துல் மசீது கானும் முசபர் கானும் இரெண்டு பேரும் சேர்ந்து சினேகமாய்க் கோட்டைக்கு வந்து மேற்படி அண்ணன் மகனைக் காவல் பண்ணி, யிப்போ கில்லேதார்த்தனம் அப்துல் மசீது கான் பண்ணுகிறான், முசபர் கானும் கூட யிருக்கிறா னென்று சொன்னேன். அப்படியா வென்று கேட்டார். அந்த மட்டிலே அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தேன்.

### *1755 வருசம், சூலை மாசம், தேதி 13; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 1; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், உத்திர மேலூருக்கு முசியே வெறி (M. Very) போறானென்றும், அவன் பிறகே

[1] மூங்கில் பத்தைகளாலான தோணி.
[2] இரண்டு புட்டியிலே இரண்டாயிரம் பேர் இருந்திருக்க முடியாது.

சிறிது சொலுதாதுகளும் சிறிது சிப்பாயிகளும் கூடப் போறதும் அல்லாமல், இரெண்டு பீரங்கியும் கூடப் போகுதென்றும் யிங்கிறேசுக்காறர்களுக்கும் யிவர்களுக்கும் சத்தே கசந்தாப் போலே காணுதென்றும், அவர்களும் செங்கல்ப்பேட்டுக்(?) கோட்டை, கருங்குழிப் பாளையம் கோட்டை முதலான யிடங்களுக்கெல்லாம் சுலுதாதுகள், சிப்பாயிகள், மருந்துகள், குண்டுகள், சரன்சாமி வகையிரா தினிசுகளுடனே ஒவ்வொரு ஒபிசியாலும் அந்த யிடத்துக்கு வந்ததாய் ஏழெட்டு நாளாய் சேதி கேழ்க்கப்பட்டது. அந்தச் சாடைக்குச் சரியாய் யிவர்களும் போறதாய்க் காணுது. ஆனபடியினாலே முன்யே யேஷியம் யேதாகிலும் நடக்குமென்று யோசனை பண்ணிக் கொண்டேன்.

### *1755 வருசம், சூலை மாசம், தேதி 14; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 2; சோமவாரம்*

இத்தனாள் காலமே முசியே லெறி கோவர்ணதோர் அண்டைக்குப் போன விடத்திலே, முசியே லெறி உத்திரமேலூருக்குப் போக அனுப்பிவிச்சுக் கொண்டு போனார். அவர் பிறகே அறுபது சொலுதாதுகளும் சிப்பாயிகள் மருந்துகள் குண்டுகள் பீரங்கிகள் வகையிராவுடனே பயணம் போறேனென்று துரை அண்டைக்கு வந்து அனுப்பிவிச்சுக் கொண்டு போகச்சே நான் கூட யிருந்தேன். அப்போ என்னைப் பார்த்து, “உத்திரமேலுக்குப் போறேன், ஏதாகிலும் வேலையுண்டானால் நல்ல மனதுடனே செய்து அனுப்புகிறேன்,” யென்று சொன்னதுக்கு, உபசாரமாய்ச் சொல்லி, “சொலுதாதுகள் போறதேது?” யென்று கேட்டதுக்கு, மமுதல்லி கான் மனுஷன் மொகுலன் (ஒரு மொகலாயன்) கருங்குழிச் சீர்மையின் பேரிலே சண்டைக்கு வருகிறானென்று கபுறு வந்தது. சாமான் கூடப் போறோம். அவர்கள் முன்னே கை மிஞ்சினால் சண்டையாம்,” யென்றாப் போலேயும், யினி மேல் சண்டையே நடக்குமென்றாப் போலேயும் சொன்னான். அதிலே துரையவர்கள் வந்தார்கள். அவர்கள் கையிலே அனுப்பிவிச்சுக் கொண்டு நடந்தான். யிந்த சாடை பார்த்தால் கலாபிக்கும் (சண்டை நடக்கும்) போலே சொல்லுகிறார்கள். காரியத்திலே அறிய வேண்டியது.

### *1755 வருசம், சூலை மாசம், தேதி 17; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 5; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்குக் கோட்டைக்குப் போய் முசியே லெறி மேல் வீட்டின் பேரிலே தென்னண்டை பாரிசம், கிழக்கு மேற்கு நெடுஞ்சாலையிலே உலாத்திக் கொண்டிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்போ முசியே

புறுக்கினூது (என்கிற) கோன்சேலியேர், தனக்கு மலையாளத்து ராசாப்பய்யர்[1] யென்று முன் பேருடைய, யிப்போ பொருளாத்திரி[2] ராசா வென்கிறவன், அனுப்பின ஒலையை பிரான்சிலே யெழுதி வைத்துக் கொண்டு, முசியே லெறி கோவற்ணதோருக்குக் காண்பிச்சு, முசியே லெறி கோவற்ணதோருக்கு அனுப்பின ஒலை ஒன்றும் கையிலே கொடுத்தவுடனே, கோவற்ணதோர் (அதை) யென் கையிலே கொடுத்து, படித்துச் சொல்லச் சொன்னார். அந்த வேளை ஓலையைப் படிச்சுப் பார்த்துச் சமாச்சாரஞ் சொன்னேன். அந்த ஓலையிலே யெழுதியிருந்த படிக்கி ஓலை வாசகம்: "ஸ்ரீமது அருளி செய்கையால் யெழுதின (திரக்குதோ்) செனரால் (டைரக்டர் ஜெனரல்) முசியே லெறி கப்பித்தான் கண்டு காரியமென்ன வென்றால், கும்பினியார் அவர்களும் நாமும் ஆதிகால மார்பியா (முதலே) நடந்து வருகிற சினேகம் தமக்கு நன்றாய்த் தெரிஞ்சுயிருக்கிறதாமே; அதினாலே அதுக்குத் தப்பிதம் வராமல் படிக்கி என்றைக்கும் நடந்து வருகிறதாக நடத்திக் கொள்ளவும் வேணும். நம்மைக் கொண்டு தமக்கு யெந்த விதத்திலே உபகாரம் வேணுமோ அந்தப் படிக்கி யாதொரு காரியத்துக்கும் உபகார முண்டோக்குவோம். யிப்போது (தாம் புதுச்சேரி வந்தது) கேட்டு நமக்கு வெகு சந்தோஷமாச்சுது. கும்பினீரவர்கள் காரியத்துக்கும் நம்முடைய காரியத்துக்கும் காரியா காரியம் அறிஞ்சு நடத்துகிற மனுஷர் தம்மைப் போலே சினேகமுள்ள மனுஷர் ஒருத்தருமில்லை. அதினாலே காரியத்திலே தமக்கு அந்தரங்கமுள்ள மனுஷனாக ஒருத்தனை யிவ்விடத்துக்கு அனுப்பிவிச்சு, காரியம் மத்தச் சேதிகளெல்லாம் அனுகூலமாக நடத்துகிற படியாகத் திட்டப்படுத்திவிச்சு, யிவ்விடத்திலே வேண்டிய காரியத்துக்கு யெழுதி யனுப்பிவிக்கவேணும். முன் நம்முடைய கணபதியை அனுப்பிவிச்சு உத்தரவும் யெழுதி அனுப்பிவிச்சிருக்கிறதினாலே சகல சேதியும் அறிய வருமே. இந்த ஓலையைப் பார்த்து இதுக்கு பதிலுத்தரம் சீக்கிரம் யெழுதிக் கொடுத்து அனுப்பிவிக்க வேணும். மலையாள வருசம்[3] 730க்கு யுவ வருசம் வையாசி மாசம் தேதி 4 (1755 மே மாசம் 14 தேதி) யெழுதினதாகும்."

மேலே யெழுதியிருக்கிற ஓலை வாசகத்தைச் சொன்ன மாத்திரத்திலே, முசியே லுயேத்து (M. Louet)[4] யிந்த ராசாவை ராசா வென்று றெக்கோஞ்ஞேரிட (அங்கீகரிக்க முடியாது என்கிறார்.) ஏனென்றால் செறிக்கல் ராசா பட்டங்கட்டி ராசா வென்று பேர் கொடுத்த

---

[1] தவறு. போயனூர் ராசா (Raja of Boyenore).

[2] அல்ல கொலத்திரி, கொலஸ்ரீ என்று பின்னால் வருகிறது. கொச்சி அரசரின் வம்ச பெயர் இது. கோழிக்கோட்டு மன்னர் சாமூத்ரி (சாமூஸ்ரீ) என்றழைக்கப்பட்டது போல.

[3] இது கொல்லம் ஆண்டு. அது கி.பி. 824இல் துவங்கியது.

[4] இந்த லுயேத்து மாயே டைரக்டர்.

பிற்பாடு தான் (எல்லோரும்) ராசா வென்று அழைக்க வேணும். ஆனபடியினாலே, முசியே லுயேத்து (சொல்கிறபடி இவரை ராசா என்று அழைக்க முடியாது) யென்று, யிந்த ஒலை கொண்டு வந்த பிராமணனுடனே சொல்லச் சொன்னார். அந்தப்படிக்கி அவனுடனே சொன்னதற்கு அந்தப் பிராமணன் சொன்னது: செறிக்கல் ராசாவும் கொலஸ்ரீ நாட்டு ராசாவும் கூட மைத்த ராசாக்களும் அந்தப் பேருங் கொடுத்து அதுக்(கொத்த) மரியாதையும் நடப்பிக்கிறார்கள். முசியே லுயேத்து மாத்திரம் தான் ராசா வென்று அழைக்க... மாட்டமென்று யிருக்கிறாரென்று பின்னையும் உத்திரங்கள் சொன்னதுக்கு, முசியே தெபறேனும் முசியே புறுக்கினூதும், "முசியே லுயேத்து செய்கிறது உக்குத்த (உத்தமம்?) மல்லாத காரியம்; இந்த ராசா ஆதியிலே நமக்கு ஸ்தலங்கள் கொடுத்து, நம்முடைய நிமித்தியம் கொல்லத்து நாட்டு ராசாவுடனே பகைப்பட்டு சண்டை போட்டு, நமக்குச் சகல காரியத்துக்கும் சாதகமா யிருந்தவர்களை, நாமவர்களுக்குப் பின்னையும் ராசரீகம் முதலான அதிசெயமான செறெயசுக (சிறப்புகள்) ளெல்லாம் பண்ண வேண்டியதை விட்டுவிட்டு, (இப்படி) ... நடப்பிச்சுக் கொள்ளுகிறதுக்கு ... பாத்த பேருக்கும் கேட்ட பேருக்கும் (நுன்றாயிராது), சுவாமிக்கும் யேறாது," என்று சொல்ல வேண்டிய பேச்செல்லாம் சொன்னார்கள்.

அப்போ பொருளாத்திரி[1] ராசாவினுடைய மனுஷனாய் வந்த பிராமணன் சொன்ன சேதி, "எங்கள் ராசா சொல்லச் சொன்ன சேதி, மலையாளத்திலே உண்டாக்கப்பட்ட முள (மிளகு) கெல்லாம் ஒலாந்தாக்காறர், புடுத்திசுக்காறர், தரங்கம்பாடி முதலான வெள்ளைக்காறருக்கல்லோ பல பல விதமாய்ப் போய், உங்களுக்குக் கொஞ்சம் வருகிறது. நீங்களெங்களுக்கு அனுகூலமாயிருந்து நடப்பிச்சால் அவர்களொருத்தருக்கும் போக வொட்டாமல் முளகெல்லாம் உங்களுக்கு சேரப் பண்ணுவோம் யென்றும், பின்னையும் அனேக ராச காரியங்களுக் கெல்லாம் சாதகமா யிருப்போமென்றும் இது முதலான சேதி யெல்லாம் உங்களுக்குச் சொல்லச் சொன்னா," ரென்று சொன்னதுக்கு, "நாமின்றைக்குக் காகித மெழுதி மயேக்கி அனுப்பிவிச்சு அதுக்கு உத்தரம் அழைப்பிச்சுக் கொண்டு, உமக்கு மறு காகிதமும் குடுத்து அனுப்புகிறோம். அந்த மட்டுக்கும் நீரிங்கே யிரு," மென்று சொல்லி, யென்னை இந்த ஒலை வாசகம் சீக்கிறமத்துக்கு பிரான்சிலே யெழுதிவாரு மென்று சொன்னபடிக்கு, முசியே லோபோ மண்டைக்குப் போயி பிரான்சிலே எழுதி வந்து குடுத்துப் போட்டு, நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

---

[1] படியெடுத்தவர் எவ்வளவு அக்கறையின்றி மீண்டும் மீண்டும் தவறாக எழுதியுள்ளார்!

*1755 வருசம், சூலை மாசம், தேதி 19; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 7; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி கோவற்ணதோரண்டைக்குப் போன விடத்திலே, அவரும் முசியே காா்ப்பெந்(தேர்) (M. Carpentier) யென்கிற பீரங்கி மேஸ்திரியும் பின்னையும் ரெண்டு பேர் ஒபிசியால்மாரும் உலாத்திப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பால் முசியே சொல்மினியாக்கு (M. Solminiac) வந்தார். அப்போ நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அவர் யென்னைப் பார்த்து, பாண மருந்து பட்டடைக்கு, கூலிக்காறர்களை விடச் சொன்னால் யேன் விடவில்லை யென்று கேட்டார். நித்தம் கிராமங்களிலே யிருந்து மனுஷர் வரத் திட்டம் பண்ணினேன்; பாணப் பட்டடை சேவுகனும் அவர்கள் வராமல் போனால் போய்ப் பிடித்து வாறே னென்று (சொன்னான்). முப்பது கூலிக்காறர் வாறார்களென்று பீரங்கி மேஸ்திரி சொல்லி, யிறநூறு யிறநூத்தன்பது கூலிக்காறர்கள் வேணுமென்று சொன்னதுக்கு, என்னத்துக்கு யிறநூறும் இறநூத்தன்பதும் யென்று (துரை) கேட்டார். அவ்விடத்து வேலைக்கு வேணு மென்று சொன்னான். அவ்வளவு கவையில்லை யென்று சொன்னதுக்கு, அன்பது[1] பேராகிலும் வேணுமென்று சொன்னான். அவ்வளவு கவையில்லை, இருபத்தஞ்சு முப்பது பேர் போது மென்றாப் போலே கோபமாய்ச் சொல்லி, யென்னைப் பார்த்து யென்ன சமாச்சார மென்று கேடடார்.

மேஸ்தர் கிலெவிஸ் யென்கிறவன் (Mr. Clive) முன் சென்னப்பட்டணத்திலே ஒரு ஒபிசியாலாயிருந்து ஆற்காட்டுக் கோட்டையை வாங்கின போது, அப்போ பத்துப் பணம் அகப்பட்டுது. அப்பால் செங்கல்பட்டுக் கோட்டை, கோவளம் கோட்டை வகையரா வாங்கின போது ... ரெண்டு மூணு லட்சம் ரூபா அகப்பட்ட மாத்திரத்திலே, சீர்மைக்குப் போனவன், இப்போ தேவனாம்பட்டம் கோவற்ணதோர் தனத்துக்கு வாரானென்றும், சீர்மையிலே பிரான்சுக்காறரும் இங்கிலீசுக்காறரும் சண்டைக்கும் எத்தனமாயிருக்கிறாப் போலேயும், அதின் பேரிலே யிவ்விடத்துக்குச் சண்டைக் கப்பல் பத்து இருபது வருகிறாப் போலேயும், இவ்விடத்திலேயும் சண்டையுண்டா(கு) மென்றாப் போலேயும், அவர்களும் சொலுதாதுகள் சிப்பாய்கள் யிருக்கிறவர்களை அந்தந்த கெடி ஸ்தலம், கோட்டை ஸ்தலம் வகையிரா யிடங்களுக்கு சொலுதாது மருந்து குண்டுகள் வகையிரா சண்டை சரன்சாமி பண்ணி அனுப்புகிற சேதி முன்னாலேயும் சொல்லி யிருந்தேனே, அந்த யெத்தனத்தின் பேரிலே யிருக்கிறார்களென்று, யிது முதலான சேதி சொன்ன விடத்திலே, சீர்மையிலே சண்டை (ஏற்படும் நிலை)

[1] பணியாளர்களின் எண்ணிக்கையை அதிகரித்து எழுதி, பணம் திருடுவது அன்றே உண்டு.

உண்டாயிருக்கும் போலே காணுது. முசியே கிலேவிஸ் வாறது மெய்தான். யிருபது பத்துக் கப்பல் சண்டைக் கப்பல் வருமென்கிறது பொய் யென்றும், யிவ்வருஷத்துக்குச் சண்டை காண்பியாது, வருகிற வருஷத்துக் குண்டாகும் போலே காணுதென்றும்,[1] இது முதலான சேதி அவருஞ் சொல்லி, யிங்கிலீசுக்காறர்கள் பிடவை கூட்டுகிறார்களா வென்று கேட்டார். முன் வர்த்தகருக்குப் பதினாயிரம் விழுக்காடு (மொத்தம்) முப்பதினாயிரம் விராகன் குடுத்தார்கள். அது தவிர வேறேயில்லை யென்றாப் போலே கேழ்விப்பட்டேன். இனி மேலென்ன நடக்குமோ தெரியாது.

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி கொவற்ணதோரண்டையிலே போனவிடத்திலே யென்ன சமாச்சார மென்று கேட்டார். மமுதல்லி கானும் மானோசியப்பாவும் சீகாழி வந்து சேரந்தார்களென்றும், பவுன்சுகளை ஆற்காட்டுக்கு உடையார் பாளையத்து மார்க்கமாய் (முகம்மதலி) அனுப்பிப் போட்டு, தான் கொஞ்சம் பவுன்சுடனே பிறப்பட்டுத் தீவுக்கோட்டையின் பேரிலே கூடலூருக்கு வந்து, கூடலூரிலிருந்து ஆற்காட்டுக்குப் போய், ஆற்காட்டிலிருந்து சென்னப்பட்டணம் போறானென்றும் (சேதி வந்தது). ஆற்காட்டுக்குச் செவ்வையாய்ப் போய், அப்துல் வாபு (வகாபு) கான்... அங்கவங்கைக்கு வராமல் பிகாடித்துக் கொண்டு (செலுத்த வேண்டிய தொகையினைச் செலுத்தாமல்) யிருக்கிறான். அவனை மார்க்கப்படுத்தி வைக்க, அவன் சம்மதிக்கு வராமல் போனால் அவனை வாங்கி, அந்த ஸ்தலத்துக்கு வேறே (ஒரு ஆளை) வைக்கவு மிந்தப் படிக்கி யோசனை பண்ணிக் கொண்டு பிறப்பட்டு வருகிறானென்றும், சென்னப்பட்டணத்திலேயும் சண்டை சரன்சாமி நாளுக்கு நாள் உசந்து சேர்க்கிறார்களென்றும், பிறக்கிற மாசத்தையிலே சண்டை துவக்க ... சீமைக் கப்பல் சேதிக்கு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்களென்றும், யிப்படி முன் சொல்லிக் கொண்டு ... வருகிறார்களென்றும், யிப்படியாகச் சொல்லிக் கொள்ளுகிறது மல்லாமல் ரஸ்தும் நெல் அரிசி முதலான தின்பண்டங்களெல்லாம் சேற்க்கிறார் களென்றும் சொன்னதுக்கு, நாமும் அப்படித் தான் முஸ்தீபு பண்ணுகிறோம், பார்க்கிறதிலே தெரியாதா வென்று சொல்லி, யென்னவானாலும் நாளை தை மாசம் (ஜனவரி–பிப்ரவரி) முதல் வருகிற வருசத்திலே சண்டை துவங்கு மென்று சொன்னார். "நானுங்களுக்கு (முன்பு) ... (இந்த) மாசத்தையிலே சண்டை ஆரம்பமாகு மென்று (நான்) சொன்னதுக்கு, போ போ ஒருக்காலும்

---

[1] ஐரோப்பாவில் ஏழாண்டுப் போர் (1756–63) தொடங்குவதற்கான அறிகுறிகள் காணப்பட்டன. அதன் போது தான் கடைசி கர்னாடகப்போர் தமிழகத்தில் நடைபெற்று, பிரெஞ்சு ஆதிக்கத்தின் வீழ்ச்சியை ஆங்கிலேயர் உறுதிப் படுத்தினர்.

நடக்காது, பதினெட்டு மாசம் மோகறுப் பண்ணிப் போட்டு முசியே கோதே போயிருக்க சண்டை யேதென்று" சொன்னீர்கள். சீர்மையிலே சண்டை ஆரம்பித்தார்கள் யென்று ஒரு அவாசாவாகிலும் (வதந்தி) பிறந்து, பிரான்சுக்காறர்களும் இங்கிலீசுக்காறர்களும் சண்டை சரன்சாமி முஸ்தீப்பு பண்ணுகிறார்களே, மார்கழி மாசம் தை மாசம் பிலத்து, சண்டை விஸ்தரிச்சு, வருகிற வருஷம் விஸ்தாரமாயி நடக்குமென்று தோத்துது யென்று (நான்) சொன்னதுக்கு, "மெய்தான், ஏரோப்பா ராச்சியத்திலே அமெரிக்கு ராச்சியமென்று வடக்கேயிருக்குது. அந்த அமெரிக்கு ராச்சியம் நிமித்தியம் ரெண்டு ராச குமாராள் ஒருத்தருக்கொருத்தர் சண்டை துவக்கினபடியினாலே, இங்கிறேசு ராசா ஒருத்தருக்கு மத்தத்து ஏற்பட்டார், பிரான்சு ராசா ஒருத்தருக்கு மத்தத்து ஏற்பட்டார் (உதவ முற்பட்டார்). இந்தச் சாடையிலே யிப்போ எங்களுக்கும் அவர்களுக்கும் சண்டை அங்கே நடக்குது. அது யிவ்விடத்துக்கும் வரும் போலே தோத்துது."[1]

"அதினாலே அவர்களும் சண்டை சரன்சாமி யெல்லாம் முஸ்தீப்பு பண்ணுகிறார்கள். நாங்கள் முஸ்தீப்பு பண்ணுகிறோம். ஆவணி மாசம் பிறட்டாசி மாசத்தையிலே வருகிற கப்பலிலே விசிதப்பட யெழுதி வருமென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். ஆனபடியினாலே நாங்களும் கொத்தளங்களின் பேரிலே பீரங்கிகள் எல்லாம் முஸ்தீப்பு பண்ணுகிறதும் மத்த சாமான்கள் தயாறு பண்ணுகிறதும். அவர்களும் அப்படித் தான்," என்று சொன்னார். "நான் சொன்னதுக்கு யேஷிய முண்டு ... நமக்குச் சுபம் உசர வேணும் ஆனால் சண்டை யில்லாமல் ஒசருகிற தில்லை. யினிமேல் நமக்கு சுபம் ஒசருகிற நாளான படியினாலே சண்டையுங் கூட கண்டு வருகுது," யென்று (நான்) சொன்னதுக்கு, "நான் வந்தவுடனே நீர் சொன்ன பேச்சுக்கு அடையாளங் காணுது," யென்று சொல்லி, பிடவை சுறுக்கிலே முஸ்தீது பண்ண வேணும் (என்று சொன்னார்).

மறுபடி முசியே லெறி கோவற்ணதோர் அழைக்கப் போன விடத்திலே, அவர் ரெண்டோலை குடுத்து என்ன யெழுதி யிருக்கு தென்று பார்த்துச் சொல்லென்று சொன்னார். ஒரு ஓலையைப் பார்த்தால் ஸ்ரீரங்கம் கோயில் ஸ்தலத்தார் (கோயில் நிர்வாகி) பரமானந்தன் பேருக்கு யெழுதின வோலை (யென்று கண்டது) ... "உபய காவேரி தீரம்[2]

---

[1] லெறி கூறியதை பிள்ளை நன்கு புரிந்து கொள்ளவில்லை. பிரெஞ்சுக் கனடாவின் மீது ஆங்கிலோ–அமெரிக்கர் 1754இல் போர் தொடுத்து, அப்போர் 1763 வரை நீண்டது. 1754 இல் தொடங்கிய அவ்வமெரிக்கப் போர் தான் இங்கே சுட்டப்படுகிறது.

[2] கவேரியின் இரு கிளைகளுக்கு உட்பட்ட பிரதேசம் எந்த சீர்மையோடும் சேர்ந்ததல்ல, கோயிலுடையது என்று சொல்கிறார் போலும்.

சீர்மையுடனே சேர்ந்த சீர்மையுமல்ல, அந்த அமலுமல்ல. அப்படியிருக்க அந்த அமுலுக்குக் கவையென்ன? அப்படி யிருக்க அவர் அமுல் பண்ணக் காரியம்[1] யென்ன? அலாயிரதாவிருக்க (அப்படியிருக்க) அவர் அமுல் பண்ணினால் நாங்களிருக்கிறதில்லை, ... சம்மதியில்லை ... மன்னாரு பிள்ளை அமுல் பண்ணுகிறதுக்கு சம்மதி," யென்று யிப்படியாக யெழுதி அனுப்பியிருக்குது யென்று ஒரு ஓலை வாசகஞ் சொன்னேன்.

இரண்டாம் ஓலை தெலுங்கிலே யெழுதி யிருந்தது. பார்த்தால் அதிலே நந்திராசா அவர்கள் சம்புகேசுவரம் கோவிலுக்கு கிராமங்கள் விட்டதுக்குச் சாசன மெழுதியிருந்தது. அது யெழுத்து தெலுங்கும், பாஷை கன்னடமு மாயிருந்தது. அந்த வயணமும் முசியே கோவற்ணதோர் அவர்களுக்குச் சொன்னதுக்கு, பிரான்சிலே யெழுதி வரச் சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன்.

***[2](1755 வருசம், சூலை மாசம், தேதி 25; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 13; சுக்கிற வாரம்***

இன்று காலை எட்டு மணிக்கு நான் கவர்னர் முசே லெறி அவர்களிடம் போனேன். அங்கு நான் கேள்விப்பட்டது: பிம்ளிப் பட்டணத்திலிருந்து முசியே மெலோம் (M. Melon) ஒரு கடுதாசி துரை முசியே லெறி அவர்களுக்கும் எனக்கும் முசியே லெகு, முசியே லெபோம் வகையராக்களுக்கும் எழுதி, கட்டக்கிலோ அதை அடுத்த பட்டணத்திலோ ஒரு துறை கட்டுவதற்காகவும் மற்ற உபயோகத்துக்காகவும் ஐந்து நாழிகை விஸ்தாரமுள்ள ஓரிடத்துக்கான கவுலைப் பெற்றதாக எழுதி, அதன் தெலுங்கு நக்கல் ஒன்றையும் அனுப்பியிருந்தார். எனக்கும் துரை அவர்களுக்கும் எழுதின கடுதாசியிலே, தாம் அதனை உங்களுக்கு அனுப்பினோம் என்று தெரிவித்துள்ளார். தமக்கு வந்த கடுதாசியைத் துரை அவர்கள் படித்தார் என்று கேள்விப்பட்டேன்.)

***1755 வருசம், சூலை மாசம், தேதி 26; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 14; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே பண்டிகையான படியினாலே முசியே லெறி கோவற்ணதோர் கோயிலுக்கு கோன்சேல்க்காரர், ஒபிசியால்மார் வகையராக்களுடனே (போய்) வாடிக்கைப் படிக்கி பூசை கேட்டு மேல்

---

[1] இங்கு யார் குறிக்கப்படுகிறார் என்பது தெளிவாக வில்லை. பிரெஞ்சு அமுல்தாரர் ஒருவர் இருந்திருக்க வேண்டும்.

[2] இந்நாள் பதிவு தமிழ்ப் பிரதியில் விடுபட்டுள்ளது. எனவே ஆங்கிலத்தில் உள்ளபடி இங்கு பெயர்த்தெழுதப்படுகிறது.

வீட்டின் பேரிலே யேறினவுடனே, எல்லாரும் ஆசாரம் பண்ணின போது, நானும் போய் ஆசாரம் பண்ணினேன். அப்போ நான் கிட்டப்போய், முமுதல்லி கான் திரிச்சிராப்பள்ளி விட்டு சீகாழி வந்து சேர்ந்தவன் சீகாழியிலே தானே யிருக்கிறான். கொள்ளிடம் விஸ்தாரமாய் பிறவாகமாய் வருகிறபடியினாலே தீவுக்கோட்டையிலே நாலு படவும் முஸ்தீது பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அது தயாரானவுடனே கொள்ளிடத்துக்கு யிக்கரை வந்து தேவனாம்பட்டணம் கூடலூர் வந்து, ஆற்காட்டுக்குப் போறானென்று சொல்லுகிறார்கள். அவன் பிறகே அன்னூறு குதிரை யென்று (சொல்கிறார்கள், ஆனால்) முன்னூறு குதிரைகள் உண்டு; சிப்பாயிகள் இரண்டாயிரம் பாறுக்காற ரென்று (சொல்கிறார்கள், ஆனால்) ஆயிரத்துக் குண்டு; கற்னாட்டகத்தார் கூட்டமும் அம்மாத் திரமுண்டென்று சொல்லி, யிறநூறு சொலுதாதுகளும் ஒபிசியாலுமாரும் இரெண்டு பீரங்கியும் சென்னப்பட்டணம் விட்டுப் பிறப்பட்டு நேத்து ராத்திரி கூனிமேடு, காலாப்பேட்டுக்கு வந்து, இத்தனாள் யிது வழியாய் தேவனாம்பட்டணத்துப் போறார்கள். இவர்களும் (நம்மவர்களும்) மமுதல்லி கானை பேம்பு (மிரட்டல்) பண்ணவிடத்திலே, யிருக்கிறவர்களுக்கு புஷ்ட்டி காண்பிக்க (ஆங்கிலேயர்) போறார்கள் போலே காணுதென்று சொன்னேன்.

யிப்படிச் சொல்லிச் கொண்டிருக்கச்சே ஒரு அறுக்காறு பிராமணன், இங்கிலீசுக்காற கப்பித்தான் சொலுதாதுகளுக்கு யிசமானாக வருகிறானே, அவன் காகிதமொன்று கொண்டு வந்து குடுத்து, “சொலுதாதுகள் தேவனாம்பட்டணத்துக்குப் போறார்கள்; அவர்கள் கெவுனி யோரமாய் அல்லோ போக வேணும், நீங்களுத்தாரங் கொடுத்தா லப்படியே போறோம், யில்லா விட்டால் சுத்திப் போறோ மென்று கேழ்க்கச் சொன்னார்க”ளென்று சொன்னதுக்கு, (துரை) சுத்திப் போகச் சொல்ல, அவன் பிறப்பட்டுப் போனான். மறுபடி அவனை அழைப்பிச்சு கெவுனி ஓரமாய்த் தானே போகச் சொல்லி உத்தாரங் குடுத்தார். அப்பால் சொலுமினியாக்கு வந்து, சென்னப்பட்டணத்திலிருந்து சொலுதாது போறதேது என்று பேச்சுப் பேச்சாய் பேசி ஒரு சம்பிறமம் பண்ணிப் போட்டுப் போனான்.

அப்பால் முசியே லெபோமை (நான்) முசியே மிலோம் பணத்துக்குக் கண்டிச்சுக் கேட்டால், அவன் “நான் கடன் கொடுத்து போக மத்தது தாறே னென்று சொன்னான். அவன் சரக்கை நான் தழைஞ்சு (பிடித்து வைத்து) யிருக்க, நீர் யெப்படி யெடுத்துக் கொள்ளுவீர், யித்தனை நாளும் சரக்கு வித்து யிருக்குது, பணம் வந்தவுடனே தாறே” னென்று சொன்னான். “நீரிப்படி முன்னையே சொன்னால் பணத்தை வாங்கிப்

(போட்டிருப்பேன்); நீர் தாறோம் யென்று சொல்லி மோசம் பண்ணினீர். நல்லது போம்; யென் (பக்கம்) ஞாயமிருக்க உம்முடைய சினேகத்(தாலேயும்) உம்முடைய பேச்சிலேயும் மோசம் போனேன். யென் பணமானால் வருகு" தென்று சொல்லிப் போட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

*1755 வருசம், சூலை மாசம், தேதி 27; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 15; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி கோவர்ணதோர் அண்டையிலே போய் நான் ஆசாரம் பண்ணினேன். அப்பால் "மமுதல்லி கான் மனுஷன் (ஒருவனும்) ஒரு ஒபிசியாலும் அஞ்சு சொலுதாதுகளும் சிதம்பரத்திலே (போய்) கோட்டையிலே யிங்கிலீசுக்காறர் கொம்மாந்தாமைக் கண்டு பேசி அங்கேயிருக்கிறார்கள்; மமுதல்லி கான் கொள்ளிடத்துக்கு அக்கரையிலே யிருந்து யிக்கரைக்கு வருகிறதுக்கு வெள்ளம் அபரிமிதமாய் வருகிறதினாலே சலங்கு தயாறு பண்ணவும், வெள்ளம் வடியவும் பார்த்துக் கொண்டு வருகிறவனாயிருக்கிறான்," யென்று யெழுதி வந்தது யென்று (நான்) சொன்னதுக்கு, "சென்னப்பட்டணத்திலே யிருந்து நேத்து ராத்திரி யேழரை மணிக்கு யிறநூறு யிறநூத்தன்பது பேர் சொலுதாதுகளும் ஒபிசியாலுமார்களும் இரண்டு பீரங்கியும் தேவனாம்பட்டணத்துக்குப் போனார்களே, இவர்களேன் போறார்க," ளென்று (கேட்டார்); மமுதல்லி கான் வருகிறானே அவனுடனே கூட ஆற்காடு போய்ச் சேர்ந்து, அப்பா லென்ன யோசனையின் பேரிலே யிந்த வட்டத்துக்கு மமுதல்லி கான் வந்தானோ அந்தக் காரியத்துக்குப் புஷ்ட்டியாயிருக்கவும், பார்க்கிறவர்களுக்குப் பயம் தோத்தவும், யிந்தப்படியாக யோசனை பண்ணி யிந்த சொலுதாதுகளை அனுப்பினதாய்க் காணுதென்று சொன்னதுக்கு, மமுதல்லி கானிந்த வட்டத்துக்கு யேன் வந்தானென்று கேட்டார். யேதாகிலும் நூதனப் பிறயத்தனங்களொன்று மில்லாமல் அவன் வரத்தக்கது யில்லை, இங்கிலீசுக்காறர் அழைக்கத் தக்கது மில்லை யென்று சொன்னோம். எனக்கு மப்படித் தான் தோணுது தென்று (சொன்னார்).

யிதன் பேரிலே, முன் மமுதல்லி கான், சந்தா சாயபு செத்துப் போன பிற்பாடு கூட ராசவட்டம் விட்டு (பேச்சு வார்த்தை) நடப்பிச்ச காரியங்கள் முதலானதுகளும், முசியே துப்பிளேயிக்சு சம்மதி யில்லாமல் (ஒப்புக் கொள்ளாமல்) போனதும், முசியே துப்பிளேயிக்சு அபிப்பிராயம் (என்ன வென்றால்) தஞ்சாவூர் திரிச்சிராப்பள்ளிக் கோட்டைப் (களை) புதுச்சேரியின் கீழே சத்தியாயாக்கி (கொண்டு வந்து), அப்பால் மயிசூரைக் கூட (அப்படியே) ஆக்கிக் கொண்டு, கிஷ்ணைக்கி யிப்புறம் (எல்லா

விடங்களையும்) தம்முடைய சுவாதீனமாகப் பண்ணிக் கொள்ள வேணுமென்கிற நினைப்புடனே யிருந்ததெல்லாம் (சொல்லி), முசே கொதே வராமல் பவுன்சு மாத்திரம் வந்திருந்தால் அந்தப்படி நடந்தேறிப் போ (யிருக்கு) மென்று, இது முதலான சேதி அவர் கேழ்க்க, நான் சொல்ல, ஒன்றரை மணி நேரம் பேசி, அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போனேன். பனிரெண்டு மணி நேரமானபடியினாலே கப்பல் கப்பித்தான் வீட்டுக்கு அவர் விருந்துக்குப் போனார்.

# ஆகஸ்ட் 1755

### *1755 வருசம், ஆகஸ்ட்டு மாசம், தேதி 4; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 23; சோமவாரம்*

இத்தனாள் காலமே யேழு மணிக்கி முசியே லெறி கோவர்ண தோரண்டைக்குப் போனவிடத்திலே, முசே பொலோ கண்டு, "நாலு நாள் நீர் சரீரம் சுவஸ்தமில்லை யென்று வீட்டிலே யிருந்ததுக்கு முசியே லெறி கோவர்ணதோர் அவர்கள் தம்முடைய காரியங் கவை யெல்லாம் கெட்டுப் போச்சென்று யெங்களுடனே யெல்லாம் முறைப்பட்டார். யிப்படியிருக்கலாமா?" ... வென்று கேட்டதுக்கு, "சரீரம் சுவஸ்தமில்லாம லிருந்தால் யெப்படி வாறது? அப்பாலும், நாலு நாளே யல்லாமல் விசேஷிச்சு யில்லை," யென்று சொன்னதுக்கு, முசியே லெறி இப்படி கூக்குரலாய்ப் போடுகிறாறென்று சொல்லி, இனி மேலப்படி செய்ய வாண்டா மென்று சொன்னார். அதிலே, முசியே லெறி உடம்பு குளித்து உடுத்திக் கொண்டு வெளியே வந்தாரென்று சாடை தெரிந்து, நான் போய் ஆசாரம் பண்ணிக் கொண்டேன். மமுதல்லி கான் திருவேந்திபுரம் மேட்டிலே யிருக்கிறவனை முந்தாம் நாள் மேஸ்தர் யிஷ்ட்டார்க்கு யிருபத்தோரு பொன் ரூபா கொண்டு போய் நதிர் வைத்துக் கண்டதும், அதுக்கு அவன் அதை யெடாமல் மறுபடி குடுத்து, வீட்டு யெதிரே வந்து மரியாதை பண்ணி அழைத்துப் போய் உள்க்கார வைத்துக் கொண்டு யிருபத்தோரு பீரங்கி சுட்டு யிஷ்ட்ட லாபமாய்ப் பேசியிருந்து, பிறப்படச்சே பாக்கு வெத்திலை மாத்திரங் குடுத்து இருபத்தோரு பீரங்கி சுட்டு அனுப்பி விச்சானென்றும், யிது முதலான சேதி சொல்ல, சீர்மைக் கப்பல் கப்பித்தான் வந்தபடியினாலே நான் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன்.

### *1755 வருசம், ஆகஸ்டு மாசம், தேதி 5; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 24; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்கு முசியே லெறி கொவற்ணதோர் அவர்கள் அண்டைக்குப் போயாசாரம் பண்ணின விடத்திலே அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பால் அவரவர் விஸ்தாரமாய் வந்து கண்டு பேசினார்கள். அப்போ சமயமில்லை ஆனதினாலே யிப்பறம் வந்து, யென்னை ஒன்பது மணி வேளைக்கு அழைத்து, "சலாபத்து சங்கு அண்டையி லிருந்து ... மன்சுபா பற்வானா, சிறொப்பா முதலானது கொண்டு வந்து ஒரு மன்சுபேதாரன் வருகுறான், அதுக்கு யெப்படி நடக்க வேணும்," வென்று கேட்டார். "வடக்கு வாசலுக்கு வெளியே கூடாரம் போட்டு, சிப்பாயிகள் சொலுதாதுகள் யெத்தினை

பேரிருக்கிறார்களோ அத்தனை பேர்களும் (கவர்னர்) வீடு முதற்கொண்டு வரிசையாய் வைத்து, நீங்கள் நவபோத்து, மாயி (மீன் கொடி), ... பிறுதுகளும் (உடன் வர), பல்லக்கும் பேரிலே பிறப்பட்டு, சகல கோன்சேலியேர் வகையிராக்களையும் சமஸ்தமான பேர்க(ளையும்) வாகனத்தின் பேரிலே வரத்தக்கவர்க ளெல்லாரும் வாகனங்கள் பேரிலே யேறிக் கொண்டு, உமக்குப் பிறகே வர, நட்டுமுட்டு, நாடக சாலை, சங்கீத வாத்தியங்கள் வகையிரா முன் நடக்க, மயில் பிஞ்சம், சவிரி, பாவாடை (துணி விரித்து) நீரும் பிறப்பட்டுப் போய், கெவுனி வாசலுக் கப்பிறம் போட்டிருக்கிற கூடாரத்திலே யிறங்கி உளுக்கார்ந்தவுடனே, அடுத்து குண்டுசாலை வண்ணாந்துறை(யிலே) யிறங்கி யிருக்கிற மன்சுபாதாரன் அண்டைக்கு மேளதாளத்துடனே ரெண்டு கோன்சேலியேர்களும் நானுங் கூடப் போய் அவர்களை அழைத்துக் கொண்டு, அந்தப் பெகுமானமும் பிடிச்சுக் கொண்டு, கூடாரத்துக்கு வந்தவுடனே எழுந்திருந்து வந்த மன்சுபாதாரனைக் கட்டிக் கொண்டு, அவன் குடுக்கிற சீரொப்பாவையும் பர்வானாவையும் வாங்கிக் கொள்ளச்சே, யிருபத்தோரு பீரங்கி அடுத்த சுத்துக்கோட்டை அலங்கத்திலே போடுகிறது. அப்பிறம் யிஷ்ட்ட லாபமாய் சலாபத்து சங்குவினுடைய குசலப்பிறசினைக் கேட்க, அப்பால் அவரவரும் உங்களை அப்படிக் கேழ்ப்பார். அதையெல்லாம் ... நடப்பிச்சு, துராய், சர்பேச்சு வந்ததைத் தொப்பியிலே (பொருத்தி), பதக்கம் வந்ததைக் கழுத்திலே போட்டுக் கொள்ளுகிறது. அரையிலே நடுகட்டு (பார்சியில், கும்மர்பந்தி) மாத்திரம் கட்டிக்கொண்டு மத்ததைப் பல்லக்கிலே வைத்துக் கொண்டு எழுந்திருக்கச்சே யிருபத்தோரு பீரங்கி போடுகிறது.

"அப்பால் வாசல்ப்படி கடந்து உம்முடைய வீட்டிலே நுழையச்சே யிருபத்தோரு பீரங்கி போடுகிறது. போய் உளுக்கார்ந்தவுடனே யிருபத்தோரு பீரங்கி போட்டு, எல்லாரும் சின்னதுரை முதலான கோன்சேலியேர் வகையிரா சமஸ்தமான பேர்களும் உமக்கு நசர் வைத்து பாக்கு வெத்தலை பன்னீர் குடுத்து, வந்த மன்சுபேதாரனுக்கு விடுதிவிட்டு, முன்பின் குடுக்கிற திட்டப்படிக்குக் குடுக்கச் சொல்லி அனுப்புகிறது. அப்பால் யுக்த்த மெப்படியோ அப்படி நடத்த வேண்டியது. மன்சுபை பேர் புதுசாய் வருகிற படியினாலே அன்றைய தினம் பண்டிகையாய்க் கொண்டாடி, ராத்திரி பாண வித்தை, விளக்குகள் வைத்து சம்பிறமம் பண்ண வேண்டியது. மத்தியானம் சாப்பிடச்சே பீரங்கி போடுகிறது முதலான சம்பிறமங்களை நடப்பிக்க வேண்டிய," தென்று (நான்) யெழுதினதைச் (சொன்னேன்); யிதை விஸ்தரிச்சுச் சொன்னதுக்கு, அப்படித் தான் செய்யவேண்டியதென்று சொல்லி, "முசியே கொதே யிப்படி நடப்பிச்சுக் கொண்டாரா," யென்று கேட்டார். முசியே கொதே நாளையிலே வந்ததில்லை, நடப்பிச்சுக் கொண்டதுமில்லை. முசியே துப்பிளேயிக்சு நாளையிலே சகல சம்பிறமங்கள் நடந்தது," (என்றேன்).

***1755 வருசம், அகொஸ்து மாசம், தேதி 8; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 27; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலமே முசியே லெறி கொவர்ணதோர் அவர்களை ஆசாரம் பண்ணி, மமுதல்லி கான் திருவேந்திபுரம் மேட்டு மேலே கூடாரம் போட்டு யிறங்கி யிருந்தவன் முந்தாம் நாள் ராத்திரி மழை விஸ்தாரமாய்ப் பேஞ்சதினாலே, கூடாரத்துக்குள்ளே வெள்ளம் வந்து ஓடினதினாலே, சவிக்கி மனை (சவுக் இருந்த இடம்) மேலே யிருந்து கொண்டு, பொழுதைப் போக்கி, நேத்திய தினம் கூடாரம் பின்னையும் சத்தே ஒரு நாழிகைக்கு மேற்கே மேல்பிறமாய் மேட்டின் பேரிலே போட்டுக் கொண்டிருக்கிறானென்றும், யின்றைய தினம் நாளைய தினம் கூச்சுப்பண்ணி ஆற்காட்டுக்குப் போறார்களென்றும் கபுறு சொல்லிக் கொள்ளுகிறதாகவும் சேதி வந்து தென்று சென்(னேன்).

கடப்பை அப்துல் அமீது கான் பாதர் காகிதம் வந்தது. அந்தக் காகிதத்தைக் குடுத்து, கடப்பை நவாபு எங்கே யிருக்கிறார் களென்று ஆற்காறுக்கள் (அறுக்காறுகள்) சொன்னார்களென்று கேட்டார். வந்த ஆற்காறர்களை (க் கேட்டதற்கு), யிப்பறம் கடப்பை நத்தம் கட்டத்துக்கு[1] அப்பிறம் பவுன்கூடனே இறங்கி யிருக்கிறாரென்றும், அவ்விடத்திலே சிறிது பாளையக்காரர் பெலத்திருந்தவர்கள் கையில் பணம் வாங்கி, அவர்களைக் காவல் வைத்தது மல்லாமல், யின்னஞ் சிறிது பேர்கள் கையில் வாங்க யெத்தனமாயிருக்கிறாரென்றும், வேலூரான் (வேலூர் கில்லேதார்) வசத்திலே நாசர் சங்கு வந்து அந்தப் பிராந்தியத்திலே சிறிது பீரங்கிகளைப் போட்டு, அவர் ... (காலமாகிப் போன படியினாலே), மறுபடி யிதாயித்து மொய்தின் கானும் சண்டையாயி அங்கே விழுந்து போன படியினாலே, அப்பால் சலாபத்து சங்குவைப் பட்டங்கட்டி, அவர்கள் அயிதராபாத்துக்குப் போற அவசரத்திலே போட்டுப் போன பீரங்கிகளை வேலூரான் சேத்து வைத்தான். அதைக் குடுக்கச் சொல்லி கடப்பை நபாபு எழுதியனுப்பிச்சாப் போலேயும், நல்லது தாரோம் யென்று எடுத்துப் போகச் சொன்னதாகவும், சேதி சொன்னார்கள் யென்று சொன(னேன்).

முசபர் கான் சாவனூர்—பங்காபுரம் அதிலே யிருந்தவன் யிப்போ எங்கேயிருக்கிறானென்று கேட்(டார்); யிப்போவும் அவ்விடத்திலே தானே யிருக்கிற சேதியாய்க் கேழ்விப்பட்(டேன்); அதுவுமல்லாமல், முராரி ராயன் அண்டைக்கு ... காடுதி கோவிந்தராவை அனுப்பிவிச்சு (அவருடன் சேர்ந்து கொள்வதாக)ப் பேச்சு வார்த்தை நடப்பித்த விடத்திலே, முராரி ராயன் சம்மதிச்சு ஒரு சிரொப்பா ஆனை வகையிரா வெகுமானமும்

---

[1] "கேலாருக்கும் கடப்பை நத்தம் கோட்டைக்கும் இடையில்" என்று ஆங்கிலத்தில் உள்ளது. கோட்டை என்பதைத் தான் கட்டம் என்று படியெடுத்தோர் எழுதியுள்ளனர் போலும்.

கொடுத்து அனுப்பி, அன்பதினாயிரம் ரூபாயும் சிலவுக்குக் கொடுத்து அனுப்பினதாகவும், முசபர் கான் இனிமேல் முராரி ராயனண்டையிலே சேவிக்க (சேவை செய்ய) வருகிறானென்றும், இப்படியாகச் சேதி யெழுதி வந்தது.

யிதல்லாமல், முசபர் கான் பெண் சாதி பிள்ளைகள் யிவ்விடம் விட்டு, முசியே பெடுத்தல்மீ அமுலிலே (பதவிக் காலத்திலே) போனவர்களை, போளூரிலே ... ஒரு மாசம் (இருந்து) முசபர் கானண்டைக்குப் போகவேணுமென்று பிறப்பட்டவர்களை, அப்துல் வாபு (வகாபு) கான் பிடித்து வரச் (சொன்னான்); அவர்கள் வேலூர் கோட்டையிலே போயிருந்(தார்கள்); முசபர் கான் காகிதமும் முராரி ராயன் காகிதமும் வேலூர் கில்லேதாரன் முறுத்திசா அல்லி கான் பேருக்கு வந்து அவர்களைப் பயணம் பண்ணி முசபர் கானண்டைக்கு அனுப்பிவிச்சதாகச் சேதி சொன்னார்களென்று (சொன்னேன்).

(அப்போது) உசேன் மாவுத்தன் வந்து சலாம் பண்ணி பிரான்சிலே யெழுதின காகிதமொன்று குடுத்தான். அதை வாங்கிக் கொண்டு அவனைப் பார்த்து (துரை) சொன்னது : "அசனுதி (அசனுதீன்) கான் பேரிலே வரவேண்டிய பணத்துக்கு சந்தா சாயபு அசனுதி கானைக் கேழ்க்கக் கவையில்லை யென்றும், அந்தப் பணத்துக்கு நாம் சம்மதி பண்ணி (விட்டோ) மென்றும் ஒரு காகித மெழுதி உனக்குக் குடுத்திருக்(கிறான்); (அப்பால்) சந்தா சாயபு செத்துப் போனபடியினாலே, அதை மறைத்து வைத்து, யிப்போ பணம் கேழ்க்கிரா னென்றும், அவர்கள் பஞ்சாயத்திலே போட்டால் நாங்கள் தீத்துக் கொள்ளுகிறோமென்று பஞ்சாயத்திலே விடச் சொல்லி அவர்கள் கேழ்க்கிறார்கள்," யென்று முசியே கோவர்ணதோர் சொன்(னார்). உசேன் மாவுத்தன், "பஞ்சாறுாடி (பஞ்சாயத்துப்) பத்திரம் யென் கையிலிருக்கச்சே நான் மத்தியஸ்த்துக்குப் போக வேண்டியதென்ன? சந்தா சாயபு மாரிபத்தாக ஆகட்டும், பின்னை ஒரு விதத்திலே ஆகிலும் யெனக்குப் பணஞ் சேர்த்து விட்டதுக்கு ஒரு சாதகம் (சான்று) காண்பித்தால் ஒத்துக் கொள்ளுகிரோ," மென்று சொன்(னான்); முசியே தெபொசேத்து (M. du Bausset) வந்து யிப்படி (த்தான்) சொல்லுகிறானென்று சொல்லிப் போட்டு, உசேன் மாவுத்தன் கொடுத்த காகிதத்தைக் கையிலே பிடித்துக் கொண்டு படித்துக் கொண்டு உள்ளே காம்பிராவிலே போனவர் மறுபடி (என்னை) அழைக்கவில்லை[1]

---

[1] பல்வேறு செய்திகளையும் வழக்கம் போல் பூட்டிப் பிணைத்து இங்கும் பிள்ளை எழுதியிருப்பதை, பிளவுபடுத்தி எழுத நேரிட்டுள்ளது.

இத்தனாள் மத்தியானம் வந்த கபுறு: மமுதல்லி கான் திருவந்திபுரத்துக்குப் பக்கமாய்ப் போயிறங்கி யிருந்த வனண்டைக்குப் போய், தேவனாம்பட்டணம் கோவர்ணதோர் மேஸ்தர் ஸ்டார்க்கு (Mr. Starke) நேத்து 26 தேதி பகலைக்கு மேலாக நாலு மணிக்கி வந்து, ஒருத்தருக்கொருதர் ஆலிங்கனம் பண்ணி, ஆசாரம் பண்ணிக் கொண்டு ஒன்றரை நாழிகை இரண்டு நாழிகை தேச காலம் பேசி யிருந்து, மமுதல்லி கானை அப்பால் பயணம் போகச் சொல்லி அம்பகம் (வழியனுப்பு) பண்ணி, தானும் அனுப்பிவிச்சுக் கொண்டு மஞ்சக்குப்பம் தோட்டத்துக்கு வந்துவிட்டார்; அப்பால் தீவட்டிகள் கொளுத்திக் கொண்டு ஆற்காட்டுக்குப் போகப் பிறயாணமாய் தன் குடும்ப சமேதராய் திருவேந்திபுரம் ஆத்துக்கு அக்கரையிலே போயிறங்கினானென்று, பாகூரிலே யிருக்கின்ற பார்பத்தியக்காரன் (கண்காணி போன்றவன்) நேத்து நடந்த சமாச்சாரம் யெழுதி அனுப்பினதை பகலைக்கு மேலாக வாகிலும் நாளையாகிலும் காலத்தாலே கோவர்ணதோரவர்களுக்கு அறிக்கை பண்ண வேண்டியது.

இத்தனாள் பதினொன்றரை மணிக்கு முசியே பெடுத்தல்மீ போய் கோவர்ணதோருடனே, புதுசாயிருக்கிற நயினார், வூரிலே அவரவர்களை அழைப்பிக்கிறதும், தான் தானே கட்டுகிறதும் அடிக்கிறதும், யிருபது முப்பது வாங்குறதும், துரத்தி விடுகுறதும் யிப்படிப்பட்ட சோறாவாரி பண்ணுகிறது மிதமில்லை யென்று சிறிது சாதகங்களையுஞ் (சான்றுகள்) சொல்லி, யிவனை சறுவாத்துமனாக வைக்கப் போகாதென்று சொன்னதின் பேரிலே, புதுசாய் வைத்த நல்லப்ப நயினாரைத் தகீர் பண்ணி (நீக்கி) காவலிலே வைக்கச் சொல்லி, பழய பெரியண்ண நயினாருக்கு உத்தியோகமும் கொடுத்து, மூணு கெசம் சகலாத்து பெகுமானமும் கொடுத்து அனுப்பிவிக்க, அவன் மேளதாளத்துடனே பிறப்பட்டு முசியே பெடுத்தல்மீ வீட்டுக்கு வந்து அவருக்கு யிருபத்தோரு விராகனும், அவர் பெண்சாதிக்குப் பதினோரு விராகனும், அவர் குமாரத்திக்குப் பத்து விராகனும் நசர் வைத்துக் கண்டவுடனே, உனக்கு உத்தியோகங் குடுத்தார்களே யினி மேல் புத்தி உண்டாய் நடவுங்கோள், புதுசாய் வந்த நல்லப்ப நயினாரைப் போலே ஊரிலே அனியாயமாய்ச் செய்து அதிகாரஸ்தர்களுடனே சொல்லாமல் யாதொரு காரியஞ் செய்ய வேண்டா மென்றும், புத்தியாய் நடந்து கொள்ளச் சொல்லியும்... ஒரு சீரொப்பா வொன்று குடுத்து அனுப்ப, அங்கே யிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு, அந்த சம்பிறமத்துடனே நம்முடைய வீட்டுக்கு வந்து, யெனக்குப் பதினோரு வராகனும் அண்ணாசாமிக்கு அஞ்சு விராகனும் அண்ணாசாமி தாயாருக்கு அஞ்சு விராகனும் நதிர் வைத்துக் கண்டு,

"பழய படிக்கி யிந்தப் பட்டணத்துக் காவல்[1] முசியே லெறி கோவர்ணதோர் யென் ஆதீனம் பண்ணினார். தாங்கள் அபிமானம் வைத்து வாங்கிக் கொடுத்தபடியினாலே எனக்கு யிந்தக் காவல் உத்தியோகம் மறுபடி வந்த," தென்று உபசாரமாய் பெகுசாய்ச் சொல்லி, காலிலே விழுந்து, "நானும் (உம்) முடைய வீட்டு வேலைக்காரன், தயவு பண்ணி நடப்பிச்சுக் கொண்டு வாருங்கோ," ளென்று சொன்னதுக்கு "பட்டணத்து செனங்களுக்கு அனுகூலமாய் நடந்து கொள்ளுகிறதிலே யிருக்குது உத்தியோகம், (அது) போறதும் வாறதும் ஆன படியினாலே செனங்களுக்கு உபகாரமாய் நடந்து கொண்டால் உமக்கு உத்தியோகம் சாசுவத்தாய் நடக்கு," மென்று சொ(ன்னேன்). "(முன்னே) தளவாய்த் தனம் வீரா நாயக்கன் குமாரன் ராசகோபால நாயக்கனுக்குக் குடுக்கச் சொல்ல, நான் யென் மகனையும் ராசகோபாலனையும் அந்த உத்தியோகத்துக்கு (வைக்கச் சொல்ல) அந்தப் படிக்கி நீங்களும் திட்டம் பண்ணினீர்களே! அந்தப் படிக்கி உத்திரோத்திரமாய் நடக்க ஆசீர்வாதம் பண்ணி, பாக்கு வெத்திலை குடுத்தால் சுகப்பட்டு யிருப்பார்கள்," யென்று சொல்ல, அந்தப்படிக்குப் பெரியண்ண நயினாருக்கு ஒரு சீரோப்பாவும், மேல்படி குமார(னுக்கும்) ராசகோபால நாயக்கனுக்கும் ரெண்டு பேர்களுக்கும் சகலாத்தும் குடுத்து அனுப்பிவிச்சேன். அவர்களும் அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்கள்.

### *1755 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 10; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 29; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே யேழரை மணிக்கு கோட்டைக்கு முசியே லெறி கோவற்ணதோரிடத்துக்குப் போன விடத்திலே கோவில் பூசைக்குப் போகத் தக்கதாக எத்தனமாயிருந்தார். அப்போ நான் போயாசாரம் பண்ணினேன். அவர் யென்ன சேதி யென்று கேட்டார். "மமுதல்லி கான் தேவனாம்பட்டணம் திருவந்திபுரம் முந்தாம் நாள் காலத்தாலே விட்டு, திருவீதி சமீபத்திலே போயிறங்கினான். நேத்து காலத்தாலே அவ்விடம் விட்டு எங்கே போயிறங்குவானோ? சேதி வந்த பிறபாடு சொல்லுகிறே," னென்று சொன்னேன்.

தூக்கித் தெக்கித்தேன்[2] (Due d' Acquitaine) யென்கிற கப்பல் வந்து துறையிலே வைத்துப் பிடித்து ஏழு பீரங்கி நாட்டுக் கப்பல் சட்டமாய்ப் போட்டான். கரையிலேயும் போட்டான். யிந்தக் கப்பல் சீர்மை விட்டுவந்து மசுக்கரை பிடித்து வந்த கப்பல். யிந்தக் கப்பல் கப்பித்தான்

---

[1] இதுதான் நயினாரின் உத்தியோகம். இப்படிக் கம்பெனி உத்தியோகத்திலே இருந்த பலரும் நிறையப் பணம் சம்பாதித்தனர்.

[2] இக்கப்பலின் பெயர் பலவிதமாக எழுதப்பட்டுள்ளது.

பேர் முசியே ... யிந்தக் கப்பல் கப்பித்தான் யிறங்கிவரு வானென்று கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வருவோமென்று கோன்சேல்க்காறர் வகையிராக்கள், ஒபிசியால்மார் வகையிராக்களுடனே மேல் வீட்டின் பேரிலே யேறின பிற்பாடு, தூக்கு தெக்கித்தேன் கப்பல் கப்பித்தான் யிறங்கி, சீர்மைக் காகிதம் எல்லாம் கொண்டு வந்து துரையவர்களுக்குக் குடுத்துக் கண்டு பேசினான். அதிலே யெனக்கும் முசியே துவெலார் (M. Duvalaer) பாரீஸிலேயிருந்து யிவ்வருஷம் பிப்றேயி மாசம் 10 தேதி அனுப்பின காகிதம் ஒன்று வந்தது. அதை துரை கொடுக்க வாங்கிக்கொண்டு, யென் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன். முன்பு பொறுப்போம் (Bourbon) கப்பலிலே ஒரு காகிதம் வந்தது. லோந்திருவிலே (லண்டன்) யிருந்து போன வருசம் சூலை மாசம் யெழுதினது (அது) இந்தக் கப்பலிலே வந்த வெள்ளி ... சகலாத்து[1],

மறுபடி முசியே லெறி கொவற்ணதோர் அழைச்சனுப்பிவிச்சு தேவனாம்பட்டணம் கோவற்ணதோர் காகிதம் அனுப்பி, "மமுதல்லி கான் லசுக்கர் (ராணுவம்) ஆற்காட்டுக்குப் போகுது, வழியிலே ரஸ்துக்கள் வேண்டியிரு(க்குது); அவர் கையிலே பணம் வாங்கிக் கொண்டு குடுக்கச் சொல்லி அமுல்தாறருக்கு யெழுதி யனுப்பச்," சொன்னார். "அந்தப்படி யெழுதி அனுப்புகிறோம்," யென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு வந்து, கல்லுகுறிச்சி, திருவீதி, விழுப்புறம், செஞ்சி வகையிரா சீமைகள் அமுல்தாறர்களுக்கு எழுதி அனுப்பிவிச்சேன்.

### *1755 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 11; யுவ வருசம், ஆடி மாசம், தேதி 30; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கிக் கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவற்ணதோரைக் கண்டு ஆசாரம் பண்ணி, "மமுதல்லி கான் கிராமம் யென்கிற கிராமத்தண்டையிலே யிறங்கியிருந்து, நேத்தய தினம் 10 தேதி திருக்கோவிலூர் போய்ச் சேருவார்களென்று அந்தக் கிராம அமுல்தாரன் எழுதி அனுப்பினான். இது அல்லாமல் மமுதல்லி கானுடனே கூடப் போற பவுன்சு சொலுதாதுகள், சிப்பாயிகள், குதிரைச் சுவார்கள், பத்துப் பனிரெண்டு பீரங்கி வகையரா சாமானுடனே போறவர்கள், வழிகளிலே யெங்கும் சிலாறுகள் பிறாதுகளில்லாமல், சோறாவாரியில்லாமல், போறதுமல்லாமல் யெங்கே யிறங்கினாலங்கே அமுல்தாரனண்டைக்கு உங்கள் கிராமங்களிலே நாங்கள் சோறாவாரியும் பண்ணயில்லை, பயிர்கள் பேரிலே நடவாமல் போறோம், அப்பவும் யெங்களைத் தொட்டுச் சேதம் வந்து தென்று பிராது பண்ணப் போறீர்கள், யெங்களுக்கு வேணு மென்ற வஸ்துக்களைக் கிறையத்துக்கு வாங்கிக்

[1] மூலத்திலேயே இப்பகுதி கிழிந்து அல்லது அழிந்திருக்க வேண்டும்.

கொள்ளுகிறோமென்று கடைக்காறர்களுக்குக் கூட ... வைக்கல் விறகுக்குக் கூட உள்ள கிறையம் கையிலே கொடுத்து வாங்கிக் கொண்டு போனார்கள். தண்டு போனால் யித்தனை அடங்கி ஒடுங்கிப் போகமாட்டாது. ஆனபடியினாலே யிவர்கள் போறது மெத்த ஆச்சரியமாயிருக்கு தென்று அந்த வட்டங்களிலே யிருக்கிறவர்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அவன் லசுக்கர் வந்து ஆக்கினைக்குள்ளே அடங்கியிருக்கிறது," யென்று சொன்(னேன்). "நான் நேத்து சொன்னபடிக்கி யெழுதி அனுப்பிவிச்சோம் என்று சொன்னீரே, அந்தப்படி யெழுதி அனுப்பிவிச்சீரா? மமுதல்லி கான் லசுக்கருக்கு வேணுமென்று குடுக்கச் சொல்லி யெழுதியனுப்பினீயா?" வென்று கோவற்ணதோர் கேட்டதுக்கு, "நேத்து தானே யெழுதி அனுப்பினேன். இந்த ஒடுதி போறதுக்கு முன்னே தானே அங்கங்கே அப்படி நடந்துது," (என்றேன்).

கடப்பை நபாபு அப்துல் அமீது கான் மனுஷர் சீனிவாச ராயர் வகையிராக்கள் வந்து, தாங்கள் வந்து இரெண்டு மாதமாச்சுது, "எங்கள் நபாபுக்கு உங்கள் வைக்கீல் அனுப்பிவிச்சால் சிதம்பரம் சீர்மை தீத்துக் கொடுக்கிறோமென்று முசே கொதே எழுதி அனுப்பினதினாலே நாங்கள் வந்தோம். இப்போது அது காரியம் தயவு பண்ணிக் குடுக்க வேணுமென்றும், தங்கள் நவாபு முலவாயல் கொளத்திலே வந்து பவுன்சுடனே யிருக்கிறா," ரென்றும், யிது முதலான சேதி யெழுதி அற்சி (விண்ணப்பம்) யொன்று பிரான்செழுத்திலே கொடுத்தார்கள். அதைப் பார்த்தவுடனே, நல்லதென்று உள்ளே போய், நாம் சிதம்பரம் சீர்மையைக் குடுக்கப் போகா தென்றும், யிதுக்கெப்படிச் சொல்ல வேணு மென்றும் கேட்டார். எனக்குத் தோத்தினது, "முசியே கொதே யிங்கே யிருக்கச்சே உங்கள் வைக்கீல் வந்தால் தீத்துக் கொடுப்போமென்று யெழுதி அனுப்பிவிச்சார். நீங்கள் வராமல்ப் போனதைத் தொட்டு அவர் யிங்கிலீசுக்காறர்களுக்கும் பிரான்சுக்காறருக்கும் பதினெட்டு மாதம் ஆயுத மெடுத்துச் சண்டை பண்ணக் கவையில்லை யென்றும், சீர்மை ஆர் கையிலே யிந்த அத்துக்கு யிருக்குதோ அந்த அத்துப்படிக்கி அவரவர் சீர்மைகளை அவரவர் வைத்துக் கொள்ளுகிறது, யிதிலே சீர்மைக்குப் போய் பதினெட்டு மாசத்தையிலே சேதி யனுப்புறபடிக்கி நடப்பிச்சுக் கொள்ளுகிற தென்றும், அந்த அத்து மட்டுக்கும் யிந்தப்படி யிருந்து வருகிறது; ஆனால் யிப்போ யெந்த விதம் யெந்தக் காரியம் யிருக்கிறதோ அந்தப் படிக்கே யிருக்கிறதே யல்லாமல் பின்னையொன்றும் அசைக்கத் தேவையில்லை யென்றும், யிப்படியாக முளை கிடாவிப் (திட்டம் பண்ணிப்) போட்டுப் போன படியினாலே, அந்தச் சேதி வருகிற மட்டுக்கும் எங்களாலே ஒன்றும் அசைக்கக் கூடாது என்றும், அங்கேயிருந்து சேதி வந்த பிற்பாடு அப்படியே உங்கள் சினேகிதத்தின் பேரிலே திஷ்ட்டி வைத்து அந்த அவசுரத்துக்குத் தக்கதாய்ப் பார்த்து நடப்பிக்கறோமென்றும்,

புஷ்ட்டியாய் தாது சந்தோஷமாய்ச் சொல்லி, ஒரு சாடையாய் கடப்பை அப்துல் அமீது கானுக்குக் காகிதமெழுதி, முதாமியா மருமகன் அயிதர் கானுக்கும் ஒரு காகிதம் யெழுதி அனுப்புகிறது தான்," யென்று சொன்னேன். அந்தப்படிதான் செய்ய வேண்டியதென்று சீனிவாச ராயன், பாளாசி பண்டிதன் வகையராக்களையும் றூபுறுபா யழைத்துச் சொல்லி, பிரான்சிலே ரெண்டு பேருக்கும் ரெண்டு காகித மெழுதிக் கொடுத்து, பாரிசியிலே யெழுதிக் கொண்டு வந்தால் மோகறு பண்ணி நாளைக்கு அனுப்பிவிப்போமென்று சொன்(னார்) ;

அப்பால் சூரத்து கில்லேதாரனுக்கு ஒரு காகிதமு(ம் பவுஞ்சுதாரனுக்கு (faujdar) ஒரு காகிதமும்), மிரெண்டு காகிதமும் யெழுதச் சொல்லி, பிரான்சிலே (தவறு, பார்சியில்) யெழுதிக் கொண்டு வரச் சொல்லி பிரான்சிலே யெழுதிக் கொடுத்தார்.

அந்த மட்டுக்கும் யெழுதிவிக்கிறே னென்று வந்த விடத்திலே, மறுபடி அழைப்பித்து, "விருத்தாசலத்திலே யிருக்கிற கொம்மாந்தாம் தங்களுக்கு அமுல்தாரன் அரிசி, விறகு முதலானதுகள் குடுக்கிறதில்லை யென்றும், கேட்டாலுமில்லை யென்றும், வூரிலே சீர்மை வழியிலே ஆடுகள் பிடிச்சால் (குடிகளைப்) பிராது பண்ணச் சொல்லித் தூண்டி விடுகிறான் என்றும் எழுதுகிறார்). இப்படியெல்லாம் நடத்துகிரானாம்," யென்று கேட்டார். நான் சொன்னது, "சீர்மை வழிகளிலே விராகனுக்கு நாலு ஆட்டுக்கிடாய் வித்தால் யேழு ஆட்டுக் கிடாய்க் கொண்டு வந்து கொடுக்கச் சொல்லியும், (அமுல்தாரனை) தன் காசா சிலவு (சொந்த செலவில் எல்லாம்) நடத்தச் சொல்லியும், யிப்படி அனேகம் தொந்தரை பண்ணுகிறா," னென்று சொன்னதுக்கு, "நானுமவனுக்குத் தாக்கீது யெழுதி அனுப்பிவிக்கிறோம். நீரும் அமுல்தாரருக்கு எழுதி அனுப்பு," மென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

### *1755 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 14; யுவ வருசம், ஆவணி மாசம், தேதி 2; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்கி முசியே லெறி கோவற்ணதோறண்டைக்குப் போய் ஆசாரம் பண்ணி, நந்தி ராசா அனுப்பின (பார்சி)[1] காகிதமும், அது பிரான்சுப் படுத்தினதும், நந்திராசாவுக்குத் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையும் சீர்மையுங் கொடுக்கிறோ மென்று எழுதிக் குடுத்த உடன்படிக்கைக் காகித நகலும், அதைப் பிரான்சுப்படுத்தின காகிதமும் கொடுக்க, அவரதைப் படித்துப் பார்த்துக் கொண்டு உள்ளே கொண்டு போய் வைத்தார். அப்போ அங்கே

[1] இதை 'பிசினுசி' என்று படியெடுத்தவர் பலவிடங்களில் எழுதியுள்ளார்.

யிருந்தவர்களிலே, முசியே புறுக்கினூது மாத்திரம் கோவற்ணதோருடனே உள்ளே பேசப் போனார். முசே பிஷோர் (M. Pichard) முதலான ஒபிசியால்மார்கள் எல்லாரும் பிறப்பட்டுப் போனார்கள்.

அப்போ முசியே ஷெவிரோ யிருந்து கொண்டு, அய்யண்ண சாஸ்திரி உமக்கு யெழுதிக் குடுத்த ஒடம்படிக்கைக் காகிதம் பிரான்சுப் படுத்திக் குடுக்க வேணும், நான் பார்க்க வேணு மென்று கேட்டான். "யென்னைக் கேழ்க்கிறதென்ன? அய்யண்ண சாஸ்திரியைக் கேட்டால் அவன் யெழுதிக் குடுப்பா," னென்று சொன்னதுக்கு, அவன் சத்தே கோபமாயுள்ளே போனான். அப்பால் துரை அழைத்து சூரத்து ... (கில்லேதாரனுக்கு) காகிதம் வேறேயும், போசுதாற(பவுஞ்தாரனுக்கு) காகிதம் வேறேயும் (எழுதியிருந்ததன்) மேலே (கூடுதலாக) பிரான்சு (ஏதோ) யெழுதி வைத்துக்கொண்டார்.

அப்பாலே, கடப்பை நவாபு அப்துல் அமீது கானுக்கு எழுதின காகிதத்தையும் குடுத்து, யிதிலே யெழுதியிருக்கிற மத்தலப்பு "(உமக்குத்) தெரிஞ்சுயிருக்குதே, (ஆதலால்) அவர்களுக்குச் சொல்லுகிற தென்ன வென்றால், முசே கொதே பதினெட்டு மாதம் வாயிதா வொன்று போட்டு சீமையிலே யிருந்து உத்தரவு வரந்தனியும் அவரவர் வசமாயிருக்கிற சீர்மை அவரவர் வசமாயிருக்கிறதென்று ... ஒரு அத்துப் பண்ணிப் போட்டு சீமைக்கு (ப் போய்விட்டார்); உபயத்திரவர் வியாச்சியமும் சீமையிலிருந்து யெப்படி யெழுதப்பட்டு வருகுறதோ அப்படி நடக்குறதென்று ஒரு முளை கிடாவிப் போனபடியினாலே அந்த மட்டுக்கும் ஒன்றும் செய்யக்கூடாதென்றும், தங்களுக்கும் நமக்கும் சினேகமாயிருக்கிற படியினாலே அப்பால் காலதேச வர்த்தமானத்துக்குத் தக்க தாய்ப் பார்த்துக் கொள்ளுவோமென்று (நீர்) சொல்லும். அயிதர் கானுக்கும் அந்தச் சாடையிலே தானே யெழுதி யிருக்கு தென்றும் சொல்லச் சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "உம்முடைய றூபுறூபாய் (நேரில்) அவர்களை அழைப்பிச்சுச் சொல்லி, அவர்களுக்கு சகலாத்தும் பெகுமானமுங் குடுத்து சொல்லிப் போகச் சொல்ல வேண்டிய," தென்று சொ(ன்னேன்).

நேத்து பாசி ராயனுக்கும் மேற்படி (அவரது) வக்கீல் நரசிங்க ராயனுக்கும் முறுத்து சல்லிக்கானுக்கும், மேற்படியார் தமயன் ரசால்லிக் கானுக்கும் (ரசா அலிகான்) யெழுதின காகிதத்தைக் காண்பிச்சு, மோகறு பண்ணி, யிதுக்கு மப்படி நடத்த வேணுமென்று சொல்லி மேசை மேலே வைத்(தேன்).

காரைக்காலிலே யிருந்து முசே பொறுஷே (M. Porcher), "தஞ்சாவூர் மினிஸ்தரு சக்காசி நாயக்கன் யென்கிறவன் யிருபது பேர் துப்பாக்கிக் காரருள்பட ஆயிரம் பேர் கூட்டத்துடனே காசி யாத்திரை

போறானாம், அதுக்கு தஸ்தக்கு (Passes) வேணு" மென்று யெழுதி (இருக்கிறார்). தஸ்தக்கு சிதம்பரம் முதல் கொண்டு சதிரங்கப்பட்டணம் மட்டுக்கும் தானே செல்லு மென்று கேட்டார். "யிவ்விடத்து அமுல் யிப்போ யிருக்கிறது அந்த மட்டுக்குத்தான். அப்பால் நெல்லூருக்கு அப்பறம் மச்சிலியந்தர் தாலூக்கு நர்சாபுரம், ஸ்ரீக்காகுளம், வேலூர் (அல்ல, எல்லூர்) ராசமகேந்திரம் தாலூக்கா சகன்னாதம் மட்டுக்கும் நம்முடைய ஆணை ஆக்கினையாய் நடக்குது. அந்த வட்டங்களிலே சேக்கு யிபராம் அமுலும், விசயராம ராசா அவர்கள் குத்தகையும் நடக்குது. அந்த வட்டங்களிலே யெல்லாம் முசியே மொரசேன் ஒடுதிப் படிக்கி ஒவ்வொரு கொம்மாந்தாமும் இருக்கிறபடியினாலே, பிரான்சுலே கூட தஸ்தக்கு யெழுதினால் அந்த மட்டுக்கும் செல்லும். அப்பால் ஊக்குளி (ஹுகுலி), சந்தன்கூர் (சந்திரநாகூர்), பாட்டணா (பட்னா) வகையிரா யிடங்களிலே கூட நம்முடைய பிரான்சுக்காறர்கள் யிருக்கிற படியினாலே அந்த மட்டுக்கும் செல்லும்," என்று சொன்னதுக்கு, நீர் சொன்னது மெய்தான் யென்று தஸ்தக்கு யெழுதி வரச்சொல்ல, வாடிக்கைப் படிக்கிப் பார்சியிலேயும் மகாராஷ்டிரத்திலேயும் யெழுதிக் கொண்டு போய்க் குடுக்க, மேலே பிரான்சிலே யெழுதித் தம்முடைய கையெழுத்துப் போட்டு, பார்சி மோகறும் பண்ணச் சொன்னார். அந்தப்படிக்கி மோகறு பண்ணிக் குடுத்தேன்.

நமக்கு அந்த மட்டுக்கும் செல்லுதா யென்று (கேட்டார்). "நம்முடைய தஸ்தக்கு அந்த மட்டுக்கும் செல்லுகிறது. யிந்த யிங்கிலீசுக்காறர்கள், ஒலாந்தாக்காறர் வகையிரா யேரோப்பு தேசத்தார் ஆருக்காகிலும் செல்(கிறதில்லை); துலுக்கர்க(ளுக்கோ) சலாபத்து சங்கு தவிர மத்தப் பேர் ஒருத்தரு மில்லையே ஆனபடியினாலே, புதுச்சேரி யிடம் வந்து (யிடமானது) பாதுசா தக்கத்துக்கு (சிம்மாசனத்துக்குச்) சமானமான யிடமா (யிருந்து, இப்போ) திருப்பிக் கொண்டு யிறங்கி யிருக்குது. யினிமேல் சுவாமி தயவினாலே உம்மைத் தொட்டு நடக்கவேணு," மென்று நான் சொன்(னேன். அவர்) நகைச்சு, "முன் நாசறு சங்கு தலையை வெட்டி, யிதாயித்து மொகதீன் கானுக்குத் தக்கன் சுபா கட்டின (போது), பாதுசா போல் (மதிப்புக்குரிய) யிடமாச்சுது. அப்பால் மெத்த தாழ்ந்து போச்சுது. யினி மேலப்படி (முன்னே போல்) ஆகமாட்டாது,"[1] யென்று (துரை) சொன்(னார்). "வருகிற வருஷம் முதல் கொண்டு அப்படி துவங்கும் யென்று ஒரு பாப்பான், 1744 வருசம் 1745 வருசம் யிங்கிலீசுக்காறர் கப்பல் வந்து மனிலாக் கப்பல், சீனாக் கப்பல், அச்சைக் கப்பல் வகையிராக்களைப் பிடிச்சபோது யிவ்விடத்துக்கு வந்திருந்தவன், சொன்னபடிக்கி சென்னப்பட்டணம் பிடிக்(கப்படும்), ஆற்காடு முதல் அபறங்காபாத்து, புராணபுரி மட்டுக்கும் நம்முடைய

[1] கவர்னரின் அறியாமையையும் நம்பிக்கை இன்மையையும் காண்க.

பவுன்சு (போகும்), உக்குமத்து (நம் அதிகாரம்) நடக்குமென்று சொன்னபடிக்கி, ஒசத்தியும் தாழ்த்தியும் சரியாய் வந்தது. அவன் சொல்லியிருக்கிற படிக்கி வருகிற வருஷத்திலே ஒசத்தியாய் நடக்கவேணும். யிதுவரைக்கும் (அவன்) சொன்னபடிக்கி நடந்தபடியினாலே யினி மேலும் நடக்கு," மென்று சொன்னேன். "யினி மேல் அந்த ஒசத்தி வரமாட்டாது. அந்தக் காலம் போச்சு," யென்று சொல்லி, அந்த பிராமணனிருக்கிறானோ, செத்துப் போனானோ வென்று கேட்டார். அந்தப் பிராமணன் செத்துப் போய் நாலஞ்சு வருஷமாச்சுதென்று சொன்னேன்.

"ஆனால் சீர்மையிலே பிரான்சு ராச்சியத்துக்கு வடக்கே காபிறி தேசமிருக்குறது. அந்த தேசத்திலே ஒரு காபிறி[1] பிரென்சு (ஆதிக்கத்தில்) யிருக்குது. அந்த ராச்சியத்திலே யிங்கிலீசுக்காறர் போகவர வியாபாரம் பண்ணிக் கொண்டிருப்பார்கள். மூணாம் வருஷம் அவர்களுக்கும் யிங்கிலீசுக்காறர்களுக்கும் கலாபமாயி யிங்கிலீசுக்காறர்களை பெகு பேர்களை சேதப்படுத்திப் போட்டார்கள். அவர்கள் வந்து என்ன செய்வார்களோ வென்று பிறன்சுக்காற ராசாவுக்கு ஸ்தானாபதிகளை அனுப்பி அவர்கள் அடைக்கலம் சேர்ந்தோமென்றும் சிறிது ஒப்பு உடம்படிக்கை பண்ணினதின் பேரிலே, இங்கிலீசுக்காறர்கள் அவர்கள் பேரிலே படையெடுத்து சண்டைக்குப் போற சாடை அறிந்து, பிரான்சு ராசா பதினாயிரம் சொலுதாதுகளையுங் கப்பலுகளையும் தயாறு பண்ணி அனுப்பினார். அதினாலே யிங்கிலீசுக்காற ராசாவுக்கும் பிரான்சு ராசாவுக்கும் சண்டையாமோ வென்று யிவ்விடத்திலே யிங்கிலீசுக்காறர்கள் எத்தனம் பண்ணுகிறார்கள், நாமும் யெத்தனம் பண்ணுகிறோம். ஆனபடியினாலே ஒரு வேளையிலே யிங்கிறேசுக்கார ராசாவுக்கும் நம்முடைய பிரான்சு ராசாவுக்கும் சண்டை திக்ளேரிட்டால் இங்கேயும் சண்டையுண்டா(கும்) போலே காணுது," யென்று சொன்னார். "இந்தச் சமாச்சாரம் யிப்போ வல்லவோ யெழுதி வந்தது. முன் நீங்கள் வந்தபோது யில்லையே. அப்போ நான் வருகிற வருஷம் யிந்தப் பிராந்தியங்களிலே சண்டை யுண்டா யிருக்குமென்று சொன்னதுக்கு, பதினெட்டு மாதமொரு வாயிதா போட்டிருக்கிற படியினாலே யினி மேல் சண்டை யேது? நம்ப வேண்டாமென்று நீங்கள் சொன்னவர்கள் தானே? யிப்போ சண்டை முஸ்தீது பண்ணுகிறோமென்றும் வருகிற வருஷத்துக்குச் சண்டைக்கு யேஷிய முண்டென்றும் சொல்லப்படுதே. அந்தப் பிராமணன் சொன்ன சேதி பொய் வரா," தென்று சொன்னேன்.

---

[1] வட அமெரிக்காவிலுள்ள செவ்விந்தியர்களை இச்சொல் இங்கு குறிக்கிறது போலும். ஆனால் காபிரிகள் என்று நீக்ரோக்களைத் தான் ஐரோப்பியர் குறித்தனர்.

### *1755 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 15; யுவ வருசம், ஆவணி மாசம், தேதி 3; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கு முசியே லெறி கோவற்ணதோ ரண்டைக்குப் போயாசாரம் பண்ணி, "மமுதல்லி கான் திருவண்ணாமலை போய்ச் சேர்ந்தவன், அங்கே தானே யிருக்கிறான். அந்த தாலூக்கை கையிருத்தின் கான் (Khair-ud-din-khan) வசம் பண்ணினா" னென்கிற கபுறு சொன்னதுக்கு, அப்பால் ஆற்காட்டுக்குப் போகாமல் அங்கே யிருக்கிற சாடை யென்ன வென்று கேட்டார். அவர்கள் தாலூக்கான படியினாலே அஞ்சாறு நாளிலிருந்து அவ்விடத்தை பந்துபஸ்து பண்ணிப்போட்டுப் போவா னென்று சொன்னதுக்கு, ஆற்காடு சேந்த பிற்பாடு யென்னென்ன நடக்குதோ அத்துடனே சேர்ந்த சமாச்சாரம் எழுதி அனுப்பச் சொல்லி, நம்முட மனுஷர் கூட யிருக்கிறவர்களுக்கு யெழுதி அனுப்பு யென்று சொன்னதுக்கு, "எழுதியனுப்ப வேண்டியதென்ன, அவன் வேலை அங்கே நடக்கிற சமாச்சாரம் யெழுதுகிறதுக்கு ஆகத்தானல்லோ? அதுக்குத் தானே அந்தப் பிராமணனுக்குச் சம்பளம் கொடுத்து வைத்திருக்குதென்று சொன்னதின் பேரிலே உத்தரஞ் சொல்லாமல், யித்தனாள் பண்டிகையான படியினாலே, அவர் கோவிலுக்குப் போக கோன்சேலியோர் முதலான போர்களுடனே போய், பூசை கேட்டுப்போட்டு, மறுபடியும் மேலே வந்தார். சமஸ்தமான வெள்ளைக்காரர், உத்தியோகஸ்தர் வர்த்தகர் முதலான போர்கள் வந்து கண்டார்கள். நானும் போயி கண்டேன். அப்பால் அவரவர் சச்சாய்ப் பேசி யிருந்தார்கள். நான் போய் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1755 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 18; யுவ வருசம், ஆவணி மாசம், தேதி 6; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே பனிரெண்டு மணி மட்டுக்கும் கோன்சேல் கூடியிருந்து கலைஞ்சார்கள். அதிலே நான் பிடவைப் பார்க்கிற சாலையிலே போயிருக்கச்சே, சீரங்கத்துக்கு கொமுசாயராய்ப் (Commissary) போயிருந்த முசே பிளாக்கூர் (M. Flacourt) அப்போதான் வந்து, கோவர்ணதோரை சந்திக்க சமயமில்லாமல் பிடவை பார்க்கிற சாலையே வந்து, யெனக்கு ஆசாரம் பண்ணி, தான் முப்பத்திரெண்டு போயிண்டாரை (பல்லக்குக் தூக்கிகள்) அஞ்சல் வைத்துக் கொண்டு, ரெண்டு நாளையிலே சீரங்கத்திலே யிருந்து யிவ்விடத்துக்கு வந்தேன் யென்றும், தனக்கும் குண்டூர் பாலி செட்டிக்கும் ஆகாமல் போய் தான் அவனைப் பிரம்புனாலே அடிச்சு வெளியே துரத்தி வீட்டு சீமைக்கெல்லாம் தன் மனுஷரைப் போட்டதும், அவன் பொல்லாத நடத்தைகளையும், தனக்கும் அவனுக்கும் நடந்த யிட்டோட்டுகளையும் சொல்லி, தாங்கள்

சீரங்கம் குத்தகை வாங்கச்சே பாலி செட்டி யென் (பிள்ளை) பேரிலே தப்பும் தாறும் கோவர்ணதோருடனே சொன்(னான். அதை முழுதும் சொல்ல) வேணுமானால் ரெண்டு மூணு காகிதம் பிடிக்கும். ஆனால் ரெண்டு மூணு காரியம் மாத்திரம் சூட்சமாய் (சொல்லி) வைக்குறேன். முசே துப்பிளேயிக்சு நாளையிலே (உமது) பெரிய குமாரத்திக்கு கலியாணம் பண்றபோது முசே துப்பிளேயிக்சுவுக்கு நாற்பதினாயிரம் ரூபா பெகுமானம் (நீர்) குடுத்தாய் யென்றும், சீமா மூலத்திலே அஞ்சாறு லக்ஷம் ரூபாய் ஆதாயம் வருமென்று முன் சீர்மை பூமி யிவர் (பாலி செட்டி) வசமிருந்தபோது பதினஞ்சு யிருபது லக்ஷம் ரூபாய் முசே துப்பிளேயிக்சுக்குக் குடுத்ததாயும், அது முசே பிளாக்கூர் சொந்தக் கணக்கன் அறிவானென்று பாலிசெட்டி துரையுடனே சொல்லி, (தன்னிடமும்) வந்து சொல்லிச் சொல்லச் சொன்னதாகவும், தான் அதுக்கு சம்மதி யில்லாம லிருந்தாப் போலேயும், யிப்போவும் யிந்த சீமாவைத் தன் வசம் குடுத்தால் மூணு லக்ஷம் ரூபாய் கும்பினீருக்கு ஒசத்திக் குடுத்து, துரைக்கு வருஷம் ஒன்றுக்கு மூணு லக்ஷம் ரூபாய் நன்கொடையும் ரொக்கமாய்க் குடுக்கிறோ மென்றாப் போலேயும், (உம் வீட்டுக்) கலியாணத்துக்கு ரெண்டு லக்ஷம் ரூபா வரும், (துரைக்கு அதிலே) லக்ஷம் ரூபா குடுக்க(க் கூடாதா) வென்றும், அப்போ கலியாணம் பண்ணச்சே கும்பினீர் வர்த்தகர் பட்டணத்திலே யிருக்கிற சனங்களே தவிர (கும்பினீருக்குச்) சீமை பூமிகளில்லையே, அந்த நாளையிலே முசே துப்பிளேயிக்சுவுக்கு நாற்பதினாயிரம் ரூபாய் கலியாணத்துக்குக் குடுத்தாய், இப்போ உமக்கு வருகிற ஆதாயம் ரெண்டு லக்ஷம் ரூபாய் குடாவிட்டாலும் லக்ஷம் ரூபாயாகிலும் குடுக்கப் போகாதாவென்றும், தேவடியாக்களுக்கு மாத்திரம் நாற்பதினாயிரம் ரூபாய் அன்பதினாயிரம் ரூபா சிலவிட்டால் மத்த சிலவு யென்ன செல்லவேணும், யிதின் பேரிலே பார்த்துக் கொள்ள வேணு மென்றும் உம்மை (அவன்) சட்டை பண்ணுகிறதில்லை. முசே கொதே தன்னை சகலத்துக்கும் பெலனாக்கிப் (அதிகாரமும் கொடுத்துப்) போனார். நீரெப்படியோ கும்பினீர் காரியத்துக்கு, அப்படித்தான் தானும் (அதிகாரஸ்தன்) யென்றாப் போலேயும், உம்மாலேயும் மத்த கோன்சேலியேராலேயும் ஒன்றும் செய்யக்கூடாது (முடியாது) யென்றாப் போலேயும்–யிப்படி அபாண்டமான பேச்சுகளால் அவருக்கு (பிளாக்கூருக்குக்) கோபம் வர யெந்த யெந்த விதமாய்ச் சொல்ல வேணுமோ, அந்த வித மெல்லாம் சொன்னான்," யென்று ரெண்டு நாழிகை தேசகாலம் பிடவை பார்க்கிற சாலையிலே கண்டால் குருவப்பச் செட்டி, குண்டூர் பாலி செட்டி(யின்) பிராமணன் சீரங்கத்திலே யிருந்து முசியே பிளாக்கூரின் பேரிலே பிராது பண்ண வந்த பாப்பான் வகையிரா பெகு சனங்கள் பார்த்துக் கொண்டிருக்கச்சே, முசே பிளாக்கூர்

யென்னுடனே சொல்ல, அதுக்கு நான் சொன்னது: “சுவாமி மத்தியஸ்த மிருக்கச்சே ஒருத்தர் ஒருத்தருக்குப் பொல்லாப்பு செய்ய வேணுமென்று நினைத்தாப் போலே ஆகப் போகுதா?” அவரவர் நல்ல நடக்கையே அவர்களுக்கு நல்லது செய்யும், மத்தது அவரவர் பொல்லாத நடக்கையே பொல்லாப்பு பண்ணுகிறது,” யென்று சொன்னதுக்கு, அவன் தன்னாலே ஆன மட்டுக்கும் பொல்லாப்பு செய்ய வேணும் யென்று முசே லெறியுடனே சொன்னதுகளெல்லாம் திரும்பியும் துவக்கி ஒரு மணி நேர மட்டுக்கும் சொன்னான்.[1]

அதெல்லாம் எழுதுகிறது பிறயோசன மில்லாததைத் தொட்டு ஒன்றும் அதை பரவா பண்ணி (விவரித்து) யெழுதுகிறதே யுக்குத்தமல்லா (யில்லை). அப்பாலும் யிப்படி யெத்தனை பேர் யெத்தனை பேசினாலும் சொன்னாலும், சூரியனைப் பார்த்து பொல்லாதவன் சிறிது கல்லுகளாலே போட்டா லெப்படியோ அப்படி யென்று யெண்ணிக் கொண்டு சும்மா கேட்டு, அவன் பேரிலேயும் அவன் அண்ணன் குமாரர்கள் பேரிலேயும் நான் பண்ணின சகாயத்தைச் செய்தவனுக்கு யிப்போ யென்ன ஆதாயம் வந்துது, யெனக்கு யென்ன நஷ்டம் வந்தது யென்று சொல்லி அதுக்குத் தக்க சாடையாய்ச் சொல்லி (பிளாக்கூரைப்) போகச் சொல்லிப் போட்டு வீட்டுக்குப் போனேன்.

### *1755 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 20; யுவ வருசம், ஆவணி மாசம், தேதி 8; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே மாலதி தீவிலிருந்து (மாலத்தீவு) கப்பல் வந்தது. அதிலே முசியே திரிப்பிலி வந்தான் (M. Trublet).

### *1755 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 23; யுவ வருசம், ஆவணி மாசம், தேதி 11; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணி வேளைக்கு முசே லெறி கோவர்ணதோ ரவர்களண்டைக்குப் போயாசாரம் பண்ணினவுடனே, அவரும் ஆசாரம் பண்ணினார். அப்பால் அங்கே முசே கில்லியார் வகையராக் களிருந்தவர்களுக்கும் ஆசாரம் பண்ணினேன். அவர்களெல்லாரும் ஆசாரம் பண்ணினார்கள்.

அப்போ யென்னைப் பார்த்து, “பாசி ராயன் வைக்கீலு கோவிந்தராயன் யென்கிறவனையும், கடப்பை நபாபு அப்துல் அமீது கான் குமாரன் அப்துல் அஜீது கான் வக்கீல் சீனிவாச ராயரையும், அயிதர்கான் வக்கீல் பாலாசி பண்டிதன் வகையிராக்களையும் அனுப்பி விடாமல் யேன்

[1] பிள்ளையின் நீண்ட வாசகங்கள் பலவற்றுக்கு இதுவும் ஒரு சான்று.

வைத்து யிருக்கிறீர்," என்று கேட்டார். "காகிதங்களெழுதி (மொகறாயி) யேழெட்டு நாளாச்சுது, அவர்களுக்கு பெகுமானம் குடுத்து அனுப்புகிறதுக்குச் சகலாத்துக் குடுத்தனுப்ப வேணுமென்று (நான்) சொன்னதுக்கு உத்தாரம் சொல்லாமலிருந்தீர்களே. அதினாலே யெதைக் குறித்து நீங்கள் அட்டியாயிருக்கிறீர்களோ வென்று யிருந்தே," னென்று சொன்னதுக்கு, அவர்களுக்கு யெவ்வளவு குடுக்க வேணு மென்று கேட்டார். "சறுவாக்கினர் (எல்லாம் தெரிந்தவர்) நீங்கள். அவர்களோ பெரிய மனுஷருடைய பெகுமதி வஸ்திரங்களும் கொண்டு வந்து குடுத்து காரியமாக வந்தார்கள். அப்பால் உங்களுக்கு யென்ன தோணுதோ, அது குடுத்து அனுப்புகிறதுதான்," என்று சொன்னதுக்கு, பேருக்கு ரெவ்வண்டு கெசம் சகலாத்தும் குடுத்து, காகிதங்களையும் குடுத்து, அனுப்புறதானென்று சொன்னால். சத்தாரா (மற்றும்) பொன்னை (புனா) யிலிருந்து (வந்த) பாசி ராயனுடைய (ஆட்களுக்கும்), கடப்பையி லிருந்து நபாபு அப்துல் மசீது கான் அனுப்பின (ஆட்களுக்கும்) அதி தூரத்திலிருந்து வந்தவர்களுக்கு யிப்படி செய்யப் போகாது, யெவ்வெட்டு கெசமாகிலும் அனுப்ப வேணுமென்று சொன்னதுக்கு, சும்மாயிருந்தார். சும்மாயிருக்கிற மட்டுக்கும் சம்மதியாங்காட்டு மென்று, யிப்போ கிடங்குக்கு ரெண்டாவதாயிருக்கிற முசியே பெடுத்திராம் (M. Bertrand) பேருக்கு ஒரு சீட்டு அவர் கபினேத்திலே யெழுதிவைச்சு, கையெழுத்துப் போடக் கொண்டு வந்து குடுத்த காகிதத்தைப் படிச்சுப் பார்த்து, பத்து யென்கிற துகையைக் கிறிக்கி, ஆறு கெசம் மாத்திரம் போதுமென்று யெழுதி, கையெழுத்துப் போட்டார். அப்பால் சகலாத்து வந்து, கடப்பையார் வக்கீல் சீனிவாசராயன் யென்கிறவ(னும்), பாசி ராயன் வக்கீல் கோவிந்தராயன் யென்கிறவ(னும்)... (துரை விஸ்தாரமாய் பெகுமானம் பண்ணுவார் என்றும்) வந்த காரியமும் அந்த க்ஷணம் செய்து குடுப்பார் (என்றும் அவர்கள் மனதிலே தோன்ற), ஆனந்த றெங்கப்பன் அப்படி அட்டி பண்ணிக் கொண்டு வருகுறாரென்று (நினைத்து), முசே பெடுத்தல்மீ(யிடம்) வெகுமானம் கொண்டு போய்க் குடுத்து, முசே லாலுக்கு (M. Lalu) பெகுமானம் கொண்டு போய் குடுத்து, மதனாந்த பண்டிதன், ராமுப்பிள்ளை வகையிராக்களுக்கும் பெகுமானம் கொண்டு போய் குடுத்து, அவர்களைக் கொண்டு கோவர்ணதோர் அவர்களுக்குச் சொல்லிவச்சு, நம்மண்டைக்கு வராமல் அவர்களண்டைக்குப் போறதும், தங்கள் சுகிகத்துகள் (வேண்டுகோள்களை) அவர்களைக் கொண்டு பிரான்சிலே யெழுதி விச்சுக் கொண்டு வந்து குடுக்கிறதும், யிதுக்கு சுவாமியை வித்த சூதனாகுற[1] மதனாந்த பண்டிதனுடைய

---

[1] ஜூடாஸ் (Judas).

ஆலோசனையின் பேரிலே நடந்து கொண்டது முதலான சம்மதிகளின் பேரிலே, பிரபுவின் மற்சி (குணம்) தெரியாமல் உச்சாகமாய்த் திரிஞ்சவர்களுக்கு, பிறத்தியக்ஷமாய் சகலாத்துக் காரியத்திலே பாத்தாப் போலே வெழ்க்கப்பட்டு, யென் முகத்தைப் பார்க்குறதுக்குக் கூட சந்தேகமாய் (முடியாமல்) முகத்தை வளைத்துக் கொண்டு லச்சைப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்பால் பிரபு அவர்களுடனே பேசிப்போட்டு உள்ளே போனவுடனே, கடப்பையார் வக்கீல், நானா வக்கீல் வகையிராக்கள், என்னைத் துரை அழைத்த மாத்திரத்திலே யென் பிறகே கூட்டமாய் வந்தார்கள். "நானிவர்களை யிப்போ ... அழைச்சேனா? யேன் வந்தார்கள்?" யென்று கேட்டார். "யென்னை நீர் அழைத்தவுடனே நான் வந்தேன்; யின்றைக்கும் நானெங்கே அட்டி சொல்லுகிறேனோ வென்று யென் பிறகே வந்துவிட்டார்க" ளென்று சொன்னதுக்கு, பாக்கு வெத்திலையும் மூணு கெசம் சகலாத்தும் கடப்பை யாருக்கும், நானா வக்கீலுக்கு மூணு கெசம் சகலாத்தும் பாக்கு வெத்திலையும் குடுத்து, அவரவர் காகிதங்களும் குடுத்தார். கடப்பை வைக்கீலுக்கு, "பதினெட்டு மாச கட்டம் யிங்கிலிசுக்காறர்களுக்கும் யெங்களுக்கும் விழுந்திருக்கிற படியினாலே, அது காரியம் சீமையிலே யிருந்து தீந்து வருகிற மட்டுக்கும் சிதம்பரத்துச் சீர்மைப் பேச்சு மாத்திரமல்ல, யெந்தப் பேச்சும் நாம் பேசப் போகாது. அப்பால் அந்தக் காரியம் அங்கே யிருந்து தீந்து வந்த பிறபாடு பாத்துக்கொள்ளுவோம்," யென்று சொல்லிப் போகச் சொல்லி, பாசி ராயன் வக்கீலைப் பார்த்து, "யெங்கள் வசத்திலே கர்னாட்டகத்துச் சீமையிலே கொஞ்சம் சீமை யிருக்கிறது. அது யெவ்வளவு? யிதுக்கு சவுதா யென்ன வரப்போகுது? அதுவும் சீமையெல்லாம் சண்டை யினாலே பேச்சினாக்காய்ப் (நலிந்து) போயிருக்குது. மத்த சீமை யெல்லாம் நானா விதமாய்ப் போயிருக்குது. யினி மேல் கர்னாட்டக சுபாவுக்கு ஒருத்தன் ஆர் யேற்படுகிறானோ அப்போ அவனைக் கேட்டு வாங்கிக் கொள்ளுங்கோ," ளென்று சொல்லிப் போகச் சொன்(னார்).

"அப்பால் தஞ்சாவூர் பாவாடை நாயக்கன் யென்கிறவன் காரைக்காலிலே தான் வந்து குடியிருந் (து கொண்டு), தஞ்சாவூர் ராசா தன்னை அனுப்பச் சொல்லி யெழுதினாலும், தன் பணங் காசு யிதுகளைத் தடை பண்ணி வைக்கச் சொல்லி யெழுதினாலும், அவர்கள் வசம் பண்ணாமல், யென்னை நடப்பிக்குறத்துக்குக் கவில் குடுத்தால், உங்கள் காரைக்கால் பட்டணத்திலே சுகமே உங்கள் கொடியின் கீழே வீடு கட்டிக் கொண்டு, யென் கவை காரியம் பார்த்துக் கொண்டு யிருக்கிறேனென்று காகித மெழுதி கவில் கேழ்க்கிறான். அவன் பூருவோத்திரம் யென்ன?" வென்று கேட்டு, அவன் அனுப்பின மகாராஷ்ட்டிரக் காகிதத்(தையும்)

லக்கோட்டாவை(யும்) யென் கையில் குடுத்தார். (லக்கோட்டா—கடித உறை). அதை நான் வாங்கிக் கொண்டு, மானோசியப்பாவுக்கு (இவன்) மினிஸ்தருத்தனமும், ராசரீகத்துக் கசானாசியாய் (கஜானாக்காரனாயும்) சகல வியாபாரம் வேண்டியது முதலானதும், சீமைப் பணம் யெல்லாம் யிவன் கையில் செலுத்துகிறதுமல்லாமல், சீமைக்கு மத்தியஸ்த(மாய் இவன்) மாரிபத்திலே தானே சகல ககுல்லேத்தியனாய் (விவகாரங்களும்) நடக்குறது ... பிறதாப சிங்கு மகாராசாவினுடைய சொந்த உடமை, சொந்த திரவியம், குடுக்கல் வாங்கல் வகையிரா காரியங்கள் கூட யிவர் மாரிபத்திலே நடந்ததினாலே தான் யிவர் பெகு துரோகம் சமஸ்தானத்துக்குப் பண்ணினது மல்லாமல், அவர் (அரசரது) சொந்த உடமை யிவர் கையில் வைத்ததில் சிறிது தட்டுமாத்தினது (திருடியது வெளிப்பட்டது). யிவரை அடிச்சுப் பிடிச்சுக் காவல் கட்டுப் பண்ணி வெகு தொந்தரைகள் நடந்து, அப்பால் (இவன்) நாகப்பட்டணத்திலே வந்திருந்து, அவ்விடத்து கோவர்ணதோர்களுக்கும் துபாசிகளுக்கும் பத்துப் பணம் விஸ்தாரமாய்ச் சிலவு பண்ணி, அப்பால் அவ்விடத்திலே யிருக்கிறதுக்குக் கூட தஞ்சாவூர் ராசா(வும்) மானோசியப்பா(வும்) விகாதம் (எதிர்ப்பு) பண்ணின தினாலே, யிப்போ யிவ்விடத்திலே யிருக்க யெத்தனம் பண்ணுகிறா," னென்று ஒரு நாழிகை தேசகாலம் சவிஸ்தாரமாய் யிவனுடைய (விவகாரம்) நானறிந்த தெல்லாம் வயணமாய்ச் சொன்(னேன்). அதை யெல்லாம் கேட்டு, யிப்பால் நடக்க வேண்டிய தென்ன வென்று கேட்டார். நடந்த சேதியைச் சொல்லி, "யிப்போ அவனுக்குப் பின்னை யெங்கேயும் ஆசரா (ஆதரவு) வில்லாததினாலேயும், நமக்கும் ராச கூட்டத்துக்கும் (ராசாவுக்கும்) போராம லிருக்கிறதினாலேயும் யெழுதினான். உமக்கு யெப்படி உயுக்த்தமோ அப்படி பார்த்துக் கொள்ளு," மென்று சொன்னதுக்கு, அவனனுப்பின காகிதம் பிரான்சுப்படுத்திக் கொண்டு வந்தவுடனே பார்த்துக் கொண்டு யோசனை சொல்லுகிறேனென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக் கொண்டு மானோசியப்பாவுக்குப் பதில் காகிதம் யெழுதி வாறேனென்று சொல்லிப் போட்டு அனுப்பி விச்சுக் கொண்டு வந்தேன்.

## செப்டம்பர் 1755

*1755 வருசம், செப்த்தேம்பர் மாசம், தேதி 9; யுவ வருசம், ஆவணி மாசம், தேதி 28; மங்களவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாகப்பட்டணம் கும்பினீர் தொஸ்தக்கு[1] நாகமல்லு நாயக்கர் குமாரன் சின்னிய நாயக்கன் பயணம் (புறப்பட்டார்). யிருபது துப்பாக்கிக்காரர்களையும் ரெண்டு குதிரைச் சுவார்களையும் சொக்கப்ப முதலியாரையும் கூட நாகப்பட்டணம் மட்டுக்கும் போய்விட்டு வரச்சொல்லி அனுப்பிப்போட்டு, அப்பால் ஏழரை மணிக்கிக் கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோர் அவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணி மோக்காவிலே யிருந்து மோக்கா கோவர்ணதோர், அவ்விடத்து சராபு (ஷராப்) வகையிரா அனுப்பின மூணு காகிதங்களும் பிரான்சுப் படுத்தினதையும் பத்தினீசு (பார்சி) காகிதங்களையும் குடுத்தவுடனே, படித்துப் பார்த்துக்கொண்(டார்).

துறையூர் பாபு ரெட்டி முசியே மேசென் மாரிபத்திலே அனுப்பின காகிதத்தை யென் கையிலே கொடுத்து பிரான்சிலே எழுதி வரச் சொன்னார்.

அதை வாங்கிக் கொண்டு, "மால் தீவு ராசாவினுடைய குமாரத்தி உங்களுக்கு பெகுமானமும் காகிதமும் அனுப்பிவிச்சாளாம், அது கொண்டு வந்த காரியக்காரன் போன வருசம் வந்திருந்தவன். அவனுக்கு மேகசூலை கண்டு காலிலே றெணங் கண்டிருக்கிறபடியினாலே படியின் பேரிலே யேறி வரமாட்டான். அதைத் தொட்டு நாற்காலியின் பேரிலே மேல் வீட்டின் பேரிலே எடுத்து வாறதுக்கும் பல்லக்குடனே கோட்டைக்குள்ளே வாறதுக்கும் உத்தாரங் கேழ்க்கிறான்," யென்று சொன்னதுக்கு, வரச் சொல்லு, வாசற்படிக்குக் கூடச் சொல்லியனுப்பென்று சொன்னார். அந்தப்படிக்குச் சொல்லி அனுப்பிவிச்சுப் போட்டு, "அவர்கள் நம்முடைய பல்லக்கும் நீசானும் வரவேணுமென்று கேட்டார்கள். அதுக்கு நான் முன் வாடிக்கையில்லை யென்று சொன்னேன்," யென்று சொன்னதுக்கு, "யிப்படிப்பட்ட காரியங்களெல்லாம் முசியே துப்பிளேயிக்சு நாளையிலே நடந்தபடிக்கு நடக்க வேணுயேல்லாமல், வேறே விதமாய் நடத்தப் போகாது. நடுவே யிந்தத் துலுக்கருக்கும் முசியே கொதேயைத் தொட்டும் நான் வந்த பிற்பாடும் சிறிது மரியாதைகளெல்லாம் நடந்ததெல்லாம் தள்ளிப்

[1] இது ஏதோ உத்தியோகம் போலும். தோஸ்தக்கு என ஆங்கிலத்தில் உளது.

போடவேணு," மென்று சொன்னார். "நானப்போ தானே சொல்லவில்லையா?" வென்று சொன்னதுக்கு, "மெய்தான் முசியே கொதே நடப்பித்தார் யென்று நடப்பித்(தேன்). முசியே புசி சலாபத்து சங்கு (கீழே வருமாறு கேட்கிறான் என்று எழுதியிருக்கிறார்). அவ்விடத்திலே யிருக்கிற கில்லேதாரர், சுபேதாரர், ஆற்காட்டு சுபேதாரருக்குக் கூட நீங்கள் பீரங்கிப் போட்டு எதிற் கொண்டு போய் பெகுமானம் வாங்கிக் கொண்டு வாறீர்களாம். (அப்படியானால்) யென் பெகுமானத்துக்கு யென்னமாய் நடப்பிக்க வேணும்? உங்கள் கீழே யிருக்கிறவர்களுக்கு நீங்கள் யிப்படி மரியாதை நடத்தலாமா? வென்று சொன்னதாய் முசியே புசி யெழுதினபடியினாலே, யினிமேல் நடத்தப் போகாது," யென்று சொன்னார். அப்படித்தான் செய்யவேண்டியது யென்று சொன்னேன்.

அதிலே முசியே திரிமலீயேர்[1] (M.Le Termellier) என்கிற மால்தீவுக்குப் போய் வந்த கப்பல் கப்பித்தா(ன் கூட) மால்தீவு ராசாவினுடைய மனுஷன் போன வருசம் வந்தவன், காலிலே பருவினாலே நடக்கக் கூடாமல் சதுர நாற்காலியிலே யெடுத்து வந்து வைத்தார்கள். மால்தீவு ராசாவினுடைய குமாரத்தி அனுப்பின பெகுமானம் கடல் தேங்காய் ஒன்று, பாய் ரெண்டு, அம்பா[2] ஒரு சேர், ஒன்றரை சேர் காணும்—அது ஒரு பையிலே போட்டு அரக்கு முத்திரை போட்டு யிருந்ததையும், காகிதம் ஒரு பையிலே போட்டு அதையும் தட்டிலே அமத்திக் கொண்டு முன்னே கொண்டு வைத்து (அவன்) சலாபம் பண்ணினான். அப்பால் அதையெல்லாம் எடுத்து வைக்கச் சொல்லி, காகிதம் போட்டு யிருக்கிற பையை மாத்திரம் யெடுத்து யென் கையிலே குடுத்து, யிந்தக் காயிதங் கொடுத்தது ஆரென்று கேட்டார். ராசாவினுடைய குமாரத்தி உங்களுக்கு சலாம் சொல்லச் சொல்லிச் சொன்ன தென்ன வென்றால், "முன் யிங்கிலீசுக்காறர், ஒலாந்தாக்காறர் வேண்டிய பேர் தங்கள் ஆசராவிலே யிருந்தால் சகல மத்தத்துப் (உதவி) பண்ணுகிறோமென்று பேசினார்கள். இப்போவும் பேசுகிறார்கள். நாங்க(ள் அதுக்குச்) சம்மதியாமல் முசியே துப்பிளேயிக்சுவினுடைய ரூபில் (நேரில்) கண்டு பேசினதுக்கு, அவரிருந்து கொண்டு நீங்கள் ஒரு ஆசுராவும் சேரக் கவையில்லை. எங்கள் ஆசிராவிலே யிருங்கோள். உங்களுக்கு சகல மத்தத்தும் பண்ணுகிறோம் யென்று சொல்லி அப்படியே மூணு கப்பலை அனுப்பிவிச்சு எங்கள் சத்துருக்களை ஓட்டிவிட்டு, அவர்கள் கப்பலையும் சுட்டிப்போட்டு எங்கள் சீமையு மெங்களுக்கு வாங்கிக் குடுத்தார். அப்பால் முசியே கொதே எங்கள் ராசாவை மலையாளத்திலேயிருக்கிற கண்ணனூர் அல்லி ராசா பிடிச்சுப் போனவனுக்குக் காகிதங்களெழுதி, எங்கள் ராசாவையும் விடுவிச்சு

[1] இவன் பெயர் திரிப்பிலி என்று சில பக்கங்களுக்கு முன் எழுதப்பட்டுள்ளது.
[2] திமிங்கலத்தின் வயிற்றில் சுரக்கும் ஒரு வாசனைத் திரவம்.

விட்டார்.[1] யிப்பால், யெங்களுக்குக் கப்பலுகள் மூணு நாலு உருப்படி வந்து வியாபாரஞ் செய்து கொண்டு போனாலே அல்லாமல் எங்கள் நிறுவாகம் வரமாட்டாது. இதல்லாமல் அத்த சேஷம் (எஞ்சி) யிருக்கிற சத்துருக்களையும் நிவாரணம் (நிர்மூலம்) பண்ண வேணு," மென்று சொன்னதுக்கு, அப்படியே செய்து தாறேனென்றும், நீங்கள் விசாரமில்லாமல் சுகமாயிருங்கோ ளென்றும் சொன்னார். அந்த வக்கீல் வந்தவன் சலாம் பண்ணினான். அப்பால் பாக்கு வெத்தலை பன்னீர் குடுத்து அவனைப் போகச் சொல்லி, முசியே திரிமிலியேரையும் போகச் சொல்லி (விட்டார்).

அப்பால் "சீமா (குத்தகை) பணத்தில் ... சாமீன்தாரருக்கு குத்தகைக்காரர் பேரிலே யென்ன வரவேணுமோ (என்பதை) யெழுதிக் குடுத்தால், நான் வாங்கிப் போடுறேன்," யென்று சொன்னார். "அசைசியம் (செய்கிறேன்) அய்யா! உங்களுக்குப் பாத்தியமான படியினாலேயும் ... என் பேரிலுள்ள பட்சத்தினாலேயும் (இதைச்) சொன்னீர்கள்! அப்படியே யெழுதி வந்து குடுக்கிறே" னென்று சொல்ல வேண்டிய பேச்சு யுக்தமாய்த் தானே சொல்லி அனுப்பி விச்சுக் கொண்டு வரச்சே, ஆற்காட்டிலே யிருந்து மமுதல்லி கான் சென்னபட்டணத்துக்குப் போனதும், அவனுக்கு நடந்த மரியாதையும், அவன் லூயிசு மதோர் (Luis Madeiro) தோட்டத்திலே[2] யிருக்கிறதும், யினி மேல் பாணவித்தை முதலான சம்பிறமங்கள், வேடிக்கைகள், வினோதங்கள் காண்பிக்கப் போறாப் போலேயும் சேதி வந்ததை சவிஸ்தாரமாய்ச் சொல்லிப் போட்டு, அனுப்பி விச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1755 வருசம், செப்த்தம்பர் மாசம், தேதி 11; யுவ வருசம், ஆவணி மாசம், தேதி 30; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோரைக் கண்டு ஆசாரம் பண்ணி, துறையூர் காகிதம் நேத்து பிரான்சுப்படுத்தச் சொல்லிக் குடுத்தக் காகிதத்தையும், பிரான்சுப்படுத்தின காகிதத்தையும் கையிலே குடுத்து, அதை (அவர்) படித்துப் பார்த்துக் கொண்டார். (அப்பால்) முசியே துபொசேத்து மால்தி தீவு[3] ராசாவினுடைய குமாரத்தி கோன்சேலுக்கு எழுதின

[1] இந்த அலி ராஜா என்கிறவன், 1753இல் மாலத்தீவுகளைக் கைப்பற்றத் திட்டமிட்டு, முதலில் தோற்று, பின்பு வெற்றி பெற்று மாலத்தீவு மன்னனையும் அவன் மகனையும் கண்ணனூர் கொண்டு வந்து சிறையிட்டான். மன்னன் சிறையிலேயே இறந்து போனதாகவும், மகன் மட்டும் 1758 வரை சிறையிலே உயிருடன் இருந்ததாகவும் தெரிகிறது. (See English vol.9, P. 363)

[2] இது அன்று கவர்னரின் மாளிகையும் தோட்டமும் இருந்த இடம். இன்று அண்ணா சாலை–வாலாஜா சாலையை ஒட்டிய Government House ஆக உள்ளது.

[3] இத்தீவின் பெயரினை எத்தனை விதமாய் எழுதியிருக்கிறார். அதேபோல்தான் கப்பித்தான் பெயரையும் கூட எழுதியுள்ளார்.

காகிதமொன்றை முசியே லெறி கையிலே கொண்டு வந்து குடுத்தார். அவர் அதை யென் கையிலே குடுத்து, திராதிக்சியேம் (மொழிபெயர்ப்பு) பண்ணிவரச் சொல்லிக் குடுத்து, அப்பால் குஞ்சிய நாயரு[1] யென்கிறவன் ஒரு ஓலையும், கோட்டத்து (கடத்தனாடு?) ராசா வென்கிறவன் ஒரு ஓலையும் அனுப்பினதை யென் கையிலே குடுத்து படித்துச் சொல்லச் சொன்னார். குஞ்சு நாயரு யென்கிறவன் யெழுதின ஓலையிலே, "முசியே லூயேத்து (M. Louet) – மயேக்கு திறேக்குதோராயிருக்கிறவர் – சிறக்கல் ராசாவினுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டு யெனக்கு மரியாதையாய் ஓலை எழுதாமலும், மாதப்படிக்கு எனக்குக் கொடுக்கிறதை அஞ்சு வருஷமாய்க் குடாமலும், யிப்படி யென் காரியத்திலே தாஷ்சியாய் நடத்திக் கொண்டு வருகிறார். நாங்கள் கும்பினீருக்கு அனுகூல மாயிருந்து இங்கிலீசுக்காறரையும், இங்கிலீசுக்காறருக்கு மத்தத்தாயிருந்த மலையாளத்து (மலபார்) ராசாவையும் செயித்த சம்மதி யெல்லாம் உம்முடைய மனதுக்கு அறிந்திருக்குமே. இப்பவும் கோட்டத்து ராசா ... நம்மையும் உமக்கு ஓலை யெழுதச் சொல்லி, தாமும் உமக்கு ஓலை யெழுதிவிச்சார். அது பார்த்துக் கொள்ளச்சே தெரியவருமே. யிப்பவும் நாம் பிரான்சுக் கும்பினீருக்குப் பண்ணின உபகாரத்துக்கு யிப்படிச் செய்கிறதல்ல. யிந்த மாதப்படி குடாமல் போனதைத் தொட்டு, மரியாதையாய் ஓலை யெழுதாமல் போனதைத் தொட்டு, அதினாலே யெனக்கு வந்த தாழ்த்தி யென்ன, முசியே லூயேத்துக்கு வந்த உசத்தியென்ன? யினி மேலாகிலும் மரியாதையாய் நடந்து கொள்ளச் சொல்லியும் மாதப்படி குடுக்கச் சொல்லியும் எழுதி அனுப்பு," மென்று யெழுதி யிருந்த வாசகத்தைப் படிச்சுச் சொன்னதுக்கு, முசியே லெறியிருந்து, "மாதம் நூறு மூட்டை அரிசி குடுக்கிறது. அது முசியே லுயேத்து கொடுக்க மாட்டமென்று சொல்லுகிறது ஒன்று. இரண்டாவது, இராசாவென்று நானெழுதுகிறது யில்லை யென்கிறதொன்று. யிது ரெண்டு காரியம் நிமித்தியம் அவர்கள் யெல்லாரும் எழுதுகிறது. முசியே லுயேத்து எது(க்கும்) சம்மதிக்க மாட்டமென்று சொல்லுகிறான். இது நிமித்தியம் முசியே லுயேத்துக்கு யெழுதி அனுப்பிவிச்சோம். யிவர்களுக்குப் பதிலுத்தரம் எழுதவேணும். யிதையும் கோட்டத்து ராசா யெழுதின ஓலையும் இரண்டும் பிரான்சிலே யெழுதிவாரு," மென்று சொன்னார்.

### *1755 வருசம், செத்தேம்பர் மாசம், தேதி 13; யுவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 1; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே கும்பினீர் வர்த்தகருது காங்குக் (முரட்டு நீலத்துணி)

[1] குஞ்ஞன் நாயர் என்பதைத் தான் இப்படியெல்லாம் எழுதியிருக்கிறதோ!

கட்டு பார்வையிட்டு நாற்பத்தஞ்சு கட்டுப் போட்டார்கள். அந்தக் காங்குப் பிடவைப் பார்க்கச்சே பிடவை மெத்த யிளப்பம் யென்று முசே மீரா கும்பினீர் வர்த்தகர் பேரிலே அக்கசு (வெறுப்பு) வச்சுக் கொண்டு மெத்தக் கோட்டாவு பண்ணினான் (புகார் சொன்னான்). முசே தெபறேனும் பிடவை யிளப்பம் யென்று சொன்னான். ஆனால் பிடவை யிளப்பம் யென்கிறது தப்பில்லை; முன்னைப் போலே, கும்பினீர் பெரிய துபாசி வழியாய் துரை ஒரு மார்க்கத்துக்குள்ளே வராதபடி யினாலே, கும்பினீர் வர்த்தகர் கோன்சேல்காரர்களுக்கெல்லாம் நழப்பு வார்த்தைகளைச் சொல்லி சுயமாய் நடத்திக்கொண்டு போகிறபடியினாலே பிடவைகள் நாணயம் தப்பிப் போனதுமல்லாமல், விலைகளும் ஒசந்து போய், சமயத்துக்குப் பிடவைகளும் வந்து கட்டு விழுகிறதுக்கும் யில்லாமல் கும்பினீர் காரியமும் தாட்சியாயி, பட்டணத்திலேயும் காரியம் தாட்சியாயி, பட்டணத்திலேயும் நியாய மென்கிறது யில்லாமல் அவனவன் துரையாய், ஆற்காட்டிலே தோஸ்த்து அல்லி கான் நாளையிலே வீட்டுக்கு வீடு நவாபு பட்டம் ஆண்டாப் போலே, யிந்தப் பட்டணத்திலேயும் கூலிக்காரன், குப்பைத் தலையன் முதலாய் நான்தாண்டா யிந்தப் பட்டணத்துக்கு யெசமான்டா யென்று சொல்லி, அவனவன் ஒரு வெள்ளைக்காரனைச் சேர்த்துக் கொண்டு தொரைத்தனம் பண்ணுகிறபடியினாலே, நியாயம் என்கிறது யில்லாமல் அனியாயமாய் நடக்குறதிலே சந்தேகமென்ன? முன் யென்ன புண்ணியம் பண்ணியிருக்குதோ, யிந்த புதுச்சேரி முன்னுக்கு யென்னமாய் (நடந்துதோ), அதினாலே யிந்த அபந்தரை யிலேயும் யிந்த மட்டுக்கும் நடக்குறதென்றாப் போலேயும் தோத்தியிருக்குது.

***1755 வருசம், செத்தெம்பர் மாசம், தேதி 16; யுவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 4; செவ்வாய்வாரம்***

இத்தனாள் காலத்தாலே கோவர்ணதோர் அவர்களைப் போய் சந்தித்த(போது), அவர் முசியே கோற்னேயுடனே உலாத்திப் பேசிக் கொண்டிருந்தார். அப்போ என்னை அழைத்து மலையப்ப னென்கிறவன் அங்கே சுண்ணாம்புக் காளவாய்ப் போடுகிறதுக்கு விறகு மத்தது யென்ன சரன்சாமி வேணுமோ அதுக்கு மத்தத்து பண்ணச்சொல்லி, அவ்விடத்து அமுல்தாரனுக்குச் சேதி யெழுதி அனுப்பென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

அப்பால் முசியே பேலன் (M. Blanc) என்கிறவன் பாரிசிலே யிருந்து வந்த தேவனாம்பட்டணம் என்கிற கப்பல் கப்பித்தான் (என்னிடம்) சொன்ன சேதி: சீர்மையிலே யிங்கிலீசுக்காறர்களுக்கும் பிரான்சுக்காறர்களுக்கும் அமீரிக்கு (அமெரிக்கா) ராச்சியத்திலே காபிரி(கள்) நிமித்தியமாகச் சண்டை சுத்திக்கொள்ளுகிறதா யிருந்துதே,

அதுக்கு இரெண்டு வருஷம் ஒரு தவணை வைத்து இதுக்குள்ளே பேசிச் சமாதானம் பண்ணிக் கொள்ளுகிறது, யிதிலே சமாதானம் ஆகாவிட்டால் அப்பால் சண்டை யென்று நிறுணயப் படுத்திக் கொண்டார்க ளென்றும், கும்பினியாருடைய காயிதங்கள் முசே கொதேயிக்கும் கோன்சேலுக்குங் கொண்டு வந்து குடுத்தேன் யென்றும், பின்னையும் பல சேதியாய் ... பேசியிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு போன பிற்பாடு, முசியே லாசு, (முசே புசியின்) கணக்குத் தீர்க்கிற நிமித்தியம் வரச் சொல்ல நான் போனேன்.

### *1755 வருசம், செப்த்தம்பர் மாசம், தேதி 30; யுவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 18; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே மயிசூர் வைக்கீல் வெங்கிட்டநாராயணப்பய்யர் சீரங்கத்திலே நந்திராசா வைத்துப் போட்டுப் போன கோனேரி ராயனென்கிற வைக்கீலும், சம்பிறத்தி (அவன் எழுத்தன்) ஒருத்தனும் ஆக ரெண்டு பேரையுங் கூட்டிக் கொண்டு, நந்திராசாவினுடைய காகிதமொன்று முசியே லெறி கோவர்ணதோர் அவர்களுக்குங் கொண்டு, துரையவர்க ளண்டைக்குப் போய்ப் பேசவேண்டிய பேச்சும் பேசிக் காகிதமும் குடுத்து வரவேணு மென்றழைத்தவிடத்திலே, மேல் வீட்டின் பேரிலே போய் கோவர்ணதோரை சந்தித்து, ஆசாரம் பண்ணின விடத்திலே, அவரவர்களுடனே பேசியிருந்து அவரவரை அனுப்பிவிட்டு, காம்பிராவிலே போகச்சே, யென்னைப் பார்த்து வரச் சொல்லி உள்ளே போய்க் காகித மொன்று பாத்தெடுத்து, சேத்துப்பட்டிலே மீர் யென்று சொல்லி, அவன் பேர் விசதப்படாமல் (தெரியாததால்) ஆரென்று கேட்டார். "முன் சேத்துப்பட்டு மீர் சத்துவைச் (Mir Asad) சேர்ந்தது. அதன் பிற்பாடு சந்தா சாயபு வாங்கிக் கொண்டு (அதைப் பிடித்து), சேக்கு அசேனுக்குக் கொடுத்திருந்தது. அப்பால் சேக்கு அசேன் சீரங்கம் சண்டையிலே யிங்கிலீசுக்காறர் கிட்ட அகப்பட்ட பிற்பாடு, பாப்பய்யப் பிள்ளை வசம் பண்ணியிருந்தது. அப்போது அந்தக் கோட்டைக்கு யெசமானத்துவம் நிசார் மகம்மது கான் யென்கிறவனை வைத்தான். அவன் தானே பாப்பய்யப் பிள்ளையுடனே யெதிர்த்துக் கொண்டு மமுதல்லி கான் இங்கிலீசுக்காறரைச் சேர்ந்து போனான்," என்று சொன்னதுக்கு, பேர் வயணம் அந்தக் காகிதத்திலே யெழுதிக் கொண்டு, அப்பால் மயிசூர் வெங்கிட்டநாராயணப்பய்யர் வகையிறாக்களை அழைக்கச் சொல்லி, யென்ன வந்த காரிய மென்று கேட்டார். அவர்கள் நந்திராசாவினுடைய காகிதம் சரிகைப் பையிலே போட்டு யிருந்ததையுங் குடுத்து சேந்தமங்கலம் ராமிரெட்டி பேருக்கெழுதின காகிதத்தையுங் கொடுத்து சேதி சொன்ன ...

# அக்டோபர் 1755

*1755 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 3; யுவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 21; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலத்தாலே கும்பினீர் வர்த்தகருடைய பார்வையானபடியினாலே கோட்டைக்குப் போய் பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருக்கச்சே, முசியே கோவர்ணதோர் அழைச்சனுப்பினார். போனவிடத்திலே சிற்பி (Sirpi) சுபா திலாவாறு (திலாவர்) கான் அனுப்பின காகிதத்துக்கு பிரான்சுப் படுத்தின காகிதமும், யிந்த ரெண்டு காகிதமுங் கொண்டு போய்க் குடுத்து, அப்போ முசியே கோவர்ணதோர் பார்த்துக் கொண்(டார்). மயிலாப்பூர் விசுப்பு பாதிரி னொரேஞ்நு (முன்பு நொரோஞ்நு) யென்கிறவரைப் பாளையங் (படை) கூட்டி சலாபத்து சங்கு பாளையத்துக்கு அனுப்பச் சொல்லி யெழுதினோமே, அவர் போய்ச் சேர்ந்தாரா யென்ன வென்று கேட்டார். அந்தப்படியே பாளையங் கூட்டி அனுப்பிவிச்சதாகவும் பாதிரி விசுப்பென்கிறவரும் கோவைக்குப் (கோவா) போய்[1], அப்பால் பயணமாய் சலாபத்து சங்கு தண்டுக்குப் போறாரென்றும் யெழுதி யிருக்குதென்று சொன்னேன். நல்லதென்று சொல்லி ...

*1755 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 7; யுவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 25; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே யேழரை மணி வேளைக்கி கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவர்ணதோர் அவர்களைச் சந்திச்ச(போது), அவர் முசே தெபொசேத்து வகையிராக்களுடனே பேசிக் கொண்டிருக்கிற அவசரமாயிருந்தது. அப்பா லங்கே யிருந்த மனுஷர்க ளெல்லாம் அவரவர் அனுப்பிவிச்சுக் கொண்டு போன பிற்பாடு யென்ன சேதி யென்று என்னைப் பார்த்துக் கேட்டார். மயிசூரிலிருந்து சிறிது சேதி வந்தது, கேட்ட சேதியைச் சொல்லுகிறேனென்று சொன்னதுக்கு, சொல்லென்று சொன்னதின் பேரிலே, சொன்ன சேதி என்ன வென்றால்: நந்திராசா மயிசூருக்குப் போய் ராசாவைக் காண வேணுமென்று போனவன், ராசா தன் பேரிலே மாறுபாடாய் விரோதமாயிருக்கிற சாடை அறிஞ்சு, உள்ளே பிறவேசியாமல், ஒரு நாழிகை வழியில் நஞ்சுண்டபுரம் யென்று அவர்கள் ஈசுவரன் கோயிலிருக்கிற பேட்டை ஒன்று (இருக்கிறது), அதிலே யிருந்து

[1] அன்று கோவாவிலிருந்த போர்த்துக்கீசிய திருச்சபையினரையே இந்தியாவிலிருந்த ரோமன் கத்தோலிக்கக் குருமார்கள் தலைவர்களாய் ஏற்றிருந்தனர். பிஷப்புப் பட்டம் வழங்கும் உரிமையையும் போர்த்துக்கீசிய திருச்சபையினரே பெற்றிருந்தனர்.

கொண்டு, கெட்டவன் பட்டவனாக வந்து சேர்ந்தவர்கள்—வெள்ளைக்காறர்கள், மிஸ்தீசுகள், சட்டைக்காற வகையிரா முன்னூறு பேர்களையும் சிறிது பாறுக்காறர்கள்—எல்லாம் சேர்த்துக் கொண்(டார்); மயிசூர் சீர்மைக்குத் தளகற்த்தராக (இவர் இருந்த) படியினாலே முன்னிருந்த ராசாவைக் கொன்று போட்டு, தேவராச உடையார் என்கிறவரும் நந்திராசாவும் யிப்போ யிருக்கிறவனைப் பட்டத்திலே வைத்து, சகலமும் தாம் ஆக்கிறமிச்சுக்கொண்டு, ராசாவுக்கும் (நந்திராசா தன்) பெண்ணைக் குடுத்து (மணஞ்செய்து) வைத்துக் கொண்டு யிருந்தார்கள். இப்படி யிருக்கச்சே நந்திராசா சவசப்படாமல், ஒருத்தர் பேச்சுங் கேளாமல் சமுஸ்தானத்துத் திரவியத்தை யெல்லாம் திருச்சிராப்பள்ளி வாங்குறோ மென்று மூணு கோடி திரவியம் சிலவழிச்சது மல்லாமல், ராச்சியத்திலே அபகீற்தியைச் சம்பாதிச்சது மல்லாமல் மயிசூரோடே சேர்ந்த ராச்சியமெல்லாம் நிப்பாந்தமாய்ப் (நாசப்பட்டுப்) போச்சுதென்று யோசனை பண்ணி, நந்திராசாவைப் பிடிச்சுக் காவல் பண்ணவும், முன் சருவாதிகாரம் பண்ணின பிறதானி பண்டிதன் வெங்கிடபதி அய்யனுக்கு (மீண்டும்) குடுக்கவும், யிப்படி ராசாவும் ராசாவினுடைய தாயாரும் பிறதானி பண்டிதனும் யோசனை பண்ணி யிருந்ததாகவும், இந்தச் சேதி நந்திராசாவுக்கும் அவர் தமயன் தேவராச உடையாருக்கும் வெளியாயி அவர்கள் பந்துபஸ்து பண்ணிக்கொண்டு, முன் பிறதானித்தனம் பண்ணின வெங்கிடபதி அய்யனையும் அவருடனே ஆரார் அந்த யோசனைக்குள்ளே யிருந்தார்களோ அவர்களை யெல்லாம் பிடிச்சுக் காவல் பண்ணி, ராசாவைபும் அரண்மனையிலே தானே யிருக்கப் பண்ணி, அரண்மனைக்கி ஒருத்தரையும் போகவொட்டாமல் பண்ணி, ராசாவையும் அரண்மனையிலே தானே காவல் பண்ணுகிறதாகவும், யிந்தப்படி யெல்லாம் ... திட்டம் பண்ணியிருக்கிறதாக சேதி கேழ்க்கப்பட்டுது. யிதன் பிற்பாடு யென்னமாய் நடந்ததோ தெரியாது யென்று சொன்னதுக்கு, யினி மேல் யென்ன நடக்குமோ அதை விசாரித்துச் சொல்ல வேணு மென்று சொன்னார். நல்லதென்று சொ(ன்னேன்).

பின்னே ஒரு சேதி துலுக்கர் பிறப்பிச்சார்கள்: "காசுதீன் கான்[1] பவுன்சு வந்து புராணபுரியும் ஆசேர் (ஆசீர் கட்) யென்கிற கோட்டையும் வாங்கிக் கொண்ட தாகவும், இந்தச் சேதி கேட்டு சலாபத்து சங்கு அயிதராபாத்து விட்டு அபரங்காபாத்துக்குப் போனாரென்றும் ஒரு சேதி பிறக்குது, பொய்யோ மெய்யோ தெரியாது, யென்று சொன்னதுக்கு, மெய்தா னென்று சொன்னார்.

[1] இவன் காசியுதீன் கான் மகன் முகமதலி கான். ரசா சாயபு ஆகியோரை அவர்களது தந்தையின் பெயரால் அடிக்கடி குறிப்பிடுவது போன்றது இது.

அப்பால் அயிதராபாத்துலே யிருந்து ராசா சாயபுக்கு வந்த ஒரு காகித(த்தைக்) காண்பிச்சுப் படிச்சுச் சொல்லச் சொன்னார். அதன் மேல் விலாசம் பார்த்து கோசா கலந்தர் கான் (Coja Qalandar Khan) மகன் அயிதர் சிங்கு (ஐதர் ஜங்கு) யென்று முசியே புசி மாரிபத்திலே சலாபத்து சங்கு அண்டையிலே யிருக்கிறான். அவன் சந்தா சாயபு மகனுக்கு அனுப்பின காகிதமென்று சொன்ன மாத்திரத்திலே, சோபுதாரன் கையில் குடுத்து அவனண்டைக்கு அனுப்பச் சொன்னார். அந்தப்படி அனுப்பிவிச்சேன்.

அப்பால் அயிதர் கான் காகிதம் ஒன்று குடுத்துப் படித்துச் சொல்லச் சொன்னார்.

அதிலே பறங்கிப்பேட்டையிலே தங்களுது பண்டகசாலை ஒன்று யிருக்கு தென்றும், அது (அதன் வாடகை) தர்மத்துக்கு நேமிச்ச தென்றும், அது முசியே ஒமோ (M. Aumont) யிடிக்குறா னென்றும், அது யிடியாமல் படிக்கி ஒரு சன்னது (கொடுப்பதோடு), சிதம்பரத்திலே யிருக்கிற தங்கள் வீடு தோட்டங்களை விடச் சொல்லி ஒரு சன்னதும் யெழுதி அனுப்ப வேணுமென்றும் யெழுதி யிருக்குதென்று சொன்னதுக்கு, பிரான்சிலே யெழுதிக் கொண்டு வரச் சொல்லிக் கையிலே கொடுத்து ...[1]

### *1755 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 9; யுவ வருசம், பிறட்டாசி மாசம், தேதி 27; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி கோவர்ண தோரண்டைக்குப் போகையில் முசியே சோபினே, முசியே தெபறேன் வகையிராக்களுடனே (அவர்) பேசியிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணுகையில், சென்னப்பட்டணத்திலே மமுதல்லி கான் யிருக்கிறானே அவனிப்போ யிருக்கிற சமாச்சாரம் தெரியுமா வென்று கேட்டார். சீர்மைகளிலே யெல்லாம் மமுதல்லி கானுடைய அமுல்தாரர்கள் இங்கிலீசுக்காற(ருடைய) ... உத்தரவு இல்லாமல் ஒரு காசு தீண்டப் போகாது யென்று இங்கிலீசுக்காரர்களின் தாசில்(தார்கள்) அமுல் (ஆணை பிறப்பித்துள்ளனர்). அந்தப்படி ... இங்கிலீசுக்காறர் மனுஷர் ஆற்காட்டு வகையிரா யிடங்களுக்கெல்லாம் போனார்களென்று சுபுறும், இதல்லாமல் மமுதல்லி கானைச் சிலவுக்குக் குடுத்து சென்னப்பட்டணத்திலே தானே வைக்கிற தாயிருக்குதென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள் யென்றும், மமுதல்லி கான் வெகு விசாரத்துடனே யிருக்கிறானென்றும், அப்துல் நபி கான் பேரன் அப்துல் மசீது கான் பவுன்சு நெல்லூர் சீர்மையிலே போய் சிறிது சீர்மை சப்த்தி

[1] இங்கெல்லாம் சில வரிகள் கிழிந்து போயின.

பண்ணினார்களென்றும், யிது முதலான சேதிகள் யெழுதி வந்தது, யினிமேல் யென்ன நடக்குமோ தெரியாதென்று சொன்னேன்.

*1755 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 24; யுவ வருசம், அற்பிசி மாசம், தேதி 11; சுக்கிறவாரம்*[1]

இத்தனாள் காலத்தாலே யேழரை மணிக்குக் கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி கோவர்ணதோர் கப்புசுக் கோவிலுக்குப் போயிருந்தார். நான் பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருந்தேன். அங்கே ஒரு கும்பினீர் சேவுகன் வந்து யென்னுடனே சொன்ன வயணமென்ன வென்றால்: "வந்தவாசி அமுல்தாரனாகிய அய்யண்ண சாஸ்திரியை[2] துரை அவர்கள் அழைத்து வரச் சொன்னார்கள்; நான் போய் ராமனாத முதலியார் தெருவிலே யிருக்கிற தங்கள் வீட்டிலே அவரிருக்கிறதிலே போயழைத்த விடத்திலே, உங்கள் டலாயித்தர் (காவலாளிகள்) சீமைப்பணம் நிமித்தியம் மறிச்சுக் (காவலிட்டு) கொண்டிருக்கிறார்கள். தங்கள் உத்தாரமில்லாமல் விடப் போகாதென்று சொல்லுகிறார்கள். ஆனபடியினாலே தங்கள் அண்டைக்கு வந்தே," னென்று சொன்னதுக்கு, நான் ராமாசி பண்டிதருக்கு உத்தரவு குடுத்து, அந்த கும்பினீர் சேவுகன் பிறகே அய்யண்ண சாஸ்திரியை அனுப்பிவிடச் சொல்லிச் சொன்னபடிக்கி, அந்தப்படியே கும்பினீர் சேவுகன் போய் அழைத்துக் கொண்டு கோட்டைக்கு வந்தான்.

யிதுக்குள்ளே துரையும் பூசை கேட்டுப் போட்டு மேல்வீட்டின் பேரிலே போனார். நானும் மேல்வீட்டுக்குப் போகவேணுமென்று பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருந்து பிறப்பட்டுப் போகச்சே, முசே லெறி (அல்ல, வெறி) யெதிரே வந்து சொன்ன வயணம் யென்ன வென்றால்: "நான் பிணையாளியிருக்க, நீரென்ன நியாயத்தினாலே அய்யண்ண சாஸ்திரியைக் காவலிலே வைத்தீர்? நல்லது ஆகட்டும். நீர் வெகு காரியம் துராகதம் பண்ணியிருக்கிறது மல்லாமல், வெகுசாய்த் திருடியிருக்கிறீர். யிதுகளுக் கெல்லாம் துரையவர்கள் முன்பாக வெளிப் பண்ணுகிறே," னென்று மெத்தவும் உதுட்டாய்ப் (அவமதிப்பாய்ப்) பேசினான். அதுக்கு நான், "நீர் தான் திருடன். நீர் தான் வெகு காரியம் துரோகம் பண்ணு(கிறாய். அதை நான் துரையிடம் வெளிப்பண்ணு கிறேன்,") என்று, அவன் சொன்னதுக்குப் பதிலுத்தரவு அதுக் கேத்தபடிக்கி சொல்லிப்போட்டு, நான் மேல் வீட்டின் பேரிலே துரையவர்களண்டைக்குப் போனேன்.

---

[1] இங்கு 15 நாள் பதிவு விடுபட்டுள்ளது. இப்படி மொத்தம் 2வருடம், 45 நாள் பதிவுகள் விடுபட்டுள்ளன.

[2] அய்யன் சாஸ்திரி என்று ஆங்கிலத்தில் உள்ளது. அய்யண் சாஸ்திரி என்று இப்பிரதியிலும் ஒரிடத்தில் உள்ளது.

முசே வெறியும் வந்தான். அப்போ முசே பெடுத்தல்மீ வகையராக்களுடனே துரையவர்கள் ஓலாத்திக் கொண்டு யிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்போ வெள்ளைக்காரர் ஓடிப் போனவர்கள் அகப்பட்ட படியினாலே அவர்களுக்கு தெண்டனை நேமிக்கிற நிமித்தியம் கோன்சேல் தே-துருப்பு (Council of War) கூடினார்கள். அந்த மட்டிலே நான் பிறப்பட்டு, பிடவை பார்க்கிற சாலையிலே வந்தேன்.

அதன் பிறகு முசே ஷெவிரோ வந்து, யென்ன நடந்தது யென்று கேட்டதுக்கு, நான், "வர வேண்டிய பணத்துக்கு அய்யண் சாஸ்திரியை மறிச்சி வைத்ததுக்கு முசே லெறி (வெறி) வந்து யில்லாத விசேஷங்கள் யேறக்குறையச் சொன்னார். அதுக்கு நான் யெல்லாம் துரையவர்கள் முன்பாகத் தீருது யென்று சொன்னே," னென்று சொன்னதுக்கு, முசே ஷெவிரோ அதைக் கேட்டுக் கொண்டு தன்னுடைய காம்பிராவுக்குப் போய் முசே லெறி (வெறி), முசே குப்பி, அய்யண்ண சாஸ்திரி யெல்லாரும் கூட யென்ன யென்னமோ யோசனை பண்ணிக்கொண்டு, யென்னை அழைத்தனுப்பி, நான் போன விடத்திலே அவர்கள் சொன்னது: "நீர் பண்ணுகிற தெல்லாம் துரோகம் பண்ணுகிறீர். யிப்படிப் பண்ணலாமா?" யென்று கேட்டனர். நான், "எனக்கு வரவேண்டிய பணத்துக்கு மறிச்சால் குடுக்க வேணுமோ, தேவையில்லையோ? கும்பினீரிலேயானால் யென்னைப் பணம் குடுக்கச் சொல்லி அவசரம் பண்ணுகிறார்களே, நான் எங்கே யிருந்து குடுக்கட்டும்? நீங்கள் பண்ணுகிறதெல்லாம் துராகதம். குடுக்க வேண்டிய பணமும் குடாமல் சண்டித்தனம் பண்ணலாமா?" யென்று கேட்(டேன்). அவர்கள், "நாங்கள் வெள்ளைக்காரப் பிணையாளி (ஜாமீன்தாரர்கள்). வெள்ளைக்காரர்க ளெல்லாரும் யேகமாய்க் கூடி துரையுடனே பேசினால் உன் காரியம் என்ன நடக்கும்? யெங்களை துவேஷிச்சுக் கொள்ள வேண்டாம்," யென்று நயமும் பயமுமாய்ச் சொன்னார்கள்.

அதுக்கு நான், "யிந்த உருட்டுகளுக் கெல்லாம் நான் பயப்படுகிறவனல்ல. நியாயமான காரியத்துக்குக் கட்டுப்படுவேன். யிப்படிப்பட்ட அன்னிதமான காரியத்துக்கு நான் ஒருக்காலும் பயப்படத் தக்கதில்லை," யென்று சொல்லி, "முன் ஒரு அன்னிதம் நடந்து, யெங்கள் பெரியோர்கள் சீமை மட்டுக்கும் பிராது பண்ணின விடத்திலே, அதுக்கு நடந்த நியாயங்களெல்லாம் நீங்கள் கேழ்விப்பட்டு யிருப்பீர்கள். அப்படிப் பட்டவர்களாக்கும். யிதுவுமல்லாமல் முப்பது வருஷ காலமாய் நான் பிரான்சுக்காறருடனே பழகி, அவர்களுடைய மரிசி (இயல்பு) யெல்லாம் அறிஞ்சிருக்கிறவனுக்கு இன்று சொல்ல வேண்டியதில்லை," (என்றேன்). இந்தச் சேதி யெல்லாம் சொன்னதின் பேரிலே கடைசியாய் அவர்கள்

சமாதானமாய்ப் பேசினவிடத்திலே, முசே லெறி (வெறி)[1] ரொம்பவும் உபசாரம் சொல்லி, "நான் சொன்னதை ஒன்றையும் மனதிலே வைக்க வேண்டாம். நீரிப்படி துவேஷிச்சால் சாஸ்திரிக்கு யெந்தக் காரியம் கட்டும்? யெப்படி பிழைப்பான்?" என்று உபசரணைக்கு அடுத்த வார்த்தைகளாய்ச் சொன்னான்.

அப்படியிருக்கச்சே துரையவர்கள் அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைச்சவிடத்திலே நான் மேல் வீட்டுக்குப் போகச்சே, முசே ஷெவிரோ வந்து, டலாயித்து வைச்சு யிருக்குதே அவர்களை வாங்கி வந்து விடச் சொல்லி உத்தரவு கொடுக்க வேணுமென்று கேட்டதுக்கு, நல்லதென்று உத்தரவு குடுத்துப் போட்டு, நான் துரையவர்கள் அண்டைக்குப் போனேன். அவர் யென்னைப் பார்த்து, "கும்பினீர் வர்த்தகர் நமக்குக் குடுக்கிறோமென்று சொன்ன சம்மதி (சரக்கு) குறையும் கொண்டு வந்து குடுக்கயில்லை," யென்று சொன்(னார்). நான் "அவர்கள் குடுக்கிறதுக்கு முஸ்தீப்பா யிருக்கிறார்கள். கப்பல்ப் பயணம் துருசான (தாமதமான) படியினாலே அவர்களுக்கு சமயம் அகப்படாமலிருந்தது. நாளைக் கொண்டு வந்து குடுத்து விடுவார்க," ளென்று சொன்னேன். அதன் பேரிலே, "வெய்யிலானால் நாலு நாளாய் காயுது. பிடவை சுறுக்காய் அறுவாக வேணும். அந்த வேலையிலே ராத்திரியும் பகலுமாயிருந்து அறுவு பண்ணச் சொல்லி தாக்கீது பண்ணு," யென்று சொன்னார். அதுக்கு நான், "அப்படியே நித்தியம் கண்டிக்கிறேன். அவர்களும் ராத்திரியும் பகலும் அதுவே அலுவலாயிருக்கிறார்கள். அவர்களும் யினி மேல் தாமசப்படுத்தினால் மோசமென்று ரொம்பவும் பயம் தொத்தி அந்தக் காரியத்திலே சுறுசுறுப்பாய்த் திரியுறார்கள். யின்னம் நீங்களும் கண்டியுங்கோள்; நானும் கண்டிக்குறே," னென்று சொன்னது மல்லாமல், "யிந்த வருஷம் பிடவை யிப்படித் தாமசமாய்ப் போனது யெதுனாலே யென்றால், முன்னுதாய்ப் பணம் குடாதபடியினாலேயும், முன்னுதாய்ச் சன்னப் பிடவைக்குப் பணம் (முன் பணம்) விட்டதே (யொழிய இதுக்கல்ல) ஆனபடியினாலேயும் யிப்படி தாமசப்பட்டது," யென்று சொல்லி, "யினி மேல் தாமசப்பட மாட்டாது. சீக்கிறமாய்த் தானே வந்து சேரு," மென்று சொன்னேன்.

யிதுவு மல்லாமல், கோன்சேல்க்காரரெல்லாம் தங்கள் பேரிலே கோபமாயிருக்கிறார்கள், அதின் பேரிலே தங்களுடனே யென்ன யென்ன சொல்லுவார்களோ யென்று பயந்து, சீக்கிறமாய்த்தானே பிடவை முஸ்தீது பண்ணி வைக்கவேணு மென்று யிருக்கிறார்கள் யென்றும் சொன்னேன். அதின் பேரிலே, "சேலத்துப் பிடவை சம்மதி உம்மைத் தொட்டுத் தடையாய்ப் போச்சு தென்று கேழ்விப்பட்டோம். அந்த வற்த்தகரை அடிச்சு

[1] பலவிடங்களில் வெறி என்பதை லெறி என்று பிரதிசெய்தோர் எழுதியுள்ளனர்.

யில்லாத காரியங்கள் பண்ணினீறாமே," யென்று சொன்னார். அதுக்கு நான், "அப்படி நடத்தயில்லை. யெனக்கு சேலம் வர்த்தகர் பேரிலே வெகுசாய்ப் பணம் வர வேண்டியிருந்தது. அவர்கள் குடாமல் சண்டித்தனம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அது நிமித்தியம் நான் நந்திராசாவுக்கு[1] யெழுதி அனுப்பி யெனக்கு வரவேண்டிய பணம் நியாயமானபடிக்கு அவர்களைக் கண்டிச்சுப் பணம் வரப் பண்ணவேணு மென்று யெழுதி அனுப்பியிருந்ததுக்கு, அவர் சேலத்திலே யிருக்கிற அமுல்தாரனுக்கு எழுதி அனுப்பி(னார். சேலத்து) அமுல்தாரன் வர்த்தகரை அழைப்பிச்சுக் கண்டிச்சு நியாயமான படிக்கி யென் பணத்தை யெனக்கு வரப்பண்ணினார்," யென்று சொன்னதுக்கு, "அந்த வர்த்தகரை[1] யிங்கே கண்டிச்சதில்லையா யென்று," ரெட்டிச்சுக் கேட்டார். "நானென்ன யிந்த வூருக்கு நியாயக்காரனா (நீதிபதியா)? யிப்படித் தப்புந் தாருமாய் உம்முடனே சொல்லுகிறார்கள். அதை நீர் விசாரித்தாலப்போ உம்முட மனசுக்குத் தெரிய வருமென்று யிந்த மட்டுக்கும் நான் சொல்லாமலிருந்தே," னென்று சொன்னதுமல்லாமல், "அந்த வற்த்தகரை சேலத்திலே நந்திராசா மனுஷர் கண்டிச்சதே அல்லாமல் நானவர்களைக் கண்டதேயில்லை," யென்று சொன்னேன். யிதுவுமல்லாமல், அவ்விடத்திலே பிடவை விஸ்தாரமாய் முன்னையப் போலே கூட்டத்தக்கதில்லை, யிப்போ யிருபது கட்டு (மட்டும்) கூடியிருக்கிறது. அதுவே யல்லாமல் விசேஷிச்சு கூடினதில்லை. யிதுவும் யெதுனாலே அவர்கள் தடை பண்ணி விச்சுக் கொண்டிருக்கிறார்கள் யென்றால் ....[2]

(கீழ்வரும் மைசூரிலுள்ள – முன்பு மயிசூர் – கலகநிலை காரணமாக அது தடைப்பட்டுள்ளது.)[3]

மைசூரிலே (கலகப்பட்டு) யிருக்கிற படியினாலேயும், யிப்போ யிருக்கிற ராசாவைப் பிடிச்சுக் காவல் பண்ணி, அப்பாலவரை வெட்டிப்போட்டு, அவருக்குப் போன வருசம் பிறந்த பிள்ளையைப் பட்டங்கட்டி வைக்க நந்திராசா யெத்தனம் பண்ணினான். நந்திராசாவைப் பிடிச்சுக் காவல் பண்ணி, பழய பிறதானி பண்டிதன் வெங்கிடபதி அய்யனென்கிறவனைப் பிறதானித்தனம் பண்ணுகிறதுக்கு வைக்க யெத்தனம் பண்ணி(னார்கள்). நந்திராசா அறிஞ்சு, பவுன்சு தங்கள் வசமாயிருக்கிறபடியினாலே சரிக்கட்ட வேணுமென்று யோசனை பண்ணி, ராசாவினுடைய பெண்சாதி வந்து நந்திராசாவினுடைய குமாரத்தி யானபடியினாலே, குமாரத்திக்கு ... "உன் புருஷனைக் கொன்று

---

[1] வற்தகர், வர்த்தகர் என படியெடுத்தோர் எழுதியுள்ளதைக் காண்க.

[2] அடுத்து முன்னாள் (அக்டோபர் 24) தேதியே யிட்டு எழுதப்பட்டுள்ளது. அதை நீக்கியுள்ளேன்.

[3] இது ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

போடுகிறோம். உன் பிள்ளைக்குப் பட்டம் கட்டுகிறோம்," யென்று சொல்லி அனுப்பினதுக்கு, "நீர் நினைத்தாப் போலே ஒருக்காலும் நடக்க மாட்டாது, தெய்வம் ஒப்பாது. அந்த நினைப்பு நினைத்தால் உமக்கு சுவாமி துரோகம் வந்து பிடிக்கும்," யென்று பின்னையும் சொல்லத்தக்க விதமாய்ச் சொல்லி அனுப்பிவிச்(சாள்). தன் புருஷனுடனே "என் தகப்பனாராகிய நந்திராசாவினுடைய நினைப்பு யிப்படி யிருக்குது. நீரிருக்கிற எச்சரிக்கையிலே யிருமென்று," சொன்னாள். அதன் பேரிலே ராசாவானவர் நாலாயிரம் பேர் மட்டுக்கும் தனக்கு அனுகூலமானவர்களை ஆயுதபாணியாய் சேரப்பிடிச்சுக் கொண்டு தாமும் ஆயுதபாணியாயிருந்தார்.

நந்திராசாவும் ... வெள்ளைக்காறர் ஒடிப்போய் சேர்ந்தவர்களிலே யிறநூறு மட்டுக்கும் முஸ்தீது பண்ணிக்கொண்டு, அவரும் சண்டை(க்கு) ... வந்தார். அதிலே நந்திராசாவினுடைய தமையனார் பெரிய தளவாயாகிய தேவராச உடையார், தன் சரீரம் சுவஸ்த மில்லாமலிருந்தாலும், இந்தச் சேதிகளெல்லாம் கேட்டு சமஸ்தானம் முழுகிப் போற காலமாய் வந்தது; யிந்த வேளையிலே சரீரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் காரியம் கெட்டுப் போன பிற்பாடு சரீரம் சொஸ்தமானதினாலே பிறயோசனமென்ன வென்று யோசனை பண்ணிக் கொண்டு, சீக்கிறத்துக்குத் தம்பி அண்டைக்குப் போய் சமாதானம் பண்ணி, மருமகனான ராசாவண்டைக்கும் போய் சமாதானம் பண்ணி அந்த வேளைக்கி சண்டைப்படுகிறதை நிறுத்தினார். அப்பால் நந்திராசா, பிறதானியாகிய வெங்கிடபதி அய்யனையும் அவர்களைச் சேர்ந்தவர்களையும் ... ஆராரிருந்தார்களோ அவர்களையும் பிடிச்சுக் காவல் பண்ணி வீடு வாசல் கொள்ளையடிச்சு, சத்து யேறக் குறைய ஆறு லக்ஷம் வராகன் மட்டுக்கும் எடுத்துக் கொண்டு போனார். இந்த அடுக்கிலே கலாபம் தீர்ந்ததல்ல, தீராததும் அல்ல.

"அப்படி கலாபித்திருக்கிற படியினாலே, அந்த சேலத்து வற்த்தகர் சீமை அராசிகமாய் யிருந்ததைக் கண்டு, அவர்களிந்தப் படிக்குத் தாமதம் பண்ணினார்கள். இப்போவும் நீங்களும் ஒரு காகிதமெழுதுங்கள். நானும் காகித மெழுதுகிறேன். அந்தக் காகிதம் போனவுடனே பிடவை வந்து விடுமென்று சொல்லி, அப்பாலும் நூறு கட்டல்ல, அன்பது கட்டல்ல, முப்பது பொதிக்கி யிருபது கட்டுப் பிடவையாம் காட்டும் அங்கே கூடினதும் தடைப்பட்டிருக்கிறது," யென்று சொன்(னேன். அதுக்கு துரை) இந்தப் பட்டணத்துலே யல்லவா (நீர்) கட்டினதும் அடிச்சதும்; அது சேலத்திலேயா மயிசூர் சீமையிலேயா யென்று மறுபடியும் கேட்டார். "ஆமவன் குடியிருந்ததும் சேலத்திலே, பணம் வாங்கினதும் சேலத்திலே, அவ(னோடு நான்) பதினஞ்சு வருஷ காலமாய்ப் பேசினதுமில்லை,

சம்பாஷிச்சதுமில்லை," யென்று சொன்னேன். அதுக்கவர், தம்முடைய பேரினாலே ஒரு கடுதாசி எழுதி அனுப்பிவியென்று சொன்னார்.

அப்பால் சென்னபட்டணம் சீர்மையிலே மமுதல்லி கான் போய் சேர்ந்த சம்மதியும், பேட்டி பண்ணிக் கொண்ட சம்மதியும், அவன் பேரிலே (ஆங்கிலேயர்) கணக்கு வழக்குகள் விஸ்தாரமாய் சிமதலைப் பண்ணி (சரிப்பார்த்து) பணத்தைக் குடுத்துப் போட்டுப் போ வென்று யிறுக்கி. சமுசாரத்தையும் அழைப்பிக்கச் சொல்லி, வந்தவுடனே சமுசாரத்துடனே மயிலாப்பூரிலே மகம்மது மால் வீட்டை ஒழித்துப் போட்டு, அங்கே (அவர்கள்) குடியிருக்கிறாப் போலே திட்டம் பண்ணி, சீமைப் பணமெல்லாம் அவர்கள் அமுல்தாறர் யிருந்து அமுல் பண்ணவும், யிங்கிறேசுக்காறர் மனுஷர் தாசீலா யிருந்து வருகிற பணத்தை வரப்படுத்திக் கொள்ளவும், ... சொலுதாதுகள், சிறிது குதிரைக்காறர், சிப்பாயிகள் இவர்களைக் கூட்டி மமுதல்லி கான் தம்பியைக் கூடக் கூட்டிப் பேஷ்கஷ்துப் பணமெல்லாம் வாங்கித் தங்கள் கடனுக்கு வரப்படுத்திக் கொள்ளத் தக்கதாகவும் திட்டம் பண்ணியிருந்தது.[1]

இதினாலே மமுதல்லி கானுக்கு வெகு விசாரமெடுத்து, அறியாமல் (ஆங்கிலேயரிடம்) வந்து அகப்பட்டோமென்று, வெகு விசாரத்துடனே யிருக்கச்சே, யிங்கிலிசுக்காறர் யென்ன யோசனை பண்ணிக் கொண்டார்களோ தெரியாது. மமுதல்லி கான் (தமது) பவுன்சு வைக்கத் தேவையில்லை, (இங்கிலிசுக்காரர் தாமே தமது துருப்புகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்) யென்று திட்டம் பண்ணி (விட்டார்கள்); பாளையக்காறர் பேரிலே வரவேண்டிய பேஷ்கஷ்துப் பணம் (ஆங்கிலேயரே) வாங்கத் தக்கதாக உத்தாரங்கொடுத்து, இரண்டாயிரம் வராகன் மட்டுக்கும் (முகமதலிக்கு) வெகுமானம் பண்ணி, போன சனிவாரம் அஞ்சாந் தேதி உத்திரவு கொடுத்து, அவரும் போய் சயிதாப்பேட்டையிலே யிறங்கினா ரென்று யெழுதி வந்தது யென்று சொல்ல, அதுக்கவர் (துரை) அவர்களுக்கு யெம்மாத்திரம் உண்டு சீமை யென்று கேழ்க்க, அதுக்கு நான் சொன்னது: "அவர்கள் வசமிருக்கிற சீர்மையை ஒரு துகை (கணக்குப்) பார்த்ததாய் நான் சேதி கேழ்விப்பட்டேன். அது யென்ன வென்றால், இப்போ அவர்கள் வசமிருக்கிற சீமை இருபத்தி னாலு லக்ஷம் (மதிப்புக்கு இருக்கிறது). அதைத் தானே நிதானப்படுத்திக் கொண்டு,

---

[1] ஆங்கிலேயர் தமது போர்ச் செலவுகள் அனைத்தையும் முகமதலியின் பெயரில் பற்று வைத்து, அவனது ஆடம்பரச் செலவு, குடும்பச் செலவு எல்லாவற்றுக்கும் கடன் தந்து, அவனை மூழ்கடித்தனர். 19–20ஆம் நூற்றாண்டுகளிலும் இதே போன்று சீனாவின் மீதான போர்கள், பர்மா போர், ஆப்கானியப் போர், மேற்கு ஆசியப் போர்கள், உலக மகா யுத்தங்கள் போன்ற செலவுகளையும், திபேத் போன்ற நாடுகளுக்கு அனுப்பின தூதுக் குழுக்கள் போன்ற அனைத்துச் செலவுகளையும் இந்தியாவின் தலையிலேயே சுமத்திப் பற்றெழுதினர்.

அந்த யிருபத்தி னாலு லக்ஷத்(தில்) இங்கிலீசுக்காறருக்கு சாகிறாத்து விட்டு யிருக்கிற (ஜாகீராய்க் கொடுத்துள்ள) மூணு லக்ஷமும், (அதன் மேல்) திருப்பதி, செங்கழுனீர்ப்பட்டு, திருப்பாச்சியூர் வகையிரா சீமைகள் ஒன்பது லக்ஷம் போக, (எஞ்சி) நின்ற சீமையை, யிதுவரைக்கும் மமுதலலி கான் ஆதீனத்திலே யிருந்ததை, யிப்போ எட்டு லெக்ஷம் ரூபாயிக்கு யிங்கிலீசுக்காறர் (எடுத்துக்) கொண்டு, குறை நாலு லக்ஷம் ரூபாய் அவர் சமுசாரம் (குடும்பச்) சிலவுக்கு வைச்சுக் கொள்ளத்தக்கதாய் ஒரு கணக்குப் பார்த்துத் திட்டம் பண்ணி (யிருக்கிறார்கள்); அதுவுமல்லாமல் திரிச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி வகையிரா யிப்போ புதுசாய்க் கட்டியிருக்கிற தாலுக்குகள் தவிர, முன் உபய காவேரி தீரத்திலே நம்முடய வசமாயிருந்த சீமை போக, மத்தது அவர்கள் (முகமதலி) வசமாயிருக்கிற சீமையைத் தங்கள் வசமாயிருக்கவும், திருச்சிராப்பள்ளி சீமை கோட்டை சிப்பந்தி யென்றும் (கணக்கை முகமதலி ஏற்கவேண்டும்), பாளையக்காறருடய பேஷ்கஷ்து சம்மதியும் தங்களுக்குச் சேரவேண்டும் என்பதாக (ஏற்பாடாயிருக்கிறது); அப்பால் மாபூசு கானை அழைப்பித்துக் கொள்ள, அதுக்கேத்த மனுஷரைத் தாங்கள் திட்டம் பண்ணி (அனுப்பியிருக்கிறார்கள் என்றும்), யிந்தப்படி யெல்லாம் நடந்ததாய் சேதி கேழ்விப்பட்டுது யென்று சொன்னேன். சுபான்சியோம்[1] தானா முதிர்ந்தால் (போர் ஒய்வு உடன்படிக்கை முடிந்ததும்) பிரான்சுக்காறர் வசமாயிருக்கிற சீமையும் தங்கள் வசம் (வந்துவிடும்) யென்றாப் போலேயும் (அவர்கள்) பேசிக் கொண்டதாய்ச் சொன்னார்க ளென்று சொன்(னேன்).[2] அவர்கள் (துரை) நகைச்சு, "இந்தச் சேதி நானுங் கேட்டு யிருந்தேன். அவர்கள் நினைக்கிறபடிக்கி ஒருக்காலும் நடவாது. யினி மேல் சீர்மையிலே யிருந்து சேதி வந்தால் வேறே விதமாய் வருமென்று நீ மனதிலே நன்றாய் வை," யென்று சொன்னார்.

அப்போ ஆற்காடு சேதிகள் யேதாகிலுமுண்டா யென்று கேட்டார். ஆற்காட்டில் (முன்பு) கொத்தவால்த்தனம் எல்லாம் அப்துல் வாபு (வகாபு) கான் கையில் (இருந்தது). யிப்போ (அது) யிங்கிலீசுக்காறர் வசமாயிருக்குதென்று சொன்னேன். வேலூரான் (வேலூர் கில்லேதார்) பேஷ்கஷ்து பணம் வாங்க வருகிறார்கள் யென்று முஸ்தீப்பா (எச்சரிக்கையோடு) யிருக்கிறான். இதுவுமல்லாமல், அல்லி அக்பர் யென்கிற துலுக்க வயித்தியன் ஒருத்தன் முறுத்தசல்லி கானண்டையிலே யிருந்து, அவனுடைய காரியங் கவைகளுக்(கும்) சப்பிதரல்லி கானைக் கொல்லுகிறதுக்கும் உள்க்கையா யிருந்தபடியினாலே, யிவனுக்கு யிருபத்தி னாலாயிரம் ரூபாய்க்கு சாகீர் விட்டு, பிறீதியாய் நடப்பிச்சுக்

---

[1] இவ்வார்த்தை சிதைந்துள்ளது.

[2] ஆனந்தரங்கர் கர்னாடக நிலைமையை இவ்வளவு தெளிவாகப் புரிந்து வைத்திருந்து நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. லெறி மட்டும் விண்கனவு காண்கிறார்.

கொண்டு வந்தான். அவனந்த வூரிலே யிருக்கிற சயிது (என்பவன்) வீட்டிலே யிருக்கிற கத்திக்கட்டாரியை எடுத்துக் கொண்டதாகவும், அதின் பேரிலே அந்த சயிது (அவனைக்) குத்திப் போட்டானாம். அதின் பிறகு, அவனுடைய சாகீரெல்லாம் சப்த்தி பண்ணி, அவனுடைய குமாரனுக்கு ஆறுதலையான வார்த்தைகளை (மட்டும்) சொல்லி, சண்டை யெத்தினத்தின் பேரிலே (எல்லோரும்) யிருக்கிறதா யிருக்கு தென்று (சொன்னேன்)...[1]

சலாபத்து சங்கு அண்டையிலிருந்து தம்முடைய (துரை) பேருக்கு ஒரு காகித(மும்), சென்னப்பட்டணம் கோவற்ணதோருக்கு ... ஒரு காகிதமும், மமுதல்லி கானுக்கு ஒரு காகிதமும் வேலூர் முறுத்த சல்லி கான் பேருக்கு (ஒரு காகிதமும் வந்ததைத் துரையிடம் குடுத்தேன்). மமுதல்லி கானுக்கு பேஷ்கஷ்துப் பணம் குடுக்க வேண்டாமென்று (வேலூர் முறுத்த சா அலி கானுக்கு எழுதி) வந்தது யென்று சொல்லி, தம்முடைய பேருக்கு வந்த கடுதாசியைக் குடுத்து மதனாந்த பண்டிதரை வாசிக்கச் சொன்ன விடத்திலே,[2] அதிலே யிருந்த வயணம்: "மமுதல்லி கான் பாளையக்காறர் பேரிலே பேஷ்கஷ்துப்[3] பணம் வாங்க வேணுமென்று யெத்தனம் பண்ணுகிறானாம். அந்தப் பேஷ்கஷ்துப் பணம் நம்மைச் (சலாபத் சங்குவைச்) சேர வேண்டியதானபடியினாலே, அவன் தப்பு யோசனை நினைத்தா னென்று நாம் யோசனை பண்ணி, அவனுக்கு யினி மேல் அப்படிப் பண்ண வாண்டா மென்று தாக்கீது யெழுதி யிங்கிலீசுக்காறர் பேருக்கு யெழுதி அனுப்பினோம். நீரும் அவர்களுக்கு யெழுதி அனுப்பி அவர்களை பேஷ்கஷ்துப் பணம் வாங்காமல் செய்யவும்," யென்று யெழுதி யிதுவுமல்லாமல், "நாம் மயிசூருக்கு வந்தபோது ஆற்காட்டுக்கு வந்து யிது காரியம் திட்டப்படுத்த வேணுமென்று யோசனைப் பண்ணினோம். பிரான்சு ராசா கட்டளைப்படிக்கி ஆயுதமெடுத்துச் சண்டை பண்ணாமல் பதினெட்டு மாசத்துக்கு இங்கிலீசுக்காறருக்கும் உங்களுக்கும் வாயிதாயிருக்கிற படியினாலே, உங்கள் நிமித்தியமாய் ஆற்காட்டுக்கு வராமல் அயிதராபாத்துக்கு வந்து விட்டோம். யிப்போவும் மழைக் காலமான வுடனே நாமும் அவ்விடத்துக்கு வருகுறோம். (அதற்குள்) உங்கள் வாயிதாவும் (சண்டை நிறுத்த காலம்) ஆயிப்போகுதென்று," எழுதி, "ஆற்காட்டு கற்னாட்டகம் யெப்படி பந்துபஸ்து பண்ண வேணுமோ, அப்படி பண்ணிவிக்குறோ," மென்றும் யெழுதி யிருந்த வாசகத்தைச் சொன்(னேன்). இதைப் பிரான்சுப் படுத்திக் கொண்டு வாரும், அந்தப்படியே அவரவருக்குத் தாக்கீது யெழுதி அனுப்பிவிப்போம் யென்று சொன்னார். அந்த மட்டிலே பனிரெண்டு மணி அடித்தபடியினாலே அவர் கையிலே அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

---

[1] இங்கே மேலே சொன்னதே மறுபடியும் எழுதப்பட்டுள்ளது. எனவே அது விடப்பட்டது.

[2] அக்கடிதங்கள் பார்சியில் இருப்பது வழக்கம். மதனாந்த பண்டிதன் பார்சி எழுத்தன்.

[3] பேஷ்கஷ் என்றுதான் இருக்க வேண்டும். அதுவே சரியான சொல்.

இதல்லாமல் யித்தனாள் காலத்தாலே நான் கோவற்ணமேலுக்குப் (கொவர்ணமாவுக்குப்) போனவுடனே அங்கே கேழ்விப்பட்டசேதி: ஒரு போயின்டன் இத்தனாள் காலத்தாலே சேருவைக்காரன் அண்டையிலே வந்து ஒரு காகிதத்தைக் குடுத்துப் போட்டுப் போனான். அந்தக் காகிதத்தைக் கொண்டு போய் துரை கையிலே குடுத்த மாத்திரத்திலே அவர் படித்துப் பார்த்து ஆக்கிறகப்பட்டு (ஆத்திரப்பட்டு), இந்தக் கடுதாசி கொண்டு வந்து குடுத்தவனைப் பிடித்து வரச்சொல்லி தாக்கீது பண்ணினபடிக்கு, அந்தப் போயண்டனைப் பிடித்து வந்து கேட்டதுக்கு, "நானொரு சொலுதாது கப்பித்தான் அண்டையிலே யிருக்கிறேன். அவன் துபாசி கொடுத்தா," னென்று சொன்னான். அந்தத் துபாசியை அழைத்துக் கேட்டதுக்கு, "முசியே லாசு வீட்டுக் கெதிர் தெருவிலே கிடந்தது. அதை யெங்கள் துரைக்குக் காண்பிச்சோம். அவர் துரை பேருக்கு யெழுதியிருக்கிறது, கொண்டு போய்க் குடுத்து வரச்சொன்னார். அதை போயண்டன் கையிலே குடுத்து வரச் சொன்னேன்," யென்று சொன்னதுக்கு, "தெருவிலே கிடந்த பேச்சு பொய். உள்ளபடி சொல்லு. உன் கையிலே குடுத்தவர் யின்னா ரென்று சொல்," லென்று கேட்டதுக்கு, முன் சொன்னபடிக்கே சொன்னதின் பேரிலே சாவடிக் கிட்டங்கியிலே வெவ்வேறே காவல் வைக்கச் சொன்னார்.

அதன் பேரிலே அவர்க ளெசமான், சொலுதாது கப்பித்தான் பேர்விளங்கன் வந்து துரையைக் கண்டு பேசினான். அதுக்கும் கோபமாயி அவர்களை விடாமல் உத்திரஞ் சொல்லிப் போகச்சொன்னார். அந்தக் காகிதத்திலே யென்ன யெழுதியிரு(க்கிறது), அதினாலே யிவரித்தனை கோபம் பண்(ணுகிறார்), ... (இப்படி) விசாரிக்கிறாரென்று கேட்டால், ரெண்டொருத்தர் சொன்னது : அந்தக் காகிதத்(தை) யின்னார் யெழுதினார் (என்று) தெரியாதபடிக்கி யெழுதியிரு(ந்தது); அந்த மத்தலப்பு யென்ன வென்றால், துரைத்தனம் பண்ணத் தெரியா தென்றும், அதுக்குத் தக்க தாஷணையாய் அவரை நிந்திச்சு யெழுதியிருக்கும். (அதைப்) போட்டவர்களை யின்னாரென்று அறிய வேணு மென்று விசாரிக்கிறார். இதல்லாமல், பதினஞ்சு நாளைக்கு முன்பாக யிந்தப் படிக்குத் தான் (வேறொன்றும்) யெழுதிப் போட்டார்கள். அது அவர் யெழுதுகிற காம்பிராவிலே கிடந்தது. அதைத் தொட்டு விசாரிக்க யிடமில்லாமல் போச்சுது. இதுக்குப் போயண்டன், துபாசி இரெண்டு பேர் அகப்பட்டார்களே, ... யென்று சொன்னது மல்லாமல், யிதை யெழுதிப் போட்டவர்களைப் பிடிச்சு ஆக்கினை கூடப் பண்ண வேணுமென்கிற

[1] மேலே சொல்லப்பட்ட சலபத் ஜங் பிரெஞ்சு கவர்னருக்கு 24 அக்டோபர் 1755 அன்று எழுதிய கடிதத்தின் பிரெஞ்சு மொழியாக்கத்தினை அடுத்ததாகப் பிள்ளை தருகிறார். அதன் சாரம் ஏற்கெனவே இந்நாளின் பதிவில் தரப்பட்டுள்ளதால் அது இங்கே சேர்க்கப்படவில்லை.

நினைப்பு கூட உண்டு. அதனாலே விசாரிக்கிறாரென்று (சொன்னார்கள்). முசியே கொதே பேரிலே மூணு காகிதம் விழவில்லையா? மதாம் துப்பிளேயிக்சு அனியாயம் பண்ணுகிறாளென்று முசியே துப்பிளேயிக்சு நாளையிலே ஆறேழு காகிதம் விழவில்லையா வென்றும் சொன்னார்கள். துரை(க்கு) அந்த விசனம் நன்றாய்த் தோணி யிருக்கு தென்று சொன்னார்கள்.

*1755 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 30; யுவ வருசம், அற்பிசி மாசம், தேதி 17; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு மப்பும் மந்தாரமும் தூத்தலுமாயிருந்தாலும் கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவற்ணதோரவர்களை சந்திச்சு ஆசாரம் பண்ணினவுடனே, "முசியே தெபறேன்,[1] முத்து வெங்கட்டராம ரெட்டி இங்கிலீசுக்காறர்களுக்கு அனுகூலமாயிருக்கிறார் யென்றும், அவர் மனிதன் புதுச்சேரியிலிருந்து பாதி வழி வந்து ஓடிப் போனானென்றும், நீர் அன்பது பேர் சிப்பாயிகளை அனுப்பினீரே அவர்களுக்கு ஒன்றுந் தெரியாதென்றும் யெழுதினான்," என்று சொன்னார். "யிங்கிலீசுக்காறருக்கு முத்து வெங்கிட்ட ராமு ரெட்டி அனுகூலமாயிருந்தது மெய்யானால், பத்து மாசமா யிங்கிலீசுக்காறர்களுக்கு அல்ல பிரான்சுக்காறருதென்று சகல சாதகங்களு முண்டாக்கிக் கொடுத்துக் கொண்டு, அவன் மனிதரை யிங்கிலீசுக்காறர் பிடித்துக் கொண்டு போய் அடித்துக் காயப்படுத்தி அத்தியாபி (சிறை) வைத்துக் கொண்டிருக்கிறதுக்குக் கூட யெதிராடிக் கொண்டு யிருப்பானா? ... (முன்பு) அவன் தாரிபு (பெருமைகளை) யெழுதினவனே (இப்போ) யிப்படி யெழுதுகிறான். (இது) ... உங்களுக்குத் தெரியாதா? (ரெட்டி நமது நண்பனா) யிராவிட்டால், அங்கனே யிப்படி யித்தனை தரம் தாரீபு யெழு(துவானா?) (ஏதாகிலும்) குத்த மெழுதினானா?" என்று (நான்) சொன்னதுக்கு, அதுவும் உள்ளது தானென்று சொன்னார். "நானனுப்பின அன்பது சிப்பாயிகளைக் கூலிக்காற ரென்று (குறை) சொன்னார்களே. அவர்கள் கும்பினீரிலே சேவித்து பறதற்பு பண்ணினவர்கள் (முன்பு கும்பினீரிலே சேவை செய்து, பின்பு ஆட்குறைப்பு செய்யப்பட்டவர்கள்)," என்று நான் சொன்னதுக்கு, "நானும் மதுராந்தகத்துக்கு நூறு சிப்பாயிகளை அனுப்புகிறேன்," என்று (துரை) சொல்லி, நீரும் தாக்கீது யெழுதி அனுப்பு மென்று சொன்னார். நல்லதென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போனேன்.

---

[1] தோபின் (Tobin) என்று ஆங்கிலப் பதிப்பில் உள்ளது. கம்பெனியின் கட்டுப்பாட்டிலிருந்த ஒரு சீர்மையில் கொம்மாந்தாமாக இருந்தவர் இவர்.

***1755 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 31; யுவ வருசம், அற்பிசி மாசம், தேதி 18; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி கோவற்ணதோரைக் கண்டு ஆசாரம் பண்ணினவுடனே, "துறையூர் ரெட்டிக்கு (கீழ்வருமாறு) ஒரு காகித மெழுதியனுப்பச் சொல்லும். உம்முடைய சத்துரு உடையார்பாளையத்திலே தளம் கூட்டுகிறானென்று யெழுதி, அதுக்கு மத்தத்து (உதவி) அனுப்பச் சொல்லி எழுதினீரே, நீரதைத் தொட்டு சிந்தை பண்ணத் தேவையில்லை. கும்பினீருக்கு மாத்திரம் சொன்ன பணத்தைக் கட்டிப்போடும்.[1] சகல மத்தத்தும் உங்களுக்கு நாங்களாயிருந்து, உம்முடைய சத்துருவைச் சேர வொட்டாமல் பண்ணுகிறோம். யிப்போ ஒரு ஒபிசியாலும் அன்பது சொலுதாதுகளும் நூறு சிப்பாயிகளும் அனுப்பிவிச்சோம். அவர்களங்கே யிருப்பார்கள். அவர்களுக்கு நீங்கள் ஒன்றுங் குடுக்கக் வையில்லை. மரியாதையாய் நடப்பிக்கவும்," என்று எழுதச் சொன்னார். அந்தப்படிக்கி யெழுதி வாரேனென்று சொல்லி ஆனவுடனே, சேந்தமங்கலத்தானுக்கு நந்தி ராசா தாக்கீது யெழுதினதையும், பின்னை யொரு தமிழ் ஒலையும் குடுத்துப் பிரான்சுப் படுத்திக் கொண்டு வரச் சொன்னார். நல்லதென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

[1] சென்னையைப் பிடித்த உடனே, புதுச்சேரிக்கு இனியும் வெள்ளிக் கட்டியும் பணமும் அனுப்ப வேண்டாம், தேவையான பணத்தை இங்கேயே சீமைகளிலிருந்து திரட்டிக் கொள்கிறோம் என்று துய்ப்ளே கம்பெனிக்குக் கடிதம் எழுதினார். எனவே சீமைக் குத்தகையையும், பாளையக்காரரிடமிருந்து பணம் வசூலிப்பதையும் பிரெஞ்சு ஆளுநர்கள் தொழிலாகக் கொண்டனர். ஆங்கிலேயரின் கை ஓங்க ஓங்க, இந்த வருவாய்களும் குறைந்து போனது. பிரெஞ்சு வாணிகமும் படுத்து விட்டது.

## நவம்பர் 1755

*1755 வருசம், நொவம்பர் மாசம், தேதி 1; யுவ வருசம், அற்பிசி மாசம், தேதி 19; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே வெள்ளைக்காறருக்கு மகாளய பக்ஷம் திருநாளின்றும் நாளையும் ரெண்டு நாளு மானபடியினாலே, முசே லெறி கோவற்ணதோர் கப்புசுக் கோவிலுக்குப் போய் பூசை கேட்டு வந்தவுடனே, நான் போய் ஆசாரம் பண்ணி, மல்லிகைப் பூச்செண்டு குடுத்து, "நேத்து ராத்திரி சலாபத்து சங்கு லசுக்கரிலே யிருந்து உங்களுக்கு சீரொப்பா வெகுமானமும் ரத்தின நகை, சீறுபேஷ், (கல்கி துராவும்), உமக்கு கிதாப்பு (பட்டம்) பற்வானாவும் கொண்டு வருகிறவர்கள், மூணு சுவார்கள், அசுப்பூர் வந்து சேர்ந்தோ மென்று காகித மெழுதி அனுப்பினார்கள். அதுக்கு யிசமானாக வருகிறவன் அதுல் (அப்துல்) ரயிமான் யென்று பேருடயவன். அவன் வந்தால் யெங்கே யிறங்குகிற தென்று கபுறு யெழுதி அனுப்பச் சொல்லி யெழுதினார். அதுக்கு பதிலுத்திரம் யெங்கே வந்து யிறங்கச் சொல்லுவோ," மென்று கேட்டதுக்கு, "முன் பின் வந்தால் யெங்கே யிறங்குவார்கள், அங்கே யிறங்கச் சொல்லி யெழுதி அனுப்பு," மென்று சொன்னதுக்கு, "குண்டு சாலைக் கப்புறம் நயினியப் பிள்ளை சாவடியிலே யாவது, பின்னை ஒரு சாவடி யிருக்குது அதிலேயாகிலும் யிறங்கச் சொல்லி எழுதி அனுப்புகிறே," னென்று சொன்னதுக்கு, அந்தப்படிக்கி யெழுதி அனுப்பென்று சொன்னார். அப்போ மதனாந்த பண்டிதனைக் கொண்டு, யெனக் கெழுதின காகிதத்துக்குப் பதில் காகிதம் யெழுதி அனுப்பி வைத்தேன்.

அப்பால், "கூடாரம் சென்னப்பட்டணத்து வாசற்படிக்கு அப்பிறம், அடுத்த மேல் பக்கத்திலே போடுகிற வாடிக்கை, அந்தப்படிக்கிப் போட வேண்டிய," தென்று சொன்னதுக்கு, "பீறங்கி மேஸ்திரியைக் கேட்டீரா? கூடாரம் தயாராச்சுதா?" வென்று (கேட்டார்). தயாராச்சு தென்று சொன்னதின் பேரிலே, மேம்றபந்தேயறு (தவறு. முசே கார்ப்பெந்தியேர்) (M. Carpentier) என்கிற பீறங்கி மேஸ்திரியை அழைக்கச் சொல்லி, அப்பால் முசியே திலார்சுவை அழைத்துக் கண்டுபேசி, மறுபடியும் யென்னை அழைத்து, "அவன் வந்திறங்கின வுடனே நீர் அவ்விடத்துக்குப் போய் அவனண்டையிலே யிருக்கிற சலாபத்து சங்கு காகிதமும் (முசே புசி காகிதமும்) வாங்கி வாரும். சலாபத்து சங்கு காகிதத்தைப் பார்த்துக் கொண்டு, (நாம் எழுதின பதிலை அப்) பையிலே போட்டு அனுப்பிவிப்போ," மென்று சொல்லி வாங்கி வாருமென்றார்.

*1755 வருசம், நவம்பர் மாசம், தேதி 12; யுவ வருசம், அற்பிசி மாசம், தேதி 30; புதவாரம்*

இத்தனாள் சாயங்காலம் யெட்டு மணிக்கி பெரியண்(ண) நயினார் மகனும் வீரானாயக்கன் குமாரனும் வந்து சொன்ன சேதி: "யிறைவாச நல்லூரிலே யிருக்கிற மீர் அப்துல் றயிமான் பெண்சாதியை முசியே மரிக்கி துப்பிளேயிக்சு நாளையிலே பாப்பய்யப் பிள்ளை சொல்லிக் காவல் வைத்து, ஒரு கும்பினீர் சேவுகனும் யெங்கள் சேவுகனும் காத்துக் கொண்டிருந்தார்களே, அவள் முசியே பெடுத்தல்மீ துபாசி ராமன் வழியிலே பணம் குடுக்கப் பேசிக்கொண்டு மார்க்கம் பண்ணிக் கொண்டபடியினாலே, இத்தனாள் ஆறு மணிக்கி முசியே பெடுத்தல்மீ எங்களை அழைப்பிச்சு, அப்துல் றயிமான் பெண்சாதியைக் காவல் வைத்திருந்ததே விட்டு விடுங்கோளென்று சொன்னார். அந்தப்படிக்கி விட்டுவிடுகிறோ மென்று சொல்லி, முசியே கோவற்ணதோர் அவர்களுடனே சொன்னோம். அவரும் விட்டு விடச் சொன்னார். அந்தக் கபுறு உங்களுடனே சொல்ல வந்தோ," மென்று சொன்னார்கள். துரைகள் உத்தார மெப்படியோ அப்படிச் செய்யுங்கோளென்று சொல்லி அனுப்பிப் போட்டு, நான் வீட்டுக்குப் போனேன்.

இந்த ராசவட்டம் ஒன்றரை மாதமாய் அய்யாயிரம் ரூபாய் குடுக்கிறோம், துரைக்குச் சொல்லி விடுவிக்க வேணும் யென்று யிறைவாசநெல்லூர் மீர் அப்துல் றயிமான் பெண்சாதி குலசேகர வெங்கட்ட றமணய்யன் முகாந்திரமாய் நடப்பிக்கக் கொண்டு வந்தது. அப்துல் றயிமான் நம்முடைய மனுஷனாய் (முன்பு) யிருந்து, (இப்போது) நமக்கு யெதிரியாய் யெரவாசநெல்லூரிலே[1] யிருந்து கொண்டு காலம் பண்ணிக்கொண்டு யிருக்கிறபடியினாலே, இப்போ யிந்த நடப்பை பிரபு வுக்குச் (சொல்லி நாம்) விடுதலை பண்ணி விச்சால், அப்பால் ஒருவேளை அப்துல் றயிமான் கலாபம் பண்ணி பளுவிலே வந்தாலும், முன் காவல் வைத்திருந்தவர்களை யெல்லாம் (விட்டு விட்டால் எப்படி வந்து முடியுமோ?) (இந்த சமாச்சாரம்) கொதே நாளையிலேயே அறிக்கையாயி, சீர்மை பரியந்திரம் முசியே துப்பிளேயிக்சும் முசே கொதேயும் போயிருக்கிறவிடத்திலே (புகார் போயிருக்கிறதே?) அங்கே யென்னமாய் நடந்து ஆக்கிருக்கு யென்னமாய் முடியுமோ; யிந்த வேலையிலே நான் நுழைபுறதுமில்லை, நீங்கள் பிறத்தியிலே பிறயத்தனம் பண்ணிக்கொண்டு விடுதலை பண்ணிக் கொள்ளுங்கோளென்று சொல்லிப் போட்டேன். ஆனபடியினாலே இந்த அய்யாயிரம் ரூபாயோ, இதுக்கு ரெட்டிப்பு சிலவோ, இந்த மட்டுக்கும் சிலவு பண்ணிக் கொண்டு விடுதலை பண்ணிக் கொண்டு போனாள். யினி மேல் என்னமாய் நடக்குமோ சுவாமிக்குத் தெரியும்.

---

[1] எத்தனை விதமாக இவ்வூரின் பெயர் எழுதப்பட்டுள்ளது! இன்று எலவானாசூர் என்று இது வழங்குகிறது.

*1755 வருசம், நவம்பர் மாசம், தேதி 13; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 1; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே நான் சின்னத் துரையாகிய முசே பெடுத்தல்மி வீட்டுக்குப் போயவருக்கு ஆசாரம் பண்ணினவிடத்திலே, அவரும் ஆசாரம் பண்ணி, அப்பால் அவர் யென்னுடனே, "சீமா மூலத்துக்கு வெள்ளைக்காறர் சாமீன் சொல்லிக் கொண்டு பணம் செலுத்தாமல் படிக்கி டிலே (delay) பண்ணிக் கொண்டிருக்கிற சம்மதிக்கி, பித்திசாம் யெழுதி நீர் நேத்து கோவற்ணதோர் முசே லெறிக்குக் கொண்டு குடுத்ததை, அவர் யெனக்குக் காண்பிச்சு யிந்த சம்மதிக்கி நாளைக்கி சாமீன்தாரரை அவரவர்களை அழைப்பிச்சு தாக்கீது பண்ணுகிறோமென்று சொல்லி யிருக்கிறார். ஆனபடியினாலே நீரிப்போ கோவற்ண தோரண்டைக்குப் போனவுடனே அவரந்த பிறஸ்தாபம் பண்ணுவார். நீர் போ," மென்று சொன்னார்.

நல்லதென்று, அப்பால், "ஸ்ரீரங்கம் தாலூக்கு உபய காவேரி தீரத்திலே ஸ்ரீவளாபுத்தூரென்கிற கிராமம் நானா பாசி ராயன் அண்டையிலிருக்கிற தக்ஷிணாமூர்த்தி சாஸ்திரியாருக்கு யினாமாய் நடந்து வருகிறது. யிப்போ அந்தக் கிராமத்துக்கு முசே பிளாக்கூரு யென்னேரமும் றோஷ்ட்டு (தொந்தரை) பண்ணிக் கொண்டிருக்(கிறார்). அப்படிப் பண்ணாமல் அந்த கிராமத்து வழியே போகத் தேவையில்லை யென்று முசே பிளாக்கூர் பேருக்கு ஒரு தாக்கீது யெழுதிக் குடுக்கவேணு," மென்று கேட்டதுக்கு, அந்தப்படிக்கி யெழுதிக் குடுத்தார்.

அதை வாங்கிக் கொண்டு நான் கோவற்ணமாமுக்குப் போன விடத்திலே, அதுக்கு முன்னமே தானே துரையவர்கள், செஞ்சி சீமை சாமீன்தார் முசே செல்மியாக்குவை[1] அழைப்பிச்சு வைத்துக் கொண்டு, அவன் செஞ்சி சீமைப் பணம் சம்மதி பண்ணாமல் யிருக்கிற தென்ன வென்று கண்டிச்சுதுக்கு, அவனதுக்கு ருசுமு[2] சம்மதி வகையிரா யென்ன தகிராராய்ச் (தகராறாய்) சொன்னானோ, அதன் பேரிலே அவர் யென்ன மாய்க் கண்டிப்புப் பண்ணினாரோ (தெரியாது). அவன் அனுப்பிவிச்சுக் கொண்டு மனக் கிலேசமாய் முகம் தொங்கப் போட்டுக் கொண்டு யெதிரே வந்தான்.

அப்பால், துரை முசே தெபொசேத்தை அழைப்பிச்சு, "செய்யூர் சம்மதிக்கு நீரு யிசாரா பண்ணிக் கொண்டபடிக்கி பணத்தை றெங்கப் பிள்ளைக்குச் செலுத்தாமல் அட்டி பண்ணிக் கொண்டிருக்கிற தென்ன?"

---

[1] சொல்மினியாக்

[2] வழக்கமான வருவாய்கள். ருஜூம் என்ற அரேபியச் சொல்.

வென்று கண்டிப்பு பண்ணி, அப்பால் யென்னையும் அழைப்பிச்சு வைத்துக் கொண்டு முசே தெபொசேத்தைக் கேட்டார். அவர் அதுக்கு நாலாயிரம் அய்யாயிரம் ரூபா காரியம் மென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "பதினய்யாயிரம் ரூபாய் யெடுக்கிற தாலூக்கை பன்னீராயிரம் ரூபாயாய்த் தீத்துக் குடுத்தேன். அதுக்கு யிது வரைக்கும் ஒரு காசு செலுத்தினதில்லை," யென்று சொன்னேன். அதுக்கு முசே தெபொசேத்து யிருந்து கொண்டு துரையுடனே, "கறுப்பு மனுஷன் கொண்டு போறதை நான் கோன்சேலியராயிருக்கிறவன் கொண்டு போகலாகாதா?" யென்று சொல்லி, "யெனக்கு முசே கொதே தீத்துக் குடுத்திருக்கிறா," ரென்று சொன்னார். அதுக்கு துரை யிருந்து கொண்டு, "கறுப்பு மனுஷன் யென்று நீ யெப்படிச் சொல்லுவாய்? அவரதைக் குடுக்கவும் வாங்கவும் அதிகாரி யானபடியினாலே அவருக்குச் சரிப்போன படிக்கி நடப்பிப் பார்," யென்றும், "யிப்போ தானே தாலூக்கு விட்டுவிடு," யென்றும் கண்டிப்பாய்ச் சொன்னார். அப்பால் நான் சொன்னது: "முசே கொதே யிருக்கச்சே கணக்கு றெங்கப் பிள்ளை விசாரிப்பிலே குடுத்துத் தீத்துது மெய்தான். அப்பால் தறோபஸ்து சீமை (முழு சீர்மைகளும்) யெனக்கு ஆன பிற்பாடு நான் பதினய்யாயிரம் ரூபாயாய் தீத்துக் குடுத்ததே அல்லாமல் வேறே யில்லை," யென்று சொன்னதுக்கு, அந்தப்படிக்கிக் குடுத்து விடச் சொல்லி கண்டிச்சுச் சொல்லி விட்டார். அப்பால் முசே தெபோசேத்து நல்லது செலுத்திப் போடுகிறே னென்று சம்மதிச்சுக் கொண்டு, அப்பால் "நான் பெகு சமுசாரி. சீமையிலே ரெண்டு பிள்ளைகள் போயிருக்கிறார்கள், யிங்கேயும் யிருக்கிறார்கள். யெனக்குச் சிலவு அதனமான படியினாலே பதினாயிரம் ரூபாயாய் தீத்துக் குடுக்கிறேன். அந்தப்படி வாங்கிக்கொள்ள வேணு," மென்றும் நய்ய பதமாய் கேட்டுக்கொண்டார். அதுக்கு துரை நகைச்சு, அந்தப்படி றங்கப் பிள்ளைக்கும் சம்மதி பண்ணிக் கொள்ளுமென்று சொன்னார். அப்பால் யென்னைக் கேட்டதுக்கு, யிவர் முன் சொன்ன பிகுவு பேச்சுக்களை விட்டு, யிப்போ யிப்படி கேழ்க்குற சாடைப் பார்த்து, பெரிய மனுஷன் கேட்டுக் கொள்ளுகிறதினாலே நல்லதென்று சொன்னேன். அப்பால் முசே தெபோசேத்து அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்.

அப்பால் திருவீதி பஞ்சாமல் (பஞ்சமகல்) சாமீன்தார் முசே புரியை அழைப்பிச்சு, "உன்னுடைய பேரிலே சாலுகு தஸ்தா (சென்ற ஆண்டு) பாக்கி நூத்தொன்பதினாயிரம் ரூபாயும், யிப்பால் சாலம்சுகூருக்கு (அவ்வருடத்துக்கான) கிஸ்திப் பணமும் குசுமு சம்மதியும் (பிற வழக்கமான செலவினங்களும்) நீ குடுக்க வேண்டியதை யேன் குடாம லிருக்கிறாய்?" யென்று துரை கண்டிப்பாய்க் கேட்டதுக்கு, அம்மாத்திரம் குடுக்க வேண்டியதில்லை யென்று (அவன்) சொன்(னான். பிறகு) அவன் மருமகன் முசே லத்தூர் (M. La Tour) கணக்குத் தீத்துக் கொண்டு

யெழுதிக் கொடுத்த வயிதா பந்திக் காகிதத்தை காண்பிச்சதுக்கு. "ருசுமு சம்மதி கும்பினீருக்குச் சேரவேண்டியதாச்சுதே" யென்றான். அதுக்கு துரை, "அதெல்லாம் உனக்கு அக்கரை யென்ன? அதுக்கு அதிகாரி றெங்கப் பிள்ளையே அல்லாமல், மத்தபேருக்கு அக்கரை யென்ன யிருக்குது?" யென்று சொன்ன பிற்பாடு, "நல்லது, முசே லத்தூருக்கு யெழுதி அனுப்பிவிச்சு சம்மதி பண்ணிப் போடுகிறே னென்று சாப்பாய்ச் (பணிவாய்) சொல்லிப்போட்டு போனான்.

அப்பால் கொவற்ணதோர் சக்கிறத்தார் முசே மொர்சேத்தை (M. Mauricet) அழைப்பிச்சு, "திருக்கோவிலூர்–கல்லக்குறிச்சி–திருப்பாலைப்பந்தல்–திருவண்ணாமலை வகையிரா சீமைப் பணம் விஸ்தாரமாய் நீயும் முசே பிளாமும் (M. Le Blanc) செலுத்த வேண்டியிருக்கிறதை செலுத்தாமல் யிருக்கிறதென்ன?" யென்று கண்டிச்சதுக்கு, "நாங்கள் அதிலே சிறிது பணம் போட்டு யிருக்குறோம், அந்தப் பணத்தை மாத்திரம் குடுத்தால்ப் போது மென்று யிருந்தோம்.[1] றெங்கப் பிள்ளை தானே யெங்களை யிழுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறார்? யெல்லாத்துக்கும் முசே பிளாம் யிந்த நொவம்பர் மாசம் 15 தேதி 16 தேதி வருவான்," என்று சொன்னான். "பணத்தைக் கூடப் பிடிப்பிச்சுக் கொண்டு வருவானா?" யென்று (துரை) கேட்டார். பணமும் பிடிப்பிச்சுக் கொண்டு வருவானென்று சொன்னான். அந்தப்படிக்கிச் செலுத்திப் போடச் சொல்லி அவனை அனுப்பிப் போட்டார்.

சிதம்பரம் பஞ்சமால் சாமீன் முசே கொஷாரை (M. Couchard) அழைப்பிச்சு, "நீ யென்னத்துக்குப் பணத்தைச் செலுத்தாமலிருக்கிறது?" யென்று கண்டிச்சதுக்கு, அவன், "உள்ளது தான் – செலுத்த வேண்டியது. அந்தப்படிக்கிச் செலுத்திப் போடுகிறே," னென்று சொன்னான். அதுக்கு துரை யிருந்து கொண்டு, "உங்களுக்கு சீமை யென்னத்துக்கு? பூமி யென்னத்துக்கு?" யென்று (கேட்டு), விட்டுவிடச் சொல்லி கோபிச்சுக் கொண்டு சொன்னார். அதுக்கு "அவன் மூணு வருசத்து யிசாராவுக்கு சாமீன் ஆனபடியினாலே பெகு பணத்தை நான் போட்டு யிருக்கிறேன். சலிதியாய்ப் பணத்தை சாடாவாய்ச் (விரைவாக) சம்மதிப் பண்ணிப் போடுகிறே,"னென்று சொல்லிக் கொண்டு போனான்.

அப்பால் யென்னை யேகதேசத்திலே வைத்துக் கொண்டு, "ஆந்திரிகமாய் நீரிந்தக் கணக்கரையும் (எழுத்தர்–writers) ஒபிசியால்மார்களையும் நம்பி சீர்மையைக் குடுத்தீரே! யிவர்களை யின்றைக் கெல்லாம் போட்டு வதைச்சாலும் பத்து பணத்துக்கு யீடு

[1] "அந்தப் பணம் மாத்திரம் திரும்பி வந்தால் போதும் என்றிருக்கிறோம்," என்று ஆங்கிலத்தில் உள்ளது.

உண்டா?" யென்று சொல்லி, அப்பால் செப்த்தோம்புறு மாசத்து சம்பளத்துக்கு சீமா மூலத்து சம்மதிப் பணத்திலே நீர் கொண்டு வந்து குடுக்க வேணுமென்று சொன்னார்.[1] நல்லது ஒத்திகை (வசூல்) யானதை சமை பண்ணிக் கொண்டு வந்து செலுத்திப் போடுகிறேனென்று சொல்லிப்போட்டு, அப்பால் பனிரெண்டு மணி அடிச்சு அரை மணி ஆனபடியினாலே, விழுப்புரத்து சம்மதிக்கி அப்பு முதலியை நாளைய தினம் அழைப்பிச்சு, கண்டிச்சுத் தீத்துப் போடுவோமென்று சொன்னபடியினாலே, அனுப்புவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் போனேன்.

### *1755 வருசம், நவம்பர் மாசம், தேதி 13; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 1; குருவாரம்*[2]

இத்தனாள் பகலைக்கு மேலாக துறையூர் பாபு (பாப்பு) ரெட்டியின் தம்பி முத்து பசுவா ரெட்டி மகன் குமார வெங்கடாசல ரெட்டி பட்டத்திலே யிருந் (தான். அவன்) தமையனான குன்னய்யன் தளகற்தனாக யிருந்தான். பாபு (பாப்பு) ரெட்டிக்கும் அவர்களுக்கும் பிகாடிச்சு (துகராறு ஏற்பட்டு) அப்பால் குன்னய்யனைக் கொன்று போட்டு, பாப்பு ரெட்டி தன் மகனைப் பட்டங்கட்டி வைத்துக் கொண்டான். பிற்பாடு முன் சொல்லப்பட்ட தம்பி வெங்கடாசல ரெட்டி உடையார்பாளையம் வந்து சேர்ந்து, அங்கே யிருந்து பவுன்சு கூட்டிக் கொண்டு, துறையூரின் பேரிலே சண்டை போட்டு வாங்க யெத்தனம் பண்ணிக்கொண்(டிருந்தான்). புதுச்சேரியார் பாப்பு ரெட்டி கையிலே பேஷ்கஷ்து வாங்கிக் கொண்டு, அவனுக்கு மத்தத்து (உதவி) பண்ணிக்கொண்டு யிருக்கிற படியினாலே, அவனுக்கு மத்தத்து பண்ணாமல் தனக்கு மத்தத் தாயிருந்து துறையூர் வாங்கிக் கொடுக்கவும், அதுக்குத்தான் பேஷ்கஷும் நசரும் குடுக்கவும் பேசி உத்திரவு வாங்கிக் குடுக்கச் சொல்லி, முன் வரதா ரெட்டிக்கு வக்கீலாயிருந்த கோனேரிராயனை அழைப்பிச்சு, துரைக்கு மெனக்கும் நசரு குடுத்து அனுப்பி, காகிதங்களும் யெழுதி அனுப்(பினான்). நான் கோனேரி ராயனுடனே யிது சமைய மல்ல, யின்னம் காலம் பார்க்க வேணுமென்று சொன்னதுக்கு, அது அவருக்குச் சம்மதியில்லை. அதினாலே முசியே (தெபொசேத்து) மாரிபத்திலே (மூலமாய்) யித்தனாள் சாயங்காலம் நானூறு ரூபாய் கொண்டு போய் வைத்து (துரையைச்) சந்திச்சு, காகிதமும் கொடுத்து சேதிகளும் சொன்னதுக்கு, அவரும், "மெய்தான். வெங்கிடாசல ரெட்டி யெசமானாகிலும் இன்னம் சிறிது நாள் போகவேணு," மென்று சொல்லி, படி அரிசி மாத்திரங் குடுக்கச் சொல்லி அனுப்பினதாய்ச் சேதி கேழ்க்கப்பட்ட(தை) யெழுதி வைத்தேன்.

---

[1] மாத சம்பளம் கூடக் கொடுப்பதற்கு பிரெஞ்சுக் கம்பெனி கஷ்டப்பட்டதைக் காண்க.
[2] முந்திய தேதியின் தொடர்ச்சி இது. இப்படி மறுபடியும் தேதியிட்டுள்ளது பிழை.

***1755 வருசம், நவம்பர் மாசம், தேதி 16; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 4; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கி கோட்டைக்குப் போன விடத்திலே சியோர் (Sieur) கொவற்ணதோர் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்த உடனே, நான் பூச்செண்டு குடுத்து ஆசாரம் பண்ணினேன். அப்பால் முசியே கில்லியார், முசியே பொலோ, முசியே லெனுவார், மத்த ஒபிசியால்மார்களும் வந்து ஆசாரம் பண்ணினார்கள். முசே சொபினேயுடனே முசே லெறி பேசிக்கொண்டிருந்தார். அப்போ முசியே கில்லியார், முசே மீரா ரெண்டு பேர்களும் யிறங்கிப் (போனார்கள்). யென்னை வரச் சொல்லி சைகை காட்டினார்கள். குண்டூர் வெங்கிடாசல செட்டி கூட வந்திருந்தான். அவனுடனே வில்லியநெல்லூருக்கு துரை நேத்து சாயங்காலம் போனவிடத்திலே நம்முடைய அமுல்தாறன் நசர் வைக்காமல் போனானென்று சொல்லி, யினி மேலுமப்படிச் செய்யாமல் (படிக்கு) யெழுதி அனுப்புமென்று சொல்லி, ஆத்துக்குக் கட்டுமரக்காரர்களை அனுப்பி விடச் சொல்லி துரை தாக்கீது பண்ணினாரென்றும், யிது முதலான பேச்சுக்களை பேசிக் கொண்டு தாழப் போகச்சே, முசே லெறி, முசே குப்பி, முசே செவிரோ, முசே சொல்மினியாக்கு, முசே பெறுனியோ யிவர்கள் அஞ்சு பேரும் தாழ முசே ஷெவிரோ காம்பிராவிலே கூடயிருந்து, மேல்வீட்டின் பேரிலே மகா உச்சாகமாய் சீமா மூலம் பேச்சக்குத் தங்கள் சாமீன் கவையில்லை யென்று தள்ளுகிறதுக்கு ஞாய மென்ன யென்றும், தங்கள் பணம் சென்றது யென்னாப் போலேயும், குத்தகைக்காறர்கள் யிவர்களை மோசம் பண்ணி சொல்லிக் கொண்டு வந்த பேச்சை மெய்யென்று நம்பிக் கொண்டு துரையுடனே பின்னை யென்ன யென்ன(வோ) சொல்ல யோசனை பண்ணிக்கொண்டு மேலே போகச்சே, யென்னைப் பார்த்தவுடனே யிவர்களெல்லாரும் கையினாலே காண்பிச்சு கறுவிக் கொண்டு போனார்கள். போகட்டு மென்று சொல்லி, அப்பால் நான் முசே கில்லியாருடனே பேசி அனுப்பிப் போட்டு, முசே மீரா அழைக்க முசே பெடுத்தாராம் கோந்துவாரே போனேன்.

அங்கே முசே மீராவும் நானும் ஒருத்தருக் கொருத்தர் ஆசாரம் பண்ணி ஆன பிற்பாடு, யென்னைப் பார்த்து உன் அதிருஷ்ட்டம் மெத்தப் பெரியது யென்று சொன்னார். அதெப்படி யென்று கேட்டதுக்கு, முந்தாம் நாள் ராத்திரி கோவற்ணதோர் மேசை மேல் சாப்பிடச்சே நானும் கூடயிருந்தேன். அப்போ இரெண்டு பேர் கோன்சேலியேரிலே பெரிய மனுஷரும் முசே ஷெவிரோவும் சீமா மூலப் பேச்சுக்கு உம்முடய பேரிலே வியாக்கியானமாய்ப் பேசினார்கள். அதுக்கு முசே லெறி சொன்னது:

"முசே கொதே எனக்கு கொவர்னதோர்த்தனம் குடுத்து, யென் மனதின் படியே நடப்பிக்கச் சொல்லிப் போனபடிக்கி, கற்னாடகம் சுபையை றங்கப் பிள்ளைக்குக் குடுத்து அவனுக்கு சம்மதியானபடிக்கி நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லிப் போட்டுப் போனார். யென் அதிகாரத்துக்கு நான் யெப்படி யென் மனதாம் படியே நடப்பிச்சுக் கொள்ளுகிறேனோ, அப்படி அவன் சீமையை அவன் சரிப் போனபடிக்கி நடப்பிச்சுக் கொள்ளுவான். அவனை (நான்) ஒன்றும் செய்யக்கூடாது (தலையிடக்கூடாது). அவன் செய்(கின்ற) வேலையை வேண்டாமென்று சொல்லவும் கூடாது. ஆனால் அவன் குடுக்க வேண்டிய பணம் மாத்திரம் நான் சாகிறுதை பண்ணி செலுத்தி வச்சுக் கொள்ளுகிறது. தவிர மத்தப்படி ஒருத்த(ரும்) அவனையும் சீமையையும் நினைக்கக் கூடாது. யேன் விறுதாவாய்ப் பேசுகிறீர்கள்? நானிந்தக் காரியத்துக்கு யென்னை யெப்படி பார்க்குறீர்களோ, அவனையும் அவனோடே சேர்ந்த காரியத்துக்கும் அப்படிப் பார்த்துத் தீரவேணும், வேறே அடமானமில்லை யென்று சொன்னார். யிந்தப்படி கொவற்ணதோர் சொல்ல அங்கேயிருந்த நாங்கள் யெல்லாரும் ஆச்சரியப்பட்டோம். அந்த மூணு பேர்களும் முகத்தைக் கறுப்பு ஆக்கிக் கொண்டார்கள். ஆனபடியினாலே யிதை விட பெரிய அதிருஷ்ட்ட மென்ன யிருக்குதென்று சொன்னேனென்று," சொல்லி அப்பால் சொன்னது யென்ன வென்றால் ....[1]

### *1755 வருசம், நவம்பர் மாசம், தேதி 19; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 7;* புதவாரம்

இத்தனாள் காலத்தாலே மமுதல்லி கான், திருவள்ளூரண்டையிலே போயிறங்கியிருக்கிற தாயிருக்கிறவன், வெங்கட்டகிரி யாச்சம னாயக்கன் பிள்ளையின் பேரிலே மோகீம் (சண்டைக்குப்) போறதாய் ஒரு தமுக்குப் பண்ணினதின் பேரிலே, அவர்கள் லக்ஷத்து நாற்பதினாயிரம் ரூபாயாய்த் தீத்துக்கொண்டு லக்ஷம் ரூபாய்க்கு ட்டீபு (கடன் ரசீது) அனுப்பினதாகவும், அதுவும் வாங்கிக் கொண்டு உன் தம்பி (பேரிலே) சீர்மைக்கு வேறே வரவேண்டுமென்று கசா (தகராறு) பண்ணிக் கொண்டிருக்கிறதாய்ச் சேதி வந்தது. யிதல்லாமல் பாளையக்காறர் ஒருத்தர்களும் பேஷ்கஷ்துக்கு ஒப்பினவர்களுமல்ல. அவரவர்கள் வக்கீல்கள் மாத்திரம் வந்து பேச்சுவார்த்தை நடப்பிக்கிறது மல்லாமல், அவரவர் மமுதல்லி கான் சண்டைக்கு வந்தால் ஒருகை பார்க்கிறதாய் யெத்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறார்களென்று சொல்லி ...[2]

---

[1] இங்கே சில வரிகள் கிழிந்துள்ளன.

[2] ஓரிரு வரிகள் கிழிந்துள்ளன.

***1755 வருசம், நொவம்பர் மாசம், தேதி 20; யுவ வருசம், காற்திகை மாசம், தேதி 8; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே மயிசூரிலே நந்திராசாவை வெட்டிப் போட்டார்க ளென்று சீரங்கத்திலே யிருந்து யெழுதி வந்தது மெய்தானா வென்று (துரை) கேட்டார். அதுக்கு, "முன்னாலே, நந்திராசா மயிசூர் ராசாவை வெட்டிப் போட்டு அவர் பிள்ளைக்குப் பட்டங் கட்டவேணு மென்று யோசனை பண்ணினதும், அது நிமித்தியத்திலே நந்திராசாவைப் பிடித்துப் பத்திரம் (காவல்) பண்ண வேணு மென்று யோசனை பண்ணின சமமதிகளெல்லாம் தங்களுடனே சொல்லி யிருந்தேனே. அதின் பேரிலே இராசா யேதாகிலும் பிலத்து நந்திராசாவை வெட்டிப் போட்டார்களோ, அல்ல துற்க்கத்தின் பேரிலே கொண்டு போய்ப் போட்டார்களோ, அது தக்கீகாதாய்ச் (திட்டவட்டமாய்ச்) சேதி வரவில்லை. ஊரிலே யானால் நானாவிதமாய்ப் பிறக்கு தென்று சொன்னேன்.

***1755 வருசம், நொவம்பர் மாசம், தேதி 30; யுவ வருசம், காற்திகை மாசம், தேதி 18; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : "ஆதிவெண்ணையிலே[1] யிருந்த கோசா நேமத்துல்லா கான் பேரிலே முராரி ராயன் பவுன்சுடனே போய் சண்டை பண்ணினவுடனே, கோசா நேமத்துல்லா கான் முறிஞ்சு ஒண்டிக் குதிரையுடனே ஓடிப்போய் ராசாப்பாளையம் யிந்தப் பிராந்தியங்களிலே வந்து சேர்ந்தானென்றும், யிவன் பவுன்சு தாமும் முழுகிப் போய் இவன் கூடாரம், ஆனைகள், குதிரைகள், சாமானுகள், தட்டு முட்டுகள், பணம், சமஸ்தமும் யிருந்ததெல்லாம் முராரி ராயன் வசமாயகப்பட்டுப் போச்சு தென்றும், ஆதிவென்னை, ராசகூட்டி (ராயசோட்டி), குத்தி முதலான கோட்டைத் தலங்களும் அதைச் சேந்த சீமைகளும் முராரி ராயன் கட்டிக் கொண்டதாகவும், ஆறணியாருக்குச் சேதி வந்து, ஆறணியிலிருந்து மாதுபாகோகஸ்தாள் (பெரிய மனுஷர்) யெனக்கு யெழுதி அனுப்பினார்கள்.[2] துலுக்கருடைய ராச்சியம் யெல்லாம் யிந்துக்கள் கட்டுவார்க ளென்று சோசியாள் சொல்லி யிருக்கிறதுக்கு பேஷியம் சரியாய்க் கண்டு வருகுது. யினி மேல் நடக்கிற காரியமும் அவர்கள் சொன்னபடிக்கி நடக்குமென்று தோத்துது.

---

[1] ஆதிவெண்ணை, ஆதிவென்னை என இருவிதமாகப் பிரதியில் உள்ளது.

[2] இப்படிப் பிள்ளைக்குத் தூரத்துச் செய்திகள் வந்தது வியப்பளிக்கிறது! இதேபோல, ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் தம் இனத்தவரை ராசதானிப் பட்டணங்களிலும் அரண்மனைகளிலும் இருக்கச் செய்து செய்தி திரட்டினர்.

## டிசம்பர் 1755

### *1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 1; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 19; சோமவாரம்*

இத்தனாள் மயிசூர் வைக்கீல் வெங்கிட்டநாராயணப்பய்யன் வந்து சொன்ன சேதி யென்ன வென்றால், மயிசூருக்கு ராசதானிப் பட்டணமாகிற சீரங்கப்பட்டணத்திலே நடந்த சேதி: முன் மயிசூர் ராசாவுக்கும் நந்திராசாவுக்கும் சமாதானமில்லாமல், நந்திராசா மைசூர் ராசாவைக் கொல்லவும், அவர் பிள்ளைக்குப் பட்டங்கட்டவும் யோசனை பண்ணி, (ராசாவானவன் தமது) மகளைக் கொண்ட மருமகனான படியினாலே மகளுக்கு அந்தரங்கமாய்ச் சொன்ன சேதியை அந்தப் பெண் புருஷனுடனே சொன்னதின் பேரிலே, அவர் சிறிது முஸ்தீது பண்ணி சண்டைக்கு யெத்தனம் பண்ணினவிடத்திலே, பெரிய தளவாய் தேவராச உடையார் என்கிறவர், சரீரம் சுவஸ்தமில்லாமல் யிருந்தவர், தம்முடைய வருத்தத்தைப் பாராமல், மோசம் வந்துது யென்று மருமகனாகிய ராசாவுக்குத் தெரியப்படச் சொல்லி, தன் தம்பியாகிய நந்திராசாவுக்கும் தெரியச் சொல்லி, சமரசப்படுத்தி முன் பிறதானித்தனம் பண்ணின வெங்கிடபதி அய்யன் யென்கிற(வனை) வீட்டுடனே காவல் வைத்துப் பத்திரம் பண்ணி, அந்தப்படி யெல்லாம் நடந்திருந்த(து). அதன் பிற்பாடு, போன ஆசுவீச பகுள துவாதசி யன்று ராசாவை அரண்மனை விட்டுப் பிறப்படாமல் சவுக்கி (பாதுகாவல்) வைத்துப் பத்திரம் பண்ணி, முன் பிரதானித்தனம் பண்ணின வெங்கிடபதி அய்யனையும் அவர் பிள்ளைகள் முதலானவர்களையும் தளவாய் தன் வீட்டுக்கு அழைப்பிச்சு, "நாங்களும் ராசாவும் அம்மான்களும் மருமகனும் ஆன) படியினாலே அவரை நாங்கள் கொல்ல நினைக்கப் போனோம், எங்களை அவர் கொல்ல நினைக்கப் (போனார்), சரிப்போன படிக்கி நடக்கப்போகுது, உமக்குக் கவை யென்ன? நீர் முன் தம்பி அண்டையிலே யிருந்து பிறதானித்தனம் பண்ணினவரென்றும், அவர் காலம் பண்ணிப் போகச்சே உம்மை யெங்கள் வசத்திலே ஒப்புவித்துப் போட்டுப் போனாரென்றும், நீரெங்கள் வீட்டு மனுஷனானபடியினாலேயும் நீரு குடிக்கக் கஞ்சிக்கி அவகாசமில்லாமல் யெங்கள் தம்பி அண்டையிலே வந்து சேர்ந்தவனை மயிசூர் ராச்சியத்துக்குப் பிறதானியாக்கி லக்ஷக் கணக்கா யுமக்கு ஆஸ்தியுண்டாக்கி வைத்தார். அந்த அபிமானப் படிக்கி நாங்களும் அவர் காலம் பண்ணிப் போன பிற்பாடு, உம்மை பிறதானிக்கம் பண்ணச் சொன்னால், நீராய் வாண்டாம் யென்று சொல்லியிருந்தாலும், அப்போ நடந்த உம்பளிக்கை (இனாம்) கிராமங்கள், மானியம், மன்னடை சமஸ்தமும் அந்தப்படிக்கே நாங்களிது வரைக்கும் நடப்பி(ச்சோம்);

யெங்களுக்கு நீர் சுவாமி துரோகம் நினைக்கலாமா?"[1] வென்று வெங்கிடபதி அய்யனைக் கேட்(டோம்). "மெய்தான் நீங்கள் சொன்ன தெல்லாம் கர்த்தர் (என் எசமான் என்னை) அழைப்பிச்சு, நந்திராசா என்னை வெட்டிப்போட யோசனை பண்(ணுகிறான்), யென்னைத் துப்புவிச்சு நந்திராசாவைப் பிடிச்சு பத்திரம் (காவல்) பண்ண வேணும் யென்று நாலாருதரஞ் சொல்லி, என் சொத்து நீர் சாப்பிட்டு யிருக்கிற மட்டுக்கும் நான் சொன்னபடி கேழ்க்க வேணும் யென்று சொன்னபடியினாலே, யிந்தக் காரியங்கள் எத்தனம் பண்ணினது மெய்தா," னென்று வெங்கிடபதி அய்யன் தேவராச உடையாருடனே சொன்(னான்).

தேவராச உடையார் வெங்கிடபதி அய்யனைப் பார்த்து, "நீர் ராசாவைச் சேவிச்ச (பணி செய்தவர்) வரல்லவே, முன் என் தம்பி சருவாதிகாரி நந்திராசாவை சேவிச்சு யிருந்தீர். அவர் காலம் பண்ணிப் போகச்சே யென் வசத்திலே ஒப்பிவிச்சா ரென்று நான் நடப்பிச்சுக் கொண்டு வந்த மட்டுக்கும் எங்கள் மனுஷனாச்சே. அப்படி கர்த்தர் அழைத்து உன்னை ஆலோசனை கேட்டால் நீரென்னுடனே நடக்கிற காரியம் மிப்படி யிருக்குதென்று சொல்லவேணுமேயல்லாமல், நீரிப்படிப்பட்ட யெத்தனம் பண்ணலாமா?" வென்று (கேட்டார். பின்பு) மனவள்ளிதுற்க்க மென்றொரு மலையிருக்குதாம், அதின் பேரிலே வெங்கிடபதி அய்யனையும் அவர் பெண்சாதியையும் விலங்கு போட்டு மலை மேலே கொண்டு போய்ப் போட்டதாகவும், அவர் குமாரனையும் மருமகளையும் பேர் விளங்கன் துற்க்கத்தின் பேரிலே கொண்டு போய்ப் போட்டதாகவும், பின்னையும் அவரைச் சேர்ந்த பேர்களை யெல்லாம் அங்கங்கே விலங்குப் போட்டு துற்கத்திலே போட்டு, அவர்களுடைய ஆஸ்திகள் கூட, வீடுகள், தோட்டங்கள், உம்பிளிக்கை (இனாம்) கிராமங்கள் சமஸ்தமும் நந்திராசாவைச் சேத்துப் போட்டா(ர்கள்); அதன் பிற்பாடு மூணு நாலு நாளைக்குப் பிற்பாடு அரண்மனைக்கு மனுஷர் போக வர உத்தாரம் குடுத்ததா(ர்கள்), கர்த்(தன்) னென்கிற ராசாவும் தன் பேச்சுக்கு யென்ன மோசம் வருமோ வென்று வெகு யோசனையின் பேரிலே யிருக்கிறார். இந்த ஆலோசனையிலே அகப்பட்ட சிறிது சமேதாரர்கள், சிறிது உத்தியோகஸ்தர்கள், சிறிது வர்த்தகர்கள் அனேகம் பேருக்கு மோசம் வந்து பட்டணம் ரொம்ப காபிறாவிலே யிருக்குது. பட்டணத்துக்குள்ளே நெருப்பு தெகிக்கிராப் போலே அவரவர் யென்ன அபாண்டம் வரப் போகுதோ, யென்னமாய் முடியுதோ யென்று ராத்திரி பகல் திகிலிலே சனங்கள் கிடந்து அலைஞ்சு போறார்கள். இது நடந்து ஒரு மாத மாச்சுது. இதன் பிற்பாடு யென்ன நடந்துதோ தெரியாது. யிது நல்ல

[1] ஆங்கில வாசகம் சற்றே மாறுபடுகிறது.

காலமானால் பட்டணத்திலே ராசா வீட்டிலே தானே கிறகச் சித்திரம் பிறந்து யிப்படி நடவாது. யென்ன மாகிலும் ஒரு பிசைக்(?) கேட்டுக்கு யேஷியமில்லாமல் யிப்படி நடவாதென்று சீரங்கப்பட்டணத்திலேயும் அதைச் சேர்ந்த மயிசூர் ராச்சிய(த்திலும்) சொல்லிக் கொள்ளுகிறது மிதமில்லை ... யிந்தச் சேதி பதினாறு நாளாச்சுது. (இதன் பிறகு) பட்டணத்திலே யிருந்து மனுஷர் (அல்லது சேதி எதுவும் வரவில்லை)... இப்படி ராச்சியமெல்லாம், ராசாக்கள் வீட்டிலே (கூட) கிறக சித்திரங்கள் பிறந்து ஒருத்தருக் கொருத்தர் (வெட்டி) மடியுற காலம் வந்தாப் போலே யிருக்குது.

முன் சீதாராம சோசியன் சொன்ன யேஷியம் சரியாய் நடந்து வருகிறது. இனிமேல் நடக்குங் காரியமறிய வேண்டியது. அப்பால் வெங்கிட்டநாராயணப்பய்யர் தாம் காலத்திலே வில்லியநெல்லூருக்குப் போறோமென்று பின்னையுஞ் சிறிது லோகாபிறமமாய் பேசியிருந்து, இரண்டு சகலாத்துச் சிப்பம் வேணுமென்று சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்.

### *1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 3; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 21; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோவர்ணதோர் உலாத்தச்சே, துறையூர் பாப்பு ரெட்டியாருடைய வைக்கீல் கஸ்தூரி ரங்கய்யன் வந்து சலாம் பண்ணினவுடனே, என்னைப் பார்த்து எங்கே வந்தா யென்று கேளேன்று சொன்னபடிக்கி அவரைக் கேட்டதுக்கு, "உங்களுக்கு சலாபத்து சங்கு அண்டை யிலிருந்து அசுமுத்தவுலா (அசமுத்தவுலா) யென்கிற கிதாப்பும் (பட்டமும்) கறு(ல்)க்கி, சிறுபேஷு (சர்பேச்), சீரொப்பா வகையிரா பெகுமான(மும்) வந்ததுக்கு மொபார்க்குபாதி (வாழ்த்துக்) காகிதமும் சீரொப்பாவும் (கொண்டு வந்தேன்) யென்று சொன்(னான்). "துறையூர் ரெட்டி, யென் மனுஷர் முசியே தில்லே (M. Tilly) யென்கிற ஒபிசி யாலையும் அன்பது சொலுதாதுகளையும் அனுப்பினதுக்கு அவமரியாதை பண்ணி, உள்ளே ரிசிபேரிடாமல் (அழைத்து உபசரிக்காமல்), நானும் அனுப்பின கடுதாசியுந் தள்ளிப் போட்டு விட்டபடியினாலே, அவர்கள் பெகுமானமே கவையில்லை," யென்று (துரை) சொன்னார். அவர் அபிப்பிராயம் பார்த்தால் அல்லோ பேச வேணுமென்று அந்தப் பேச்சைக் கஸ்தூரி ரங்கய்யனுடனே சொன்னேன். அவர் இனி செயல் ஆவதென்ன வென்று யோசனை பண்ணி, "உங்கள் ஒடுதியைத் தள்ள (எங்களுக்கு) தலை மேல் தலையிருக்குதா? நாங்கள் சொல்லுகிற நாயத்தைக் கேட்டுச் சொல்லுங்கோ," ளென்று சொன்னதுக்கு, "பரிச்சேதம் அந்தப் பேச்சை யெடுக்கக் கவையில்லை," யென்று சொல்லிப் போட்டு, அப்பால் முசியே சொபினேயுடனே இரண்டு நாழிகை தேச காலம் பேசி உள்ளே போனார். நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 6; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 24; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசே கில்லியார், "செவ்வாய்க்கிழமைக்கு கடப்பாக்கம், மதுராந்தகம் இதுகளுக்குச் சவாரி போய் யெட்டு பத்து நாளிருந்து வரவேணுமென்று யிருக்கிறேன். உம்முடைய அமுல்தாரர் அவ்விடத்திலே யிருக்கிற பேர்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சு, நமக்கு வேண்டிய வேட்டைக்குக் குருவிகள் மிருகங்கள் அழைச்சுக் குடுக்கச் சொல்லி யெழுதி அனுப்ப வேணு," மென்று கேட்டதுக்கு, "நீர் போற சேதி அறிந்து முன்னாலே தானே உமக்கு வேண்டிய வேட்டை தினிசும் பழவகைகளும் அவ்விடத்திலே அகப்படுகிற மட்டுக்கும் தாட்சியில்லாமல் அழைப்பிச்சுக் குடுக்கச் சொல்லி யெழுதி அனுப்பினேன். அதுவுமல்லாமல் உம்மை பின்னையும் மரியாதையாய் நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லி யெழுதி அனுப்பியிருக்கிறது," யென்று சொன்(னேன்). அதுக்கு அவர் மெத்த உபசாரம் சொன்னார். முசே பொலோ சிதம்பரத்துக்குப் போறேனென்று சொன்னதுக்கு, முசே கில்லியாருக்குச் சொன்ன உத்திரந்தானே சொன்னேன். அப்பால் முசே கோவற்ணதோரிடம் முசே கொற்னேத்தும் சிதம்பரத்துக்குப் போறேனென்று சொன்னதுக்கும், அவருக்கும் முன் ரெண்டு பேருக்கும் சொன்ன உத்திரம் தான் சொன்னேன்.[1]

முசே மீரா அழிசிப்பாக்கத்துச் சேதி யென்ன யென்று கேட்டார். "குண்டூர் வெங்கிடாசல செட்டி வந்து உம்முடனே பேசிக் கொண்டு தான் சமாதானம் பண்ணிக் கொள்ளுகிறோ மென்று சொன்னா," ரென்று, அவர் பேரிலே பளுவு சுமத்திப் போட்டேன்.

இப்படி யிருக்கச்சே, அன்பத்து ரெண்டு கட்டுப் போட்டாச்சுது. முன் கையிருப்பு நாற்பத்திரெண்டு கட்டுப் போட்டார்கள். ஆக தொண்ணூத்தி நாலு கட்டு யென்று சொல்லி டாப்பு (பட்டியல்) அய்யமார் குடுத்து, முசே பெடுத்தல்மீ முதலான பேர்களுக்குக் கபுறு சொன்னார்கள். அந்த மட்டுக்கும் அவரவர் கலைஞ்சு போய் விட்டார்கள்.

இந்த அவசரத்திலே கோவற்ணதோர் அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைக்கப் போனவிடத்திலே, திட்டக்குடிக்கு ரெண்டு கும்பினீர் சிப்பாயிகளும் யிருபத்தஞ்சு குதிரைக்காரர்களும் வந்தார்களென்று விறுத்தாசலம் கொம்மாந்தாம் யெழுதி அனுப்பின காகிதத்தைப் படிச்சுக் காண்பிச்சுக் கேட்டதுக்கு, "யிந்தச் சேதி முன்னே தானே (நான்) சொன்னதுக்கு, அவர்களை சமையம் பார்த்துப் பிடிக்கச்

---

[1] இவர்களெல்லாம் பிரெஞ்சுக்காரர் வசமிருந்த சீமை, அவற்றின் நிலை, குத்தகை ஆகியவற்றை நேரில் சோதிக்கச் சென்றிருத்தல் வேண்டும்.

சொல்லி யெழுதி அனுப்புவோ மென்று சொன்னீர்களே. அந்தச் சேதி தானிப்போவும். நம்மைத் தொட்டு ஒரு கலாபம் வராமல் யென்ன பார்த்தாலும், யிங்கிலீசுக்காறர் திட்டக்குடி யென்கிற சீர்மையும் கட்டிக் கொண்டு சிலாறு பண்ணுகிறார்கள். யினி மேல் அதுக்குத் தக்க (நாம்) நடப்பிக்கவேணு," மென்று சொன்(னேன்); "உன் அமுல்தாரருக்கும் யெழுதி அனுப்பி, அவர்கள் யெத்தனை பேர்களுடனே யிருக்குறார்கள், யெவ்வளவு பேர்களுடனே சாதிக்கலாம், அந்த வயணம் யெழுதி அனுப்பி அழை(யும்," யென்று) சொன்னார். நல்லதென்று சொன்(னேன்).

அப்பால் "அய்யன் சாஸ்திரி பலவந்தமாய் யென்னண்டைக்கு வந்து, நான் செய்த குத்தத்தை யெல்லாம் மனம் பொறுத்து ரக்ஷிக்க வேணுமென்று வெகு பேரைக் கொண்டு சொல்லிவிச்சு, கணக்குத் தீத்துகொண்டு அன்பத்தோறாயிரத்துச் சில்வானம் ரூபா குடுக்கவேண்டியதுக்கு சுங்கு சேஷாசல செட்டி, குண்டூர் வெங்கிடாசல செட்டி, கண்ணபுரம் திருப்பள்ளி செட்டி, கண்டால் குருவப்ப செட்டி யிவர்கள் முன்பாகக் கணக்கும் தீத்துக் கொண்டு, சீட்டும் யெழுதி வந்து குடுத்து, யிந்த வருஷத்துக்கும் வாயிதா பந்தியும் தீத்துக் கொண்டு, முன் நிலுவையும் அனுசரிச்சு யெழுதி, யிப்போ அன்பதினாயிரம் ரூபா கையிலே குடுக்கத் தீத்துக் கொண்டு யெழுதிக் குடுத்தான். அந்தப் படிக்கி யெழுதி வாங்கிக் கொண்ட ரெண்டு உடம்படிக்கைச் சீட்டிலேயும் சாட்சிகள் கையெழுத்துக் கூட போடுவிச்சுக் கட்டிக் கொண்டு, அமுல் அவனுக்குக் குடுக்கவும், நபர் சாமீன் சொல்லிவிக்கவும், தாசீல் சம்பிறீதி யென் மனுஷனாக வைச்சுக் காசு நான் வாங்கிக் கொள்ளவும், ரொக்க சாமீன்தாரனுக்குக் குடுத்த நூத்துக்கு அஞ்சு விழுக்காடு யெனக்குக் குடுக்கவும், நஷ்ட்டம் நயம் (லாப நஷ்டம்) அவனனுப்பிவிச்சுக் கொள்ளவும் யிந்தப்படி ஒடம்படிக்கை பண்ணிக்கொண்டு, முப்பதினாயிரம் ரூபா குடுத்து நானும் முசே கில்லியார்[1] கையிலே செலுத்தியும் போட்டேன். யின்னம் யிருபதி னாயிரம் ரூபாயும் நாலஞ்சு நாளையிலே குடுக்கவும் சம்மதியாயி, தோறண(?) சீட்டும் நாளைய தினம் குடுத்தனுப்பி விக்குறேனென்று சொல்லி, யிந்த வயணத்துக் கெல்லாம் வாயிதா பந்தி (பணம் செலுத்தும் தேதி) யெழுதிக் குடுத்தபடி திரான்சிலிட்டுப் பண்ணின காகிதமொன்றும், போன வருசத்துக் கணக்கு தீத்துக் கொண்டு அன்பத்தோராயிரத்து சில்வானம் ரூபா (நாம்) வேண்டும் பொழுது குடுக்கி (றோ மென்று) யெழுதிக் குடுத்தக் காகிதத்துக்கு திரான்சிலிடச் சொன்ன காகிதமொன்றும், அப்பால் முன்னாலே யிந்தக் குத்தகைக்காரர்களையும் கையிலே வைத்துக் கொண்டு வெள்ளைக்காரர் தாங்கள் அதிகப் பணம் பதிமூவாயிரம் வராகன் போட்டோமென்றும்,

[1] கில்லியார் (Guillard) கம்பெனியின் காசாளர் பொறுப்பிலிருந்தவர். முன்பே கூட அவரிடம் குத்தகைப் பணம் பிள்ளை செலுத்தியதை நாம் கண்டோம்.

குடிகள் பேரிலே பன்னீராயிரம் வராகன் மட்டுக்கும் வரவேணுமென்றும், யிதைத் தொட்டு லட்சத்தன் பதினாயிரம் ரூபா தங்களுக்கு நஷ்டம் வந்த தாயும் (முன்னே சொன்னார்கள்). "வந்தவாசி சீமைக்கு முசே லெறி (வெறி) பிணைக்காரன் (என்று) யிந்த (குத்தகைதாரன்) சாஸ்திரி யெழுதிக் குடுத்தான்.

"செஞ்சிக்கி முசே சொல்மினியாக்கும் குத்தகைக்காரன் நாராயண சாஸ்திரியும் பதினாயிரம் ரூபாய் அதனமாய்க் கடன் வாங்கிப் போட்டோமென்றும் யெழுதிக் குடுத்தார்களே, அப்போ யிதெல்லாம் பொய் யென்றும், யினி யிதனுடைய காரியம் வெளிப்படுத்துகிறேனென்றும் (நான்) சொன்ன(போது), உமக்கு என் சொல் மெய்யா (ய்க்) காணாமலிருந்தது ... வந்தவாசி சம்மதிக்கி அய்யண் சாஸ்திரி தீத்துக் கொண்டதினாலே தான் உங்களுக்குப் பெரிய அத்தாட்சியாச்சுதே. செஞ்சி சம்மதிக்கும் நாராயண சாஸ்திரி பேசுறான், ரெண்டு நாளையிலே தீரும். அதுவும் கொண்டு வந்து குடுக்கிறேனென்றும், மத்த வெள்ளைக்காரப் பிணைச் சம்மதிகளும் யிப்படித் தானென்றும், நீங்கள் மனம் பொறுத்துக் கேழ்க்குறதினாலே பொய்கள் நில்லாது. மெய் வந்து முன்னிற்கு மென்றும்," சொல்ல வேண்டிய சம்மதிகள்யெல்லாம் சொல்லி, யிந்த சம்மதிக்கி பிரான்சிலே ரெபிறசாந்தியோம் யெழுதி யிருந்ததை, அவர் கையிலே குடுத்தேன். அவரந்த மூணு காகிதமும் படிச்சுப் பார்த்து, வந்தவாசி சம்மதி நீர் யெழுதின படிக்கித் தீந்தது மெய்தானா வென்று கேட்டார். "அபத்தமா? அதுவும் நாலு பேர் சாக்ஷிகள் முன்பாகத் தீத்துக் கொண்டு அவர்கள் கையெழுத்துக் கூட வாங்கினே," னென்று சொன்(னேன்); ஆனால் "இந்த வெள்ளைக்காரர் யென் கையிலே பேரெழுதி குடுத்(தது உமக்குத் தெரியும்) அல்லவா?" வென்று கேட்டார். "வேறே சாதகம் (சான்று) வேண்டிய தென்ன? பிறத்தியக்ஷத்துக்கு (நேரில் பார்த்ததுக்கு) அனுமான மென்ன?" வென்று கேட்(டேன். அப்பால்) சொல்லத் தக்க விதமெல்லாஞ் சொன்(னேன்). "நல்லது, செஞ்சி சம்மதியும் தீத்துப் போடு. அப்பிறஞ் சொல்லுகிறேன்," யென்று சொன்னார். நல்லதென்று சொன்(னேன்).

அப்பால் மமுதல்லி கான் யாச்சம னாய்க்கன்[1] கையிலே ரெண்டு லக்ஷத்து நாற்பதினாயிரம் ரூபாயும், தாம்றுல்வா[2] கையிலே தறுபாறு காசும் கூட (தர்பார் செலவுக்கும் சேர்த்து) ரெண்டு லக்ஷம் ரூபாயும், காவேட்டி[3] ராசா கையிலே லக்ஷத்தன் பதினாயிரம் ரூபாயும் வாங்கி, (அதைச்)

---

[1] இவன் வேங்கடகிரி ராஜா (பாளையக்காரன்)

[2] இவன் காளஹஸ்தி பாளையக்காரன்.

[3] கார்வெட்டி (காடு வெட்டி என்பதன் மருவோ?). பொம்மராஜப் பாளையப்பாளையம் என்றும் இது அழைக்கப்பட்டது.

சென்னப்பட்டணத்து வர்த்தகர்[1] மாரிபத்திலே செலுத்திப் போடச் சொல்லித் திட்டம் பண்ணிப்போட்டு, மத்தப் பாளையக்காரர் பேரிலேயும் மோகீம் பண்ணிக் (படை நடத்திக்) கொண்டு வருகிறான். முறுத்த சல்லி கா(னும்) லக்ஷம் ரூபாயாய்த் தீத்துக் கொண்டு, அன்னூரு ராணுவும் யிறனூறு குதிரையும் மழுதல்லி கானுக்குக் குமுக்கு அனுப்பிவிச்சா னென்று யிது முதலான சேதியும் சொல்லி, அனுப்பிவிச்சுக் கொண்டு பிடவை பார்க்குற சாலையே வந்தேன்.

***1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 9; யுவ வருசம், கார்த்திகை மாசம், தேதி 27; செவ்வாய்***

இத்தனாள் சூரிய உதயமான மூணரை நாழிகைக்கி கோட்டைக்கிப் போன விடத்திலே முசே லெறி கொவர்ணதோர், வெள்ளைக்காரர்களை (படையினரைப்) பழக்குகிற பாறு (Parade) போய்ப் பார்த்து வந்து, யெட்டு மணிக்கு மேல்வீட்டின் பேரிலே ஒபிசியால்மாருடனே மாத்திரமிருக்கச்சே, நான் போயாசாரம் பண்ணினேன். அப்போ யிரெண்டு இங்கிலீசுக்காற ஒபிசியால்மார்கள், தேவனாம்பட்டணத்துக்குப் (தவறு. சென்னைக்குப்) போயிருந்து மறுபடி தேவனாம்பட்டத்துக்குப் போறவர்கள் காண்பித்துக் கொண்டார்கள். அப்பால லவர்க ளெல்லாம் அனுப்பிவிச்சுக் கொண்டு போன பிற்பாடு ... அவ்விடத்திலிருந்து வந்த மனுஷன் பேர்விளங்கனை நானா யெங்கே யிருக்கிறாரென்று கோவர்ணதோர் கேட்டதுக்கு, பொன்னாவிலே (புனா) இருக்கிறார், சலாபத்து சங்கு பேரிலே மோகீம் போக வேணு மென்று யிருக்கிறார் யென்றும், ரகோபாவும் மல்ஆரி ஒல்க்கரும் (மல்லாரி ராவ் ஹோல்கர்) டில்லியிலிருந்து அறுபதினாயிரம் குதிரையுடனே பிறப்பட்டு வருகிறார்களென்றும், அவர்கள் வருகிற மட்டுக்கும் காத்துக் கொண்டிருக்கிறா ரென்றும், நாற்பதினாயிரம் குதிரையுடனே ரகோசி பூசலாவின் குமாரனும் கானோசி பூசலாவும் கிருஷ்ணா தீரத்திலே வந்திறங்கி யிருக்கிறார்க ளென்றும், அவர்கள் சாவனூர் பங்காபுரம் மயிசூரின் பேரிலே வரவும், கர்னாட்டகம் பந்துபஸ்து பண்ணவும் யெண்ணிக் கொண்டிருக்கிறார்களென்றும் சொன்(னான்). அதுக்கு துரை, சலாபத்து சங்கு பேரிலே மோகீம் போற பேச்சுப் பொய் யென்று செல்லி, "இந்தக் காயிதங்களை பிரான்சுப்படுத்திக் கொண்டு வரச் சொன்னேன், அதன் பிற்பாடு அதைப் பார்த்துக் கொண்டு உத்தரம் சொல்லுகிறே," னென்று சொல்லி, நானா மனுஷன் வந்தவனைப் போகச் சொன்னார். அவர்களு மனுப்பிவிச்சுக் கொண்டு போனார்கள். நாங்களும் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

[1] சவுக்கார்கள் என்று ஆங்கிலத்தில் உள்ளது.

இத்தனாள் சீரங்கம் பிராமணாள் வந்து சொன்ன சேதி: முசியே பிளாக்கூர் சீரங்கத்திலே ஒரு ஆச்சாரியார் பேர் விளங்கன் அவர்கள் வீட்டுக்கு அன்பது பேர் சிப்பாயிகளை அனுப்பிவிச்சு, அவரைப் பிடித்துப் போய் அடிச்சு, சிறிது திரவியம் வாங்கி, அப்பால் அவர் வீட்டுப் பெண்டுகளைப் பிடித்துக் கொண்டு வந்து போட்டுக் கெடுத்துப் போட்டார்கள். அதின் பேரிலே பிராமணாள் வகையிரா சமஸ்தான பேர்களும் பதினாயிரம் பேர் கும்பல் கூடினார்கள். சீரங்கம், சம்புகேசுரம் ரெண்டு கோவில்களும் அடைச்சு யெல்லார்களும் கோபுரத்திலே யேறிக் கொண்டிருக்கிறார்கள். முசியே பிளாக்கூர் ஓடிப்போய்விட்டான். யிப்படி யெழுதி வந்ததென்று சேதி சொன்னார்கள்.

### *1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 12; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 1; சுக்குறவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோவர்ணதோர் அழைக்கிறா ரென்று சேவுகன் வந்து அழைக்க மேல் வீட்டின் பேரிலே போன விடத்திலே, மகம்மது கமால் மகனும் (மருமகன்) சையது உசேன் யென்கிறவன், மமுதல்லி கானுக்குத் தாங்கள் சமுசாரத்துடனே வருகிறோமென்றும், தன் தகப்பன் பண்ணின குத்தத்தை மனம் பொறுத்து நடப்பிக்கச் சொல்லியும், தன் தகப்பனுக்குக் கோரி கட்டுகிறதுக்கு யிடமும் (தரச் சொல்லி) யிது முதலானது யெழுதிக் கொண்டதுக்கு, மமுதல்லி கான் வரச் சொல்லி (யெழுதினான்); தாம் யெழுதின காகிதமும், அதுக்குப் பதில் காயிதங்களும் (எல்லாம்) வழிச்சேரியிலே அகப்பட்டுக் கொண்டு (வழியிலே பிடித்துக் கொண்டு, அவர்களையும் புதுச்சேரிப்) பாளையக்காரர் பிடித்து வந்து, துரை அண்டையிலே விட்டு, காயிதங்களையுங் கொடுத்(தார்). அதன் பேரிலே என்னையும் மதனாந்த பண்டிதனையும் அழைப்பித்து காயிதங்களைப் படித்துப் பார்த்துச் சொல்லச் சொன்னவிடத்திலே, யிவர்கள் பணங்காசு சென்னப்பட்டணம், மயிலாப்பூர் யிந்த வட்டங்களிலே வைத்திருக்கிற சாடையினுடைய சிவிறஷும் (தகவலும்), தாங்கள் சமுசாரத்துடனே பிறப்பட்டு வருகிறோமென்று மமுதல்லி கானுடைய பர்வானா வாங்கி அனுப்பச் சொல்லி சையிது பத்தே கான் (Saiyid Fatteh Khan) வகையிரா மமுதல்லி கான் அண்டையிலே யிருக்கிற பெரிய மனுஷருக் கெல்லாம் காயிதங்களெழுதினதுக்கு (நக்கல்களும்), பதிலுத்தரவுகள் வந்ததுக்குப் பதிலெழுதின காயிதங்களும், மமுதல்லி கான் யிவர்களை வரச்சொல்லி யெழுதின கவில் காகிதமும், மறுபடியும் மமுதல்லி கானுக்கு எழுதிய காகிதமும் – யிதுகள் பதினாறு பதினஞ்சுக் காகிதங்களும் படித்துப் பார்த்துச் சொல்லச் சொன்னார். மதனாந்த பண்டிதர் படித்துச் சொல்ல, அவன் சொன்னபடிக்கி நான் அவருக்குச் சொன்னேன். கடைசி

அபிப்பிராயம் என்ன யென்றால், தாங்கள் யிந்த வூரை விட்டுப் போட்டு சமுசாரத்துடனே மமுதல்லி கானண்டையிலே போய்ச் சேருகிறதாகவும், யிவ்விடத்திலே உசேன் மாவுத்தன், அசனுதி கான் பேரிலே (தனக்கு) வரவேண்டிய ... பணம் தங்கள் (இவர்கள்) கையில் யிருக்கிறதென்று, தங்களை அனியாயம் பண்ணினதுக்கு, அசனுதி கான் தத்துப்பிள்ளை பாக்கிர் மியான் தான் மேல் வாங்கிக் கொண்டு எங்கள் பேரிலே விழாமல் நிறுவாகம் பண்ணினானென்றும், அதுவும் மத்தியஸ்த்திலே விழுந்தது யென்றும், யெப்படியாகிலும் ஒருவிதமாய்த் தீருமென்றும் மிப்படி (அநியாயமாய்) நடக்கிற படியினாலே, யெந்த வித(மாயிலும்) யிந்த வூரை விட்டு அப்பாலே போக வேணுமென்றும், யிது முதலான சேதியும், மகம்மது கமால் சரீரத்தை வைத்த விடத்திலே யிருபது விராகன் சிலவழித்துக் கோரி கட்டுகிற சிலவு(க்கும்) மானியம் பத்து காணி நிலத்துக்கும் மமுதல்லி கான் பற்வானாவை ... திருப்பதி அமுல்தாரனுக்கு அனுப்பச் சொல்லியும்—இது முதலான சேதி யெழுதி யிருந்தது. அதை யெல்லாம் (துரை) கேட்டு (நாளையோ அதற்கடுத்த நாளோ) அந்தத் துலுக்கனை அழைத்து வந்து யேகதேசத்திலே கேட்டு யிருபத்தஞ்சு அடி அடித்துத் தொரத்தி விடுவோம்; அவனைப் பத்திரமாய்க் காவலிலே வைக்கச் சொல்லு, இந்தச் சேதியை ஒருத்தருடனேயும் சொல்ல வேண்டாமென்றுஞ் சொன்னார். அந்த மட்டுக்கும் பனிரெண்டு மணி அடித்து அரை மணி அடிச்சது. அவரந்தக் காகிதத்தை யெல்லாம் வாங்கி வைத்துக் கொண்டார். நாங்கள் பிறப்பட்டு வந்தோம்.

ஆனால் மதனாந்த பண்டிதர் மகம்மது கமால் பிள்ளையின் கையிலே கொஞ்சம் நட்பு வாங்கிக் கொண்டு, காகிதம் படிக்கிறதிலே சிறிதுகளை மறைத்துப் படித்தான். அந்த சாடை யெனக்கு நன்றாய்த் தெரியும். சமுசாரத்துடனே சமையம் பார்த்துப் பிறப்பட்டு வந்துவிடுகிறோமென்று யிருக்கிற விடத்திலே, யிவ்விடத்துப் பிரபுகள் கையிலே உத்திரவு வாங்கிக் கொண்டு பிறப்பட்டு வந்து விடுகிறோமென்று படிக்கிற சாடை யொன்றும், பண சாடையாய்ப் படித்த போது தட்டு முட்டுப் பிடவை சீலை யென்று படித்த சாடை யொன்றும், பின்னையும் அங்கங்கே சாடைகளுண்டு. அந்தச் சாடை கண்ட விடத்திலே லகுவாய்ப் படித்துச் சொன்ன சாடை அறிஞ்சாலும் பள்ளமுள்ள விடத்திலே நிற்குந் தண்ணீர் யென்று சொல்லுகிற ஞாயமாயிருந்தேன்.

***1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 14; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 3; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோவிலுக்குப் போயி கோட்டைக்கி (எட்டரை) மணி வேளைக்கி, சியோர் கோவர்ணதோர் (இ)டத்திலே நான்

போயாசாரம் பண்ணினேன். அப்போ சீரங்கத்திலே முசியே பிளாக்கூர் நாத(முனி) ஆசாரியார் வீட்டுப் பெண்டுகளை, நாலு பெண்களை, பாறுக்காறரை விட்டு யிழுத்து வந்து கெடுத்துப் போட்ட சம்மதி நடந்த வயணத்துக்குப் பித்திசாம் யெழுதி சீரங்கத்திலே யிருந்து வந்த பிராமணாள் குடுத்தார்கள். அந்தப் பித்திசாமை அவர் படித்துப் பார்த்து, முசியே பெடுத்தல்மீ கையிலே குடுக்க, அவரதைப் படிச்சுப் பார்த்து அவனை அழைப்பிக்குறதாய் யோசனை பண்ணின சாடை தெரிஞ்சுது. அப்பால் நான் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

பட்டணத்திலே நடக்கிற அநியாயமும் தொரைத்தனத்துக்கு வருகிற அபகீர்த்தியும் பார்க்கப் போனால், பட்டணம் விருத்தி (பெற்று) நடக்குற சாடையாய்க் காணயில்லை. ஆற்காடு, திருச்சிராப்பள்ளி, சென்னப்பட்டணம், மயிசூர், தஞ்சாவூர் வகையிரா யெடுபட்டுப் போன பட்டங்க(ளிலேயும்) ... ஆக்கீரிலே அப்பச்சரித்தம் (இத்தகைய கொடுமைகள்) விஸ்தாரமாய் நடந்து தான் யெடுபடுகிறதாய்ப் போச்சது. அனீதங்கள் நடந்து யெடுபடுகிறதாய், அதுக்குத் தக்க கலகங்கள் ... முதலானதுகள் யெல்லாம் கண்டு கொண்டிருக்கிறது. விருத்தியாய் நடக்கிற காலங்களிலே பெகு நியாயமாய் நடக்குறதும், யெவன் பிரபுவோ அவன் கம்பையிலே (நிறுவாகத்தின் கீழ்) யெல்லாம் அடங்கி வாறது முதலான நல்ல நடத்தைகளும் பார்த்து (நான்) அனுபவிச்சபடியினாலே, யிப்போ யிந்தப் பட்டணத்திலேயும், யிந்தப் பட்டணத்தைச் சேர்ந்த யிடங்களிலே யெல்லாம் நடக்குற காரியங்களை விசாரித்துப் பார்த்தால், பட்டணத்துக்கு யென்ன யிக்கட்டு வருகுதோ யென்று ஒரு பயமும், அப்படி வராமல் காக்க வேணும் யென்று சுவாமியைப் பிரார்த்திக்க வேணுமென்கிற பத்தி விசுவாசமும் தோணுது. காலத்தை ஒருத்தராலேயும் தள்ளக் கூடாது.

*1755 வருசம், டிசம்பர் மாசம், தேதி 17; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 6;* புதவாரம்

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கு (நானும் மற்றவர்களும்) யேழரை மணிக்கிப் போன விடத்திலே முசே லெறி கோவர்ணதோரவர்களுக்கு ஆசாரம் பண்ணினார்கள். நானும் அவர்களுடனே கூடப் போய் ஆசாரம் பண்ணி, காரிக்கன் பிடவை பார்த்த சேதி சொ(ன்னேன்).... பிறகாலே துறையூர் பாளையக்காரன் பாப்பு ரெட்டி அவனண்டை யிலிருக்கிற அவன் அண்ணன் மகன், முன் பட்டத்திலே யிருந்தவன், உடையார்பாளையத்திலே யிருந்தானே அவன், பவுன்சு கூட்டிக் கொண்டு போய் பாப்பு ரெட்டியின் பேரிலே சண்டைக்கு யிறங்கின விடத்திலே, பாப்பு ரெட்டி பவுன்சு கூட்டிக் கொண்டு யெதிரே சண்டை போடப் போன சமையம் பார்த்து நம்முடைய கொம்மாந்தாம் முசே

திலோ (M. Tilly) யென்கிறவன், அன்பது சொலுதாதுடனே துறையூர் வெளி தேசத்திலே யிறங்கி யிருந்தவன், சீரங்கத்துக்குஞ் சொல்லி யனுப்பி முசே மெதோர் (M. Medere) பவுன்சு அழைப்பித்துக் கொண்டு, துறையூர் முன் நாளது மாசம் முதல் தேதி (டிசம்பர் 12) சுக்குறவாரம் ராத்திரி வாங்கிக் கொண்டார்கள். பாப்பு ரெட்டி மகன் பட்டத்திலே யிருந்தவன் பிறப்பட்டு ஓடிப் போனானாம். பாப்பு ரெட்டியும் சண்டைக்குப் போனவனும் ஓடிப் போனானென்றும் சேதி சொல்லுகிறார்கள். உடையார்பாளையத்(துக்கு) முன் பட்டமாயிருந்தவன் போனவனுக்கு முசியே தில்லை (முன்பு திலே) யெழுதி அழைப்பிச்சு, துறையூர் கோட்டையிலே பட்டங் கட்டப் போறானென்று சேதி யெழுதி வந்த தென்று (துரைக்கு) சொன்னதுக்கு, "மெய்தான் எனக்குஞ் சேதி யிப்போ தான் வந்தது," தென்று சொன்னார். அப்பால் முசியே பெடுத்தல்மீ வகையிராக்கள் பேசியிருந்து போன பிற்பாடு நான் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1755 வருசம், டிசம்பர் மாசம், தேதி 18; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 7; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கு யெட்டு மணிக்கிப் போனவிடத்திலே சலாபத்து சங்கு பெகுமானம் கொண்டு வந்த சேக்கு அப்துல் றயிமான் என்கிறவனும் உசேன் மாவுத்தனும் சலாபத்து சங்குவினுடைய காகிதமொன்றும் அவர் மோகறு பண்ணியிருக்கிற காகிதமும் காண்பித்தார். (அதிலே) சலாபத்து சங்கு யிவர்(கள்) ஆனை(கள்) கொண்டு வாருவார்(கள்). (அவற்றை அழைத்துப் பெற்றுக் கொள்ள வேணும் என்று கண்டிருந்தது) ... (அப்பால்), அவர் காரியம் மத்தியஸ்தமாய் (எப்படி முடிந்தது யென்று துரை) கேழ்க்கச் சொன்னபடிக்கிக் கேட்டோம். பணங் குடுக்கவேண்டியது மெய்தான், பணம் வாங்கிக்கொடுக்க வேணுமென்று (அவர்கள்) சொன்(னார்கள்). "பணம் குடாமல் (ஊரை விட்டுப் போக) விடத்தக்கதில்லை. அவர்கள் சண்டித்தனம் பண்ணினால் நான் செய்ய வேண்டியதென்ன?" வென்று கோவர்ணதோர் சொன்னதுக்கு, உபாயமாய் மார்க்கமாய் பயத்தின் பேரிலேயும் சதுர் உபாயத்திலேயும் பார்க்க வேணுமென்று சொன்னதுக்கு, "நான் சகல விதத்திலேயும் மத்தத்துப் (உதவி) பண்ணிக் குடுக்கிறாப் போலே ஆச்சுதே! இனி நான் செய்ய வேண்டிய தென்ன?" வென்று சொன்னார்.[1]

அப்பால் சலாபத்து சங்கு பேருக்கு ஒரு காகிதமும் அயிதர் சங்கு பேருக்கு ஒரு காகிதமும் யெழுதச் சொல்லி, அதுக்குப் பிரான்சிலே யெழுதிக் குடுத்தார். அதிலே சலாபத்து சங்குக்கு யெழுதின காகிதம் மத்தலப்பு:

---

[1] இந்த பத்தி முழுவதும் பிழையாகப் பிரதியில் எழுதப்பட்டுள்ளது. இதில் கூறப்படுவது உசேன் மாவுத்தனின் பண விஷயம் போலும்.

"நீர் தக்கன சுபாவுக்குத் தொரைத்தனத்துக்கு வந்த பிறபாடு பாதுசாவினுடைய காரியங்களிலே நீர் பிறயாசைப்பட்டு மெனத்துப் பண்ணினதுக்கு (சிரமப்பட்டதுக்கு) உபகாரமாய் பாதுசா அவர்கள் சந்தோஷப்பட்டு உமக்கும் தாரூல்முலுக்கு (தவறு. மதார்–உல்–முல்க்)[1] யென்கிற(பட்டம்) குடுத்ததுக்குச் சகல செனங்களு மிந்தச் சேதியைக் கேட்டு வெகு சந்தோஷப்பட்டார்கள். நாங்கள் தான் யெப்போதும் உம்முடய ஆயிசுவரியம் விருத்தியடைய வேணுமென்றும் உமக்குச் சகல ஆரோக்கியமும் குடுக்க வேணுமென்றும் சுவாமியைப் பிரார்த்திக்கிறோ மானபடியினாலே யிந்த கிதாப்பு தங்களுக்கு வந்தது யெங்களுடைய சந்தோஷமான படியினாலே, யிந்த சந்தோஷ முபார்க்கு எங்களுக்கும் உங்களுக்கும் உங்கள் சாதிக்கும் முபார்க்கு ஆணாப்போலே உங்களுக்கு முபார்க்கு யிருக்கு," தென்று உபசாரமாய் யெழுதி யிருந்தது. அந்தப்படி பாரிசியிலே சலாபத்து சங்குவுக்கு பாதுசா மதாரால் முலுக்கு என்று பவுறுஷ நாமதேயம் குடுத்து பர்வானா யெழுதி அனுப்பினதுக்கு முபார்க்குபாதி யெழுதினது.

அப்பால் கோசா (Coja) கலந்தர் கான் அயிதர் சங்குவுக்கு[2] துரை யெழுதின காகிதம்: "நீர் யெப்போதும் பிரான்சு சாதியாருடய காரியங்களிலே சமையா சமயங்களிலே பிறயாசைப்பட்டதும், அதனாலே காரியங்கள் அனுகூலம் பண்ணிக் குடுத்த சேதிகள் யெல்லாம் முசே புசி யெழுதின காகிதத்தினாலே தெரியவந்தது. யெப்போதும் நீங்கள் யெங்கள் காரியத்திலே மனது வைத்து நடக்கத்தக்கதாக சுவாமி உம்முடைய மனது வித்தேசம் பண்ணாமல் வைக்கக் கடவாரென்றும், நாங்களும் உம்முட மனதுக்குத் திஷ்ட்டாந்திரம் பண்ணி விக்கிரோ" மென்றும் யிப்படி உபசாரமா யெழுதி யிருந்தது. யிதைப் பாரிசிலே யெழுதிக் கொண்டு வரச் சொன்னார். அந்தப்படிக்கி யெழுதிக் கொண்டு வாரோமென்று சொல்லி அவர் ரெண்டு பேருக்கும் யெழுதச் சொல்லிய பிரான்சுக் காகிதத்தை வாங்கிக் கொண்டு வந்து, மதனாந்த பண்டிதன் கையிலே[3] பாரிசிலே (பார்சி) யெழுதி வைச்சுக் கொண்டு போய் மோகறு பண்ணி முசே ஷெவிரோ வசம் ஒப்பிச்சுப் போட்டோம்.

***1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 19; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 8; சுக்குரவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கி சின்ன துரையண்டைக்குப் போக வேணுமென்று அந்த வழியாய்ப்

[1] 'ராச்சியத்தின் தூண்' என்று பொருள்.

[2] இயன்ற வரையில் பிள்ளை கிரந்த எழுத்துகளைத் தவிர்த்துள்ளது கவனிக்கத் தக்கது. கோஜா கலந்தர் கான் மகன் அயிதர் ஜங் ஐதராபாத்திலே இருந்தான்.

[3] பலவிடங்களில் எழுதிய வார்த்தைகளையே திரும்பத் திரும்பப் படியெடுத்தோர் எழுதியுள்ளனர்.

போனவிடத்திலே, அவர் புதுசாய்க் கட்டி யிருக்கிற தோட்டத்துக்குப் போணாரென்று சொன்னபடியினிலே, செவ்வையாய்க் கோட்டைக்குப் போய் துரையவர்களைக் கண்டு சந்திச்சு ஆசாரம் பண்ணின விடத்திலே, அவர் முசியே புசி, சலபத்து சங்குவுக்குக் காகித மெழுதுகிறோம்; ஆற்காட்டு மமுதல்லி கான் சேதி யேதாகிலுமுண்டா, யிருந்தால் சொல்ல வேணுமென்று கேட்டார்.

அதுக்கு, "அவர்களுக்கு யிந்த மாதம் றம்புறவல் (ரபி–உல்–ஆவ்வல்) மாதமென்று பேர். யிந்த மாதம் ரெண்டாந் தேதிக்கு நம்முடைய தெசம்பரு மாசம் 7 தேதி விழும்போலே யிருக்குது. அன்றைய தினம் ஆற்காட்டிலே யிங்கிலீசுக்காறருடைய கொடி போட்டிருந்ததை வாங்கிப்போட்டு, மமுதல்லிகானுடைய கொடி போட்டு கோட்டைக்கு மகம்மது நூறு (மகம்மதுபூர்)[1] யென்று பேரும் கொடுத்து, யிருபத்தோரு பீரங்கிகளும் போட்டு தமுக்கும் போடுவிச்சுது. (மேலும், இனி) உம்தாத்துல் முலுக்கு சேறா பாசதவுலா பகதூர் திலாவர் சங்கு (உம்தாத்–உல்–முல்க் சிராஜ்–உத்–தௌலா) யென்கிற பேராலே அழைக்கிற தேயல்லாமல், மமுதல்லி கானென்று ஆராகிலும் சொன்னால் அவர்கள் கையிலே அபராதம் வாங்குவோமென்று ஆற்காட்டுத் தண்டெல்லாம் தண்டோரா பிறப்பிச்சார்கள்," யென்று சொன்னதுக்கு, "யிது மெய்தானா? யிந்தப் பேர் ஆரிட்டுக் கொள்ளச் சொன்னார்கள்? இவனா யிட்டுக் கொள்ளப்போமா?" வென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "ஆற்காட்டு சுபா முசியே துப்பிளேயிக்சு பேருக்கு ஆயிரு(க்க), மத்தியே யிங்கிலீசுக்காறரும் மமுதல்லி கானும் சீர்மைகளைக் கட்டிக் கொண்டு பேஷ்க்கஷு வகையரா பாளையகாரருது, கில்லேதாரருது வாங்கு(கிறார்கள்) யென்று நேத்து கூட சலாபத்து சங்கு எழுதி அனுப்பியிருக்க, யிப்போ யாசம னாயக்கன், தாமல்வார் (ஆகிய இருவர்) கையில் ரெண்டு லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாயும், கார்வேட்டிராசா பாளையம் (என்கிற) பொம்மராசா பாளையம் பேரிலே லக்ஷம் வராகன் (எனவும்) தீந்து, (அப்பாளையங்களின் மதிப்புக்கு இது) தாளும் தாளாது யென்று தகராரிலே யிருக்குது. வேலூரா(ன்) தான் லக்ஷம் ரூபாயும் குடுத்து, குமுக்கும் அனுப்பிவிச்சான். சாதுகடையார் (சாத்துக்கடையார் பேரில்) அன்பதினாயிரம் ரூபாய் (எனத்) தீந்துது. யிப்படி அவரவர் பேரிலே தாது பிராது யில்லாமல் வாங்கச்சே, யிப்போ யிந்தப் பேர் யிட்டுக் கொண்டதுக்கு யென்ன பிராது வரப்போகுது யென்று அவனென்ன அறியானா? அதனாலே அவன் சரிப்போனாப் போலே நடப்பிக்கிறான்? யின்ன மவன் பெகுசாய் அடங்கி நடந்து கொள்ளுகிற மனுஷனாய்க் காணயில்லை. அது யெப்படி யென்றால் பாதுசா பட்டமே மராட்டியர் வைக்கவும் வாங்கவும் ஆகத் தீந்து போச்சுது. சலாபத்து சங்கு(வின்)

[1] தாருல் நூர் என்றும் முஸ்லிம்கள் அழைத்தனர்.

சீர்மைகளெல்லாம் நானா கட்டிக் கொண்டு போயிருக்கிறான். அயிதராபாத்து சீமையிலே சிறிது (மட்டும் சலாபத் சங்) கைவசமாயிருக்குது ... (தன்) கிட்டயிருக்கிற பவுன்சு சிலவுக்கு(க் கூட) யில்லாமல் அவன் மெத்த டங்காவிலே (இக்கட்டிலே) அகப்பட்டுக் கொண்டு முழிச்சுக் கொண்டு யிருக்க, மத்தியே கடப்பையான் சிறிது சீர்மை யெல்லாம் கட்டுகிறான். முராரி ராயன் ஆதிவெண்ணை முதலான கில்லாவுடைய சீர்மைகளுக்குச் சுபேதாரா யிருக்கிற கோசா நேமதுல்லா கானுடைய சீர்மையை யெல்லாம் கட்டிக் கொண்டு, அவனையும் பிடித்துக் கொண்டானென்றும், அவனோடிப் போய் விட்டானென்றும் (தெரிகிறது).

"யிப்படியான அறுசிகப்பட்டிருக்கிற (போது, மகமதலிகான்) இந்தப் பவுன்சுடனே பின்னையும் பவுன்சு கூட்டிக் கொண்டு பக்கஞ் சீர்மை யெல்லாம் கட்டாமலிருக்கிறது வந்து மெத்த அடங்கி நடந்து கொள்ளுகிறதுக்கு அனுமான மென்ன? யிதல்லாமல், இங்கிலீசுக்காறர் வைத்திருந்த பாறுக்காறர்களை யெல்லாம் வாங்கி, மமுதல்லி கான் தன் கசா தரப்பிலே ஆறு யேழு ரூபாய் சம்பளத்துக்கு (யிருப்பவரெல்லாம்) யிருங்கோள் என்று சொல்ல, அதுக்குச் சம்மதிச்சு மூவாயிரம் துப்பாக்கிக்காரர் அமர்ந்தார்களென்றும், ஆற்காட்டுக் கோட்டையிலே மமுதல்லி கான் கொடி போட்டதின் பின் காவேரிப்பாக்கத்துக்குக் கோட்டையிலேயும் திமிரிக் கோட்டையிலேயும் (பாதுஷாவின் கொடிகளையும்) இங்கிரேசுக் கொடியை(யும்) வாங்கிப் போட்டு, மமுதல்லி கான் கொடியைப் போட்டதாய் இரெண்டு யிடத்திலே யிருந்தும் சேதி வந்தது," யென்றும் சொன்னதுக்கு, இதெல்லாம் மெய்தானாவென்று கேட்டார். இந்தப்படி யெழுதி வந்த தென்று சொன்னேன். யிந்தப்படி பிரான்செழுத்திலே யெழுதி வாருமென்று சொன்னார். அந்தப்படி யெழுதிப் போய்க் குடுத்தேன்.

அப்பால் சலாபத்து சங்குக்கு (பாதுஷா விடமிருந்து) மதராலமுலுக்கு யென்கிற புவுறுஷனும் சீரொப்பா, கலக்கி (கல்கி) வகையிராவும் வஸ்திரங்களும் வந்த (தற்கு) முசியே புசிக்கும் முபார்க்கு பாதி (சொல்லி), சலாபத்து சங்கு (வுக்கும் துரை) யெழுதி அதை பிரான்செழுத்திலே யெழுதி ...

### *1755 வருசம், டிசம்பர் மாசம், தேதி 27; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 16; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே நான் சினயோர் குவர்ணதோரண்டைக்குப் போய், கருங்குழி சீர்மையிலே நாகலப்பாக்கம் யென்கிற கிராமம்

[1] சில வரிகள் கிழிந்துள்ளன.

யிருக்குது; அதிலே குடியானவன் மண் செவிர் வைக்க பழய செவிரை யிடித்த விடத்திலே ஒரு சின்ன தோண்டியிலே ஆயிரத் தன்னூறு காசு செப்புக் காசு வைத்து புதைச்சிருந்து. அது வெளியாய், அங்கே யிருக்கிற தறபுதாரனுக்கு (கணக்கன், மணியக்காரன்) குடியானவர்கள் சொல்ல, அவன் அதை மதுராந்தகத்திலே (யிருக்கிற) முசே தெருசே (M. du Rocher) என்கிறவனுக்குக் கொண்டு போய்க் காண்பித்து மாசறு (மகசர்—விண்ணப்பம்) பண்ணிவிச்சு, அதிலே காறுகோயி (கணக்கன்), தேசமுகி (தேஷ்முக்) வகையிராக் களுடைய அத்தாட்சி போடுவிச்சு, அதைக் குடுவையிலே போட்டு, முத்திரை போட்டு, முத்து வெங்கட்டராம ரெட்டி அனுப்பி(னான்). அத்துடுனே கூட ... அந்தக் கிராமத்து மணியக்காரர், முசியே வெறியண்டையிலே யிருக்கிற (வனும் கிராமத்துக் குத்தகை தாரனுமான) துபாசி யெல்லப் பிள்ளைக்கும் ஓலை யெழுதி யனுப்ப, அந்தக் குடுவையைப் பிடிப்பிச்சுக் கொண்டு, முத்து வெங்கிட்டராம ரெட்டி மனுஷன் யெக்கிம் (யெக்ஞம்) பட்டர் வகையிரா கூட துபாசி யெல்லப் பிள்ளை(யும்) யெங்கள் வீட்டுக்குக் கொண்டு வந்து யென்னுடனே சொல்ல, அந்தக் குடுவையை முத்திரைப் படிக்கி மேல் வீட்டின் பேரிலே கொண்டு போய் வைத்துக் கொண்டிருக்கச் சொல்ல, அந்தப்படிக்கி கொவர்ணமாமுலே அவர்கள் கொண்டு போய் வைத்துக்கொண்டிருக்கச்சே, நான் பிடவை பார்க்கிறது ஆன பிற்பாடு, பத்துமணி நேரத்துக்கு, மேல்வீட்டின் பேரிலே போய் துரையவர்கள் காம்பிராவிலே யிருக்கச்சே, நான் போயாசாரம் பண்ணி, முத்திரை போட்டக் குடுவையையும் முன்னே வைத்து, மேலே யெழுதின படிக்கி நடந்த சேதியையும் சொல்ல, அவர் முத்திரையை அவிழ்த்துக் குடுவையைக் கொட்டிப் பார்க்க, செப்புக் காசு துருப்பிடித்து முத்திரை தெரியாமலிருக்க, யிதைக் கொண்டு போய் யென்ன முத்திரை (எனத்) தெரியாது (மூடியிருக்கும்) துருப்பெல்லாம் போக்கிவிச்சு, யின்ன முத்திரை யென்றும் யின்ன யெழுத்தென்றும் வந்து சொல்லுமென்று சொல்ல, நல்லதென்று அதைக் குடுவையிலே போட்டு வீட்டிலே கொண்டு போய் துரு போக புளியிலே ஊர வைக்கச் சொல்லி அனுப்பினேன்.

"நேத்து விசையராம ராசா வண்டையிலே யிருந்து இரெண்டு காகிதம், பாரிசிலே யெழுதி யிருக்குது, வந்திருக்குது. யெனக் கொரு காகிதமும் உமக்கு ஒரு காகிதமும் போலே யிருக்குது, பாரும்," என்று (துரை) குடுத்தார். அது பாரிசு யானபடியினாலே மதனாந்த பண்டிதன் வெளியே யிருந்தவனை அழைப்பித்து மேல் விலாசம் பார்க்கச் சொல்ல[1] ஒரு காகிதம் றெங்கப்பன் பேருக்கும், ஒரு காகிதம் கஞ்சாமிலே யிருந்து வந்த பீர் மகம்மது பேருக்கும் யெழுதி யிருக்குது யென்று சொல்ல, அதைக் கேட்டு துரை யென்னைப் பார்த்து உன் பேருக்கு வந்த

[1] பிள்ளைக்குப் பார்சி பேசமட்டும்தான் தெரியும். படிக்க வராது.

காகிதத்தைப் படிச்சுச் சொல்லு யென்று சொல்ல, அவர் முன்பாக மதனாந்த பண்டிதன் படிச்சுச் சொன்னது: "தாங்க ளனுப்பின காகிதத்திலே நவாபு அசுமுத்தவுலா பாதூர் ருஸ்தும் சங்கு (Azam-ud-daula Bahadur Rustum Jang என்ற கிதாப்பு) புதுச்சேரி கோவர்ணதோ(ரான) (லெறிக்கு) வந்ததுக்கு முபார்க்குபாதி (எழுதச் சொல்லியும்), அதுக்குத் தக்க பெகுமதியும் நசரும் அனுப்பிக்க வேணுமென்றும்[1] வயணமாய் விஸ்தரிச்சு எழுதினது பார்த்துக் கொண்டு, மெத்தவுஞ் சந்தோஷமாச்சுது. நீங்களென் சுகங்கோரி யெழுதினபடியினாலே, தாங்கள் புதுச்சேரி கோவர்ணதோரவர்களுக்கு அனுப்பிவிக்கச் சொன்ன படி தினிசுகளை யோசனை பண்ணி, ஒரு உருப்படி கேழ்வுக்கு அமர்த்தி (ஒரு தோணியை வாடகைக்கு அமர்த்தி), அதன் பேரிலே அவருக்கான தோபா தினிசுகள் (உடை வகைகள்) அனுப்பிவிக்கிறேன். அதை அவருக்குக் குடுத்து, யென் காகிதத்தையும் படிச்சுக் காண்பிச்சு தெரியப்படச் சொல்லி, யென் மன்சுபா சாகீர் வகையிராவுக்கு உமுதேதுலு முலுக்கு (Umdat-ul-mulk) யென்கிற பேருடைய முசியே புசி அவர்களுக்கு ஒரு சிபார்சு காயிதமும், சேக்கு யிபறாம் (இப்ராகிம்) பேருக்கு ஒரு சிபார்சு காயிதமும், மருந்து, குண்டு, சக்கிமுக்கிக் கல்லு, இரெண்டு மூணு பீரங்கியும், இதுகள் வாங்கியனுப்பி விக்க வேணும்," யென்று யெழுதியிருக்கு தென்றும் மதனாந்த பண்டிதன் படித்துச் சொன்னார், அதை நான் சினயோர் கோவர்ணதோரவர்களுக்குச் சொல்ல[2] "யிந்த மருந்து குண்டு வகையிரா தினிசுகள் முசியே மொற்சேனுக்கு (M. Moracin) யெழுதிக் குடுக்கச் சொல்லலாம், முசியே புசிக்கும் சேக்கு யிபராமுக்கும் சிபார்சு யெழுதிக் குடுப்போ," மென்று (அவர் சொன்னார்).

அப்பால், சேக்கு யிபரா மென்கிறவன் ஆரென்று கேட்டார். "மயேயிலே யிருந்து (சமேதாராக) சேக்கு உசேன் வரச்சே கூட வந்தான். அதன் பிற்பாடு அப்துல் றயிமான் (ரஹ்மான்) வந்த பிற்பாடு அவனை வாங்கிப் போட்டு சேனே (பதவி நீக்கம் செய்து அதிக) தொந்திரவு பண்ணினதின் பேரிலே, அவனுக்கு அலாயிதாவாயி, (அப்பால்) முசியே துப்ளேயிக்சு (அவனைச் சிபாரிசு செய்து) யென்னிடத்திலே வைத்திருந்த அன்னூறு பாறுக்காறருக்கும் முன்னூறு குதிரைக்கும் சறுதாராய் நான் தெரியப் படச் சொல்லி வைத்தேன். அது முகாந்திரமாய் நபாபு யென்கிற

[1] வெள்ளைக்காரர்கள் எப்படியெல்லாம் பணம் பிடுங்கினார்கள் என்பதற்கு இதுவும் ஒரு சான்று.

[2] அன்று மொசாம்பிக்கிலிருந்து மலாக்கா வரையில் ஒரு கலப்பு போர்த்துக்கீசியம் வெள்ளையருக்கும் அவர் தம் வணிகர்கள், துபாசிகளுக்கும் பொது மொழியாயிருந்தது. அது பேச்சு மொழி மட்டுமே. எனவே பிள்ளை அம்மொழியிலும் பிரெஞ்சிலும் துரைகளோடு பேசினார்.

பேரும் பஞ்சா அசாரி (5,000 குதிரைக்கு) மன்சுபாவும் ஆயி, மறத்தபு மட்டுக்கும் ஆயி (மீன் கொடியும் கொடுக்கப்பெற்று), ராசமகேந்திரம் வேலூருக்கு (எல்லூருக்குப்) போய், அங்கே சலாபத்து சங்கு அனுப்பின நபாபு (தான் என்பதாக) யெண்பித்துக் கொண்டிருக்கிறான். யிப்போ யிருக்கிற சங்கதி தான் உங்களுக்கு தெரிந்திருக்குதே," யென்று சொன்னேன். "யிவர்களெல்லாரும்–சேக்கு அசேன், சேக்கு அப்துல் றயிமான், யிந்த சேக்கு யிபராம் (ஆகியோரை) நான் மயேயிலே யிருக்கச்சே அறிவேன். (அவர்கள்) கூலிக்காரர்; வகுத்துக்குச் சோத்துக்குக் கூட அவகாசமில்லை. அப்படிப் பட்டவர்க ளிப்போ லக்ஷ லக்ஷக்கணக்காய் ஆஸ்தியும் நபாபு யென்கிற பேர்களும் ஆனார்கள்," யென்று யிவர்கள் பிறஸ்தாபம் இரெண்டு நாழிகை தேசகாலம் பேசியிருந்தார்.

அப்பால் மமுதல்லி கான் சேதியும், யிங்கிலீசுக்காரர்களுக்கும் மமுதல்லி கானுக்கும் யிருக்கிற சங்கதிகளும் யிப்போ நடக்கிற சங்கதிகளும் தெரியவில்லை யென்று கேட்டார். முன் சொன்ன சேதிக்கிப் பிற்பாடு மமுதல்லி கான் சரீரம் கேவலம் சொவஸ்தம் தப்பி யிருக்குதென்றுஞ் சொல்லிக் கொண்டார்களென்று சொன்னேன்.

"சேத்துப்பட்டுக்கு ஆரோ பிராமணன் யிவ்விடத்திலிருந்து போயிருக்கிறதாயி சேதி கேழ்விப்பட்டேன். யெந்தப் பிராமணன் போயிருக்கிறா னென்றும், ஆர் அனுப்பினாரெ," ன்றும் கேட்டார். (உங்களுடை) உத்தாரப்படிக்கி (அவனை) அனுப்பியிருந்(தோம்). அவன் சத்து தாவாயிச் சொல்லாதபடியினாலே, (அவன்) வந்துவிட்ட சேதி உங்களுடனே சொன்னேனே யென்று சொன்னதுக்கு, "ஆரனுப்பினார்கள். அதை விசாரித்துச் சொல்," என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன்.

விறுத்தாசலம் கொம்மாந்தாம் யெழுதின காகிதத்திலே, உடையார் மனுஷர் நம்முடைய விறுத்தாசலம் சீர்மையிலே மாடுகளை யோட்டிப் போனதுக்குப் பதில் மாடு யோட்டி வந்தோமென்றும், உடையாருக்குச் சுறுக்காய்க் காயிதமெழுதி யனுப்பினோமென்றும் யெழுதினான்," யென்று சொன்னார். "மெய் தான், அவர்களுக்கு தாசத்து (மறுப்பு) யில்லாமல் போனால் அவர்கள் பரிச்சேதம் சும்மாயிருக்கத் தக்கதில்லை. அவர்கள் காட்டின் பேரிலே கொஞ்சம் பாறுக்காறர்களும் சுவார்களும் போயிறங்கி பயம் காண்பித்தால் அல்லாமல் அவர்கள் சும்மாயிறார்கள். திட்டக்குடி சேதிக்கி கும்முக்குப் பண்ணி வாங்கிக் கொண்டாலே அல்லாமல் அவர்களடங்கி யிருக்கத் தக்கதில்லை," யென்றும் முன்னாலே பிரான்சு எழுத்திலே எழுதி (நான்) கொடுத்ததுக்கு, அந்தப்படிக்கி நடப்பிப் போமென்று சொன்னார்.

***1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 28; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 17; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசியே சொபினே வகையிரா ஒபிசியால்மார்கள் துரையை வந்து காண்பிச்சுக் கொண்டு, வில்லிய நெல்லூரிலே கட்டியிருக்கிற கோட்டை சாடையாய் (கோட்டையைச் சுற்றிக்) கட்டியிருக்கிற கொத்தளத்துக்கு சம்புரோஷணை பண்ணி, பேர் குடுத்து, கொடி போடுகிறதுக்கு யின்றை தினம் நேமித்திருந்தபடியினாலே, முசியே சொபினே வகையிரா ஒபிசியால்மார்கள் வில்லியநெல்லூருக்கு அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்கள். நானும் சியூர் கோவர்ணதோரை அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் மத்தியானத்துக்கு மேல் வில்லியநெல்லூர் அமுல்தாரன் மங்காப் பிள்ளை யெழுதின காயிதத்திலே கொத்தளத்துக்கு கிரஸ்தாம் (Christen—பூசை) பண்ணி பேர் குடுத்துக் கொடி போட்டவுடனே இருபத்தோரு பீரங்கி சுட்டார்கள். அப்போ பீரங்கி வாய் துடைக்கிறவன் மருந்து போட்டு யிப்பறம் வருகிறதுக்குள்ளே, வத்தி வாயிலே நெருப்பு வைத்தபடியினாலே பீரங்கி வெடி கிளம்பி, யெதிரே வெள்ளைக் காரனை உடம்பு யெல்லாம் பொசுக்கிப்போட்டு, காயமாய் சீவன் குத்துயிரா யிருக்கச்சே, அவனை யெடுத்துக் கட்டில் பல்லக்கிலே போட்டு புதுச்சேரிக்கி அனுப்பி வைத்தார்கள் யென்று யெழுதி, முதல் முதல் கோட்டை கட்டி கொடி போட்டு பீரங்கி சுட்டு பண்டிகை பண்ணுகிற அவசகுனம் கண்டு, நரக பலிக்கி யேதுகரமான படியினாலே, யிதிலே யென்னமோ ஒரு யேஷியத்துக்கு யிடமிருக்கு தென்று அவரவர் பேசிக் கொண்டார்கள்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி: மயிசூர் வைக்கீல் வெங்கிட்டநாரணப்பய்யன் யென்கிறவன் மூணு நாளாய் வில்லியநெல்லூரிலே யிருந்து யிவ்விடத்திலே வந்திருந்து, பாப்பாய்யப் பிள்ளை வீட்டிலே போயிருந்து, மதனாந்த பண்டிதன் வகையிராக்கள் கூடி யென்னமோ யோசனை பண்ணி, மயிசூருக்குக் காயித மெழுதி நேத்து ராத்திரி அனுப்பினதாகவும், பின்னை வீண் யோசனை பண்ணினதாகவும் (பேச்சு நடந்ததாகவும்) சேதி கேழ்க்கப்பட்டுது. இந்த சாடை பார்த்தால், முன் நந்திராசா முசியே துப்பிளேயிக்சுக்கும் மதாம் துப்பிளேயிக்சுக்கும் வருஷத்துக்கு இவ்வளவு குடுக்கிறோ மென்று பேசியிருந்த துண்டு; முசியே துப்பிளேயிக்சு வருகிறார் யென்று சேதி வந்ததென்று ஒரு வார்த்தை யெல்லாம் ஊரெல்லாம் பாப்பய்யப் பிள்ளை பிறப்பிச்சுக் கொண்டு, யிதொரு பிறபஞ்சியம் பண்ணிக் கொண்டு, சீமைகள் பூமிகளெல்லாம் தனக்கு வருகுதென்றும், யிதுக்குப் பேரீசு (பேரிஸ்) களும் கணக்குகளும் யெழுதிக் கொண்டு கூட்டமும் நாட்டமும்

பண்ணிக் கொண்டு திரிகிறான்; ... அதிலே பத்துப் பணம் வர வழைத்து பேருக்குக் கொஞ்சம் யெடுத்துக் கொள்ளுகிறதா யென்னமோ யோசனை பண்ணினார்களோ தெரியவில்லை. (இப்படி) ஒரு யோசனை பண்ணி காயிதங்களும் யெழுதி, மயிசூர் தேவராச உடையார் (மற்றும்) நந்திராசாவுக்கு அனுப்பியதாய்க் காணுது. யிது தானெப்படி நீர் தோத்தி யெழுதினீரென்றால், முன்னால் ஆறு மாசத்தைக்கு முன்பாகக் காகிதம் ஒன்றெழுதி பதினெண்ணாயிரம் ரூபா மதனாந்த பண்டிதனுக்குத் திருப்பதி சம்மதிக்கு (விஷயமாக) மதாம் துப்பிளேயிக்சு சொன்னாளென்று வெங்கிட்டநாரணப்பய்யனும் மதனாந்த பண்டிதனும் (அத்தொகையைப்) பேர் பாதியாய்ப் பங்கு பேசிக் கொண்டு யிருக்கிற சம்மதி நான் அறிந்திருக்கிற படியினாலே, இதுவும் அப்படித்தான் இருக்கும் ... என்று யோசனை பண்ணி யெழுதியனுப்பினதாய் மனதுக்குத் தோத்தி யெழுதிவிச்சேன். நாலு நாளாய் வில்லியநெல்லூரிலே யிருந்து வந்திருந்த மயிசூர் வெங்கிட்நாரணப்பய்யன் யித்தனாள் சாயங்காலம் நம்முடைய வீட்டுக்கு வந்து வில்லியநெல்லூருக்கு அனுப்பிவிச்சுக் கொண்டு போனான். ஏழெட்டு நாளையிலே விசிதமாய்த் தெரியும்.

இதல்லாமல் சேத்துப்பட்டு கில்லேதாரன் சோறு மகம்மது கானண்டைக்கு (சுகூர் மகம்மது கான்) பத்து நாளைக்கு முன்பாக ஒரு பிராமணனை அனுப்பி, காகிதமெழுதிக் கொடுத்து பாப்பய்யப் பிள்ளை அனுப்பி யிருந்ததாகவும், யித்த நாளும் ஒரு அறுக்கார் கையிலே காகிதமெழுதிக் கொடுத்து அனுப்பிவிச்சதா(யும்) சேதி வந்து சொன்னார்கள். நேத்திய தினம் சீர் (சியேர்) கோவர்ணதோர் கேட்ட சேதிக்கும் (கேள்விக்கும்) யின்றைய தினம் கேழ்விப்பட்ட சேதிக்கும் தாக்கலாவாச்சுது (விடை கிடைத்தது). ஆனால் யிது யென்ன சாடையிலே நடக்குதோ அதறிந்து, பிரபு கேட்டதுக்கு, மறு உத்திரம் போய்ச் சொல்லவேணு மென்று யோசனை பண்ணி வைத்தேன்.

***1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 29; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 18; சோமவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதித் துறையூர் பாளையக்காரரில் பழய குன்னையன் தம்பி வெங்கிடாசல ரெட்டி வைக்கீல் கோனேரி நாயக்கன் முசியே தெபொசேத்து மாரிபத்திலே முசியே லெறி கோவர்ணதோரை ஒரு சரிகை சீரொப்பாவும் ரத்தினமிழைத்த துராயொன்றும் கொண்டு போய் வைத்து (பேட்டி கண்டு), தங்கள் வெங்கிடாசல ரெட்டியை யிந்த மாசம் பாப்பு ரெட்டி மகனைத் தள்ளிப் போட்டுப் பட்டங் கட்டுகிறதுக்கு நசர் கொண்டு வந்தோ மென்று, பின்னையும் பேசவேண்டிய பேச்சுக்கள் பேசி வந்தார்கள் யென்று சேதி சொன்னார்கள். குன்னய்யன்[1] தம்பி

---

[1] முன்னே குன்னையன், இங்கே குன்னய்யன்.

வெங்கிடாசல ரெட்டி யென்கிறவன் உடையார்பாளைபத்திலே யிருக்கிறாப் போலேயும், பணத்துக்கு உடம்படிக்கையா(கி) அப்பால் உடையார்பாளையத்திலே யிருக்கிறவனைக் கொண்டு போய்ப் பட்டங் கட்டுகிறதா யோசனை பண்ணிக் கொண்டு பண சான்சாமியிலே யிருக்கிறதாய் சேதி கேழ்விப்பட்டது

*1755 வருசம், தெசம்பர் மாசம், தேதி 30; யுவ வருசம், மார்கழி மாசம், தேதி 19; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கி கோட்டைக்கிப் போய் சீனயோர் (Seigneur–பிரபு) குவர்ணதோர் அவர்களைக் கண்டு சந்திச்சு ஆசாரம் பண்ணி, மமுதல்லி கானுக்குச் சரீரம் சுவஸ்தமில்லாத சேதி ஆற்காட்டுக்கு வந்து, அவன் தாயார் தண்டுக்குப் போன சேதியும், சம்பதி ராயனுக்கும் கை கால் வீக்கங் கண்டதினாலே இனி பிழைக்க மாட்டானென்று சென்னப்பட்டணத்திலே யெடுத்துப் போனார்களென்றும், ஆற்காட்டிலே யிங்கிலீசுக்காறர் கொடியும் நாயத்தி (ஞாயிறு) னன்றைக்கிப் போடுகிறார்கள் (என்றும்), எப்போதும் யிந்த றபிலவ்வல் மாசம் 2 தேதி துவக்கி மமுதல்லி கான் கொடி போட்டது முதல் தினசரி கொடி கோட்டை முன்னே போட்டு யிருக்குதென்றும், கார்வேட்டி ராசா பாளையத்திலே குருவராசா வென்று யிப்போ பெரியதனம் (முதன் மந்திரி) பண்ணிக் கொண்டிருந்தா(னே) அவன் காலம் பண்ணிப் போன சேதியும், செங்கழுனீர்ப்பட்டு சீர்மை கருங்குழி சீர்மையிலே சிறிது கிராமங்களுக்குப் பாளையக்காரனாயிருக்கிற உய்யால் சேஷாசல நாயக்கன் விழுந்து போன சேதியும் துரையுடனே சொன்னதுக்கு, அவர் கேட்டுப்போட்டு உடனே முசியே சொபினேவுடனே கூட தாழயிறங்கி முசியே புறுக்கினூது கோந்துவார் (மற்றும்) முசியே கொற்னே கோந்துவாரே போய்க் கணக்குப் பார்க்கப் போனார். நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

---

